# தாலமி

(கி. பி. 119—161)

வி. எஸ். வ. இராகவன்




மணிவாசகர் நூலகம்

12–B, மேல சன்னதி,
சிதம்பரம்

89, லிங்கிச் செட்டித் தெரு,
சென்னை-600 001.

முதல் பதிப்பு: செப்டம்பர் 1978



பதிப்பாசிரியர்: ச. மெய்யப்பன், எம்.ஏ.

ஆசிரியரின் நூல்கள்

டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள்
நூல்களின் தமிழ்ப் பெயர்ப்பு

1. இந்தியப் பெரியார்கள்
2. இந்தியாவின் இதய ஒலி
3. சுதந்தரமும் பண்பாடும்
4. மதத்தின் கிழக்கும் மேற்கும்
5. கௌதம புத்தர்
6. மதமும் பண்பாடும்
7. நமது பாரம்பரியம்

பிற நூல்கள்

8. பிளினி
9. பெரிப்ளூஸ்
10. மெகஸ்தனிஸ்
11. தாலமி
12. யுவான் சுவாங்
13. பாஹியான்
14. மார்க்கோபோலோ
15. வறுமையிற் செம்மை
16. செந்தமிழ்ச் சிலம்பு

மற்றும் பல.

விலை ரூ. 20-00

அச்சிட்டோர்:

ஸ்ரீ ராஜராஜேஸ்வரி கம்பைன்ஸ் அண்டு பிரிண்டர்ஸ்
சென்னை-600 001.

# பதிப்புரை

“பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்.”
என்பது தேசியக் கவிஞர் பாரதியாரின் திருவாக்கு

**தாலமி** என்பவர் ரோமப் பேரரசைச் சார்ந்த கிளாடியஸ் பரம்பரையில் வந்த ஒருவருக்கும், எகிப்தில் தாலமி அரச வம்சத்தில் பிறந்த பேரழகி ஒருத்திக்கும் பிறந்த திருமகனுவார். இவருடைய காலம் கி.பி. 119—161 ஆகும்.

**தாலமி** புவியியல் வல்லுநர்; கணிதத்தில் பேராற்றல் படைத்த மாமேதை. இவர் அன்று விளங்கிய நாடுகள் பற்றியும், மலைகள், ஆறுகள், அரசர்கள் பற்றியும் செய்திகள் பலவற்றைக் கொடுத்துள்ளார். கி.பி. 2 ஆம் நூற்றுண்டில் இந்தியாவைப் பற்றிக் கிடைக்கப் பெறும் மேலைநாட்டு ஆதாரச் செய்திகள் இவை ஒன்றே.

தாலமியால் எழுதப்பட்ட நூல் **தாலமி** என்றே இந் நூலாசிரியர் பெயர் தாங்கி வெளியிடப்படுகிறது. **தாலமி** எனும் இந் நூல் தமிழில் முதன்முதலாக இப்பொழுதுதான் வெளிவருகிறது. இந் நூலை மணிவாசகர் வெளியீடாகக் கொணர்வதில் பெருமைப் படுகிறோம்.

இந்நூலில் வரும் வரலாற்றுத் தொடர்பான பகுதிகளுக்கு வரலாற்றில் புகழ்பெற்ற பலருடைய நூல்களிலிருந்து ஆங்காங்கே மேற்கோள்கள் பல காட்டப்பட்டுள்ளன. தமிழ் இலக்கியங்களிலிருந்தும், ஆங்காங்கே பொருத்தமான ஒப்புமைப் பகுதிகளும் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றைத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்முறையில் வரவேற்கும் என நம்புகிறோம்.

**தாலமி** எனும் இந் நூலின் தனிப் பெருஞ்சிறப்பு, இதற்காக இறுதியில் இணைக்கப்பட்ட பிற்சேர்க்கைகளாகும். இவை I முதல் IX வரை இணைக்கப்பட்டுள்ளன. தாலமியால் பயன்படுத்தப்பட்ட அன்றைய உலகத்தின் மாதிரிப் படமும் இப் புத்தகத்தில் பக்கம் vi-ல் அச்சிடப்பட்டுள்ளது. அன்றைக்கு நிலவி வந்த உலக வரை

தமிழ் ஆராய்ச்சியிலும், வரலாற்று நூல்கள் ஆராய்ச்சியிலும் நாட்டம் பெருகிவரும் இந் நாளில் காலத்துக்கேற்ற பணியாக இதை வெளியிடுகிறோம்.

விரிவான வரலாற்றுத் துறை சார்ந்த இந்நூலை ஊதிய நோக்கு ஒன்றையே கருதி வெளியிட இயலாது இலட்சிய நோக்குடன் இதை வெளியிடுகின்றோம்.

**தாலமி** என்னும் மகுடமிட்ட இந் நூலுடன், பிளினி, பெரிப்ளூஸ், மெகஸ்தனிஸ், பாஹியான், யுவான் சுவாங், மார்க்கோ போலோ ஆகிய வரலாற்று நூல்களும் இதே வரிசையில் விரிவான விளக்க உரைகளுடன் வெளியிட்டுள்ளோம்.

எங்கள் நூலுக்குத் தமிழன்பர்கள் நல்கி வரும் பேராதரவு இந் நூலுக்கும் தொடர்ந்து கிடைத்து எங்களைப் பெரிது ஊக்குவிக்கும் என நம்புகிறோம்.

புதிய எழுத்தாளர்களை இனங்கண்டு அறிமுகம் செய்வதிலும், புதுவகை நூல்களைப் பதிப்பிப்பதிலும் தன்னிகரற்று விளங்கும் **பதிப்பாசிரியச் செம்மல் உயர்திரு** ச. மெய்யப்பன், எம். ஏ., அவர்கள் இந்நூல் வெளிவர உறுதுணையாய் அமைந்தார்கள். அவர்க்கு எங்கள் உள்ளார்ந்த நன்றி உரியதாகும்.

தமிழன்னைக்குக் காணிக்கையாக, இந் நூலை அத் தேவியின் திருப்பாதங்களில் வைத்து மகிழ்கின்றோம்.

**மெ. மீனாட்சி சோமசுந்தரம்**



தாலமி தாமே தயாரித்துப் பயன்படுத்திய உலகப் படம்
(Orbis Ptolemai)
(கிரேக்கம் தமிழ்ப் படுத்தப்பட்டுள்ளது)




அறிஞர் பெருமக்கள் விரும்பி ஏற்கும் துறையே தூய ஆசிரியத் துறை. இத் துறையிலே இரு பெரும் வியப்புகள் நம்மை எதிர் கொண்டழைக்கின்றன. அவற்றுள் ஒன்று ஒருவர் பலப்பலப் புத்தகங்களையும், வியப்புமிக்க ஆராய்ச்சிகளையும் வெளியிட்டிருப் பினும், அன்னாருடைய வாழ்க்கை வரலாற்றைப்பற்றிய குறிப்புகளுள் ஒன்றேனும் நமக்குக் கிடைக்காத நிலைமை. மற்றொன்று, ஒருவ ருடைய வாழ்க்கை மிகமிக விரிவாக வெளியிடப்பட்டிருப்பினும் அன்னாருடைய நூல்கள் ஒன்றேனும் கிடைக்காத அவல நிலைமை. ஆக, இவ்விரு வகை நிலைமைகளில், இப் புத்தகத்தில் கூற முனைந் திருக்கும் தாலமி[1] என்பார் முதல்வகை நிலைமையைச் சார்ந்தவர் ஆவார்.

தாலமியின் முழுப் பெயர் கிளாடியஸ் தாலமி[2] என்பது. இவர் வாழ்ந்த காலம் கி.பி. 119—161 ஆகும்.

தாலமியின் வாழ்க்கை முழுவதும் கணக்கியல்[3] ஆராய்ச்சி நடத்துவதிலும், அக் காலத்தில் தெரிந்த—கண்டுபிடிக்கப்பட்ட— உலகின் பல பகுதிகளின் புவியியலை[4] வரைவதிலும், இரவு நேரங் களில் வானத்தை நோக்கி விண்மீண்களின் இருப்பையும், கணக்கையும் குறிப்பு எடுப்பதிலும்[5] செலவிடப்பட்டது.

தாலமியின் வாழ்க்கை வரலாற்றைத் தோற்றுவாயில் காண லாம்.

அக் காலத்தில் விளங்கிய துறைமுகங்கள், நகரங்கள், அரசர் கள், அவர்களின் தலைநகரங்கள், ஆறுகள், காடுகள், மலைகள், கடல்கள் ஆகிய இவை போன்ற பல செய்திகள் தாலமி எழுதிய புவியியல்[6] என்னும் புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. அக் காலத்தில் விளங்கிய புவியியல் புத்தகம் இஃதொன்றே. இதுவே கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரை அசைக்க முடியாத ஆதாரப் புத்தகமாக விளங்கிற்று.

---

[1] Ptolemy [2] Cladius Ptolemy [3] Mathematics [4] Geography [5] Astronomy [6] Ptolemy's Geography

இந் நூல் விளக்க உரைக்கு வரலாற்றுப் பேராசிரியர் பலருடைய புத்தகங்களில் உள்ள கருத்துகளையும், குறிப்புகளையும், ஆராய்ச்சிகளையும் பயன்படுத்தியுள்ளேன். அவ் வரலாற்றாசிரியர்களின் குறிப்புகளும், ஆராய்ச்சி உரைகளும் இல்லாவிடில், இத்தகைய ஒரு புத்தகம் வெளிக் கொணர முடிந்திராது என்பது உண்மை. அப் பேராசிரியர் பலருக்கும் என் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ் ஆராய்ச்சிக்கு உறுதுணையாய் விளங்கிய நிறுவனம் **இலண்டன் மாநகரத்தில் விளங்கும் இராயல் ஏஷியாடிக்குக் கழகம்** ஆகும்.[7] மிகச் சிறந்த இலக்கியப் பணியாற்றியுள்ள அந் நிறுவனத்தார்க்கு எனது மதிப்பிற்குரிய அன்பையும், வணக்கத்தையும், நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப் புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ள செய்திகள் யாவும், தாலமி எழுதிய புவியியல் புத்தகம் VII-ல் முதல் அதிகாரத்தில்[8] உள்ள செய்திகள் மட்டுமேயாகும்.

தாலமி கொடுத்துள்ள குறிப்புகள் யாவும் புவியியல் தொடர்பாக உள்ளனவேயன்றி, மக்களைப் பற்றிய குறிப்புகளோ அல்லது வரலாற்றைப் பற்றிய செய்திகளோ அவற்றில் காண முடியாது. ஆனால் ஏனைய வரலாற்றாசிரியர்களான ஸ்டிராபோ[9], பிளினி[10] பெரிப்ளூஸின்[11] நூலாசிரியர், மெகஸ்தனிஸ்[12], அர்ரியன்[13], பாஹியான்[14], யுவான் சுவாங்[15], மார்க்கோபோலோ[16] போன்றவர்கள் ஒவ்வோரிடத்தின் வருணனையுடன் அங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கையையும், வழக்கங்களையும் கொடுத்துதவினர். அதன் காரணமாக அவர்கள் வரலாறுகள் பலரால் போற்றப்படுவனவாயின.

தாலமியும் அத்தகைய வரலாற்றுச் செய்திகளையும், மக்களின் பழக்க வழக்கங்களையும் இடை இடையே இணைத்துப் பிணைத்துக் கொடுத்திருக்கலாம். அவருக்கு அச் செய்திகள் யாவும் நன்கு தெரிந்தனவே. ஆயினும், தாம் எழுதிய புத்தகம் புவியியலே தவிர வரலாறு அன்று என்பதை மனத்துள் உட்கொண்டே அவ் வரலாற்றிற்கான விளக்கங்களைக் கொடாமல், புவியியலுக்கான விவரங்களையும், குறிப்புகளையும் மட்டுமே அதில் பதிய வைத்தார்.

புவியியல் என்பது இடங்களின் பெயர்களை மட்டும் குறிப்பிடுவதாகாது. ஆனால் ஒவ்வோர் இடமும் இவ்வுலகில் எப்பகுதியில் எத்

[7] The Royal Asiatic Society, London [8] First Chapter in Book VII of Ptolemy's Geography [9] Strabo [10] Pliny [11] Periplus [12] Megasthenes [13] Arrian [14] Fa-Hien [15] Yuwan Chwang [16] Marco Polo.

தீர்க்காம்சம்[17], எவ் அட்சாம்சம்[18] என்பவற்றில் உள்ளன என்பதைக் குறிப்பிட்டு அறிந்து கொள்வதே உண்மையான புவியியலாகும். தாலமி எழுதிய புவியியல் புத்தகத்தில் அத்தகைய தீர்க்காம்சமும் அட்சாம்சமும் ஒவ்வோர் இடத்துக்கும் காணப்படுகின்றன. புவியியலில் முதன்முறையாக இப் பகுதியைப் புகுத்தியவர் தாலமியே ஆவார்.

ஆக, தாலமி எழுதிய இப் புவியியல் நூல் நம் பண்டைத் தமிழகத்தின் நிலைமையையும், ஊர்கள், ஆறுகள், மலைகள், நாடுகள் ஆகியவற்றின் வர்ணனைகளையும் குறிப்புகளாகக் கொடுத்துதவுகிறது. இத்தகைய ஆசிரியர்கள் ஒரு நாட்டில் இல்லாவிடில், அந் நாட்டின் புவியியலும் வரலாறும் எத்துணை அளவு குறுகிக் காணப்படும் என்பது வெள்ளிடைமலை. தாலமியின் சொல்லோவியங்கள் முழுவதும் மறைந்து போகாதவாறு, புவியியல் ஆசிரியர்களும், வரலாற்றாசிரியர்களும் எத்துணை ஆர்வத்துடன் காப்பாற்றி வைத்துள்ளனர். அவர்கள் யாவருக்கும் மக்கள் இனம் பெருங் கடப்பாடுடையதன்றோ?

"எங்கள் மூச்சும் தமிழ்; பேச்சும் தமிழ்" என்று ஓயாது பறைசாற்றும் தமிழ்நாட்டில், அறிவியல் நூல்கள் நடுநிலைமையான ஆராய்ச்சியுடன் தமிழ் மொழியில் இன்றளவும் போதிய அளவிற்கு வெளிவரவில்லை. அடிப்படை நூல்களும், ஆதார நூல்களும் தமிழில் எங்கேனும் கிடைக்குமா என்று தேடிப்பார்க்கும் அவல நிலையில்தான் [illegible]ம.

இக் குறையைச் சற்றே போக்க, மேனாட்டு வரலாற்று ஆசிரியர்களின் ஆதாரமாக விளங்கும் அடிப்படையான நூல்களைத் தமிழில் பெயர்க்கத் துணிந்தேன். அவ்வரிசையில் தாலமியும்[19] ஒரு புத்தகமாகும்.

மற்றும் எனது முந்தைய நூல்களான பிளினி,[20], பெரிப்ளூஸ்[21] மெகஸ்தனிஸ்[22], பாஹியான்[23], யுவான் சுவாங்[24], மார்க்கோ போலோ[25], புதுநாடு கண்ட பெரியார்கள்[26] எனும் நூல்களுக்குத் தமிழன்பர்கள் அளித்த ஆதரவைப்போலவே, தாலமி எனும் இப் புத்தகத்துக்கும் அளிப்பார்கள் என்று எண்ணுகிறேன்.

ஒவ்வோர் அதிகாரத்துக்கும் விளக்கவுரை தக்க தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள்களுடன் கொடுத்துள்ளேன். மற்றும்

[17] Longitude [18] Latitude [19] Ptolemy [20] Pliny [21] Periplus
[22] Megasthenes [23] Fa-Hien [24] Yuwan Chwang [25] Marco Polo
[26] Great Travellers and Explorers

வரலாற்றாசிரியர்களின் கருத்துகளும், குறிப்புகளும், ஒப்புமைப் பகுதிகளும் ஆங்காங்கே காட்டப்பட்டுள்ளன. இவ்வாராய்ச்சி மிகுந்த அடிக்குறிப்புகளைத் தமிழுலகம் நன்முறையில் வரவேற்கும் என்பதே எனது நம்பிக்கை. இப் புத்தகம் ஆதாரச் செய்திகள் கொண்ட அடிப்படை நூலாகும்[27] என்பது பேராசிரியர்கள் பலர் ஒருங்கே ஒப்புக்கொண்ட செய்தியாகும்.

புவியியல் சார்பாயும் வரலாற்றுத் தொடர்பாயும் விளங்கும் இத் தமிழ்ப்பெயர்ப்பை ஏற்று, இப் பணியில் என்னை மேன்மேலும் ஊக்குவிக்குமாறு ஆசிரிய அறிஞர்களையும், தமிழன்பர்களையும் வேண்டிக்கொள்கிறேன். அன்பர்கள் அளிக்கும் அரிய ஊக்கமே இதைப் போன்ற நூல்கள் பல கொணர்தற்குரிய பெருந்தூண்டு கோலாக அமையும் என்பது உறுதி, உறுதி.

நல்ல தமிழ் நூல்கள் வெளியிடுவதை வாழ்வு நோக்கமாகக் கொண்டு, அரிய ஆய்வு நூல்களைத் துணிவுடன் வெளியிடும் பதிப்பாசிரியச் செம்மல் உயர்திரு ச. மெய்யப்பன், எம்.ஏ. அவர்கள் இந் நூல் வெளிவர உறுதுணையாக அமைந்துள்ளார். அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக!

வாழ்க தாலமி! வாழ்க தாலமியின் சொல்லோவியங்கள்! வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப் பண்பாடு!

எல்லாம் வல்லாம் இறைவன் அருள்புரிக!

சி. எஸ். வி. இராகவன்

[27] Source Book of Information

# உள்ளுறை

## ஐயத்துக்கிடமான பகுதிகள்

# பிழை திருத்தங்கள்

| பக்கம் | வரி | For | Read |
|---|---|---|---|
| 2 | 13 | பெயார் | பெயர் |
| 3 | 19 | கி.மு. 60 | கி.மு. 68 |
| 6 | 3 | ரேர்ந்தார் | சேர்ந்தார் |
| 8 | 8 | இவர் | அவர் |
| 12 | 14 | புவியியல் | புவியில் |
| 17 | 13 | நனும் | எனும் |
| 26 | 21 | 76°·45′ | 16°·45 |
| 29 | 2 | அரியகே சாதினன் | அரியகே சாத் |
| 29 | 4 | 111°·3′ | 111°·30′ |
| 44 | 10 | என்று | என்ற |
| 78 | 20 | — | **3. நெல்கிர்** |
| 78 | 23 | 9 ·52′ | 79°·52′ |
| 98 | 9 | கோகாலா | கோகலா |
| 134 | 5 | 56 ·0′ | 36 ·0′ |
| 155 | 5 | இலம்பாடி | இலம்படாய் |
| 179 | 22 | சாலகில்ஸ்லா | சாலாகில்ஸ்லா |
| 194 | 12 | 28 ·2′ | 28°·28′ |
| 194 | 13 | 27 ·5′ | 27°·52 |
| 195 | 22 | — | **1. அனிகாய்** |
| 241 | 32 | 79°·43′ | 75°·43′ |
| 247 | 7 | 82°·56′ | 22°·56′ |
| 274 | 21 | 88°·0′ | 85°·01′ |
| 277 | 24 | 16°·29′ | 19°·29′ |
| 277 | 24 | 75°·24′ | 75°·26′ |
| 285 | 21 | காம்டா | காம்ட்ரா |
| 296 | 11 | 19°·28′ | 19°·29′ |
| 296 | 11 | 75 ·24′ | 75°·26′ |
| 302 | 24 | 22°·35′ | 22°·34′ |
| 306 | 2 | 94 | 96 |

# தோற்றுவாய்

## தாலமியின் வாழ்க்கை வரலாறு

அகத்தியர்பற்றி ஆயிரம் பக்கங்களுக்குப் புராணச் செய்திகள் உள்ளன. ஆனால், அவர் யாத்த அகத்தியம் எனும் நூலில் ஒரு செய்யுளேனும் கிடைத்திலது. இஃது ஆசிரியர் வரலாறு இருந்தும், அவர் யாத்த நூல் கிடைக்கவில்லை. தொல்காப்பியம் நமக்கு முழுமையாகக் கிடைத்துள்ளது. ஆனால், அதை யாத்தவர் யார்? அவர் பெயர், குலம், தாய் தந்தையர் பற்றிய செய்திகள் எவையும் நமக்குக் கிடைத்தில. இஃது ஆசிரியர் யாத்த நூல் இருந்தும், அவருடைய வாழ்க்கை வரலாறு எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. அவருடைய இயற்பெயரைக்கூட அறியாமல் தொல்காப்பியத்தை ஆய்ந்துரை செய்துகொண்டு வருகிறோம். நாம் இப் புத்தகத்தில் கூறப்புகும் தாலமி (Ptolemy) என்பாரின் வரலாறு இரண்டாவதாகக் கூறப்பட்ட நிலையைச் சார்ந்ததாகும். தாலமியைப்பற்றி மேலை நாட்டவர் ஒரிருவர் ஒரிரு குறிப்புகளைமட்டும் கொடுத்துதவினார்களே தவிர, அன்னாருடைய முழு வாழ்க்கை வரலாறும் நமக்குக் கிடைத்திலது. கிடைத்த செய்திகளை வைத்துக்கொண்டு அவருடைய வரலாற்றைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

தாலமி (Ptolemy) யின் முழுப்பெயர் கிளாடியஸ் தாலமி (Claudius Ptolemy) என்பதாகும். தாலமி எனும் அரச பரம்பரையினர் ஆப்பிரிக்காவின் வடபகுதியில் உள்ள எகிப்தில் (Egypt) அரசாண்டுவந்தனர். அத் தாலமியின் அரசபரம்பரையினருள் ஒருவரே இந் நூலில் கூறப்படும் தாலமியின் தந்தையாவார். அவர் கிளாடியஸ் I (Claudius I) பரம்பரையைச் சார்ந்தவர்.

ரோம் நாட்டுப் பேரரசின் தலை நகராக விளங்கிய ரோம் நகரில் (City of Rome) கிளாடியஸ் பரம்பரையைச் சார்ந்த தாலமியின் தந்தையார் பெயர் கிளாடியஸ் (Claudius) ஆகும். அவர் ரோம் நகரில் ஒரிரு ஆண்டுகளும், மற்றும் அதைத் தொடர்ந்து கிரேக்க நாட்டிலும் (Greece) கல்வி கற்றார். அதற்குக் காரணம் அவருடைய இளமைவயதில் நாட்டில் நிலவிய அமைதியற்ற நிலைமையும், அரச பதவியைக் கைப்பற்ற ஏற்பட்ட கொந்தளிப்புமே ஆகும். கிரேக்க நாடு பலகலைகள் கற்பிப்பதிலும், பண்பாடுகளில் சிறந்தும் விளங்

கிற்று. தாலமியின் தந்தையார் அரசபரம்பரையைச் சார்ந்தவர் ஆன காரணத்தினுல், அவருக்குப் பல்கலைகளிலும் பயிற்சி அளிக்கப்பட்டது. முக்கியமாகப் புவியியல் (Geography), கணக்கியல் (Mathematics), வானவியல் (Astronomy) ஆகிய இம் மூன்றும் அவர் அறியத்தொடங்கி அதில் பல நூல்களைச் சேகரித்துவைத்தார். அவர் அவ்வாறு சேகரித்த நூல்கள் காரணமாக, அவருக்குப் பிறந்த தாலமி என்பாரும் அந் நூல்களை பயின்று, அவ்வியல்களில் தனி ஆர்வம் காட்டி, அவற்றில் மேதையாக விளங்கினுர். தந்தையார் புத்தகம் எதுவும் எழுதி வெளியிடவில்லை; அவர் மகனே புத்தகம் எழுதி வெளியிட்டார்.

கிளாடியஸ் I (Claudius I) எனும் ரோமானியப் பேரரசர் கி.பி. 41 முதல் கி.பி. 54 வரை ரோம் நகரில் ஆண்டுவந்தார். அவ்வரசரின் முழுப்பெயார் டைபிரியஸ் கிளாடியஸ் ட்ருசஸ் ஜெர்மானிகஸ் (Tiberius Claudius Drusus Germanicus). பிளினி (Pliny) (கி.பி. 23-79) எனும் வரலாற்றாசிரியர் காலத்தில் அவர் ரோமானியப் பேரரசராக விளங்கினுர். அவருக்குப் பிறகு பின்வரும் அரசர்கள் ஆட்சிசெய்தனர்:

| | |
|---|---|
| நீரோ கிளாடியஸ் சீசர் (Nero Claudius Caesar) | ... கி.பி. 54-68 |
| கால்பா (Galba) | ... கி.பி. 68-69 |
| வைபீலியஸ் (Vibelius) | ... கி.பி. 69 |
| வெஸ்பாசியன் (Vespasian) | ... கி.பி. 69-79 |
| டைடஸ் வெஸ்பாசியன் ஸாபினஸ் (Titus Vespasian Sabinus) | ... கி.பி. 79-81 |

இவ்வாறு கிளாடியஸ் பரம்பரையினர் ரோம் நாட்டுப் பேரரசை வழிவழியாக ஆண்டுவந்தனர்.

ரோம் நாட்டின்—ரோம் பேரரசின்—பரம்பரையினர் எகிப்து நாட்டில் (Egypt) ஆண்ட தாலமி அரச பரம்பரையினருடன் (Ptolemaes) திருமண உறவு கொள்வது அன்றைய வழக்கமாகவும், நாகரிகமாகவும் விளங்கிற்று. காரணம், எகிப்து தாலமி அரசர்கள் ரோம் நாட்டுப் பேரரசர்களுக்குக் கப்பம் கட்டிவந்தனர். எகிப்தில் ஆண்ட தாலமி அரசர்கள் யாவரும் தாலமி (Ptolemy) என்ற பொதுப் பெயராலே வழங்கப்பட்டனர்.

தாலமி அரச பரம்பரையில் வந்த அரசிளங்குமரிகள் யாவரும் கிளியோபாத்ரா (Cleopatra) எனும் பொதுப் பெயராலேயே

குறிப்பிடப்பட்டு வந்தனர். மாசிடோனியாவின் (Macedonia) அரசரான பிலிப் (Philip) என்பாருக்கும், ஒலிம்பியா (Olympias) என்ற மங்கைக்கும் பிறந்த மகளின் பெயர் கிளியோபாத்ரா. பிலிப் அரசர் அரசாண்ட காலம் கி.மு. 390-356 அதாவது 24 ஆண்டுகள் ஆட்சி செய்தார். இக் கிளியோபாத்ரா என்பவர், எபிரஸ் (Epirus) அரசரான அலெக்ஸாந்தர் I என்பவரைத் திருமணம் செய்து கொண்டாள். மற்ெருரு கிளியோபாத்ரா என்பவள் எகிப்தில் அரசாண்ட தாலமி ஔலடே (Ptolemy Auletes) என்பாரின் மகள் ஆவாள். அவள் கி.மு. 60-ல் பிறந்தாள். தந்தை இறந்த பிறகு, மாவீரர் சீசரால் (Caesar, the Great) அவள் காதலிக்கப்பட்டு, எகிப்திய அரசியாக ஆக்கப்பட்டாள்—அவள் தம்பி அவ் வாரிசுக்கு ஏற்றவஞக இருந்தும். பின்னர் அத் தம்பியைக் கிளியோபாத்ரா கொன்ருெழித்தாள். அவளேத் திருமணம் செய்து கொண்ட சீசரும் கி.பி. 44 ஆம் ஆண்டில் கொல்லப்பட்டார். அதன் பிறகு அந்தோனி (Antony) எனும் ரோம் நாட்டுப் பேரரசரால் காதலிக்கப்பட்டு, இருவரும் திருமணம் செய்து கொண்டனர். அகஸ்டஸ் சீசர் (Augustus Caesar) என்பவரால் அந்தோனியும், கிளியோபாத்ராவும் சூழப்பட்டு, கி.மு. 30-ல் அந்தோனி கொல்லப்பட்டார். கிளியோபாத்ராவைச் சிறை பிடிக்குமுன், அவள் நாகப்பாம்பின் விஷத்தை உட்கொண்டு, அதே கி.மு. 30-ல் தன் உயிரை நீத்தாள். அவளுடன், தாலமி அரசர்கள் அரசாட்சி செய்ததும், அவர்களுடைய பரம்பரையும் முடிவடைந்து விட்டது.

ஜூலியஸ் சீசருக்கும் கிளியோபாத்ராவுக்கும் ஒரு மகன் பிறந்ததாகவும், அம் மகன் அவள் வயிற்றைக் கீறி எடுக்கப் பட்டதால், அச் சிறுவன் சிசேரியன் (Caessarian) என்று வழங்கப் பட்டான் என்றும் வரலாறு கூறுகிறது. பின்னர் - பிற்காலத் தில் - அவ்வாறு இயற்கையான பிரசவத்தில் (Natural or normal delivery) அல்லாமல் வயிற்றைக் கீறி எடுக்கப்படும் முறையே சிசேரியன் (Caesarean) என்று வழங்கப்படுவதாயிற்று, இதை ஜூலியஸ் சீஸரின் பிறப்புக்கே பொருத்தி, விளக்கம் செய்பவரும் உளர். ஒரு பெயர் புகழடைந்த பிறகுதான் அதை யொட்டியோ, தொடர்புபடுத்தியோ பலசெய்திகள் உருவாகும் என்பதே இயற்கை விதி. இதை அவ்விளக்கம் செய்பவர் மனத்தில் கொள்ளவில்லை போலும். சீசருக்குப் பிறந்த மகன், சீசர் கொல்லப் பட்ட சில ஆண்டுகளுக்குள் (நான்கு ஆண்டுகள்) அரசியல் காரணமாகக் கொல்லப்பட்டான் என வரலாறு கூறுகிறது. கிளியோபாத்ராவுடன் தாலமியர்களின் அரசாட்சி எகிப்தில் முடிவடைந்துவிட்டது, அதன்பின் வந்தவர் சிற்றரசர்களே தவிர,

பேரரசர்கள் அல்லர். மற்றும் அகஸ்டஸ் சீசர் (Augustus Caesar) அந்தோனியைக் கொன்றவுடன், எகிப்தை ரோமப் பேரரசுக்குக் கப்பம் செலுத்தும் ஒரு சிற்றரசாக ஆக்கிவிட்டனர். எகிப்தில் அரசர்கள் இருந்தாலும், அவர்கள் ரோமப் பேரரசுக்குக் கப்பம் செலுத்தி வந்தனர்.

ஆக, கிளியோபாத்ரா என்ற பெயர் எகிப்து நாட்டில் வழங்கிய அரசிளங்குமரிகளின் பொதுப்பெயராகும். கிளியோ (Clio) என்றால் கடல்கன்னி என்றும், பாத்ரா (Petranes) என்பது நாட்டைக் காப்பவள் என்றும் பொருள் கொண்டு, நாட்டைக் காக்கும் அழகிய கடல்கன்னி எனும் பொதுப் பெயரான கிளியோபாத்ரா (Cleopatra) என்ற சொல் உருவாயிற்று.

எகிப்து நாடு (Egypt) பேரழகிகளுக்குப் புகழ் பெற்றதல்லவா? ஆக, ரோமப் பேரரசர்கள் எகிப்து நாட்டு அரச பரம்பரையில் விளங்கிய அழகிகளுடன் திருமண உறவு கொள்வது இயல்பே. அன்றைய இவ்வகைத் திருமண உறவுக்கு [illegible] எடுத்துக்காட்டுகள் முன்னர்க் கூறப்பட்டுள்ளன.

அழகிகளைத் திருமண உறவு [illegible] ஏற்பட்ட முறையாகும். அத்தகைய திருமண உறவால் கிளாடியஸ் பரம்பரையைச் சார்ந்த தாலமி [illegible], கிளாடியஸ், எகிப்து நாட்டு அரசிளங்குமரி [illegible] ஒருவளைத் திருமணம் செய்து கொண்டார். அந்தத் திருமணத்தில் பிறந்தவரே நாம் இப்புத்தகத்தில் கூற முற்பட்டிருக்கும் தாலமி (Ptolemy) ஆவார்.

தாலமி எகிப்தில் (Egypt) கி.பி. 11[illegible]-ஆம் ஆண்டில் பிறந்தார்.

ரோம் நகரில் அரசு சரியாக நடைபெறாத காலமாக இருந்ததாலும், அரசுரிமைப் போட்டி தலைவிரித்தாட [illegible] நாலும், தாலமி நான்காண்டுகள் [illegible] கிரேக்க நாட்டிலும் கல்வி பயின்றார். கிரேக்க நாட்டு அரிஸ்டாட்டில் (Aristotle) என்பவர் பிளேட்டோவின் (Plato) மாணவர் ஆக இருந்தார். அரிஸ்டாட்டில் அலெக்சாண்டர் பேரரசரின் (கி.மு. 356–323) ஆசிரியராக விளங்கினார். அவர் கிரேக்க நாட்டில் அகாடமி (Academy) எனும் [illegible] கழகத்தை அமைத்தார். அதில்தான் அலெக்சாண்டர் கல்வி கற்றார். அப் பல்கலைக்கழகம் பல நூற்றாண்டுகளாகப் புகழ்பெற்று விளங்கிற்று. அதில்தான், தாலமியின் தந்தை கிளாடியஸும், தாலமியும்

கல்வி பயின்றனர். மற்றும், தம் தந்தை சேகரித்துவைத்த அரும் பெரும் சுவடிகளையும் படித்துப் பயன்பெற்றார்.

தாலமி மிகவும் ஆழ்ந்து படிப்பார். நுனிப்புல் மேய்கிற பழக்கம் அவரிடம் காணப்படவில்லை. அவரும் தம் தந்தையாரைப் போலவே புவியியல் (Geography), கணக்கியல் (Mathematics), வானவியல் (Astronomy) முதலான பிரிவுகளில் வல்லுநராக விளங்கினார்.

தாலமி கணக்கில் வல்லுநராக இருந்த காரணத்தால், அவர் கணக்கியல் மேதை (Ptolemy, the Mathematician) என்று வழங்கப்பட்டார்.

ரோம் நகரிலும், கிரேக்க நாட்டிலும் கல்வி பயின்ற பின்னர், தம் தாய்நாடாகிய எகிப்துக்கு வந்து சேர்ந்தார். அங்கு அன்றிருந்த அரச பரம்பரையினர், அவருடைய மேதைப் பண்பையும், நுண்ணறிவையும் கண்டு வியந்து, அவரை நைல் நதியின் கழிமுகத்தில் விளங்கிய அலெக்சாந்திரியா நூலகத்தில் (Library of Alexandria), தலைமை நூலகராகப் (Chief Librarian) பணியாற்றுமாறு கேட்டுக்கொண்டதின்பேரில், தாலமி அப் பதவியை ஒப்புக்கொண்டு, கி.பி. 139 ஆம் ஆண்டு அத் தலைமை நூலகர்ப் பணியைத் தொடங்கினார். அப் பதவியைத் தம் இறுதிக் காலமான கி.பி. 161 வரைத் தொடர்ந்து வகித்தார்.

அலெக்சாந்திரியாவில் உள்ள நூலகமே அக் காலத்தில் மிகவும் புகழ்பெற்றிருந்தது. அலெக்சாந்திரியா (Alexandria) எனும் துறைமுகம் நைல் நதிக் (River Nile) கழிமுகத்தில், பேரரசர் அலெக்சாந்தரால் (Alexander, the Great) கி.மு. 332 ஆம் ஆண்டில் நிர்மாணிக்கப்பட்டது. அலெக்சாந்தர் உலகம் முழுவதையும் ஒரே ஆட்சியின் கீழ்க் கொண்டுவரவேண்டும் என்ற எண்ணங்கொண்டு, பெரும் படையைத் திரட்டிக்கொண்டு ஆசியாமீதும், இந்தியாமீதும் படையெடுத்தார். ஆசியாமீது படையெடுக்கும்போது ஆப்பிரிக்காவில் உள்ள எகிப்தை வெற்றிகொண்டு நைல் நதிக் கழிமுகத்தில் ஒரு துறைமுகத்தை ஏற்படுத்தி, அதைத் தம் பெயரால் வழங்கினார். இந்தியா எல்லைமீது அவர் படையெடுத்த ஆண்டு கி.மு. 326 ஆகும். அவ்வாறு அவர் படையெடுத்துச் சென்றபோது, எகிப்தை வென்றதும், அதன் அரசருள் ஒருவரை–தாலமி என்னும் பெயர் கொண்டவரைத்–தமக்கு வழிகாட்டியாக அமர்த்திக் கொண்டார். அலெக்சாந்தர் இந்தியாமீது படையெடுத்து (கி.மு. 326), சிந்து நதி வழியாகக் கீழறங்கி, தம் நாட்டிற்குத் திரும்பும் பொழுது, கி.மு. 323 ஆம் ஆண்டு, ஜூன்

13 ஆம் நாள் பாபிலோன் நகரத்தில் நச்சுக்காய்ச்சல் கண்டு இறந்துவிட்டார். அலெக்சாந்தருடன் சென்ற தாலமி இறுதியாகத் தம் நாடாகிய எகிப்தைச் சேர்ந்தார். அலெக்சாந்தர் விட்டுச் சென்ற ஒருபகுதிக்குத் தாலமி அரசரானர்: கி.மு. 298-ல், தாலமி, அலெக்சாந்திரியாவில் அலெக்சாந்தர் பெயரால் நூலகம் ஒன்றை ஏற்படுத்தினர். அதாவது அலெக்சாந்தர் இறந்து 25 ஆண்டுகளுக்குப் பிறகு, அலெக்சாந்திரியா நூலகம் ஏற்பட்டது. அதில் தாலமி பல்வகைப் புத்தகங்களை-சுவடிகள், களிமண் பலகைகள் (Clay tablets), சித்திரங்கள் முதலியவற்றை-வைத்துப்பாதுகாத்தார். அதற்கு நூலகர் ஒருவரையும் ஏற்பாடு செய்தார். நூலகத்துடன் பொருட்காட்சி ஒன்றையும் (Museum) ஏற்படுத்தி, சிற்றரசர் தாலமி, கி.மு. 283-ல் காலமானர்.

மேற்கூறப்பட்ட நூலகத்தில் மிகச்சிறந்த வரலாற்று ஆசிரியர்கள் பலர் தலைமை நூலகராகப் பணியாற்றியுள்ளனர்.

எரடாஸ்தனிஸ் (Eratosthenes) கிரேக்க நாட்டைச் சார்ந்த சைரீனில் (Cyrene) வசித்துவந்த வரலாற்று ஆசிரியர். இவர் தாலமி அரசரால் போற்றப்பட்டு, அலெக்சாந்திரியா நூலகத்தில் கி.மு. 196 வரை பணியாற்றினர். இவர் பல கலைகளைப் பற்றிப் புத்தகங்கள் எழுதியுள்ளார். ஸ்டிராபோ (Strabo) என்பார் (கி.மு. 64-கி.பி. 24) எரடாஸ்தனிஸ் எழுதிய நூலைப் பயன்படுத்தியதாக எழுதியுள்ளார். எரடாஸ்தனிஸ் வாழ்ந்த காலம் கி.மு. 276-196 ஆகும். இவர் இறக்கும்பொழுது இவருக்கு வயது 80.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-7, பக்கம் 8)

ஜூலியஸ் சீசர் (Julius Caesar) அலெக்சாந்திரியாவில் இருந்து கொண்டு, கிளியோபாத்ராவை அரசியாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் முகாமிட்டிருந்தபொழுது, அவரைப் பகைவர் சூழ்ந்துகொண்டு, அதன் காரணமாக அலெக்சாந்திரியா நூலகம் சேதமுற்றது (கி.மு. 45). பல நூல்கள் பாழ்பட்டன; தீக்கிரையாயின. இருப்பினும், பல எஞ்சியிருந்தன. கலீப் உமர் (Caliph Omar) என்பவரின் படைத் தளபதியான அம்ரூ (Amrou) என்பவரால் முழுதும் கி.பி. 651 ஆம் ஆண்டு அழிக்கப்பட்டு விட்டது. ஆக, அலெக்சாந்திரியா நூலகம் கி.மு. 298-ல் தொடங்கப்பட்டது; முற்றும் அழிக்கப்பட்டது கி.பி. 651-ல்; சுமார் 950 ஆண்டுகள் வரை அந் நூலகம் உலகிலேயே பெரிய நூலகமாகக் கருதப்பட்டு, புகழுடன் விளங்கிற்று. அலெக்சாந்திரியா நூலகத்தைப் பற்றிய செய்திகள் இப் புத்தகத்தின் இறுதியில் இணைக்கப்பட்ட பிற்சேர்க்கை IX-ல் தரப்பட்டுள்ளன.

தாலமி, அலெக்சாந்திரியா நூலகத்தில் தலைமை நூலகராகப் பணியாற்றிப் பல நூல்களைப் பரிசோதித்து, அவற்றின் துணை கொண்டு தாமே பல நூல்களை யாத்தார். அவர் எழுதிய புத்தகங்களுள் முக்கியமானவை புவியியல் சார்ந்தனவாகவும், கணக்கியல் சார்ந்தனவாகவும், வானியல் சார்ந்தனவாகவும் இருந்தன. தாலமி அலெக்சாந்திரியா நூலகத்தில் கி.பி. 139 ஆம் ஆண்டுப் பணியாற்றத் தொடங்கி, அவர் தம் இறுதி ஆண்டான கி.பி. 161 வரை 22 ஆண்டுகள் தலைமை நூலகராகப் பணியாற்றிப் பெரும் புகழ் பெற்றார்.

தாலமி அலெக்சாந்திரியா நூலகத்தில் தலைமை நூலகராகப் பணியாற்றிக் கொண்டிருக்கும் காலத்தில் ரோம் நாட்டில் ரோமப் பேரரசராகப் பணியாற்றியவர் இருவர் ஆவர். அவர்களுள் ஒருவர் ஹாட்ரியன் (Hadrian). அவர் அரசாட்சி செய்த காலம் கி.பி. 117-138. இவரையடுத்துப் பேரரசராகப் பதவி ஏற்றவர் அன்டோனியஸ் பயஸ் (Antonius Pius) ஆவார். அவர் ஆட்சி செய்த காலம் கி.பி. 139–161. இவ்விருவர்களுள் முதல் கூறப்பட்ட ஹாட்ரியன் என்பாரது ஆட்சிக் காலமே பொற்காலம் (Golden Age) என வரலாற்றாசிரியர்களால் கூறப்படுகிறது.

அன்டோனியஸ் பயஸ் இறந்ததும், அவர் மகனார் மார்க்கஸ் அரீலியஸ் (Marcus Aurelius) பட்டமெய்தினார். அவர் கி.பி. 161 முதல் கி.பி. 180 வரை செவ்வன ஆட்சி செய்தார். பட்டமேற்ற பிறகு அவரே மார்க்கஸ் அரீலியஸ் அன்டோனியஸ் (Marcus Aurelius Antonius) என்ற பெயரால் வழங்கப்பட்டார். அவரே தலை சிறந்த தத்துவ ஞானியாராக விளங்கிய பேரரசர் மார்க்கஸ் அரீலியஸ் ஆவார். அவர் 'மெடிடேஷன்ஸ்' (Meditations) என்ற புத்தகத்தை எழுதியவர். கி.பி. 161-ல் நடைபெற்ற அவர் பட்டமேற்பு விழாவில் இந் நூலாசிரியரான தாலமி ரோம் நகரில் கலந்துகொண்டதாக வரலாறுகள் கூறுகின்றன. மேதைகள் வாழ்ந்த யுகத்தில் தாலமியும் வாழ்ந்ததால், அவரும் ஒரு மேதையாக விளங்கியது இயல் பேயன்றோ? மார்க்கஸ் அரீலியஸ், பன்னோனியா (Pannonia) எனுமிடத்தில் நடந்த போரில் கலந்துகொண்டு போர்செய்த பொழுது, அவர் கொல்லப்பட்டார். அவர் இறந்த ஆண்டு கி.பி. 180 ஆகும். இராமாயணத்தில் நுவலப்படும் ராஜரிஷி ஜனகரைப் போன்று, பற்றின்றி மார்க்கஸ் அரீலியஸ் 20 ஆண்டுகள் ஆட்சி செய்தார். அக் காலமே மேதையுகம் (Age of Wisdom) என்று தத்துவஞானியர்களால் விதந்தோதப்பட்டது.

—(Vide A Smaller Classical Dictionary, p. 93.)

குறிப்பிட்டுள்ளார். அக் காலத்தில் உலகின் பெரும் பகுதியில் ஒரு சிறிய பகுதியே மக்களுக்குத் தெரிந்திருந்தது. அவர்களுக்குத் தெரிந்த பகுதியை மட்டும் ஒரு கோளமாக எடுத்துக்கொண்டனர். அக் கோளம் மிகச் சிறிதே என்று இக் காலத்தவர் கருதக் கூடும். ஆனால், அக் காலத்தவர் அதையே உலக முழுமையும் ஆகும் எனக் கருத்துக் கொண்டனர். அச் சிறிய கோளத்தில் அட்சாம்சம், தீர்க்காம்சம் ரேகைகளை (Degrees) எடுத்துக் கொண்டதால், அவர் குறிப்பிடும் இடங்களுக்கும், இக் காலத்து அதே இடங்களுக்குக் குறிப்பிடப்படும் அட்சாம்ச தீர்க்காம்ச ரேகைகளுக்கும் பெருத்த வேறுபாடு காணப்படுவது இயல்பே. ஆயினும், ஒவ்வோர் இடத்தின் இருப்பை, அட்சாம்சம், தீர்க்காம்சம் ரேகைகளுடன் கொடுத்துதவியவர்களுள் தாலமியே முதலிடத்தைப் பெற்றவராவார்.

தாலமி ஓர் இருப்பிடத்தைக் குறிப்பிட்டுள்ள முறை இப் புத்தகத்தில் அதிகாரம் 3, குறிப்பு-3-ல் தரப்பட்டுள்ளது.

இவ்வாறு கணக்கியல், புவியியல், வானவியல் ஆகிய இம் மூன்று இயலிலும் புதுமை புகுத்திய தாலமி, கி.பி. 161ஆம் ஆண்டு, மார்க்கஸ் அரீலியஸ் அரசரின் பட்டமேற்பு விழாவில் கலந்து கொண்ட சில மாதங்களில் நோய்வாய்ப்பட்டுக் காலமானார். அவர் இறக்கும்பொழுது அவருக்கு வயது 42.

அக் காலத்தில் விளங்கிய துறைமுகங்கள், நகரங்கள், அரசர்கள், அவர்கள் தலைநகரங்கள், ஆறுகள், காடுகள், கடல்கள், மலைகள், அவற்றால் மக்கள் பெற்ற நன்மை ஆகிய இவைபோன்ற செய்திகள் தாலமி எழுதிய புவியியலில் குறிப்பிடப்பட்டுள்ளன. அக் காலத்தில் விளங்கிவந்த புவியியல் புத்தகம் இஃதொன்றே என்பதை நினைவில் கொள்ளும்பொழுது, அன்னாருடைய பணி எத்துணை நுணுக்கமாகச் செய்யப்பட்டது என்பது மிகவும் போற்றற்குரிய செய்தியாக விளங்குகிறது. மற்றும், அவருடைய கருத்துகளே கி.பி. 15-ஆம் நூற்றாண்டுவரை எவ்வித எதிர்ப்பும் இல்லாமல், அடிப்படைக் கொள்கையாக, ஆதாரப் புத்தகங்களாகக் கொள்ளப்பட்டனவென்றால், அவருடைய பெருமை மேலும் பன் மடங்கு பெருகியே காணப்படுகிறது.

இப் புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ள செய்திகள் யாவும் தாலமி எழுதிய புவியியல் (Geography) புத்தகம் VII (Book VII), முதல் அதிகாரத்தில் (First Chapter) அடங்கிய செய்திகள் மட்டுமேயாகும்.

தாலமி எழுதிய புத்தகங்கள் 13-ல் இப்பொழுது கிடைப்பவை :

புத்தகம் I-ல், அதிகாரங்கள் 11 முதல் 17 வரை.

புத்தகம் VI-ல், அதிகாரங்கள் 9 முதல் 21 வரை.

புத்தகம் VII-ல், அதிகாரங்கள் 1 முதல் 4 வரை.

**புத்தகம் VII, அதிகாரம் 1 என்பது இந்தியாவைப் பற்றி மட்டுமே** குறிப்புகள் கொண்டுள்ளது. இவ்வதிகாரம் ஒன்று மட்டுமே இங்குத் தமிழில் பெயர்க்கப்பட்டுள்ளது. ஏனைய பகுதிகளையும் தமிழில் பெயர்த்தால், அது மிகப்பெரிய புத்தகமாக ஆகிவிடும் என்ற நோக்கத்தாலும், சுவையான பகுதிகள் மறைந்து, சுவைகுன்றிய பகுதிகளே எஞ்சி நிற்கும் என்ற எண்ணத்தாலும், இந்திய வரலாற்றிற்குத் தாலமியின் எழுத்தோவியங்கள் பயன்படக் கூடும் என்ற நோக்கத்தாலும், இந்தியாவைப்பற்றி விளக்கம் தரும் ஓர் அதிகாரம் மட்டுமே தமிழ்ப்பெயர்க்கப்பட்டுள்ளது. இப் புத்தகத்தில் கொடுக்கப்பட்ட செய்திகள் யாவும் இந்தியப் புவியியலை அறியவும், அக்கால அரசர்கள், ஊர்கள், துறைமுகங்கள், தலைநகரங்கள், ஆறுகள், கடல்கள், மலைகள், வாணிகம் ஆகிய பலவற்றையும் பற்றி இந்திய வரலாற்றின் வாயிலாக அறியவும் மிகவும் பயனுள்ளனவாகும் என்பதே வரலாற்றாசிரியர்களின் துணிபு.

சிறந்த வரலாற்றாசிரியர்கள் தங்கள் காலத்தில் விளங்கிய அரசர்களின் பெயர்களையும், அரச பரம்பரையினரைப் பற்றிய செய்திகளையும் இணைந்துக் கூறுவர். பிளினி (Pliny) (கி.பி.23-79) என்னும் வரலாற்றாசிரியர், தம் காலத்தில் அரசு நடாத்திய கிளாடியஸ் ட்ரூசஸ் ஜெர்மானிகஸ் (Claudius Drusus Germanicus) என்ற ரோமானியப் பேரரசரையும், மெகஸ்தனிஸ் (Megasthenes) (கி.மு.302-296) என்பார் சந்திரகோட்டாஸ் (Chandracottas) என்று வழங்கப்பட்ட சந்திரகுப்த மௌரியரையும் (Chandragupta Maurya), யுவான் சுவாங் (Yuwan Chwang) (கி.பி.629-645) என்பார் ஹர்ஷர் பேரரசரையும் (King Harshavardana), ஆல்பருனி (Alberuni) (கி.பி. 973-1048) என்பார் முகமது கஜினி பேரரசரையும் (Muhammad Ghazzni) பற்றிச் சுவை மிகுந்த செய்திகள் பல வெளியிட்டுள்ளனர். அவர்கள் போலத் தாலமியும் (Ptolemy) (கி.பி. 119-161) இந்தியாவில் ஆந்திர நாட்டின் பேரரசராக விளங்கிய புலுமாயி II (Pulumayi-II) என்பவரை, சிரோ புலுமாயி (Siro Pulumayi) என்று தம் குறிப்புகளில் கொடுத்துள்ளார் (அதிகாரம் 82, குறிப்பு-6). சிரோ புலுமாயி என்ற சொல்

ஸ்ரீ புலுமாயி (Sri Pulumayi) என்பதன் திரிபே. புலுமாயி II என்ற அரசர் கி.பி. 80 முதல் கி.பி. 104 வரை ஆட்சி செய்தார். அவரே கௌதமிபுத்ர சாதகர்ணி (Gautamiputra Satakarni) என்று வழங்கப்பட்டார். சாலகினே (Salaginae) எனும் சொல்லைத் தாலமி, அதிகாரம் 79, குறிப்பு-2-ல் குறிப்பிட்டுள்ளார். சாதகர்ணி என்ற பெயரே, தாலமியால் 'சாலகினே' என்று கிரேக்க உச்சரிப்பில் வழங்கப்பட்டது. இச் செய்தி இந்திய நாட்டு வரலாற்றில் புலுமாயி என்பவரின் காலத்தை நிர்ணயிக்கச் சீரிய சான்றாய்ப் பயன்படுகிறது.

மற்றும், தாலமி கொடுத்துள்ள குறிப்புகள் யாவும் புவியியல் தொடர்பாக உள்ளனவேயன்றி, மக்களைப் பற்றிய குறிப்புகளையோ அல்லது வரலாற்றைப்பற்றிய செய்திகளையோ அவற்றில் அதிகம் காணமுடியாது. ஆனால், **மெகஸ்தனிஸ், பிளினி, பெரிப்ளூஸ் நூலாசிரியர், ஸ்டிராபோ, அர்ரியன், பாஹியான், யுவான் சுவாங், ஆல்பரூனி, மார்க்கோ போலோ** போன்றவர்கள் ஒவ்வோரிடத்தின் வருணனையுடன் அங்கு வாழ்ந்த மக்களின் வரலாற்றையும், அவர்கள் பழக்க வழக்கங்களையும் கொடுத்துதவினர். அதன் காரணமாக, அவர்கள் எழுதிய வரலாறுகள் சுவைமிக்கு விளங்கின.

தாலமியும் அத்தகைய வரலாற்றுச் செய்திகளையும், மக்களின் பழக்க வழக்கங்களையும் இடையிடையே பிணைத்துக் கொடுத்திருக்கலாம். அவருக்கு அச் செய்திகள் யாவும் நன்றாகத் தெரிந்தனவே. ஆயினும், தாம் எழுதிய புத்தகம் புவியியலே (Geography) தவிர வரலாறு அன்று (and not History) என்பதை மனத்துள் உட்கொண்டே அதற்கான விவரங்களைமட்டும் தாம் எழுதிய **புவியியல்** (Geography) என்னும் புத்தகத்தில் பதிய வைத்து விட்டுச் சென்றார்.

வரலாற்றாசிரியர்கள் தரும் வரலாற்றுச் செய்திகள் மிகச் சுவையோடு இருப்பதன் காரணம், அவை யாவும் மனித வாழ்க்கையின் அனுபவங்களைப் பிரதிபலிப்பதனாலேதான். அனுபவங்களை மற்றவர் படிக்கும்பொழுது, அவை தமக்காகவும், தம் சந்ததிக்காகவும், தம் காலத்துக்காகவும் எழுதப்பட்ட சொற்சித்திரங்களே எனக் கூடத் தோன்றும். அவை தம் முன்னேற்றத்துக்கும், சமூக முன்னேற்றத்துக்கும் எழுதப்பட்ட குறிப்புகளாகவே காணப்படும். ஆனால், மக்கள் தொடர்பின்றி எழுதப்படும் இலக்கியங்களும், குறிப்புகளும் அவற்றைப் படிக்கும் பொதுமக்கள் மனத்திலிருந்து விரைவாகவே விலகிச் சென்றுவிடுகின்றன. இதே காரணத்தால், தாலமி எழுதிய புவியியலும் படிப்பாரற்றுப் போற்றுவாரற்று மங்கிப்போய்விட்டிருக்கக்கூடும். ஆனால், அவர்

களையும் மிகச் சிறப்பாகக் கொடுத்துதவுகிறது. இத்தகைய ஆசிரியர்கள் ஒரு நாட்டில் இல்லாவிடில், அந் நாட்டின் புவியியலும் வரலாறும் எவ்வளவு குறுகிக் காணப்படும் என்பது வெள்ளிடைமலை. வரலாற்றாசிரியர்களும், புவியியல் ஆசிரியர்களும் தாலமியின் சொல்லோவியங்களை முழுதும் மறைந்து, புதைந்துபோகாதவாறு எத்துணை ஆர்வத்துடன் இதுகாறும் காப்பாற்றி வைத்துள்ளார்கள்! அத்தகைய பாதுகாப்பாளர்களுக்கு மக்களினம் முழுவதும் தம் உளங்கனிந்த நன்றியைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளதன்றோ?

விளக்கவுரையும் ஆராய்ச்சிக் குறிப்புகளும் இல்லாமல் தாலமியை அணுகவும் முடியாது; அறியவும் முடியாது; புரிந்துகொள்வதும் மிகவும் கடினமாகும். அதன்பொருட்டு ஒவ்வோர் இடத்துக்கும் பெயர்க்காரணம் காட்டி, தற்போதைய அட்சாம்சம், தீர்க்காம்சம் குறித்து, எளிதாய் விளங்கும்படியாகக் குறிப்புகள் தரப்பட்டுள்ளன.

மற்றும் பல்வேறு வரலாற்றாசிரியர்கள் கொடுத்துள்ள ஒப்புமைப் பகுதிகளும் ஆங்காங்குச் சேர்க்கப்பட்டு, தமிழ் இலக்கியங்களிலிருந்து பொருத்தமான மேற்கோள்களும் உரியவிடங்களில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

இந்திய நாட்டைப் பற்றி இந்தியர் ஒருவர் அறிவதைவிட, அயல்நாட்டார் ஒருவர் எத்துணை நுணுக்கமாக ஆராய்ந்து செய்திகளை வெளியிட்டுள்ளார் என்ற செய்தி வியப்பிற்குரியதன்றோ?

மெய்யெழுத்துத் தனித்து மொழிக்கு முதலில் வராது. ட்,ண்,ர், ல்,ழ்,ள்,ற்,ன் ஆகிய எட்டு மெய்யெழுத்துகளும் எவ்வோர் உயிரெழுத்தோடும் கூடி மொழிக்குமுதலில் வாரா என்பது நன்னூலார் முடிவு. டம்பம் என்ற சொல்லை இடம்பம் என்று கூறுவதுபோல, டாலமியை இடாலமி என்று ஏன் வழங்கக்கூடாது என்று கேட்கலாம். அப்படிச் சொல்வது மரபு அன்று. ஆகையால், டாலமி என்ற கிரேக்கச் சொல்லைத் தமிழ் உருவமும் மரபும் கெடாமல் **தாலமி** (Ptolemy) என்றே வழங்கியுள்ளோம். வாழ்க தாலமி! வாழ்க அவரது அரிய, அழகிய சொல்லோவியங்கள்!

---

# தாலமி

**புத்தகம் VII: அதிகாரம் 1.**

**கங்கைநதிக்கு உள்ளடங்கிய இந்தியாவின் புவியியல் வர்ணனை**

## 1. எல்லை

*கங்கே[1] நதிக்குள் அடங்கிய நாடு மேற்கில் பரப்பனிசதேயையும்,[2] அரக்கோசியாவையும்[3] எல்லையாகக் கொண்டுள்ளது. மேற்கில் கெட்ரோசியாவின்[4] கிழக்குப் பகுதியை எல்லையாகக் கொண்டுள்ளது. வடக்கில் சோக்டியானு[5] வழியாகச் செல்லும் இமௌஸ் மலைகளை[6] எல்லையாகக் கொண்டுள்ளது. அதற்கும் அப்பால் சகாய்மலை[7] உள்ளது. கிழக்கில் கங்கே நதி ஓடுகிறது. தெற்கில் கடல் காணப்படுகிறது. மேற்கில் ஒரு பகுதியில் இந்தியப் பெருங்கடல்[8] காணப்படுகிறது. இதனால் இந்தியாவின் கடற்கரையையொட்டி எக் கடல்கள் விளங்குகின்றன என்பது இதனால் குறிக்கப்படுகிறது.*

### விளக்கவுரை

**1. கங்கே நதி** (Ganges River)

கங்கா என்பது வடசொல்; கங்கை என்பது தமிழில் வழங்கும் சொல்; கங்கே என்பது இலத்தீன் மொழியில் வழங்கப்படும் சொல். கங்கே (Ganges) என்ற சொல்லையே ஆங்கிலேயர்கள் காஞ்சஸ் (Ganges) என்று உச்சரித்தனர். வரலாற்று நூல்களிலும் காஞ்சஸ், காஞ்சடிக் பிளெயின் (Gangetic Plain) என்றே வழங்கப்பட்டன. இலத்தீன் மொழியில் காணப்படும் கங்கே (Gange-s) என்பதே சரியான உச்சரிப்பாகும். இறுதியில் உள்ள எஸ் (s) எனும் சொல் உச்சரிப்பில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை.

கங்கை நதியின் இருப்பிடம்: 21°·30′வ × 89°·30′கி.

**2. பரப்பனிசதே** (Parapanisadae)

பரப்பனிசோ (Parapaniso) எனும் மலைத் தொடர் பரபனிசதே என்று பிற்காலத்தில் வழங்கப்பட்டது, தாலமி காலத்தில் இம் மலை பரபனிசதே என்றே வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். இம் மலைத் தொடர் இப்பொழுது ஹிந்துகுஷ் (Hindukush) என்று வழங்கப்படுகிறது. இதன் முக்கிய நகரம் ஆர்டோஸ்பனு (Artosbana). இந் நகரம் இப்பொழுது காபூல் (Kabul) என்று வழங்கப்படுகிறது.

காபூல் நகரின் இருப்பிடம் : 34°·30'வ × 67°·18'கி.

**3. அரக்கோசியா** (Arachosia)

இப்பொழுது ஆப்கானிஸ்தானம் (Afganistan) என்று வழங்கப்படும் நாடு முன்னர் அரக்கோசியா (Arachosia) என்றே வழங்கப்பட்டது. இன்றைய பலூசிஸ்தானம் (Baluchistan) முன்னர் கெட்ரோசியா (Gedrosia) என்றே வழங்கப்பட்டது; சிந்து நதிக்குக் (Indus River) கிழக்கிலும் மேற்கிலும் உள்ள நாடுகளும், கங்கை நதிக்கு (Ganges River) வடக்கிலும், தெற்கிலும் உள்ள நாடுகளும் சமஸ்கிருதச் சொற்களாலேயே பெரும்பாலும் குறிப்பிடப்பட்டன; அந் நாடுகளில் அமைந்த நகரங்களும் அம் மொழிச் சொற்களாலேயே வழங்கப்பட்டன. அதற்குக் காரணம் அக்காலத்திய மக்கள் மொழியும், தேசிய மொழியும் வட இந்தியாவின் வடமொழியாகவே—சமஸ்கிருதமாகவே—இருந்தமையேயாகும்.

அரக்கோசியா (Arachosia) என்பது பரப்பனிசதே மலைத் தொடருக்குத் தெற்கில் உள்ளது; இங்கு முன்னர் ஓடிய நதியின் பெயர் எரிமாந்தஸ் (Erimanthos). அதுவே இப்பொழுது ஹெல்மாண்ட் (Helmand) என்று வழங்கப்படுகிறது. இந் நகரை பிளினி (கி.பி.23-79) வரலாற்றாசிரியரும் குறிப்பிட்டுள்ளார். —(**பிளினி :** புத்தகம் VI, அதிகாரம் 25, குறிப்பு-10, பக்கம் 93).

அரக்கோசியாவின் தலைநகரம் அலெக்சாந்திரியா (Alexandria). அலெக்சாந்திரியாவே இப்பொழுது காண்டகார் (Kandahar) என்று வழங்கப்படுகிறது.

காண்டகாரின் இருப்பிடம். 31·36'வ × 65·40'கி.

**4. கெட்ரோசியா** (Gedrosia)

இது நவீன பலூசிஸ்தானம் (Baluchistan) எனும் நாட்டைக் குறிப்பிடுகிறது. இந் நாடு பிளினியால் (கி.பி. 23–79) கெட்ருசி (Gedrusi) என்று வழங்கப்பட்டது. —(**பிளினி:** புத்தகம் VI

அதிகாரம் 25, குறிப்பு-44, பக்கம் 99). மாவீரர் அலெக்சாந்தர் (கி.மு. 356-323) கெட்ரோசியா வழியாக இந்தியா வந்தார் என்று வரலாறு கூறுகிறது. —(Vide the Early History of India By Vincent A. Smith, M.A., p. 102). நவீன மக்ரான் (Makran) பகுதியும் கெட்ரோசியாவைச் சார்ந்ததேயாகும்.

**5. சோக்டியாஞ** (Sogdiana)

அரக்கோசியா நாட்டின் வடக்கே பாக்டிரியா (Bactria) நாடு இருந்தது. அதன் வடக்கெல்லையாக ஆக்ஸஸ் (River Oxus) நதி விளங்கிற்று. இந் நதியின் முந்தைய பெயர் வக்ஷு (Vakshu). அந் நதியின் வட பகுதியே சோக்டியாஞ என்று வழங்கப்பட்டது. வடக்கிலும் தெற்கிலும் சித்திய மலைகளால் (Scythian Mountains) சூழப்பட்டுள்ளது. அதன் தலைநகரம் சோக்ட் (Sogd) என்பதாகும். சிந்துநதிக்கு வடமேற்கில் ஆக்ஸஸ் நதி பாய்கிறது. சோக்ட் என்பது நவீன கர்டாக் (Karatagh) நனும் நகரத்தைக் குறிப் பிடும். சாமர்கண்ட் (Samarkand) இடமும் குறிப்பிடப்படுகிறது.

கர்டாக்கின் இருப்பிடம்: 39°·0′வ × 69°·0′கி.

சாமர்கண்ட் இருப்பிடம்: 39°·40′வ × 66°·59′கி.

**6. இமௌஸ் மலை** (Imaus Mountain)

இது இந்தியாவின் வடக்கே விளங்கும் உலகப் பெருமலைகளுள் ஒன்ருகிய இமயமலையைக் (Himalaya Mountain) குறிப்பிடுகிறது. இமம் என்பதற்குப் பனி என்று பொருள். பனி மூடிய மலை இமயமலை என்று வழங்கப்பட்டது. பிளினியாலும் இதே மலை இமௌஸ் (Emaus) என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-30, பக்கம் 13).

இமயமலை இருப்பிடம்: 88°·0′வ × 28°·0′கி.

**7. சகாய் மலை** (Sacai Mountains)

இமயமலைக்கும் வடக்கே மங்கோலியா (Mongolia) பிரதேசத் தில் உள்ள நவீன சயான் மலை (Sayan Mountains) யையே முன்னர் சகாய் மலை என்று வழங்கினர். இது நவீன தானுதுவ்வா (Tannutuvva) பகுதியில் உள்ளது.

சகாய் மலையின் இருப்பிடம்: 52°·0′வ × 95°·0′கி.

**8. இந்தியப்பெருங்கடல்** (Indian Ocean)

இந்தியாவிற்கு மேற்கிலுள்ள கடல் அக் காலத்தில் எரித்திரியன் கடல் (Erythrean sea) என்று வழங்கப்பட்டது. எரித்திரியம்

என்றால் சிவப்பு என்பது பொருள். ஆக, அதன் ஒருபகுதி செங் கடல் (Red Sea) என்று வழங்கப்பட்டது. அரேபியன் கடல் என்ற பெயர் (Arabian Sea) பிற்காலத்தில் ஏற்பட்ட பெயரே. இந்துமகா சமுத்திரம் என்று வழங்கப்படும் இந்தியப் பெருங்கடலே (Indian Ocean) இந்தியாவின் மேற்குப் பகுதியில் விளங்கிற்று என்று அக் காலத்தில் மக்கள் கொண்ட நம்பிக்கையாகும்.

இன்று இந்தியப் பெருங்கடல் என்பது இந்தியாவிற்குத் தெற்கே விளங்கும் கடலையே குறிப்பிடுகிறது.

**இந்தியா** எனும் பெயர் வரக் காரணம் பலவாறாகக் கூறப் படுகிறது:

சிந்து நதி பாயும் நாடு சிந்தியா; அதுவே இந்தியா ஆயிற்று என்பது ஒரு சாரார் கொள்கை.

ஹிந்துக்கள் வாழ்ந்துவந்த நாடே ஹிந்தியா; அதுவே இந்தியா என மருவிற்று என்பது மற்றொரு சாரார் வாதம்.

துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் பிறந்த மகன் பரதன் எனப் பட்டான். அவன் சிங்கங்களை அடக்கியாண்ட பெருவீரன். அவன் பெயராலே பரதகண்டம் என்ற சொல் உருவாயிற்று என்பது புராண விளக்கம்.

இண்டஸ் (Indus) நதி பாய்வதால், இந் நாடு இண்டியா என்று ஆயிற்று என்றும் கூறுகின்றனர்.

இந்து (Indu) என்றால் சந்திரன் (இந்து). புத்தபிரானார் வைசாக பௌர்ணமியில் பரிநிர்வாணமடைந்ததால், புத்தபிரானார் விளங்கிய நாடு சந்திரனைத் தொடர்புபடுத்தி இண்டியா என்று வழங்கலாயிற்று என்று யுவான் சுவாங் (கி.பி. 629-645) கூறுகிறார். மற்றொரு கருத்தில், இந்தியாவின் பெருமைப் பெயர் சந்திரன் போன்று ஒளிர்ந்த காரணத்தால், அப் பெயரே இந்து (இண்டியா) என்றாயிற்று என்றும் கூறுகிறார். —(யுவான் சுவாங்: பக்கம் 10)

இந்தியா என்ற சொல் மேலை நாட்டினர் நம் நாட்டிற்கு இட்ட புதுப் பெயராகும்; ஆனால் நம் நாட்டினர் வைத்த பெயர்கள் பரதகண்டம், பாரதவர்ஷம் என்பனவே.

ராமர் சகோதரனான பரதனுக்கும், பரதகண்டம் என்ற பெயருக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. துஷ்யந்தன் - சகுந்தலை மகன் பரதன் பெயரால் நிர்மாணிக்கப்பட்டதே பரத கண்டம்.

# 2. காந்தி வளைகுடா

காந்தி என்று வழங்கப்படும் வளைகுடாவில்[1] சைரஸ் டிரீனில்[2] உள்ளே செல்லும் ஒரு நீர்வழியும், அதன் இறுதியில் ஒரு துறைமுகமும் காணப்படுகின்றன.

| | |
|---|---|
| காந்தி வளைகுடா இருப்பிடம் .... | 109°·30′கி × 20°·0′வ. |
| சிந்து நதியின் தொலைவான மேற்குப் பகுதியில் உள்ள கழிமுகத்தின் பெயர் சகாபா[3] ... | 110°·20′கி × 19°·50′வ. |
| அதற்கடுத்த கழிமுகத்தின் பெயர் சிந்தான்[4] ... | 110°·40′கி × 19°·50′வ. |
| மூன்றாவது கழிமுகத்தின் பெயர் கிரிஸம்[5] (பொன்நிறமுள்ளது) .... | 111°·20′கி × 19°·50′வ. |
| நான்காவது கழிமுகத்தின் பெயர் காரிபோன்[6] ... | 111°·20′கி × 19°·50′வ. |
| ஐந்தாவதின் பெயர் சபாரா[7] .... | 112°·30′கி × 19°·50′வ. |
| ஆறாவதின் பெயர் சபலெஸ்ஸா[8] ... | 113°·0′ கி × 20°·15′வ. |
| ஏழாவதின் பெயர் லோனிபரே[9] ... | 113°·30′கி × 20°·15′வ. |

### விளக்கவுரை

**1. காந்தி வளைகுடா** (Gulf of Canthi)

இது இப்பொழுது கட்ச் வளைகுடா (Gulf of Cutch) என்று வழங்கப்படுகிறது. சௌராஷ்டிரத்தை அடுத்து இன்றும் மஹி காந்தா (Mahikantha) என்ற பிரதேசமும், மகாராஷ்டிரத்தை அடுத்து, குசரத் பிரதேசத்தில், ரீவாகாந்தா (Rewa Kantha) என்ற பிரதேசமும் உள்ளன. அக் காலத்தில் அப் பிரதேசம் முழுவதும் காந்தா (Kantha) என்று வழங்கப்பட்டிருத்தல்வேண்டும். காந்தா (Kantha) என்பதையே தாலமி கிரேக்க உச்சரிப்பில் காந்தி (Canthi) என்றே வழங்கினர்.

| | |
|---|---|
| கட்ச் வளைகுடாவின் இருப்பிடம்: | 22°·35′வ × 69°·40′கி. |
| ரீவா காந்தாவின் இருப்பிடம்: | 22°·0′வ × 73°·0′கி. |
| மஹி காந்தாவின் இருப்பிடம்: | 23°·30′வ × 73°·0′கி. |

## 2. ஸைரஸ்டிரீன் (Syrasterene)

சௌராஷ்டிரம் (Sourashtra) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே ஸைரஸ்டிரீன் (Syrasterene) என்பதாகும். முதன் முதல் ராஷ்டிரிகம் (Rashtrika) என்றே இப் பகுதி வழங்கப் பட்டது. அதுவே நாளடைவில் சௌராஷ்டிரம் என்றும், மகாராஷ்டிரம் என்றும், இருபகுதிகளாகப் பிரிந்தது. இதைப் பிளினி (கி.பி. 23-79), மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) முதலான பண்டை வரலாற்றுசிரியர்கள் தாம் எழுதிய குறிப்புகளில் குறிப்பிட்டுள்ளனர். (**பிளினி—புத்தகம் VI: அதிகாரம் 23, குறிப்பு—29, பக்கம் 46**). (**பெரிப்ளூஸ் : அதிகாரம் 41, குறிப்பு—6, பக்கம் 158**). மகாராட்டியர் வீரராட்டியர் என்றும், மற்றும் வீரராட்டியர் எனும் சொல் குறுகி விராடர் (Virata) என்றும் வழங் கப்பட்டனர். சௌராஷ்டிரம் கத்தியவார் (Kathiawar) என்றும் வழங்கப்படுகிறது.

சௌராஷ்டிரத்தின் இருப்பிடம்: 22°·0′வ×71°·0′கி.

## 3. சிந்துநதியின் மேற்குக் கழிமுகம் சகாபா (Western part of delta of Indus by name Sahaba)

சிந்து நதிக்கு (River Indus) இரண்டு கழி முகங்கள் இருந்தன என மாவீரர் அலெக்சாந்தர் (Alexander, The Great-கி.மு. 356-323) குறிப்பிட்டுள்ளார். ஸ்டிராபோ (கி.மு. 64-கி.பி. 24) என்பாரும் இரண்டையே கூறினர். பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) ஆசிரியர் ஏழு கழி முகங்களைக் குறிப்பிட்டார்.—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 38, குறிப்பு-3, பக்கம் 138). தாலமி (கி.பி. 119-161) அவற்றை ஏழு ஆகக் குறிப்பிடுகிறார்.

சிந்து நதியின் மேற்குக் கழிமுகமான சகாபா (Sahaba) என்பதை அலெக்சாந்தர் பேரரசர் பார்வையிட்டுச் சென்றதாக வரலாறு கூறுகிறது.

இன்று ஜோப் (River Zhob) நதி சிந்து நதியுடன் கலக்கிறது. இந் நதி சிந்து நதியின் மேற்கே உள்ளது. முன்னர் இந் நதி சிந்துவின் கழி முகத்தில் இருந்திருக்கவேண்டும். கால அடைவில் நதிகளின் போக்கு மாற்றமடைவதன் காரணமாக, ஜோப் நதியும் அகன்று சென்றிருக்க வேண்டும். ஆக, சகாபா என்பது இன்று ஓடும் ஜோப் நதியைக் (River Zhob) குறிப்பிடுவதாகும்.

ஜோப் நதியின் இருப்பிடம்: 31°·0′வ×69°·5′கி.

**4. அதற்கடுத்த கழிமுகம் சிந்தான் (Next delta Sindon)**

இது சிண்டோமானு (Sindomana) என்று வழங்கப்பட்டது. சிண்டோமானுவே, பின்னர் சிண்டான் (Sindon) என்று குறுகிற்று. சிண்டான் என்ற நகரம் இருந்த கழிமுகம் அந் நகரத்தின் பெயரால் வழங்கப்பட்டது. மேலும், அந் நகரம் சிந்து நதியின் கழிமுகத்தில் இருந்தது என்று பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80) கூறுகிறார்:

"சிண்டோமானு என்பது சிந்து நதியின் மேற்குக் கரையில் இருந்த நகரமாகும். அவ்விடத்திலிருந்து சிண்டான் பருத்தியும் வழவழப்பான ஆடைகளும் பெருவாரியாக ஏற்றுமதி செய்யப் பட்டன."

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 38, குறிப்பு-3 பக்கம் 137)

சிண்டோமானு இருந்த இடம் இப்பொழுது செக்வான் (Sechwan) என்று வழங்கப்படுகிறது.

செக்வானின் இருப்பிடம்: 26°26′ வ × 67°.51′கி.

சிந்துநதி கழிமுகத்தின் இருப்பிடம் : 24°·24′வ × 67°·58′கி.

**5. மூன்றாவது கழிமுகத்தின் பெயர் கிரிஸம் (The third delta by name Chrysum)**

முதலில் இது சிந்தி கிரிஸம் (Sindhi Chrysum) என்று வழங்கப் பட்டது. பின்னர் கிரிஸம் என்பதற்குப் பொன் என்ற பொருள் உண்டு என்ற காரணத்தால், அந் நதியே ஸ்வர்ணநதி (ஸ்வர்ணம்-பொன்) என்று வழங்கப்பட்டு, அந்த ஸ்வர்ண நதியே சோன்மியானி (Sonmiyani) என்று திரிந்து விளங்கிற்று. ஸ்வர்ணம் என்பதன் குறுக்கமே சோன் (Son).

சோன்மியானி, இன்றைய கராச்சிக்கு வடமேற்கில் சிறிது தொலைவில் உள்ளது.

சோன்மியானி இருப்பிடம் : 25°·23′ வ × 66°·35′கி.

**6. நான்காவது கழிமுகத்தின் பெயர் கரிபோன் (The Fourth delta by name Cariphon)**

இது மித்ரிகான் (Mithrican) நதியைக் குறிப்பிடக்கூடும். அல்லது கரிபோன் எனும் கிளைநதி கால அடைவில் மறைந்து போயிருக்க வேண்டும்.

மித்ரிகான் நதியின் இருப்பிடம் : 26°·0′ வ × 69°·0′கி.

**7. ஐந்தாவது கழிமுகத்தின் பெயர் சபாரா** (The fifth delta by name Saphara)

இது நவீன வாரிமௌத் (Warimouth) எனும் நதியைக் குறிப்பிடுகிறது.

வாரிமௌத்தின் இருப்பிடம்: 24°·0′ வ×68°·0′கி.

**8. ஆறாவதின் பெயர் சபலெஸ்ஸா** (The sixth delta by name Sabalessa)

இந் நதி இப்பொழுது சிர்மௌத் (Sirmouth) என்று வழங்கப்படுகிறது. இந் நதி சிந்துநதிக் கழிமுகத்தில் பாய்ந்து கடலில் கலக்கிறது.

சிர்மௌத்தின் இருப்பிடம் : 24°·22′வ×68°·19′கி.

**9. ஏழாவது கழிமுகத்தின் பெயர் லோனிபரே** (The seventh delta by name Lonibarae)

இது இலவண பூமி என்பதன் திரிபே. இலவணம் என்பது இருணம், இரிணம் அதாவது உவர் நிலம் என்பதைக் குறிப்பிடுகிறது. இலவண பூமியில் ஓடும் ஆறு லூனி (Luni River) என்று வழங்கப்படுகிறது. இந்த ஆறு சிந்து நதிக்குக் கிழக்குப் பகுதியில் இன்றும் ஓடுவதைக் காணலாம். ஆக, லோனிபரே என்றது லூனி நதியைக் குறிப்பிடுகிறது. லூனி நதி சிந்து நதிக் கழிமுகத்தில் கலக்கிறது.

லூனி நதியின் இருப்பிடம் : 25°·12′ வ×71°·48′கி.

## 3. ஸைராஸ்ட்ரா

| | |
|---|---|
| *பர்டாக்ஸிமா[1] ([illegible])* | ... 113°·50′கி×19°·40′வ. |
| *ஸைராஸ்ட்ரா[2] ([illegible])* | ... 114°·0′கி×19°·30′வ. |
| *மோனோக்லோஸன்[3] ([illegible])* | ... 114°·10′கி×18°·40′வ. |

### விளக்கவுரை

**1. பர்டாக்ஸிமா** (Bardaxema)

இப் பெயர் அக் காலத்தில் வழங்கியதாகும். பரத-ஆக்ஸிமா (Barata-Oxema) என்று பிரிந்து பரதன் பெயரால் மேற்குக்கரையில்

ஏற்பட்ட ஒரு நகரம் என்று பொருள் தரும். இப் பெயருடன் கூடிய இடம் இன்று போகத் (Bhogat) என்று வழங்கப்படுகிறது. இது கத்தியவாரின் தென்பகுதியில், போர்பந்தருக்கு வடமேற்கே கடற்கரையை ஒட்டியுள்ளது. பகவத், பரத் என்பதன் திரிபே போகத்.

போகத் இருப்பிடம்: 22°·0′வ×69°·32′கி.

**2. சைராஸ்ட்ரா** (Syrashtra)

இச் சொல் சௌராஷ்டிரம் (Sourashtra) என்பதன் திரிபே. சௌராஷ்டிரம் இன்று கத்தியவார் (Kathiawar) என்று விளங்குகிறது. மகாராஷ்டிரம் (Maharashtra) என்பது நவீன பம்பாய் (Bombay) பகுதியைச் சுற்றி அமைந்திருந்தது. மகாராஷ்டிரம் பின்னர் ஏற்பட்ட பகுதியே. முதலில் ஏற்பட்டது சௌராஷ்டிரமே. 56 தேசங்களில் சௌராஷ்டிரமும் ஒன்றாகும். இதன் தலைநகரம் வல்லபி (Valabhi). கத்தியவாரின் வடபகுதி அனர்த (Anarta) என்றும், கிழக்குப்பகுதி கூர்ஜரம் (Gurjara) என்றும் வழங்கப் பட்டது. சௌராஷ்டிரம் ஒரு கிராமமாக வர்ணிக்கப்பட்டுள்ளது.

சௌராஷ்டிரத்தின் இருப்பிடம்: 22°·0′×71°·0′கி.

**3. மோனுக்கிளாஸன்** (Monoglosson)

இது இன்று துவாரகா (Dwaraka) எனப்படும் துறைமுகத்தைக் குறிக்கிறது. பண்டைக்காலம் முதற்கொண்டே துவாரகா ஒரு வாணிகத் தலமாகவும், சௌராஷ்டிரத்தின் முக்கியத் துறைமுகமாகவும் விளங்கிற்று. இத் துறைமுகம் இன்று கத்தியவாரின் மேற்கு முனைக்கருகில் உள்ளது. பாரிகாஸா (நர்மதையாற்றங் கரையில்), துவாரகா (கத்தியவார் மேற்குக்கடற்கரையில்), பார்பிகம் (சிந்துநதிக் கழிமுகத்தில்) ஆகிய இம் மூன்றும் மிகச்சிறந்த வாணிகத் தலங்களாக விளங்கின. இவை பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) முதலிய நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அர்ரியன் இண்டிகாவிலும் (Arrian Indika—கி.பி. 90-180) இவை குறிப்பிடப்பட்டுள்ளன.

துவாரகாவின் இருப்பிடம்: 22°·15′வ×69°·1′கி.

**தாலமி ஓர் இடத்தின் இருப்பைக் கணக்கெடுத்த முறை:**

தாலமி தம் காலத்தில் மக்களுக்குத் தெரிந்திருந்த நில அளவை-உலகின் அளவை-வடக்குத்தெற்காக 90 டிகிரிக்களாகவும், கிழக்கு மேற்காக 180 டிகிரிக்களாகவும் பிரித்தார். நிலநடுக்கோடு அதாவது ஈக்வேடர் (Equator) 0 டிகிரியை இலங்கை வழியாகப்

போகுமாறு கணித்தார். இலங்கையிலிருந்து ருஷ்யா இறுதி வரை 70 டிகிரிக்களாகவும், இலங்கைக்குத் தெற்கில் உள்ள பிரதேசங்களை 20 டிகிரிக்களாகவும் பிரித்தார். ஆக, வடக்குத்தெற்கை 90 டிகிரிக் களாகப் பிரித்தார்.

இன்று கிரீனிச் (Greenwich) வழியாகப் போகும் 0 டிகிரியைத் தாலமி 20 டிகிரியாக எடுத்துக் கொண்டார். ஐஸ்லாந்து (Iceland) வழியாகப் போகும் 20 டிகிரியைத் தாலமி 0 டிகிரியாகக் கொண்டு, அங்கிருந்து கிழக்கே சீனு (China) வரையில் பரவியிருந்த நிலப் பகுதியை 180 டிகிரிக்களாகப் பிரித்தார்.

ஆக, நவீன தேசப்படத்துக்கும், தாலமி வரைந்த தேசப் படத்துக்கும் உள்ள வேறுபாடு:

நவீன 0 (பூச்சியம்) டிகிரி என்பது சுமத்ரா தீவின் (Sumatra Island) நடுவில் செல்கிறது. ஆனால், தாலமியின் 0 (பூச்சியம்) டிகிரி இலங்கையின் வழியாகச் சென்றது. இவ்விரு முறைகளுக்கும் ஏற்படும் வேறுபாடு 6 டிகிரி. தாலமி குறிப்பிட்ட ஓர் இடத்தின் இருப்புடன் 6 டிகிரி கூட்ட, நவீன அட்சரேகை (Latitude) கிடைக்கும்.

அதேபோல், நவீன 0 தீர்க்கரேகை (Longitude) கிரீனிச் வழியாகச் செல்கிறது. ஆனால், தாலமியின் கணிப்பு 0 டிகிரி ஐஸ்லாந்தில் (Iceland) தொடங்கிற்று. ஐஸ்லாந்து, நவீன கணிப்பின்படி 20 டிகிரி மேற்கில் உள்ளதாகும். ஆக, தாலமி தீர்க்கரேகையுடன் 20 டிகிரியைக் கூட்டினால், நவீன தீர்க்கரேகை கிடைக்கும். இந்த ஒரு நேரான கணிப்பே. காரணம் தாலமி தாம் ஏற்படுத்திக்கொண்ட அளவை ஏன் அவ்வாறு கொண்டார் என்பதற்கு அவர் விளக்கம் கூறவில்லை—கூறின விளக்கம் நமக்குக் கிடைக்காமல் போயிருக்கலாம். மற்றும், பிற்சேர்க்கைVII - (4) பார்க்கவும்.

அக்காலப் பகுதியின் விளக்கவுரையில், ஒவ்வொன்றுக்கும் நவீன-இன்றைய-டிகிரி அளவில் அட்சரேகையும், தீர்க்கரேகையும் கொடுக்கப்பட்டுள்ளன. பிற்சேர்க்கை I பார்க்கவும்.

தாலமியால், அக் காலத்தில் விளங்கிய துறைமுகங்களும், நகரங்களும் எங்கெங்கு இருந்தன என்பவையும், அவற்றின் இருப்பிடங்கள் இன்று எவற்றைக் குறிப்பிடுகின்றன என்பவையும் தரப்பட்டுள்ளன.

அக் காலத்தில் (கி.பி. இரண்டாம் நூற்றாண்டில்) பூவியியல் வர்ணனை (Geography) இஃதொன்றே என்பதை நோக்கும்

பொழுது, தாலமி எவ்வளவு நுணுக்கமாக இப் பணியைச் செய்துள்ளார் என்பது மிகவும் போற்றுதற்குரியதொன்றாகும். அன்றையப் புவியியலைப் பற்றி நமக்குக் கிடைக்கும் ஆதாரச் செய்திகள் இவை ஒன்றே.

---

# 4. லாரிகே[1]

| | | |
|---|---|---|
| *மோபிஸ் நதியின்[2] கழிமுகம்* | ... | 114°·0′கி × 18°·20′வ. |
| *பகிடரே[3]-ஒரு கிராமம்* | ... | 113°·0′கி × 17°·50′வ. |
| *மலியோ முனே[4]* | ... | 111°·0′கி × 17°·30′வ. |

## விளக்கவுரை

**1. லாரிகே** (Laricae)

லாரிகே என்பது ராஷ்டிரிகம் (Rashtrika) என்பதன் திரிபே. குசரத் நாட்டின் (Gujarat) பண்டைய பெயர் லதா (Latha). லதா என்றால் வடமொழியில் கொடி என்று பொருள். ஆக, லதா-கா (கா என்பது நாட்டைக் குறிக்கும் கிரேக்கச் சொல்) என்பது லடா-கா, லாடி-கா என மருவி, அதுவே பின்னர் ராஷ்ட்ரிகம் என்றும், அந்த ராஷ்ட்ரிகம் எனும் சொல்லே அதற்கும் பிற்காலத்தில் சௌராஷ்டிரம் (Sourashtra) என்றும், மகாராஷ்டிரம் (Maharashtra) என்றும் திரிந்து வழங்குவதாயிற்று.

யுவான் சுவாங் (கி.பி. 629-645) மகாராஷ்டிரத்தைக் குறிப்பிட்டுள்ளார். "மொகலாசா அரசர் சிலாதித்தியருக்குக் கீழ்ப்படிய மறுத்தார்." —(**யுவான் சுவாங்:** பக்கம் 191)

மொகலாசா என்பது மகாராட்டிரம் என்பதன் சீன உச்சரிப்பாகும்.

**2. மோபிஸ்** (Mopis)

மோபிஸ் என்னும் சொல் மாஹி நதியைக் (Mahi River) குறிப்பிடுகிறது. மாஹி நதி காம்பே வளைகுடாவில் (Gulf of Cambay) கலக்கிறது.

மாஹி நதியின் இருப்பிடம்: 22°·20′வ × 73°·5′கி.

**3. பசிடரே (Pacitarae)**

பசிடரே என்பது மாஹி நதிக்கருகில் (25 கி.மீ) உள்ள வடோதரா (Vadodara) என்று வழங்கப்படும் பரோடாவைக் குறிப்பிடுவதாகும். பரோடா பண்டைக்காலத்தில் ஒரு கிராமமாயிருந்து, இன்று ஒரு பெரிய நகரமாக விளங்குவதாகும்.

வடோதராவின் இருப்பிடம்: 22°·0'வ × 73°·30'கி.

**4. மலியோ முனை (Maleo Cape)**

இது சபர்மதி நதிக்கும் (Sabarmathi River), மாஹி நதிக்கும் (Mahi River) இடையேயுள்ள காம்பே (Cambay) அருகிலுள்ள முனையைக் குறிப்பிடுவதாகும். அவ் வளைகுடா இன்று காம்பே வளைகுடா (Gulf of Cambay) என்று வழங்கப்படுகிறது.

காம்பேயின் இருப்பிடம் : 22°·19'வ × 72°·38'கி.

மாஹி நதி பாயும் நாடுகள் அபரா (Apara), மாளவம் (Malwa) என்று வழங்கப்பட்டன. இன்று வழங்கப்படும் குஜராத் (Gujarat) என்பதன் பழைய பெயர் கூர்ஜரம் (Gurjara) என்பதே. நர்மதைக்குத் தெற்கில் உள்ள நாடு அநூபம் (Anupa) என்பது.

—[Vide An Advanced History of India By R. K. Mookerji M.A., p. 48 (MAP)]

---

# 5. பாரிகாஸா

**பாரிகாஸா வளை குடாவில்[1]**

| | | |
|---|---|---|
| கம்மோனா[2] | ... | 112°·0'கி × 17°·0'வ. |
| நம்மதாஸ் நதியின் கழிமுகம்[3] | ... | 112°·0'கி × 76°·45'வ. |
| நௌசரிபா[4] | ... | 112°·30'கி × 16°·30'வ. |
| பௌலி பௌலா[5] | ... | 112°·30'கி × 16°·0'வ. |

### விளக்கவுரை

**1. பாரிகாஸா வளைகுடா (Gulf of Barygaza)**

பாரிகாஸா வளைகுடா என்பது இன்று காம்பே வளைகுடா (Gulf of Cambay) என்று வழங்கப்படுகிறது. பாரிகாஸா (Barygaza) என்ற துறைமுகம் நர்மதை ஆற்றங்கரையின் (River Narmada) கழிமுகத்தில் இருந்தது. பாரிகாஸா எனுஞ் சொல்

பிருகு-கச்சா அல்லது பிருகு-க்ஷேத்ரா என்ற சொற்களின் அடிப் படையில் பிறந்ததாகும். பிருகு மகரிஷியால் ஏற்படுத்தப்பட்ட சமநிலம் என்றும், பிருகு மகரிஷியின் பெயரால் ஏற்படுத்தப்பட்ட க்ஷேத்திரம் என்றும் அதற்குப் பொருள் கூறப்படுகிறது. பிருகு கச்சா என்பதே பாரிகாஸா எனக் கிரேக்கர்களால் வழங்கப்பட்டு, அதுவே இன்று புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது. ஆக, பாரிகாஸாவின் ஆதிப்பெயர் பிருகு க்ஷேத்ரா (Brighu Kshetra).

இத் துறைமுகம் பிளினியாலும் (கி.பி. 23-79), பெரிப்ளூஸ் ஆசிரியராலும் (கி.பி. 50-80) குறிப்பிடப்பட்டுள்ளது. யுவான் சுவாங் (கி.பி. 629-645) என்பாரும் இதைக் குறிப்பிட்டுள்ளார்.

பிளினியால் இத் துறைமுகம் பிரென்கோஸி (Brencosi) என்று வழங்கப்பட்டது.—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு–53, பக்கம் 55)

பெரிப்ளூஸ் ஆசிரியராலும் பாரிகாஸா குறிப்பிடப்பட்டுள்ளது:

"பாரிகாஸாவைச் சுற்றிலும் பாம்பினங்கள் காணப்படு கின்றன."

—(**பெரிப்ளூஸ்:** அதிகாரம் 40, குறிப்பு-7, பக்கம் 155)

"பராகா வளைகுடாவுக்கு அப்பால் பாரிகாஸா வளைகுடா காணப்படுகிறது."

—(**பெரிப்ளூஸ் :** அதிகாரம் 41, குறிப்பு-2, பக்கம் 157)

யுவான் சுவாங் (Yuwan Chwang) எனும் சீனப் பயணியும் (கி.பி. 629-645) இத் துறைமுகத்தைக் குறிப்பிட்டுள்ளார்:

"பாராகச்சாவிலிருந்து (Barakatcha) வடமேற்கில் 2000 லித் தொலைவு சென்றால், மோ-லா-போ எனப்படும் நாடு தென்படும்."

—(**யுவான் சுவாங் :** பக்கம் 194)

பாரிகாஸாவின் இருப்பிடம் : 21°·40′வ × 73°·1′கி.

**2. கமானே** (Camanae)

கமானே என்பது நவீன காம்பே (Cambay) யைக் குறிப் பிடுகிறது. பாரிகாஸா வளைகுடா (Gulf of Barygaza) இன்று காம்பே வளைகுடா என்று வழங்கப்பட்டு வருகிறது. காம்பே என்பதே முன்னர் கிரேக்க உச்சரிப்பில் கமானே என்று வழங் கப்பட்டிருத்தல் வேண்டும்.

காம்பேயின் இருப்பிடம் : 22°·19′வ × 72°·38′கி.

மற்றும் அதிகாரம் 4, குறிப்பு-4 பார்க்கவும்.

**3. நம்மநூஸ் நதியின் கழிமுகம்** (The Estuary of River Nammadus)

இது நர்மதை (Narmada) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பேயாகும். நர்மதை நதியின் கழிமுகத்தில்தான் பாரிகாஸா இருந்தது. பாரிகாஸாவின் இன்றையப் பெயர் புரோச் (Broach). இத் துறைமுகத்தையும், நர்மதை ஆற்றையும் பிளினி (கி.பி. 23-69), பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-60), ஸ்டிராபோ (கி.மு. 64—கி.பி. 24), அர்ரியன் (கி.பி. 90-180) ஆகிய பலரும் தத்தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

நர்மதை ஆற்றின் இருபிடம் : 21°·38′வ × 74°·0′கி.

**4. நவசாரிபா** (Navasariba)

இது நவீன நவ்சாரி (Navsari) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இந் நகரம் சூரத் (Surat) நகரத்திலிருந்து தெற்காக 29 கிமீ தொலைவில் (18 மைல்) உள்ளது.

நவ்சாரியின் இருப்பிடம்: 21°·7′வ × 73°·40′கி.

**5. பௌலி பௌலா** (Pauli Paula)

இது நவீன பல்ஸார் (Bulsar) எனும் இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளப்படுகிறது. இவ்விடம் மேலே கூறப்பட்ட நவ்சாரிக்குத் தெற்கில் உள்ளது.

பல்ஸாரின் இருப்பிடம்: 20°·36′வ × 73°·40′கி.

இவ்வதிகாரத்தில் கூறப்பட்ட இடங்கள் யாவும் நர்மதை ஆற்றையும், அதை ஒட்டி அதற்கு வடக்கிலும் தெற்கிலும் உள்ள இடங்களையுமே குறிப்பிடுகின்றன.

2000 ஆண்டுகட்கு முன்னர், இடங்களை எவ்வளவு நுட்பமாகக் குறிப்பிட்டிருந்தனர் என்பது அறிந்து மகிழ்தற்குரியதன்றோ!

---

# 6. அரியகே சாதினன்

## அரியகே-சாதினன் நாடு

| | |
|---|---|
| *சௌபாரா*[2] | .. 112°·30′கி × 15°·30′வ. |
| *கோவாரிஸ் கழிமுகம்*[3] | ... 112°·15′கி × 15°·10′வ. |
| *தௌங்கா*[4] | ... 111°·3′கி × 15°·0′வ. |
| *பெண்டா நதிக் கழிமுகம்*[5] | ... 110°·30′கி × 15°·0′வ. |
| *சிமில்லா (முனையும், வாணிகச் சந்தையும்)*[6] | ... 110°·0′கி × 14°·45′வ. |
| *ஹிப்போகௌரா*[7] | ... 111°·45′கி × 14°·10′வ. |
| *பாலாதி பட்டுை*[8] | ... 110°·30′கி × 14°·20′வ. |

**1. அரியகே—சாதினன் நாடு** (Country of Arriacae Ruled By Sadinon)

**அரியகே**

அதிகாரம் 5-ல் லாரிகே என்பது ராஷ்டிரம் என்பதைக் குறிப்பிடுவதாகக் கண்டோம். (அதிகாரம் 5, குறிப்பு-1). அந்த லாரிகே (Laricae) யின் தென்பகுதியை அரியகே (Arriacae) என்று குறிப்பிடுகிருர். ஆர்யா என்ற சொல் வீரத்தைக் குறிக்கும். இராமாயணத்தில் இராமரைச் சீதை "ஆர்ய புத்ர" என்று விளிக்கும்போது, 'வீரஞ்செறிந்த தசரதர் மகனே' என்றுதான் அதற்குப் பொருள் கொடுக்கப்படுகிறது. ஆக, அரியகே என்பது ஆரிய-கா என்பதன் திரிபேயாகும். வீரர் வாழ்ந்த நாடு என்பது பொருள். கா என்பது கிரேக்க மொழியில் நாடு என்பதைக் குறிப்பிடும்,

ஆக, இங்கு அரியகே என்பது மகாராஷ்டிரத்தைக் (Maharashtra) குறிப்பிடும் சொல்லாகும்.

பெரிப்ளூஸின் (கி.பி. 50-80) ஆசிரியர் இவ்விடத்தை அரியகா (Arriaca) என்றே குறிப்பிட்டார். அவர் ஆரிய (வீரம் பொருந்திய) நாடு என்ற பொருளிலேயே கூறிப்போந்தார். கிரேக்க மொழியில் "கா" என்ற சொல் நாட்டைக் குறிப்பிடும். இண்டி-கா என்பது

இந்திய நாடு என்பதையும், டிமிரி-கா என்பது தமிழ் நாடு (தமிழகம்) என்பதையும், ஆப்ரி-கா என்பது ஆப்ரி என்பாரின் நாடு என்பதையும் குறிப்பிடுவனபோல், அரிய-கா என்பது வீரம் பொருந்திய ஆரிய நாடு என்பதையே குறிப்பிடுவதாகும். இனப் பாகுபாடின்றி, எவ்வெவர் வீரம் படைத்திருந்தாரோ, அவ்வவர் 'ஆரியர்' என்ற பொதுச் சொல்லாலே பண்டைக் காலத்தில் வழங்கப்பட்டார்.

காம்பே வளைகுடாவைச் (Gulf of Cambay) சுற்றியுள்ள பகுதி அரியகா (Arriaca) என்று வழங்கப்பட்டது. இப் பகுதி ஒரு காலத்தில் சித்தியா (Scythia) என்றே வழங்கப்பட்டது.
—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 41, குறிப்பு-5, பக்கம் 158)

"சிந்து நதியின் கழிமுகத்தையும் அதன் மேற்கில் உள்ள நாட்டையும் சித்தியர் (Scythians) வென்று, அப் பகுதி முழுவதையும் சித்தியா (Scythia) என்றே வழங்கினர்."

—(Vide The Early History of India By Vincent A. Smith, p. 217)

**சாதிரன்**

அரியகா பகுதியை ஆண்ட அரசரின் பெயர் சரகணஸ் (Saraganus) என்று பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறுகிறார். சாதகர்ணி (Satakarni) என்ற பெயரே சரகணஸ் என்ற சொல்லாய் கிரேக்க மொழியில் உச்சரிக்கப் படுவதாயிற்று. சாதகர்ணி என்ற பெயர் ஆந்திரநாட்டு அரசர்களான சாதவாகனர்களைக் (Satavahana) குறிப்பிடும். தாலமி பகுதி 79, 92-ல் புலுமாயி II என்று வழங்கிய கௌதமிபுத்ர சாதகர்ணியைக் குறிப்பிடுகிறார். இப் புலுமாயி II ஆட்சிசெய்த காலம் கி.பி. 80-104. இவருடைய நாணயங்கள் குண்டூர் மாவட்டத்தில் (Guntur District) கிடைத்துள்ளன.

(A History of South India By K. A. Nilakanta Sastri, M.A., p. 91)

சாதகர்ணி என்ற பெயரை ஆந்திர நாட்டரசர்கள் தம் பெயர்களுடன் பட்டப்பெயராகவும், வரிசைப் பெயராகவும் இணைத்துக் கொண்டனர். சாதகர்ணி என்ற சொல் சாகர்களையும் (Sakar) யவனர்களையும் (Yavanar), பஹ்லவர்களையும் (Pahlavar) வென்றவரைக் குறிப்பிடுகிறது. இதைக் கௌதமிபுத்ர (Gautami Putra) என்று அரசன் தன் பெயருடன் சேர்த்துக்கொண்டான்.

- (Vide An Advanced History of India by R. K. Mookerji, M.A., p. 115)

ஆக, சாதினன் ஆண்ட அரியகே நாடு என்பதே பகுதியின் தலைப்பு ஆகும்.

**2. சௌபாரா (Saupara)**

இச் சொல் சுபாரகா (Suparaka) என்ற சொல்லின் திரிபே. இன்று சுபாரகா, உம்பர்கான் (Umbargon) என்ற இடத்தில் இருந்ததாகக் கருதப்படுகிறது. இத் துறைமுகம் சிறந்த வாணிகச் சந்தையாகவும், ஏற்றுமதித் துறைமுகமாகவும் விளங்கிற்று. இங்கிருந்து பொற்கட்டிகள் ரோம் நகருக்கு ஏற்றுமதி செய்யப் பட்டன. இது சுர்பாரகா (Surparaka) என்றும் வழங்கப்பட்டது. —[Vide An Advanced History of India, By R.K. Mookerji, M.A. pp. 48-49 (MAP)]

சுபாரகாவின் இருப்பிடம் : 20°·15′வ×72°·52′கி.

**3. கோவாரிஸ் கழிமுகம் (Govaris Estuary)**

கோவாரிஸ் எனும் நதி கோதாவரி (Godavari) நதியைக் குறிப்பிடுகிறது. தென்னிந்தியாவில் என்றும் வற்றாத நதியும், பல பண்டை நூல்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் நதியும் கோதாவரி நதியேயாகும். கிருஷ்ணா நதியும் (River Krishna), காவிரி நதியும் (River Cauveri) புகழ்பெற்றவையே.

கோதாவரி நதியைப் பற்றிக் கம்ப ராமாயணம் கூறுகிறது:

“ சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச்
சான்றோர்
கவியெனக் கிடந்த கோதாவிரியினை வீரர் கண்டார். ”

—(கம்ப ராமாயணம், ஆரண்ய காண்டம்: சூர்ப்பணகைப் படலம்-1)

கோதாவரியின் இருப்பிடம் : 16°·35′வ×82°·15′கி.

**4. தௌங்கா (Thounga)**

இச் சொல் துங்கபத்ரா (Thungabadra) நதியைக் குறிப்பிடுகிறது. இந் நதி கிருஷ்ணா நதி (River Krishna) யின் ஒரு கிளை ஆறு. மற்றும் இந் நதி, கோதாவரி நதியின் (River Godavari) கிளை நதியாகிய பென்கங்கா (Pen Ganga) என்பதைக் குறிப்பிடவும் கூடும் என்பது ஒருசிலருடைய கருத்து.

துங்கபத்ராவின் இருப்பிடம் : 15°·58′வ×78°·18′கி.

பென் கங்காவின் இருப்பிடம்: 19°·45′வ×78°·00′கி.

**5. பெண்டா நதிக் கழிமுகம் (The Benda River Estuary)**

இது கோதாவரியின் கிளை நதியாகிய பென் கங்கா (Pen Ganga) வைக் குறிப்பிடுகிறது. கிரேக்க மொழியில், பென் கங்கா நதி என்பது பெண்டா (Benda) என்று உச்சரிக்கப்பட்டது.

பென் கங்காவின் இருப்பிடம் : 19°·45′வ×78°·00′கி.

**6. சிமில்லா முனையும் வாணிகச் சந்தையும் (Symilla-Cape and Market Town)**

இது செமில்லா (Semylla) என்று வழங்கப்பட்டது. நவீன சவுல் (Chaul) இருக்கும் இடத்தையே இது குறிப்பிடுகிறது. இத் துறைமுகம் வாணிகச் சந்தை நகரமாக விளங்கிற்று. இதை ஆல்பரூனி (Alberuni) (கி.பி. 973-1048) என்பார் சைமூர் (Simur) என்று குறிப்பிட்டுள்ளார். இவ்விடம் பம்பாய்ப் பகுதியில், கொலாபா மாவட்டத்தில், அலிபாக் (Alibag) அருகில் உள்ளது.

சவுல் துறைமுகத்தின் இருப்பிடம்: 18 ·34′வ×72°·55′கி.

**7. ஹிப்போகௌரா (Hippocoura)**

ஹிப்போ (Hippos) என்ற கிரேக்கச் சொல் குதிரை(horse) என்று பொருள்படும். குதிரை வளர்த்து, விற்கப்படும் இடம் ஹிப்போ கௌரா எனப்படும். இவ்விடம் நவீன கோடாபந்தர் (Goda Bandar) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. கோடா என்றால் உருது மொழியில் குதிரை என்றும், பந்தர் என்றால் வாணிகத் தலம் என்றும் பொருள்படும். ஆக, ஹிப்போகௌரா என்பதே நவீன கோடாபந்தரைக் குறிப்பிடும். இந் நகரம் தானா (Thana) வில் உள்ளது.

இங்கு அரபு நாட்டிலிருந்து நல்ல உயர் ரகக் குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்டனவாக, மார்க்கோ போலோ (Marcopolo-- கி.பி. 1254-1324) தம் பயணக் குறிப்புகளில் கொடுத்துள்ளார்.

"மற்றும் வெளிநாடான அரபு நாட்டிலிருந்து குதிரைகள் பலவற்றை இறக்குமதி செய்து, அவற்றை இந் நாட்டிலிருந்து இந்தியாவின் பற்பல பகுதிகளுக்கும் விற்பனைக்காக அனுப்புகின்றனர். இந் நாட்டு மக்களுக்கு விவசாயமும் வாணிகமுமே வாழ்க்கைக்கு உதவும் உயரிய தொழில்களாகும்."

—(மார்க்கோபோலோ: பக்கம் 84)

கோடாபந்தரின் இருப்பிடம்: 19°·22′வ×73 ·2′கி.

8. **பாலாதிபட்ணு (Balatipatna)**

இதைப் பழையபட்ணு (Palayapatna) என்று பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) குறிப்பிடுகிருர். பழையபட்ணு என்பது தாபிலேஷ்வர் (Tabileshwar) எனப்படும். தாபிலேஷ்வர் என்பதே நவீன தாபோல் (Dabhol). தாபோல் ஒரு துறைமுகமாகும். இதனருகில் கடல் 40 கிமீ. நாட்டினுள் செல்கிறது.

பெரிப்ளூஸின் ஆசிரியர் மற்ருேர் இடத்தில் சோ-பட்ணு (Sopatna) என்று வழங்குகிருர். சோ என்ருல் அழகிய என்பது பொருள். பத்மா (பதுமம்) என்ருல் தாமரை அல்லது அல்லி என்பது பொருள். ஆக, சோபட்ணு என்பது சென்னையில் உள்ள திரு அல்லிக் கேணியைக் குறிப்பிடுவதாகும்.

—(**பெரிப்ளூஸ்** : அதிகாரம், 60, குறிப்பு-5, பக்கம் 266)

இது பாலியபட்டணம் (Baliapatam) என்பதைக் குறிப்பிடுவதாகக் கூறுவது பொருந்தாது. இந் நகரம் கேரளாவில், கண்ணனூருக்கு அருகில் உள்ளது. ஆந்திர நாட்டுக்கும் இதற்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லே.

தாபோலின் இருப்பிடம்: 17°·35′வ × 73°·10′கி.

# 7. அரியகே

## அரியகே (கொள்ளைக் கூட்டத்தினரின் நாடு)[1]

| | |
|---|---|
| *மந்நகோரா*[2] | . 113°·0′கி × 14°·0′வ. |
| *பைசாண்டியம்*[3] | .. 113°·40′கி × 14°·40′வ. |
| *கிரிஸோனிஸஸ்*[4] | .. 114°·20′கி × 14°·30′வ. |
| *ஆர்மகாரா*[5] | .. 114°·20′கி × 14°·20′வ. |
| *நாஞெளஞ நதியின் கழிமுகம்*[6] | ... 114°·30′கி × 13°·50′வ. |
| *நித்ராஸ் (வாணிகச் சந்தை)*[7] | .. 115°·30′கி × 14°·40′வ. |

## விளக்கவுரை

**1. அரியகே (கொள்ளைக் கூட்டத்தினரின் நாடு) (Arriacae-Country of Sea Pirates)**

அரியகே (Arriacae) என்பது ஆரியகம் என்பதன் திரிபு என்பதும், அது இன்றைய மகாராஷ்டிரத்தைக் குறிப்பிடும் என்றும் கூறப்பட்டதை முன்னர் கண்டோம் (அதிகாரம் 6, குறிப்பு-1).

கொள்ளைக் கூட்டத்தினர் என்று கூறுவது கடற்கொள்ளைக் கூட்டத்தினரைக் (Sea pirates) குறிப்பிடுவதாகும். அவர்கள் அராபியன் கடலில் (Arabian Sea) ஆங்காங்குச் சிதறி வாழ்ந்து வந்தனர். முக்கியமாக நவீன மங்களூர் (Mangalore) அருகிலும், மௌண்ட் டெலி (Mt. Dely) அருகிலும் பரந்து கிடந்தனர். நேத்ராவதி நதியின் கழிமுகத்தில் இருக்கும் மங்களூர், நதியின் பெயரை முன்னிட்டு அன்று நித்ரியாஸ் (Nitrias) என்று வழங்கப் பட்டது.

ஏழிற்குன்றம் என்று பழந்தமிழ் நூல்களில் குறிப்பிடப் பட்ட குன்றமே இன்று மௌண்ட் டெலி (Mount Dely) என்று வழங்கப்படுகிறது. ஏழில் என்பதே எலி என்றாகி, அவ் எலியே டெலி (Dely) என்று வழங்கப்படுகிறது.

‘‘[illegible] நன்னன் [illegible] பாழிய
[illegible] ஏழிற் குன்றத்து.’’

—(அகநானூறு: 345)

இப்பாடல் ஏழில் மலையைக் குறித்துப் பாடியது.

இக் கடற்கொள்ளைக் கூட்டத்தினரைப் பற்றி பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) நூல் ஆசிரியர்களும், மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) என்பவரும் குறிப்புகள் கொடுத்துள்ளனர்.

பிளினி கூறுகிறார்:

‘‘முசிறியும் அவ்விடம் கப்பல்கள் தங்குவதற்கு ஏற்ற இடமன்று. அதற்குக் காரணம் ஆங்காங்கே இக் கடற் பகுதியில் கொள்ளைக் கூட்டங்கள் வசித்து, அவ்வழியே கடலில் வரும் கப்பல்களுக்கு இன்னல் விளைவிக்கின்றனர். அவர்கள் பகுதியில் உள்ள ஓர் இடத்துக் கருகில் உள்ள நித்திரியாஸ் என்னும் நகரைத் தங்கள் நிலையமாகக் கொண்டு, கொள்ளைத்தொழில் நடத்தி வருகின்றனர்.’’

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 26, பக்கம் 115)

**பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறுகிறார்:**

"கடற்கொள்ளைக் கூட்டத்தினர் காரணமாக, வணிகப் பெருமக்கள் பெரும் அவதிக்குள்ளாயினர்."

—(**பெரிப்ளூஸ்:** அதிகாரம் 52, குறிப்பு-7, பக்கம் 208)

**மார்க்கோபோலோ கூறுகிறார்:**

"மலையாள நாட்டுக் கடற்கரையிலும், இதற்குச் சற்றுத் தொலைவிலிருக்கும் குசரத்துப் பிரதேசத்துக் கடற்கரையிலும் ஏராளமான கொள்ளைக்காரர்கள், கப்பல்கள் யாதாயினும் எங்கே யாயினும் வருகின்றனவா என்று வேவுபார்த்தவண்ணம் இருந்தனர். ஏதாவது கப்பல் ஒன்று தென்பட்டால், அக் கப்பலைச் சிறுகூட்ட மாகச் சூழ்ந்து, அக் கடற்கொள்ளைக்காரர்கள் கப்பலைத் தாக்கி, அதில் காணப்படும் பண்டங்கள் யாவற்றையும் சூறையாடிவிடுவர். அவ்வாறு கொள்ளையடிப்பவரின் குடும்பம் முழுவதும் கடலிலேயே கப்பலில் தங்கள் பொழுதைக் கழித்து விடுவர்.

எத்தகைய கப்பலும் தங்களுடைய பார்வையிலிருந்து தப்பிச் சென்றுவிடாதபடி, ஐந்து மைல் தொலைவுக்கு ஒரு வேவுகாரராகச் சுமார் நூறுமைல் தொலைவுக்கு இருபது வேவுகாரர்களை நிறுத்துவர்... கப்பலில் உள்ள மக்களுக்கு யாதொரு தீங்கையும் இழைக்க மாட்டார்கள். ஆனால், அக் கப்பலில் காணப்படும் பொருள்களைச் சூறையாடியபிறகு, அதைக் கடல் ஓரமாகப் போகுமாறு செய்து விடுவர்."

—(**மார்க்கோபோலோ:** பக்கம் 78-79)

தாலமியின் குறிப்புகள் யாவும் புவியியல் தொடர்பாக உள்ள னவேயன்றி, மக்களைப்பற்றிய குறிப்போ அல்லது வரலாற்றைப் பற்றிய செய்திகளோ அவற்றில் காணமுடியாது. ஆனால் பிளினி, பெரிப்ளூஸ், ஸ்டிராபோ, அர்ரியன் (இண்டிகா), மெகஸ்தனிஸ், மார்க்கோபோலோ ஆகிய நூல்களின் ஆசிரியர்கள் ஒவ்வோர் இடத்தின் பெயருடன் அதைச் சார்ந்த மக்கள் வரலாற்றையும் கொடுத்துச் செல்கின்றனர். அதன் காரணமாக, வரலாற்றுத் தொடர்பாக நோக்கும்பொழுது, மேற்கூறப்பட்ட ஆசிரியர்களின் தொகுப்புகளும், குறிப்புகளும் படிக்கப்படிக்கச் சுவைதோன்றும் படியாக இருக்கும்.

தாலமியும் அத்தகைய வரலாற்றுச் செய்திகளைக் கொடுத்திருக் கலாம். ஆனால் அவை யாவும் அவருக்குத் தெரிந்திருந்தும், புத்தகம் "தாலமியின் புவியியல்" என்று இருத்தலால், அதில் புவியியலைச் சார்ந்த பொருள்களை மட்டும் கொடுத்துள்ளார்.

"துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று
இந்நான் கல்லது குடியு மில்லை."

—[புறநானூறு : 355 (7-8)]

மற்றும், நன்னனைப்பற்றிக் கூறப்படும் செய்திகள் பின் வருமாறு :

நன்னன் தோட்டத்தின் வழியாகச் சென்ற ஓர் ஓடை நீரில் மிதந்துவந்த அவன் தோட்டத்து மாம்பழம் ஒன்றை உடன் எடுத்துச் சுவைத்த பெண் ஒருத்தியை நன்னன் கொலை செய்தான் என்பது குறுந்தொகையில் காணப்படும் செய்தியாகும். இப் பாடல் பரணரால் பாடப்பட்டது.

"மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற் றொன்பது களிற்றொடு அவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல."

—[குறுந்தொகை: 292 (1-5)]

அப் பெண்ணின் உறவினர் அப் பழத்துக்குத் தண்டமாக, பொற்பாவை, யானை முதலியவற்றைப் பலமடங்கு கொடுப்பதாகக் கூறியும், இசையாது, அப் பெண்ணைக் கருணையின்றிக் கொன்றான் என்பது இச் செய்யுளில் காணும் வரலாறு.

மற்றும் பரணர் பாடியுள்ளார்:

"மகிழ்நன் மார்பே வெய்யையானீ
அழியல் வாழிதோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டிற்போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல."

—[குறுந்தொகை: 73 (1-4)]

தன் கனியை உண்டவர்க்கு நீண்ட ஆயுள் பெருகும் எனக் கூறப்பட்ட மாமரம் ஒன்றினை நன்னன் வளர்த்தான். அம் மாமரம் நெடுநாள் சென்று ஒரே ஒரு பழத்தை ஈன்றது. அப் பழம் ஆற்றில் வீழ, அங்குக் குளிக்கச் சென்ற கோசர் குடிப்பெண் ஒருத்தி அப் பழத்தை எடுத்து உண்டாள். அதைக்கேட்டு சினந்து, தனக்கென வளர்த்த மரத்தின் பழத்தை அப் பெண் தின்றாளே என்று வெகுண்டு, அப் பழத்துக்கீடாகக் கொடுக்கவிசைந்த யானை, பொன் பதுமை ஆகிய யாவற்றையும் வேண்டாவென ஒதுக்கி, அப்

பெண்ணைக் கொன்றான். கோசர் குடிமக்கள் இதையறிந்து, அவனைப் பழிக்குப்பழி வாங்க எண்ணி, அவன் வேற்றூர் சென்றிருக்கும்பொழுது, அகுதை என்பாள் பரிசிலாகப் பெற்ற யானைகளை அம் மாமரத்தில் பிணைத்து, அவ்யானைகளைப் பறையடித்து விரட்டினர். அவ் யானைகள் மிரண்டு, வெகுண்டு, அம் மாமரத்தைப் பிடுங்கிக்கொண்டு ஊருள் புக, அவ் யானைகளுடன் கோசரும் உட்சென்று அந் நகரைத் தீக்கிரையாக்கினர் என்பது இச் செய்யுளில் பொதிந்த வரலாறு ஆகும்.

'ஒன்றுமொழிக் கோசர்' என்னும் சொற்றொடர் 'என்றும் உண்மையையே பேசும் கோசர்' என்றும், அவர்கள் 'சொன்ன சொல் தவறாதவர்கள்' என்றும் கூறப்படுகின்றது. ஆகையால், நன்னன் கோசரால் அழிக்கப்பட்டான் என்பது தெரிய வருகிறது.

"மாநீர் வேலிக் கடம்புஎறிந்து, இமயத்து
வானவர் மருள, மலைவில் பூட்டிய..."

—[சிலப்பதிகாரம்: காட்சிக் காதை (1-2)]

என்ற வரிகளில் 'வேலிக் கடம்புஎறிந்த' என்ற சொற்களால், இமயவரம்பன் கடம்பரை அழித்தான் என்றும், அதுவும் கடம்பர்த் தலைவனான நன்னனை அழித்தான் என்றும் கூறப்பட்டுள்ளமை காண்க.

"இலங்குவளை நெகிழச்சாய், அல்கலும்
கலங்குஅஞர் உழந்து, நாம் இவண்ஒழிய
வலம்படு முரசிற் சேரலாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பு அறுத்து."

—[அகநானூறு: 127 (1-4)]

இச் செய்யுளிலும் கடம்பர் அழிக்கப்பட்டது கூறப்பட்டுள்ளது.

மற்றும் நன்னன் கடற்கொள்ளைக்காரன் என்பதும், அவன் கொடியையான ஆணம் வாய்ந்தவன் என்பதும், அவன் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனும், அவன் தம்பியும் ஒன்றுசேர்ந்து அவர்களால் கொல்லப்பட்டான் என்பதும் மேற்கூறப்பட்ட செய்யுட்களினின்று தெரிய வருகின்றன. 'கடம்பு அறுத்து' என்ற சொற்றொடர் 'கடம்பர் கோசரால் அழிக்கப்பட்டார்' என்பது தெளிவாகிறது. மற்றும், நன்னன் இருந்த ஊர் நன்னனூர் என்று வழங்கப்பட்டது; நன்னனூரே பின்னர் கன்னனூர் என்று ஆயிற்று என்று கொள்வதற்கும் இடம் உண்டு.

இக் கடற்கொள்ளைக் கூட்டத்தினர் பெரிப்ளூஸின் ஆசிரியர், பிளினி ஆகியவர்களாலும் குறிப்பிடப்பட்டுள்ளனர். பெரிப்ளூஸின்

காலம் கி.பி. 50-80 என்பதாலும், பிளினியின் காலம் கி.பி. 23-79 என்பதாலும், சேரன் செங்குட்டுவன் காலத்தில் சிலப்பதிகாரம் இயற்றப்பட்டது என்று சிலப்பதிகாரம் கூறுவதாலும், இமயவரம்பன் சேரன் செங்குட்டுவனின் தந்தை என்பதாலும், இமயவரம்பன் தன் தம்பியுடன்சேர்ந்து நன்னனை அழித்தான் என்பதாலும், நன்னன் அழிந்தது பெரிப்ளூஸ் காலத்தில் (கி.பி. 50-80) இருத்தல்வேண்டும். ஆக, அவனை அழித்த இமயவரம்பனின் மகன் சேரன் செங்குட்டு வனின் காலம் கி.பி. 110 ஆக இருக்கக்கூடும். ஆக, சிலப்பதிகாரம் கி.பி. இரண்டாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்ட தென்பது, தாலமியாலும், பெரிப்ளூஸின் ஆசிரியராலும் தெரிய வருகிறது. இதுவே சிலப்பதிகார காலவரையறைக்குத் தக்க ஆதார மாகவும் காணப்படுகிறது.

நன்னனைப்பற்றி மாமூலனுர் என்னும் புலவர் கூறுவதால், மாமூலனுரின் காலம் கி.பி. 80 அளவில் இருந்திருக்க வேண்டும் என்று உறுதிப்பாடடைகிறது. கிரேக்க வரலாற்றுசிரியர்கள் எழுதிய வரலாறுகள் நம் இந்திய வரலாற்றுக் காலத்தை நிர்ணயிக்க எத்துணை அளவு உதவுகின்றன என்பது இதனுல் தெளியப் படுகிறது.

**2. மந்தகோரா** (Mandagora)

இது மந்தரகிரி (Mandragiri) எனும் மலையைக் குறிப்பிடுகிறது. மந்திரமாமலை என்றும் வழங்கப்படுகின்றது. பிளினி (கி.பி. 23-79) இதை மந்திரகோரா (Mandiragora) என்றும், பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) இதை மைந்தர்கி (Maindargi) என்றும் வழங்கினர். இம் மலை ஒரிஸாப் பிரதேசத்தில் கலிங்கப்பட்டினத் துக்கு வடக்கே, கஞ்சம் மாவட்டத்தில், உதயகிரி மலைக்கருகில் உள்ளது.

இதன் நவீன பெயர் மந்தரகிரி. இது மகேந்திரகிரி என்பதன் திரிபாகும். இம் மலையின் உயரம் 4923 அடிகள் (1477 மீ) ஆகும்.

மந்தரகிரியின் இருப்பிடம் : 17°·29′வ × 76°·17′கி.

இம் மலை பிளினியால் குறிப்பிடப்பட்டுள்ளது:

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-67, பக்கம் 20)

மற்றும் பெரிப்ளூஸின் ஆசிரியராலும் குறிப்பிடப்பட்டுள்ளது:

—(**பெரிப்ளூஸ்**: அதிகாரம் 53, குறிப்பு-3, பக்கம் 211)

### 3. பைசாண்டியம் (Byzantium)

இதன் பொருள் 'வெற்றிச் சின்னம்' (City of Victory) என்பதாகும். கருங்கடலையும் (Black Sea), மத்தியதரைக்கடலையும் (Mediterranean Sea) ஒன்றுசேர்க்கும் இடம் பாஸ்போரஸ் (Bosporus) என்று வழங்கப்படுகிறது. இதன் பொருளும் வெற்றிச் சின்னம் என்பதே. ஆக பைசாண்டியம், பாஸ்போரஸ் ஆக இரு சொற்களும் கிரேக்கமொழியில் வெற்றி எனும் பொருளை உட்கொண்டதாகும்.

பைசாண்டியம் என்பது வைஜயந்தி (Vaijayanthi) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. வைஜயந்தி என்றாலும் 'வெற்றிச் சின்னம்' என்பதே பொருள். வைஜயந்தி என்று வழங்கப்பட்ட இடம் இன்று விஜயதுர்க்கம் (Vijayadurgam) என்று வழங்கப்படுகிறது. இவ்விடம், அராபியன் கடற்கரையில், இரத்தினகிரிக்குத் தெற்கில் உள்ளது.

பெரிப்ளூஸின் ஆசிரியர் இப் பைசாண்டியத்தைக் குறிப்பிட்டுள்ளார்:

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 53, குறிப்பு-6, பக்கம் 211)

விஜயதுர்க்கம் இருப்பிடம்: 16°·20′வ × 73°·26′கி.

### 4. கிரிஸோனிஸஸ் (Chrysonisus)

கிரேக்க மொழியில் 'கிரிஸோ' என்றால் பொன் என்பது பொருள். பெரிப்ளூஸின் ஆசிரியர் காவிரி நதியைக் கிரிஸோலிஸ் (Chrysolys) என்று குறிப்பிடுகிறார். (பெரிப்ளூஸ்: அதிகாரம் 53, குறிப்பு-11, பக்கம் 213). அச் சொல் பொன்னி (காவிரியின் வேறு பெயர்) என்பதைக் குறிக்கிறது. ஆக இங்கு கிரிஸோனிஸஸ் என்று குறிப்பது, பொன் தொடர்புடையதாக இருக்கவேண்டும்.

சௌபாரா (Saupara) என்பதும் இடம் முன்னர் சுபாரகா (Suparaka) என்று வழங்கப்பட்டது. சிலர் இதைச் சூர்பாரகா என்றும் குறிப்பிடுகின்றனர். இத் துறைமுகத்திலிருந்து பொற்கட்டிகள் ரோம் நாட்டிற்குப் பெருவாரியாய் ஏற்றுமதியாயின. இன்று சுபாரகா, உம்பர்கான் (Umbargon) என்னும் பெயரால் வழங்கப்படுகிறது.

ஆக, கிரிஸோனிஸஸ் என்பது சுபாரகா என்பதைக் குறிப்பிடுகிறது.

சுபாரகா என்பதே ஓபிர் (Ophir) ஆயிற்று என்றும் கூறுவதுண்டு. ஓபிர் துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்படும் பொன் ஏபிரான் (Apyron) எனப்பட்டது என்று பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறுகிறார்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 36, குறிப்பு-15, பக்கம் 128)

பிளினியும் ஏபிரான் பொன்னைக் குறிப்பிடுகிறார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 22, பக்கம் 34)

சுபாரகா இன்று கிடையாது. சுபாரகா இருந்த இடத்தில் இன்று உம்பர்கான் (Umbargon) என்ற துறைமுகமே உள்ளது. மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-2 பார்க்கவும்.

சுபாரகாவின் (உம்பர்கான்) இருப்பிடம்: 20°·15′வ×72°·52′கி.

## 5. ஆர்மகாரா (Armagara)

ஆர்மா என்றால் படைக்கருவிகள் செய்யப்படும் இடம் என்றும், போர்வீரர்கள் நிறுத்தப்பட்ட இடம் என்றும் கிரேக்க மொழியில் பொருள்படும். இன்று மார்மகோவா (Marmagoa) என்று வழங்கப்படும் துறைமுகம் போர்த்துக்கீசியர் வருவதற்கு முன்பாகவே ஒரு வாணிகச் சந்தை கூடும் நகரமாகவும், பெருந் துறைமுகமாகவும் விளங்கிற்று. அங்கு ஆந்திர நாட்டரசரின் சேனைவீரர்கள் எப்பொழுதும் இருந்தனர்-வாணிகத்தை முன்னிட்டும், சுங்கவரி வசூல் செய்வதை முன்னிட்டும். ஆக, ஆர்மகாரா என்ற இடமே இன்று மார்மகோவா என்று வழங்கப்படுகிறது. அன்றும் போர்வீரர் இருந்தனர்; இன்றும் அங்குப் போர்வீரர்கள் நிறைந்துள்ளனர்.

மார்மகோவாவின் இருப்பிடம்: 15°·25′வ×73°·43′கி.

## 6. நாநகௌனு நதியின் கழிமுகம் (The Estuary of River Nanagowna)

இது கங்கவல்லி (Gangavalli) எனும் நதியைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். கங்கவல்லி அராபியன் கடலில் கார்வார் எனும் இடத்துக்குச் சற்றுத் தெற்கே கலக்கிறது. அந் நதியின் கழிமுகத்தில் கோகர்ணம் (Gokarn) எனும் துறைமுகம் உள்ளது. கௌனு என்பதிலும் கோ (பசு) எனும் சொல் பொதிந்துள்ளது. இது உத்தேசமே தவிர, முடிபன்று.

கங்கவல்லியின் இருப்பிடம்: 15°· 20′வ×72°·12′கி.

**7. நித்ராஸ் (வாணிகச் சந்தை) [Nitras-Market Town]**

இச் சொல் நேத்ராவதி நதி எனும் அடிப்படையில் பிறந்து, அந் நதியின் கழிமுகத்தில் உள்ள மங்களூரைக் (Mangalore) குறிப்பிடுகிறது. பிளினி, பெரிப்ளூஸ் நூல் ஆசிரியர்கள் இதை நித்ரியாஸ் (Nitrias) என்றே வழங்கினர். நேத்ராவதியின் கிரேக்க உச்சரிப்பு நித்ரியாஸ் என்பதே.

இங்குக் கடற்கொள்ளைக் கூட்டத்தினர் இருந்ததாக மார்க்கோ போலோ (கி.பி. 1254-1324) கூறியுள்ளார் —(**மார்க்கோபோலோ:** பக்கம் 78-79). மற்றும் மேலே, குறிப்பு-1 பார்க்கவும்.

நித்ராஸ் (மங்களூர்) இருப்பிடம்: 12°·52′வ × 74°·53′கி.

சிலர் கண்ணனூர் என்பதே முன்னர் நித்ரியாஸ் என்று வழங்கப்பட்டதாகக் கொள்கின்றனர்.

கண்ணனூரின் இருப்பிடம்: 11°·52′வ × 75°·25′கி.

---

# 8. லிமிரிகே

**லிமிரிகே**[1]

| | | |
|---|---|---|
| திண்டிஸ் (ஒரு நகரம்)[2] | ... | 116°·0′கி 14°·30′வ. |
| பிரமகரா[3] | ... | 116°·45′கி × 14°·20′வ. |
| கலைகரியாஸ்[4] | ... | 116°·40′கி × 14°·0′வ. |
| முசிறிஸ் (ஒரு வாணிகத் தலம்)[5] | ... | 117°·0′கி × 14°·0′வ. |
| சூடோஸ்டோமாஸ் (கழி முகம்)[6] | ... | 117°·20′கி × 14°·0′வ. |
| பொடோபெரூரா[7] | ... | 117°·40′கி × 14°·15′வ. |
| கரூரா[8] | ... | 118°·40′கி × 14°·20′வ. |
| செம்னே[9] | ... | 118°·0′கி × 14°·20′வ. |
| பகாரி[10] | ... | 119°·30′கி × 14°·30′வ. |
| பாரிஸ் (நதியின் கழிமுகம்)[11] | ... | 120°·0′கி × 14°·20′வ. |

## விளக்கவுரை

### 1. லிமிரிகே (Limiricae)

இது டிமிரிகா (Dimirica) என்பதன் சிதைவே. டிமிரிகா என்பது தமிழகம் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. 'கா' என்பது நாட்டைக் குறிக்கும் கிரேக்கச் சொல்லாகும். இண்டி-கா, ஆப்பிரி-கா முதலான சொற்களில் உள்ள 'கா' நாட்டைக் குறிப்பிடும். அதுபோல் டிமிரிகா (டிமிரிகே) என்பது தமிழ்-நாடு என்ற சொல்லினதும், தமிழகம் என்ற சொல்லினதும் திரிபே.

இச் சொல்லைப் பெரிப்ளூஸின் ஆசிரியரும் (கி.பி. 50-80), பிளினியும் (கி.பி. 23-79) பயன்படுத்தியுள்ளனர்.

"மற்றும், டிமிரிகா, பாரிகாஸா முதலான இடங்களிலிருந்து திரும்பும் கப்பல்கள் குளிர்காலம் வந்ததன் காரணமாகச் சில பொழுது அத் துறைமுகத்தில் தங்கி இளைப்பாறுவதுண்டு."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 52, குறிப்பு-5, பக்கங்கள் 111, 113)

'டி' என்னும் எழுத்தின் வடிவம் △. இதில்-(△) என்ற எழுத்தில்-நடுவில் உள்ள இணைப்புக் கோடு மறைந்தோ அல்லது அழிந்தோ விட்டதன் காரணமாக, △ என்பது வெற்று ∧ என்ற எழுத்தாயிற்று. இவ் வெற்று ∧ என்னும் எழுத்து, லி என்பதைக் குறிக்கும். ஆக, முதலில் டிமிரிகாவாக இருந்த சொல், முதல் எழுத்து மாற்றத்தின் காரணமாக லிமிரிகா ஆகிவிட்டது. இது எழுத்து செய்த கோளாறே. இச் செய்தி பெரிப்ளூஸ் என்னும் புத்தகத்தில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 52, பக்கம் 131)

பின்னர் வந்த யுவான் சுவாங் (கி.பி. 629-645) என்ற சீனப் பயணியும் இச் சொல்லை தி-லோ-பி-டோ என்று வழங்கினர். அதன் பொருள் திராவிடநாடு என்பதாகும்.

—(யுவான் சுவாங் : பக்கம் 162-167)

பெரிப்ளூஸ், பிளினி, தாலமி காலங்களில் இருந்த தமிழ் நாடு (தமிழகம்) என்ற பெயரானது பின்னர் யுவான் சுவாங் காலத்தில் திராவிட நாடு என்று மருவிற்று என்பதற்கு இவைகளே ஆதாரச் சான்றுகளாகும்.

இவர்களுக்குப் பின்னர் இந்தியாவந்த மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) என்பார் தமிழகத்தை 'மாபர் நாடு' என்ற

அரபுச் சொல்லால் வழங்கினர். தமிழகத்தை மார்க்கோபோலோ மிக விரிவாகக்கொடுத்துள்ளார்.

—(மார்க்கோபோலோ: பக்கம்: 13-14)

## 2. திண்டிஸ் (Tyndis)

இது தொண்டி என்பதன் கிரேக்க உச்சரிப்பேயாகும். இதைப் பற்றி பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) என்னும் நூல் கூறுகிறது: "இது சேரபோத்ராவைச் சார்ந்ததாகும். முசிறிஸ் துறைமுகத்திலிருந்து 500 ஸ்டேடியா தொலைவில் இந் துறைமுகம் உள்ளது."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 53, பக்கம் 220; பிளினி: புத்தகம் VI அதிகாரம் 23)

இத் துறைமுகம் கடலுண்டி என்று முன்னர் வழங்கப்பட்ட கோயிலாண்டி என்று துறைமுகத்தைக் குறிப்பிடுவதாகச் சிலர் கொள்கின்றனர். இக் கூற்று பொருந்தாது.

ஆனால், தொண்டி இருந்த இடம் தற்கால பொன்னானி (Ponnani) இருக்கும் இடமேயாகும். இங்கு ரோம நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டன.

பொன்னானி (தொண்டி) இருப்பிடம்: 10°48'வ × 75°56'கி.

இங்கிருந்து மிளகு, பவளம், தேங்காய் முதலிய பொருள்கள் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதாகப் பிளினி கூறுகின்றார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23)

தமிழ் இலக்கியத்தில் தொண்டி குறிப்பிடப்பட்டுள்ளது:

"திண்டேர் நள்ளி கானத் தண்டர் பல்லா பயந்த
நெய்யிற் றொண்டி."

—[குறுந்தொகை: 210 (1-2)]

இத் தொண்டி இரு பெயர்களால் வழங்கப்படுகிறது. ஒன்று சேரன் தொண்டி என்பதும், மற்றொன்று தடியன் தொண்டி என்பதுமாகும். சேரன் தொண்டிதான் கேரள நாட்டில் உள்ள தற்கால பொன்னானி (Ponnani) இருக்கும் இடமாகும். தடியன் தொண்டி என்பது இராமநாதபுரத்தில் உள்ள தொண்டியாகும். குறுந்தொகையில் "நெய்யில் தொண்டி" என்று குறிப்பிடுவது கடற்கரைத் துறைமுகமான தொண்டியையே குறிப்பிடுகிறது. இது நெய்யல் ஆற்றங்கரையிலுள்ள தொண்டி என்றும் பொருள்படும். நெய்யல் என்பது நோயல் (Noel) ஆறு ஆகும். நோயல் ஆறு என்பது நொய்யில் ஆற்றைக் குறிப்பிடும்.

இத் துறைமுகம் பண்டைக் காலத்தில் சிறந்த வாணிகத் துறைமுகமாக விளங்கிற்று. கிரேக்க நாட்டு மக்களும், ரோம் நாட்டு மக்களும், அராபிய மக்களும், எகிப்தியர்களும் இத் துறைமுகத்தில் வாணிகத்தின் பொருட்டுப் பெருவாரியாகக் குழுமினர்.

முசிறிஸ் என்பது கொடுங்களூர் எனப்பட்ட நவீன கிரேங்க னூரைக் குறிப்பதாலும், இங்கிருந்து திண்டிஸ் 500 ஸ்டேடியா (62 மைல்) என்று பெரிப்ளூஸ் என்னும் நூல் கூறுவதாலும், பொன்னனியே (Ponnani) இக் குறிப்புக்கு மிகவும் பொருந்திக் காணப்படுகிறது. இத் துறைமுகம் பொன்னனி ஆற்றங்கரையில் கடலுடன் கலக்கும் இடத்தில் இருந்தது. பொன்னனி நதியுடன் நொய்யில் ஆறு கலக்கிறது. ஆக, 'நெய்யில் தொண்டி' என்பது நொய்யில் ஆற்றங்கரையில் இருந்ததாகக் கொள்ளப்படுகிறது. பொன்னனி ஆறும், நொய்யில் ஆறும் கடல் அருகில் ஒன்றுகச் சங்கமமாகின்றன. ஆகவே, இங்கிருக்கும் பொன்னனி என்ற இடமே முன்னர் திண்டிஸ் அல்லது தொண்டி இடம் என்று உறுதிப்பாடடைகிறது, நெய்யில் ஆறு பின்னர் நொய்யில் ஆருக மாறிவிட்டது.

3. **பிரமகரா** (Bramagara)

இது பேரியாற்றங்கரையில் உள்ள பரூர் என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இங்கு அந்தணர் பெருவாரியாக வாழ்ந்துவந்த இடமாகும். பிராமணர் வதிந்த அக்கிரகாரம் என்பதே பிரமகரா என்று சுருங்கி வழங்கப்பட்டது.

பல அந்தணர் பறைகொட்டிக் கதக்களி நடனம் ஆடி வந்தனர் என்று தமிழ் இலக்கியம் கூறுகிறது:

> "பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
> கூத்தச் சாக்கையன் ஆடலின் மகிழ்ந்தவன்."

[**சிலப்பதிகாரம்:** நடுகற்காதை (76-77)]

ஆகையால் அந்தணர் பறைகொட்டி வாழ்ந்த ஊரே பறையூர் எனப் பட்டது. இங்குக் கூறப்பட்ட கூத்தச்சாக்கையன் என்போர் கூத்துத் தொழிலில் சிறந்த பயிற்சிபெற்ற சாக்கையன் என்னும் அந்தணர் ஆவர். இச் சாக்கையன் குடும்பமே, பின்னர் கிறித்தவ ஆதரிப்பால் "சாக்கோ" குடும்பமாக மாறிவிட்டது. சிரியன் கிறித்தவர்கள் சாக்கோ குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர். பறையூரே நவீன பரூர் ஆகும். சிரியன் கிறித்தவர்களுக்கு

2000 ஆண்டுகளாகப் பரம்பரைப் பஞ்சாங்கம் உண்டு. அது ரிகார்ட்ஸ் (Recorts) என்று வழங்கப்படுகின்றன.

பரூர் இடத்தின் இருப்பிடம்: 10°·13′வ×76°·15′கி.

இங்குப் பரசுராமர் இருந்ததாக வரலாறு கூறுகிறது. 'பிரமகர' என்பது 'பிரமரிஷி' என்பதன் சிதைவாகவும் இருக்கக்கூடும்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 53, பக்கம் 224)

## 4. சாலைகரியாஸ் (Salaicariyas)

இது சாலக்குடி என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. சாலக்குடி என்னும் ஊர் கொச்சின்–திருச்சூர் பாதையில் உள்ளது. சாலக்கரை என்று முன்னர் விளங்கிற்று. சாலக்கரையைக் கிரேக்க ஆசிரியர்கள் சாலைகரியாஸ் என்று வழங்கினர். இது மேற்கூறப்பட்ட பரூருக்கு வடக்கில் உள்ளது.

சாலக்குடியின் இருப்பிடம்: 10°·25′வ×76°·25′கி.

சாலக்கரை, சாலக்குடி, சாலக்குடை ஆகியவையும் கேரளாவில் திருச்சூர் அருகில் உள்ள ஊர்கள் ஆகும். வடமொழிக் கலைகளைக் கற்ற பார்ப்பன மகரிஷி சாலக்குடையார் என்று வழங்கப்பட்டார். இதை யுவான் சுவாங் (கி.பி. 629-645) தம் பயணக் குறிப்புகளில் குறித்துள்ளார்.

—(யுவான் சுவாங்: பக்கம் 59 (0)

## 5. முசிறிஸ் (வாணிகத் தலம்) [Muziris-Market Town]

இது தமிழ் இலக்கியங்களில் கூறப்படும் முசிறி என்பதைக் குறிப்பிடுகிறது. முசிறி என்ற சொல் முயிரிக்கோட்டம் என்றதன் திரிபே. முசிறி என்ற பெயரே கிரேக்கர்களால் முசிறிஸ் என்று வழங்கப்பட்டது. இங்குத்தான் கொடுங்கலூர் அரசர் வசித்து வந்தார். கொடுங்கலூரே நவீன கிராங்கனூர் (Cranganore) ஆகும். ஆகையால், கொடுங்கலூரே பண்டைய முசிறி இருந்த இடமாகும்.

முசிறி மலையாளக் கடற்கரையின் மிகப் பண்டைய வாணிகத் தலம். இங்குத்தான் இயேசுநாதரின் சீடராகிய செயின்ட் தாமஸ் (St. Thomas) மேலைநாட்டிலிருந்து வந்து இறங்கியதாக வரலாறு கூறுகிறது. (Saint Thomas in India By F. A. DeCruz. K.S.G. p. 98.) அவர் மலையாள நாட்டில் ஏழு வேதக் கோயில்களைக் கட்டியபிறகு, அங்கிருந்து புறப்பட்டுக் கிழக்குக் கடற்கரையிலுள்ள சென்னையின் ஒரு பகுதியான சாந்தோம் என்ற பகுதிக்கு வந்தார். சென்னை சாந்தோமில் அவர் இறந்துவிட்டதாகவும், அங்குள்ள

வேதக்கோயிலில் அவருடைய எலும்புச் சின்னங்கள் அடக்கம் செய்யப்பட்டதாகவும் வரலாறு கூறுகிறது.

மார்க்கோ போலோ (கி.பி. 1254-1324) செயின்ட் தாமஸ் வரலாற்றை மிகச் சுவைபடக் குறித்துள்ளார்.

செயின்ட் தாமஸ் சென்னை மயிலாப்பூரில் ஒரு மரம் அடர்ந்த பகுதியில் வாழ்ந்துவந்ததாகவும், அவர் அங்கோர் இடத்தில் தியானத்தில் இருந்ததாகவும், அப்பொழுது அவரைச் சுற்றி மயில்கள் தோகைகளை விரித்து நின்றனவாகவும், ஒரு வேடன் மயில் ஊனை விரும்பி ஓர் அம்பு எய்தியதாகவும், அவ் அம்பு மயிலைக் கொன்று, அங்குத் தியானத்திலமர்ந்த செயின்ட் தாமஸின் விலாப் புறத்தில் பாய்ந்து, உடன் அவரைக் கொன்றுவிட்டதாகவும், மயில் ஆப்பு உண்ட ஊர் ஆன காரணத்தால், அவ்விடம் மயிலாப்பூர் என்று பெயர் பெற்றதாகவும் மார்க்கோபோலோ தாம் எழுதிய வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்.

—(**மார்க்கோபோலோ:** பக்கம் 42-45)

தமிழ் இலக்கிய நூல்களில் முசிறியைப்பற்றிப் பல குறிப்புகள் காணப்படுகின்றன:

"முழங்கு கடல் முழவின் முசிறியன்ன."

—(**புறநானூறு:** 345)

"முகையவிழ் தார்க்கோதை முசிறியார் கோமான்."

—(**முத்தொள்ளாயிரம்:** 6)

"கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச்செழியன்
முதுநீர் முன்துறை முசிறி முற்றி."

—(**அகநானூறு:** 57)

"யவனர்தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடுவந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி."

—(**அகநானூறு:** 149)

இம் முசிறித் துறைமுகத்தில் ரோம் நாட்டிலிருந்தும், அரபு நாட்டிலிருந்தும், எகிப்திலிருந்தும் வணிகர் பலர் வந்து தங்கினர். முசாபரிஸ் (Muzabaris) என்றால் பயணிகள் தங்கு மிடம் என்று அராபிய மொழியில் பொருள்படும். "முசாபரிஸ்" துறைமுகம் என்பதே "முசிறிஸ்" துறைமுகம் என்று வழங்கப்பட லாயிற்று.

முயிறிக்கோடு என்பது முசிறிக்கருகில் இருந்த சிறு மலையைக் குறிப்பிட்டதுபோலும். கி.பி. 79 ஆம் ஆண்டு, ஆகஸ்டு 23,24. ஆம் நாள்களில் நடைபெற்ற கடல்கோள் காரணமாக அம் மலை கடலுக்குள் மூழ்கியிருக்கவேண்டும். அவ்விடம் முயிறிக்கோட்டம் என்றும் வழங்கப்பட்டது.

சேரநாட்டிற்கு முசிறி துறைமுகமாகவும், வஞ்சிமாநகரம் தலைநகரமாகவும் விளங்கிற்று. வஞ்சிமாநகரம் பேரியாற்றங் கரையில் இருந்தது. பேரியாறே நவீன பெரியாறு (Periyar) ஆகும். இவ் வஞ்சிமாநகரமே நவீன திருவஞ்சைக் களம் ஆகும். இத் திருவஞ்சைக்களம்தான், குலசேகர ஆழ்வார் பிறந்த இடமாகும். இதற்கருகில் உள்ள கரூர்ப்பகுதியே, முன்னைய சேரநாட்டுக் கரூர் ஆகும். இன்றையத் திருச்சி மாவட்டத்தில் உள்ள கரூர் வேறு; சேரநாட்டு வஞ்சிமாநகர்க் கரூர் வேறு.

வஞ்சிமாநகரத்தைப் பற்றிப் பழந்தமிழ் இலக்கிய நூல்கள் குறிப்பிடுகின்றன:

"தூஞ்சா முழவின் அருவி ஒலிக்கும்
மஞ்சு சூழ் சோலை மலை காண்குவம் என
வைந்நுதி வேலொடு பரந்து ஒருங்கு கவ்வி
வஞ்சி முற்றம் நீங்கிச் செல்வோன்."

—[சிலப்பதிகாரம்: காட்சிக் காதை (6-9)]

"பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறந்து."

—[சிலப்பதிகாரம்: காட்சிக்காதை (148)]

"பூவாவஞ்சியில் பூத்த வஞ்சி."

[சிலப்பதிகாரம்: கால்கோட் காதை (50)]

"வாடாவஞ்சி மாநகர் புக்கபின்."

—[சிலப்பதிகாரம்: காட்சிக் காதை (180)]

"குடைநிலை வஞ்சியும், கொற்ற வஞ்சியும்
வென்றோர் விளங்கிய வியன் பெரு வஞ்சியும்
பின்றாச் சிறப்பின் பெருஞ்சோற்று வஞ்சியும்."

[சிலப்பதிகாரம்: காட்சிக் காதை (144-146)]

"அறுத்தாய் கடலங்கரைமேல்
மாகோதை அணியார் பொழில் அஞ்சைக் களத்தப்பனே."

—(சுந்தரர் தேவாரம்: திருவஞ்சைக்களம் 8)

முசிறித் துறைமுகத்தின் பெரும்பகுதி கி.பி. 79 ஆம் ஆண் ஆகஸ்டுத் திங்கள் 23, 24 ஆம் நாள்களில் ஏற்பட்ட பெருங்கடல் கோளால் அழிவுற்றது. இது பிளினியின் (கி.பி, 23-79) வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

வஞ்சியை நவீன பரூர் என்று பேராசிரியர் திரு. வின்சென்ட் ஸ்மித் கூறுவது பொருந்தாது. பரூர் என்பது பறையூர் என்பதன் திரிபே. (இப் பகுதியில் குறிப்பு-3 பிரமகரா விளக்கவுரை காண்க.)

**வஞ்சி என்பதே நவீன திருவஞ்சைக்களமாகும்.**

முசிறியின் இருப்பிடம்: 10°·14′வ × 76°·11′கி.

இம் முசிறியைப்பற்றிப் பெரிப்ளூஸ் ஆசிரியர், பிளினி, ஸ்டிராபே (Strabo), அர்ரியன் (Arrian) ஆகிய பலரும் குறிப்பிட்டுள்ளனர்.

முசிறிக்கும் தொண்டிக்கும் இடையே 500 ஸ்டேடியா அளவு தொலைவு இருந்தது என்று பெரிப்ளூஸ் என்னும் நூல் கூறுகிறது. (பெரிப்ளூஸ்: அதிகாரம் 54, பக்கம் 226). தொண்டி என்பதே பழைய திண்டிஸ். அது இருந்த இடமே நவீன பொன்னனி. அங்கிருந்து 500 ஸ்டேடியா (62 மைல்) என்பது கொடுங்களூர் இருக்கும் இடத்தையே குறிப்பிடுகிறது. கொடுங்களூரே பண்டைய முசிறி இருந்த இடம். கொடுங்களூரே நவீன கிரேங்கனூர் (Cranganore) ஆகும்.

## 6. சூடோஸ்தமஸ் (கழிமுகம்) [Pseudosthomas]

இச் சொல் "பொய்வாயில்" என்று பொருள்தரும். கடல் சிறிது உள்ளே சென்று, காயல் என்னும் பின்தேங்கும் நீர்க் குட்டையை உற்பத்தி செய்யும்பொழுது, அக் குட்டையே, கடலில் ஒரு பகுதியாக ஒரு மயக்கம் ஏற்படுத்துவதுண்டு. அதைத்தான் 'பொய்வாயில்' என்று வழங்கினர்.

இங்கு முசிறிக்குத் தெற்கில் அவ்வாறு 'பொய்வாயில்' ஒன்று இருந்தது. அதற்கும் பின்பக்கம் உப்பங்கழி அல்லது உப்பளம் இருந்தது.

பொய்வாயில் (கழிமுகத்தின்) இருப்பிடம்: 10°·10′வ × 76°·11′கி.

## 7. புதுபெரூரா (Puduperura)

இது புதுப்பட்டணம் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. புதியதாக நிர்மாணிக்கப்பட்ட பட்டணமே புதுப்பட்டணம். பிளினி, அர்ரியன் (Arrian) ஆகிய வரலாற்றாசிரியர்கள் சென்னைக்

கருகில் 'பொதுகே' (Podukae) என்ற ஊர் இருந்ததாகக் குறிப் பிட்டுள்ளனர். 'பொதுகே' என்பதும் புதுப்பட்டணம் என்ற பொருள்கொண்ட சொல்லாகும். பொதுகே என்பது நவீன பாண்டிச்சேரியைக் குறிப்பிடும் என்றும், மற்றும் அதற்கருகில் உள்ள வளவன்துறை எனும் வளவனூர் என்பதைக் குறிப்பிடும் என்றும் கருதப்படுகிறது.

இங்குப் புதுபெருரா என்பது முசிறித் துறைமுகத்துக்கு அருகில் இருந்த சேரர் தலைநகரமான வஞ்சி என்னும் வஞ்சி மாநகரைக் குறிப்பிடுகிறது. இந் நகரம் பேரியாற்றங்கரையில் இருந்தது. பேரியாறு என்பது நவீன பெரியாறு (Periyar) ஆகும். இவ் வஞ்சிமாநகரம் பூவாவஞ்சி, புத்தவஞ்சி என்று இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மற்றும், இந் நகரம் வஞ்சி முற்றம் எனவும், வாடாவஞ்சி எனவும் வழங்கப்பட்டது.

வஞ்சிமாநகரத்தைப்பற்றிப் பழந்தமிழிலக்கிய நூல்கள் குறிப் பிட்டுள்ளன. அவற்றை மேற்பகுதியில் குறிப்பு-5 முசிறி என்பதன் விளக்கவுரையில் காண்க.

முசிறியிலிருந்து மிளகு, சந்தனம் முதலியன ஏற்றுமதியாயின என்று பெரிப்ளூஸ், பிளினி, அர்ரியன் ஆகிய நூல்களில் குறிப் பிடப்பட்டுள்ளன.

"யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி."

—(அகநானூறு: 149)

இச் செய்யுளில் பொன் இறக்குமதியானதும், கறி (மிளகு) ஏற்றுமதி செய்யப்பட்டதும் குறிப்பிடப்பட்டுள்ளது.

வஞ்சி என்பது திருவஞ்சைக்களம் ஆகும். இதைப்பற்றி டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் M.A. அவர்கள் மிக மிக விரிவாகத் தமது "சேரன் வஞ்சி" என்ற புத்தகத்தில் எழுதி யுள்ளார்கள்.

வஞ்சி நகரத்தின் இருப்பிடம்: 10·14'வ × 76·13'கி.

## 8. கருரா (Karura)

இதுதான் கரூர் என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும். இவ்வூர் திருவஞ்சைக்களத்துக்கு வடக்கில் 10 மைல் (16 கி.மீ.) தொலைவில், கருப்பட்டணம் என்ற ஊருக்கும் கரூர்முரி (Karurmuri)

என்பதற்கும் இடையே விளங்கிற்று. முசிறித் துறைமுகத்திற்கும் வஞ்சிக்கும் இடையே இருந்தது. (சேரன் வஞ்சி: டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் இயற்றியது.)

கரூர் தமிழ் இலக்கிய நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது:

> "திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
> தெண்ணீர் உயர் கரைக் கவைஇய
> தண்ஞான் பொருநை மணலினும் பலவே"
>
> —(அகநானூறு: 83)

இதில் ஆன்பொருநை என்பது பேரியாற்றைக் குறிப்பிடுகிறது. பொருநை என்று கூறும் பொழுது, அது திருநெல்வேலித் தாமிர பரணியைக் குறிப்பிடுகிறது.

> "கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை
> திருமாவியல் நகர்க் கருவூர் முன்றுறை"
>
> —[அகநானூறு: 93 (20-21)]

இங்குக் கூறப்பட்ட கரூர் சேரநாட்டுக் கரூர். திருச்சி மாவட்டத்திலுள்ள கரூர் வேறு. இரண்டையும் ஒன்று படுத்திக் குழம்பக்கூடாது.

கருரின் (வஞ்சி) இருப்பிடம்: 10°·16'வ × 76°·15'கி.

**9. ஸெம்னே (Semnae)**

இது சிரமணர் (Sramanar) என்றதன் கிரேக்க உச்சரிப்பு. சிலப்பதிகாரத்தில் குறிப்பிடும் குணவாயில் கோட்டம் அல்லது சமணர் கோட்டம் என்பது இதுவே. இங்குச் சமணர்களும், பௌத்த பிக்ஷுக்களும் இருந்தனர். இளங்கோவடிகள் தவக்கோலம் கொண்டு வீற்றிருந்த இடமே குணவாயில் கோட்டம்.

> "குணவாயில் கோட்டத்து, அரசு துறந்து இருந்த
> குடக் கோச் சேரல் இளங்கோ அடிகட்கு."
>
> —[சிலப்பதிகாரம் : பதிகம் (1-2)]

இக் குணவாயில் கோட்டம், வஞ்சிமாநகருக்குக் கிழக்கில் இருந்தது. (குணம்-கிழக்கு; வாயில்-நுழைவிடம்; கோட்டம்-கோயில் பகுதி.)

குணவாயிலின் இருப்பிடம்: 10°·14'வ × 76°·15'கி.

**10. பகாரே (Bacarae)**

இதைப் பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) நூல் ஆசிரியரும் பகாரே (Bacarae) என்றே வழங்கினர். பிளினியாலும் (கி.பி. 23-79) குறிப்பிடப்பட்டுள்ளது. பகாரே அல்லது பராகே என்பது பொரக்காடு என்னும் இடத்தைக் குறிப்பிடும். இது நெல்கிந்தா (Nelcynda) என்னும் வாணிகச் சந்தைக்கருகில் இருந்தது. அச்சன்கோயில் ஆறு, மணிமாலா ஆறு, பம்பா ஆறு ஆகிய ஆறுகளால் எல்லையாக அமைக்கப்பட்ட இடமே நக்கிடா (Nakkida) ஆகும். இவ்விடம் ஆலப்புழைக்கு அருகில் உள்ளது. பராகே (Baracae) என்றும் சிலரால் உச்சரிக்கப்பட்டுள்ளது.

—(Vide **Trade in Malabar Coast** By T.K. Joseph)

பொரக்காடு இடத்தின் இருப்பிடம்: 9°22′வ : 76°·22′கி.

நக்கிடா என்றால் தேன் கொடுக்கு என்பது பொருள். மூன்று ஆறுகள் கூடும் இடம் முக்கூடல். அது போல, மூன்று ஆறுகளுக்கிடையே உள்ள இடம் நக்கிடா.

— (பெரிப்ளூஸ்: அதிகாரம் 54, பக்கம் 230)




**11. பேரிஸ் நதியின் கழிமுகம் (Estuary of River Baris)**

இது பேரியாறு என்பதன் கிரேக்க உச்சரிப்பேயாகும். இவ்வாற்றின் கழிமுகம்தான் கொடுங்களூர் இருப்பிடம். கொடுங்களூர்

என்பதே நவீன கிரேங்கனூர் (Cranganore). கொடுங்களூர் வெகு அருகில்தான் பண்டைய முசிறித் துறைமுகம் (Musiri) இருந்தது. முசிறித் துறைமுகத்திலிருந்து மிளகு, சந்தனம் முதலியன ஏற்றுமதி செய்யப்பட்டன.

பேரியாற்றின் இருப்பிடம்: 10°·0′வ×76°·52′கி.

பேரியாறு என்பதே நவீன பெரியாறு (Periyar) ஆகும்.

"நெடியோன் மார்பில் ஆரம் போன்று
பெருமலை விலங்கிய பேரியாற்று அடைகரை."
—[சிலப்பதிகாரம்: காட்சிக் காதை (21-22)]

பேரியாற்றங் கழிமுகத்தில் இருந்தது முசிறி. அதற்குப் பிறகு கொடுங்களூர் துறைமுகமாயிற்று. சேரநாட்டின் தலைநகரம் வஞ்சி (Vanji). அதற்கு வடக்கில் கரூர் இருந்தது.

பேரியாற்றங் கழிமுகத்தில் நிறைய உப்பங்கழிகள் இருந்தன.

இப் பேரியாறு, பெரியாறு ஏரியில் தொடங்கி, மேற்காகவும், வடமேற்காகவும் சென்று அராபியன் கடலில் கலக்கிறது. இதன் கரையின் ஓரிடத்தில் ஆல்வாய் (Alwaye) என்னும் ஊர் உள்ளது. இதற்கருகில் உள்ள காலடியிலேதான் அத்துவைத மதஸ்தாபகர் ஆதிசங்கரர் (Adisankara) (கி.பி. 788-820) அவதரித்த இடம் ஆகும். பெரியாறு ஏலக்காய் மலையில் உற்பத்தியாகிறது. இந் நதியின் கழிமுகத்தில் இப்பொழுது பரூர் என்னும் ஊர் உள்ளது. அதற்கடுத்த துறைமுகம் கொடுங்களூர் எனப்பட்ட நவீன கிரேங்கனூர் (Cranganore) ஆகும்.

பேரியாற்றின் இருப்பிடம்: 10°·0′வ×76°·52′கி.

# 9. ஆஅய்

## ஆஅய் எனும் நாடு[1]

*மெல்கிந்தா*[2] ... 120°·20′கி×14°·20′வ.

*ஏலங்கான் (ஏலங்கார்)*
*—ஒரு வாணிகச் சந்தை*[3] ... 120°·40′கி×14°·0′வ.

"கருங் கோட்டுப் புன்னைக் குடக்கு வாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்."

—[நற்றிணை: 167 (1-2)]

இங்குக் கூறப்பட்ட **ஆய் அண்டிர**னின் வரலாறு:

ஆஅய் என்னும் அரசன் கடையெழுவள்ளல்களுள் ஒருவன். பொதியில்மலைத் தலைவன். மற்றும் கவிர மலையைத் தனதாக்கிக் கொண்டவன். ஆஅய் குடி என்ற ஒரு பரம்பரை உண்டு. அக் குடியைச் சார்ந்தவன் ஆஅய் அண்டிரன். இவன் மிகச் சிறந்த வள்ளல். இவ்வரசனை அகநானூற்றில் குமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனாரும், பரணரும் பாடியுள்ளனர். ஏணிச்சேரி முடமோசியாரால் மிகவும் புகழ்ந்துரைக்கப்பட்டு, பல பரிசில்கள் பெற்றார். மோசியார் பற்பல பாடல்கள் ஆஅய்மீது பாடிய காரணத்தால், அவன் "மோசி பாடிய ஆஅயும்" என்று விதந் தோதப்பட்டான். இவ்வரசனுக்குப் பல உரிமை மகளிர் மனைவியாக வாழ்ந்தனர். அவ்வரசன் இறக்கும்பொழுது யாவரும் தீக் குளித்தனர்.

"பாடுநர்க்கருகா ஆஅய் அண்டிரன்
கோடேந்தல் குற்குறுந்தொடி மகளிரொடு
காலனென்னும் கண்ணிலியுய்ப்ப
மேலோர் உலக மெய்தினன் எனாஅப்."

—[புறநானூறு: 240 (3-3)]

அப்பொழுது தேவர் எதிர்கொள்ளும் முழவொலி அங்குள்ளார் யாவர்க்கும் கேட்டது.

"அண்டிரன் வரூஉ மென்ன ஒண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்
போர்ப்புறு முரசங் கறங்க
ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பினானே."

—[புறநானூறு : 241 (2-5)]

"பெருங் கனாடன் பேகனும் திருந்துமொழி
மோசி பாடிய ஆஅயும் ஆர்வமுற்று."

—[புறநானூறு : 158 (12-13)]

ஆஅய் கொடுத்த பரிசில் பொருள்கள் :

சந்தனம், யானை மருப்பு, ஆடுநடைப் புரவி, களிறு, தேர், நாடு, ஊர் முதலியன.

நன்னனைப்பற்றி மாமூலனார் பாடியது அதிகாரம் 7-ல் குறிப்பு-1-ல் ஏற்கெனவே கூறப்பட்டது. அந் நன்னனை இமய வரம்பன் சேரலாதன் கொன்றொழித்தான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

"மாநீர் வேலிக்கடம்பு எறிந்து."

—(**சிலப்பதிகாரம்**: காட்சிக்காதை 11)

என்றதில், கடம்பர் கூட்டத்துத் தலைவனான நன்னனை அழித்து என்பது இதன்பொருள். ஆக, களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலும், இமயவரம்பன் சேரலாதனும் ஒருவராகவே இருத்தல் வேண்டும். அல்லது நன்னனாகிய முதல் தலைவனை இமயவரம்பன் அழிக்க, அவனுடைய குடியில் பின்னர் வந்த நன்னன் என்னும் பெயர்பூண்டானை, களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் அழித்தான் என்று கொள்ளல்வேண்டும். எவ்வாறாயிருப்பினும், நன்னனைக் கொன்றவர்களாகக் கருதப்படும் இருவர்களும் சேர நாட்டு அரசர்களே. அதில் சிறிதேனும் ஐயம் இல்லை. தமிழ் நாட்டு அரசர்களின் வரலாறு சரியாகத் தொகுக்கப்படாத காரணத்தால், அதில் ஐயங்களும், குழப்பங்களும் மிகுதியாகக் காணப்படுகின்றன. தமிழ்நாட்டுக்குரிய சரியான வரலாறு இன்னும் தொகுக்கப்படாதது, தமிழ்நாட்டின் அவப்பேறேயாகும்.

**2. மெல்கிந்தா** (Melcynda)

மெல்கிந்தா என்பது நெல்கிந்தா (Nelcynda) என்பதன் சிதைவே. நெல்கிந்தா என்பது நக்கீடா (Nakkida) என்று வழங்க கப்பட்டது. நக்கீடா என்பது தேள் கொடுக்கு என்னும் பொருள் படும் சொல்லாகும். அச்சன் கோவில் ஆறு, மணிமாலா ஆறு, பம்பா ஆறு ஆகிய மூன்று ஆறுகளுக்கும் இடையே தேள் கொடுக்குப் போன்று உண்டாக்கப்பட்ட இடமே நக்கீடா ஆகும். இதைப் பிளினியும், பெரிப்ளூஸின் ஆசிரியரும் நெல்கிந்தா என்றே வழங்கினர். அவர்களைப் பின்பற்றியே பின்னர்வந்த தாலமியும் அவ் விடத்தை மெல்கிந்தா என்று கூறியுள்ளார். முதல் எழுத்து 'மெ' என்பது 'நெ' க்குப் பதிலாக அச்சுப்பிழையினாலோ அல்லது ஏடெழுதுபவரின் கைத்திறனாலே புகுந்திருக்கவேண்டும்.

இந்த நக்கீடா என்ற இடமே பகாரே (Bacarae) பொரக்காடு (Porakkadu) என்று வழங்கப்படுகிறது. சிலர் பராகே (Baracae) என்றும் எழுதியுள்ளனர். பராகே என்னும் சொல் பொரக்காடு என்பதன் சிதைவே. இவ்விடம் பிளினி, பெரிப்ளூஸின் ஆசிரியர், அர்ரியன் ஆகிய வரலாற்றாசிரியர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

பெருவாணிகச் சந்தையாக விளங்கியது. கொல்லம் அதன் துறைமுகமாக விளங்கிற்று.

இதைப் பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) நூலாசிரியர் குட்டனோரா (Kuttanora) என்று வழங்கினர். குட்டனோரா என்பது குட்டநாடு என்பதன் சிதைவே. குட்டநாடு என்பதே கொட்டரகாரா.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 54, பக்கம் 226)

முன்னர் தமிழ்நாடு பன்னிரண்டு நாடுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது:

"தென்பாண்டி குட்டம் குடங்கற்கா வேண்பூழி
பன்றிஅருவா அதன்வடக்கு—நன்றுய
சீதமலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிரு நாட்டெண்."

—(பழம்பாடல்)

மேற்கூறப்பட்ட பாட்டில், குட்டநாடு, குடகுநாடு, பூழிநாடு, வேணாடு ஆகியவை சேரநாட்டைச் சார்ந்தவை. இவற்றுள் குட்டநாடென்பது, தென் திருவிதாங்கூர்ப் பகுதியைச் சார்ந்த தாகும். நவீன கொட்டரகாரா இப் பகுதியைச் சார்ந்ததே.

இக் குட்டநாட்டைக் கடத்த நாடு என்றும், குளத்து நாடு என் றும், குட்டியாரா என்றும் பலர் பல வகையாக உச்சரித்து வந்துள்ளனர்.

கொட்டரகாராவின் இருப்பிடம்: 8°·59°வ × 76°·44′கி.

**5. பம்மலா (Pammala)**

இது பராலியா (Paralia) என்று வழங்கப்பட்டது. பெரிப்ளூஸ் நூலாசிரியர் பிளினி ஆகியவர்கள் இதைப் பராலியா என்றே வழங்கினர். பராலியா திருவனந்தபுரத்தைக் (Trivandrum) குறிப் பிடுகிறது. இது பிரளய ஈசர் என்பதன் திரிபே. அனந்த சயனம் என்பது பிரளய ஈசர் என்னும் பொருளையே கொண்டுள்ளது. திரு அனந்தசயனபுரம் என்பதே திருவனந்தபுரம் என்று குறுகிற்று. திருவனந்தபுரத்தில் உள்ள திருமாலின் பெயர் திருவனந்தசயனம்.

திருவனந்தபுரத்தின் இருப்பிடம்: 8°·29′வ × 76°·59′கி.

**6. குமாரியா (முனையும், நகரமும்) [Kumaria-Promontory and City]**

இது கன்னியா குமரி (Cape Camorin) என்று வழங்கப்பட்டது. பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) நூலாசிரியர் இதைக் குமாரி என்றும்,

மறைந்தொழிய, அம் முனைமட்டும் இன்று குமரிமுனை என்ற பெயரால் விளங்குகிறது என்று கூறியுள்ளார்.

—(மார்க்கோபோலோ: பக்கம் 50)

"தென்கண் குமரி யாடிய வருவேன்"

—(மணிமேகலை: ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை 83)

இவ்வாறு புகழ்ந்து போற்றும் குமரி முனையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் கன்னியாகுமரி அல்லது குமரித் தேவியின் புராண வரலாறு பின்வருமாறு உரைக்கப்படுகிறது:

"முகாசுரன் பாணாசுரன் என்னும் இரு அசுரர்கள் தரும் இன்னலைத் தவிர்க்குமாறு தேவர்கள் சிவபெருமானை வேண்ட, அவர் தம் சக்திஸ்வருபமாகிய தேவியைக் காளிரூபமாக வடநாட்டில் உள்ள கல்கத்தாவுக்கும் (காளிகட்டம் என்பதே கல்கத்தா என்று மாறிற்று.), கன்னிகை உருவமாகத் தமிழ் நாட்டின் தென் கோடிப் பகுதிக்கும் அனுப்பிவைத்தார்.

கன்னிகை உருவம்கொண்டு, கன்னியாகுமரி இடத்தில் வீற்றிருக்கும்பொழுது, திரிமூர்த்தியாகிய சிவபெருமான் அவளை மணஞ்செய்துகொள்ள நினைத்து அங்குவர ஏற்பாடுகள் செய்தார். இதையறிந்த மற்ற தேவர்களும் அவரைப் பின்தொடர்ந்தனர். அவ்வாறு அவர்கள்கூடிய இடமே கன்னியம்பலம் என்று பெயர் பெறும்.

கன்னிக்குமரிக்குத் திருமணம் நடந்தால், அவருடைய சக்தி குறைந்துவிடும் என்று நினைத்த நாரதர் அங்குத் தோன்றினர். மூன்று நிபந்தனைகளைத் திரிமூர்த்தி நிறைவேற்றினால், கன்னிக் குமரியை மணக்கக்கூடும் என்று கூறி, அந் நிபந்தனைகளைப் பின்வருமாறு வெளியிட்டார்:

1. கண்களில்லாத தேங்காய், 2. கணுவில்லாக் கரும்பு, 3. காம்பில்லாத மாங்காய் ஆகிய இவற்றை எடுத்துக்கொண்டு பொழுதுவிடிவதற்குள் கன்னிக்குமரி இருக்கும் இடத்தையடைந்து அவளுக்குக் கொடுத்துத் திருமணம் செய்துகொள்ளலாம் என்பதே.

திரிமூர்த்தியும் தாம் சேகரித்த மூன்று நிபந்தனைக்கான பொருள்களையும் எடுத்துக்கொண்டு, கன்னியம்பலம் அருகேவந்து ஒரு பாறையின்மீது இளைப்பாறினர். நாரதர் அப் பாறைக்கருகில் ஒரு சேவல் உருவம்கொண்டு, விடியற்காலை ஆகிவிட்டதற்கு அடையாளமாகக் கூவினர். 'விடியற்காலை ஆகிவிட்டது, இனி

தேவிகுமாரியை மணக்கமுடியாது' என்று நினைத்து, திரிமூர்த்தி தாம் கொணர்ந்த அதிசயப் பொருள்களை அப் பாறைமீதே போட்டு விட்டுத் திரும்பிச் சென்றுவிட்டார். அப் பாறை இன்றும் "வழுக்குப்பாறை" என்ற பெயரால் வழங்கப்படுகிறது. இப் பாறை சுசீந்திரத்திற்கு ஒருமைல் (1·8 கிமீ.) கிழக்கில் உள்ளது. மற்றும் அங்கே கோழிக்காலின் சுவடும், திரிமூர்த்தியின் சின்னங்களும் பொறிக்கப்பட்டுள்ளன.

திருமணக்கோலம்பூண்டு நின்ற கன்னிக்குமரி நீண்டநேரம் காத்திருந்தும், திரிமூர்த்தி வரவில்லை. திருமணத்துக்காகச் சமைக்கப்பட்ட சாதம் மண்ணாகவும், பொடிமணலாகவும் மாறிவிட்டது. அன்றுமுதல் ஈசுவரனாகிய திரிமூர்த்தியையடைய கன்னிக்குமரி கன்னிகைக் கோலத்திலேயே தவங்கிடக்கிருள். அக் கடற்கரையிலுள்ள மண், பொடிமணலாகவும், மண்தூளாகவும், பலநிறங் கொண்ட மண்ணாகவும் காட்சியளிக்கிறது."

இவ்வாறு தவம் செய்யும் நிலையில் உள்ள கன்னிக் குமரியை மகாகவி பாரதியார்

"நீலத் திரைக் கடல்ஓரத்திலே—நின்று
நித்தம் தவஞ்செய் குமரி எல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக்கிடக்கும் தமிழ்நாடு."

—(**பாரதியார்** : தமிழ்நாடு 5)

என்று புகழ்ந்து பாடுகிருர்.

இக் குமரி முனையில் நாள்தோறும் பல ஆயிரக் கணக்கான மக்கள் வந்து, அம்மனையும் இயற்கைக் காட்சிகளையும் பார்த்து மகிழ்ந்து செல்கின்றனர். ஆங்கிலத்தில் இவ்விடம் கேப் காமரின் (Cape Camorin) என்று வழங்கப்படுகிறது. இச் சொல் குமரி முனை என்பதன் ஆங்கிலப் பெயர்ப்பே.

குமரி முனையின் இருப்பிடம் ; 8°·5′வ×77°·33′ கி.

மேற்குக் கடற்கரையில் உள்ள துறைமுகங்களைத் தாலமி, பிளினி, பெரிப்ளூஸ் நூலாசிரியர் ஆகியவர்கள் எவ்வாறு தனித் தனியே பெயரிட்டு வழங்கினர் என்பதை அடுத்த பக்கம் உள்ள அட்டவணையில் காணலாம்:

| தாலமி (கி.பி. 119—161) | பிளினி (கி.பி. 23—79) | பெரிப்ளூஸ் நூலாசிரியர் (கி.பி. 50—80) |
|---|---|---|
| பாரிகாஸா | பிரென்கோஸி | பாரிகாஸா |
| சௌபாரா | சோபாரா | சௌபாரா |
| தௌங்கா | — | கலீனியா |
| சிமில்லா | — | செமில்லா |
| ஹிப்போகௌரா | — | — |
| பாலாதிபட்ணு | பாலாதிதே | பளயபடுரா |
| மந்தகரா | மந்தே | மெலிஸிகரா |
| பைசாண்டியம் | — | பைசாண்டியான் |
| ஆர்மகரா | ஆர்கிரே | லூகே தீவு |
| நித்ரா | நித்திரியாஸ் | நித்திரியாஸ் |
| திண்டிஸ் | — | திண்டிஸ் |
| பிரமகரா | — | — |
| முசிறிஸ் | முசிறிஸ் | முசிறிஸ் |
| புதுபெரூரா | — | பொதுகே |
| கரூரா | — | — |
| ஸெம்னே | — | — |
| ஆஅய் நாடு | — | — |
| மெல்கிந்தா | நியாசண்டி | நெல்கிந்தா |
| பகாரே | பராகே | பகாரே (பராகே) |
| ஏலங்கான் | — | — |
| கொட்டியாரா | — | குட்டனோரா |
| பம்மலா | — | பராலியா |
| பிராமன்டோரியம் குமாரியா | பிராமன்டோரியம் குமாரி | பிராமன்டோரியம் குமாரி |

மேற்கூறப்பட்ட மூவர் கூறிச்செல்லும் முறையும், ஒழுங்கும் ஏறக்குறைய ஒன்றுபோலவே காணப்படுகின்றன. பிளினியின் காலம் கி.பி. 23-79. பெரிப்ளூஸின் ஆசிரியர் காலம் கி.பி. 50-80. தாலமியின் காலம் கி.பி. 119-161. தாலமி என்பார், பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறியவற்றையே அடியொட்டிப் பயன்படுத்தியுள்ளார் என்பது தெற்றென விளங்குகிறது.

மெகஸ்தனிஸின் காலம்—தூதுவராக இருந்த காலம்—கி.மு. 302–296. அவர் எழுதியதை அடியொட்டிப் பிளினி தம் குறிப்புகளைக் கொடுத்துள்ளார். மற்றும் அவர் ஸ்டிராபோவிடமிருந்து (கி.மு. 64—கி.பி. 24) பெற்ற சில செய்திகளையும் கொடுத்துள்ளார். ஆக மெகஸ்தனிஸிடமிருந்து ஸ்டிராபோவும், ஸ்டிராபோவிடமிருந்து பிளினியும், பிளினியிடமிருந்து பெரிப்ளூஸின் ஆசிரியரும், பெரிப்ளூஸின் ஆசிரியரிடமிருந்து தாலமியும் கருத்துகளைப் பெற்றனராவர்.

# 10. கரை நாடு

**கரை நாடு**[1]

கோல்கே வளைகுடாவில்[2] கீழ்க்காணும் இடங்களில் முத்து முகிழ்ந்தெடுக்கப்படுகிறது:[3]

| | |
|---|---|
| சூசிகுரை[4] | ... 122°·0′கி × 14°·30′வ. |
| கோல்கே (வாணிகச் சந்தை)[5] | ... 123°·0′கி × 15°·0′வ. |
| சோலன் நதி (கழிமுகம்)[6] | ... 123°·0′கி × 14°·40′வ. |

## விளக்கவுரை

**1. கரைநாடு** (Carai Country)

இச் சொல் இருவகையாகப் பொருள் கொள்ளப்படும். கடற் கரைநாடுகள் என்றும், காரை (காறல் மீன்கள்) அதிகமாகக் கிடைக்கும் கடற்கரைப்பகுதி என்றும் பொருள்படும். கரையோர மாக இருப்பதன் காரணமாக கீழக்கரை (Kilakkarai) என்றும், இடிந்தகரை (Idinthakarai) என்றும், கரைக்கால் (காரைக்கால்-Karaikkal) என்றும் இப் பகுதியில் உள்ள சில கடற்கரையூர்கள் (பட்டினங்கள்) பெயர் பெறுகின்றன. காரைத் தீவு (Karai Thivu) எனும் ஒரு தீவு இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்துக்கு முன்னர் (Jaffna) உள்ளது. காரை என்றால் முட்புதர் எனும் பொருள் உண்டு. முட்புதர்கள் விளங்கிய கடற்கரை என்ற காரணத்தால், காரை நாடு, காரைத் தீவு எனும் பொருள் கொள்ளலாம்.

காரை நாடு, மன்னார் வளைகுடா (Gulf of Mannar) பகுதியின் கடற்கரைப் பகுதிகளைக் குறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டும்.

**2. கோல்கே வளைகுடா** (Gulf of Colchae)

கோல்கே (Colchae) என்பது கொற்கை (Korkai) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பாகும். கொற்கைத் துறைமுகம் கொண்ட வளைகுடாவே கோல்கே வளைகுடா என்று வழங்கப் பட்டது. கொற்கை என்ற துறைமுகம் தாமிரபருணி நதியின் கழிமுகத்தில் விளங்கிற்று. தாமிரபருணி கிரேக்க வரலாற் றாசிரியர்களால் தாப்ரபனே (Taprobanae) என்று வழங்கப்பட்டது. கொற்கையில் நல்ல முத்துகள் முகிழ்ந்தெடுக்கப்பட்டன. கொற்கை முத்து என்பது முத்துகளுள் மிகச் சிறந்ததாகும்.

கொற்கைத் துறைமுகம் கடல்கோளால் அழிந்துவிட்டது. பாண்டியரின் தலைநகரம் மதுரைக்கு (Madura) மாற்றமடைந்து விட்டது. கொற்கைத் துறைமுகம் இருந்த இடமே கபாடபுரம் (Kabatapuram) என வழங்கப்பட்டது.

—(**தமிழர் வரலாறு:** பி.டி. ஸ்ரீநிவாச ஐயங்கார், பக்கம் 252)

பிளினி (கி.பி. 23-79) கொற்கையைக் கோரகே (Coracae) என்று வழங்கினர்.

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-28, பக்கம் 48)

பெரிப்ளூஸின் (கி.பி. 50-80) ஆசிரியர் கொற்கையைக் கோல்கே (Colchae) என்று வழங்கினர். இந்தியப் பவழங்கள் முசிறி, தொண்டி, பாரிகாஸா, கொற்கை முதலிய துறைமுகங்கள் மூலமாக ஏற்றுமதி செய்யப்பட்டன என்று குறிப்பிட்டுள்ளார்.

—(**பெரிப்ளூஸ்:** அதிகாரம் 28, குறிப்பு-3, பக்கம் 99)

கொற்கைத் துறைமுகத்தினருகில், அதன் மறைவுக்குப் பிறகு, காயல்பட்டினம் உருவாயிற்று. இன்று காயல்பட்டினம் (Kayal-patnam), ஆறுமுகனேரி (Arumuganeri) முதலிய பகுதிகள் உப்பளங்களாகப் பயன்படுகின்றன. திருச்செந்தூருக்கு (Tiru-chendur) 8 கிமீ. தொலைவில் வடக்கில் முன்னர்க் கொற்கைத் துறைமுகம் விளங்கிற்று.

கொற்கை வளைகுடாவின் இருப்பிடம்: 8°·34′வ × 78°·10′கி.

கொற்கையில் முத்து முகிழ்ந்தெடுக்கப்பட்டதென்பதைத் தமிழ் இலக்கிய நூல்கள் வாயிலாக அறிகிறோம்.

"கொற்கையம் பெருந்துறை முத்தொடுபூண்டு."

—(**சிலப்பதிகாரம்:** ஊர்காண் காதை 80)

"எம்கொற்கை வேந்தே! வாழி!"

—(**சிலப்பதிகாரம்:** வழக்குரை காதை 30)

மேற்கூறியவற்றால், கொற்கை ஒரு பெருந்துறைமுகமாக விளங்கிற்றென்பதும், அங்கு முத்து முகிழ்ந்தெடுக்கப்பட்டதென்பதும், முன்னாளில் கொற்கை பாண்டியரது தலைநகரமாக இருந்ததென்பதும் தெரியவருகின்றன. கொற்கை கடலால் அழிந்தவுடன், மதுரை பாண்டியரது தலைநகரமாக விளங்கிற்று.

வால்மீகி இராமாயணத்தில், கிஷ்கிந்தா காண்டத்தில், மதுரை குறிப்பிடப்பட்டுள்ளது. இது தென் மதுரையாகும்.

கொற்கை அருகில் இருந்த பட்டினமே காயல்பட்டினம் எனப்படும். அங்கு வாணிகம் நடந்தேறியதென்று மார்க்கோபோலோ (கி.பி. 1254–1324) குறிப்பிட்டுள்ளார்.

—(மார்க்கோபோலோ: பக்கம் 46-50)

முத்துக்குளியலைப் பற்றிப் பல சுவைமிகுந்த செய்திகளை மார்க்கோபோலோ கொடுத்துள்ளார்:

"சிறுசிறு கூட்டங்களாக வணிகர் பலர் குழுமி, பற்பல அளவுள்ள கப்பல்களையும், படகுகளையும் தங்கள் வாணிகத்துக்கு வாடகையாக அமர்த்திக்கொள்வர். முத்துக்குளிப்பதில் அனுபவம் உடையவராயும், அக் கலையில் வல்லுநராயும் உள்ளவர்களை அமர்த்தி, இக் கப்பல்கள் வேலைமேற்செல்லும். வலைகளைத் தங்கள் உடலிற் கட்டிக்கொண்டு, அடிக்கடி கீழும்மேலும் போய் வருவார்கள். இம் முத்துக்குளிப்பு நாள்முழுவதும் நடந்தேறும். இத் துறையில் கிடைக்கும் முத்துகள் பெரும்பாலும் நல்ல ஒளியும், திடமும், கனமும் உள்ளனவாக இருக்கும்.

முத்துக்குளிப்பவர்களைப் பெரு மீன்கள் அடியோடு கொன்றுவிடுகின்றன. இக் கேட்டினைத் தவிர்க்கும் பொருட்டு அவ் வணிகர்கள் தங்களுடன் மந்திரத்தால் வசியம் செய்யும் மந்திரவாதிகளை அழைத்துச் செல்வர்.

முத்துக்குளிப்பதில் ஈடுபடுவோர் அரசரிடம் தகுந்த அத்தாட்சிப் பத்திரம் வாங்கியே அதில் ஈடுபடவேண்டும். அரசன் அவ்வாறு கிடைக்கும் வருவாயில் பத்தில் ஒருபங்கினையே தனக்கெனப் பெற்றுக்கொள்வான். நல்ல பெரிய முத்துகளுக்கு அரசன் அவற்றிற்கேற்ற விலையாக நிறையப் பொருளைத் தருவான். இதன் காரணமாக, முத்துக்குளிப்பவர்கள் அரசனிடம் நல்ல முத்துகளைக் காட்டுவதில் எவ்வித மனக்கசப்பும் கொள்வதில்லை."

(மார்க்கோபோலோ : பக்கம் 16-19)

**3. முத்து முகிழ்ந்தெடுக்கப்படுகிறது (Pearl Diving)**

கொற்கையிலும், தூத்துக்குடியிலும் முத்து முகிழ்ந்து எடுக்கப்படுகின்றது. மேலே குறிப்பு-2ஐப் பார்க்கவும்.

**4. சூசிகுரை (Susicurai)**

இச் சொல் நவீன தூத்துக்குடி (Tuticorin) என்பதன் உருவமே. இப்பொழுது இத் துறைமுகத்தில் முத்துச்சலாபம் தொழில் நடைபெறுகிறது.

தூத்துக்குடியின் இருப்பிடம்: 8°·48′வ × 78°·11′கி.

**5. கோல்கே (வாணிகச் சந்தை)** (Colchae—Commercial Market Town)

கோல்கே (Colchae) என்பது கொற்கை என்ற சொல்லின் சிதைவே. கொற்கை இருந்த இடமே முன்னர்க் கபாடபுரம் என்று வழங்கப்பட்டது (குறிப்பு-2 பார்க்கவும்)

கொற்கைமுத்து வெண்மை நிறம் வாய்ந்ததாகவும், அராபியன் கடலில் முகிழ்ந்தெடுக்கப்பட்ட முத்து சிவப்பு நிறம் வாய்ந்த தாகவும் இருந்ததென்று பிளினி (கி.பி. 23-79) கூறியுள்ளார்.

—(பிளினி: புத்தகம் IX, அதிகாரம் 54, பக்கம் 295)

பின்வரும் தமிழ் இலக்கிய நூல்களில் **கொற்கை** குறிப்பிடப் பட்டுள்ளது:

"நல்தேர் வழுதி கொற்கை முன்துறை."

—[அகநானூறு: 130 (11)]

"புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை."

—[அகநானூறு: 201 (4)]

"பேர்இசைக் கொற்கைப் பொருநன் வென்வேல்."

—[அகநானூறு. 296 (10)]

"வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்
ஒலிதலைப் பணிலம் ஆர்ப்ப, கல்லெனக்
கலிகெழு கொற்கை எதிர்கொள."

—[அகநானூறு: 350 (11-13)]

"தத்துநீர்வரைப்பிற் கொற்கைக் கோமான்."

—[சிறுபாணாற்றுப்படை: (62)]

"வாயிலோன்வாழி! எம் கொற்கைவேந்தே வாழி!"

—[சிலப்பதிகாரம்: 20 (30)]

"நற்கொற்கையோர் நசைப்பொருந."

—(மதுரைக்காஞ்சி: 138)

"முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுரை."

—[நற்றிணை: 23 (6)]

"கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை."

—(ஐங்குறுநூறு: 188)

மேற்கூறப்பட்ட இலக்கிய நூல்களுள் கொற்கை விதந்தோதப் பட்டது காண்க.

ரோம் நாட்டில் (Rome) கொற்கைமுத்து மிகவும் மதிக்கப் பட்டது என்றும், எகிப்தியப் பேரழகி கிளியோபாத்ரா (கி.மு. 68-30) மிகவும் சிறந்த கொற்கைமுத்தைக்கொண்டு விலையுயர்ந்த விருந் தளித்தாள் என்றும் வரலாறு விளக்கம் அளிக்கிறது.

—(பிளினி: புத்தகம் IX, அதிகாரம் 58, பக்கம் 301)

முத்து, பவளம் ஆகிய இரு சொற்களும் தமிழ்ச்சொற்களே. முத்து மோதி (Mothi) என்றும், பவளம் ப்ரவாளம் என்றும் வழங்கப்பட்டன.

முத்து பல பழந்தமிழ் நூல்களுள் குறிப்பிடப்பட்டுள்ளது:

"முத்துப்போற் பூத்து முதிரிற்களாவன்ன."

—(**தொல்காப்பியம்:** பொருள்: செய்யுளியல்: 488)

"முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்."

—(**திருக்குறள்:** 1113)

"முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று."

—(**திருமுருகாற்றுப்படை:** 305)

"பல்விலைய முத்தம் பிறக்கும்."

—(**நான்மணிக்கடிகை:** 4)

"வாலொளி முத்தமொடு பாடினி யணிய."

—(**பொருநராற்றுப்படை:** 162)

"நகாரன்ன நளிநீர் முத்தம்."

—(**சிறுபாணாற்றுப்படை:** 56)

"முத்தவார் மணற்பொற் கழங்காடும்."

—(**பெரும்பாணாற்றுப்படை:** 335)

"விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்."

—(**மதுரைக் காஞ்சி:** 135)

"முத்துடைச் சாலேக நாற்றிக் குத்துறுத்து."

—(**நெடுநல்வாடை:** 125)

"முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள்."

—(**மலைபடுகடாம்:** 518)

"தென்கடல் முத்தும், குணகடல் துகிரும்."

—(**கலித்தொகை:** 189)

"தென் பவ்வத்து முத்துப் பூண்டு."

—[புறநானூறு: 380 (1)]

"தென்கடல் முத்தும், தென் மலைச் சந்தும்."

—[சிலப்பதிகாரம்: 8 (19)]

"முளையெயிற்றரும்பி முத்து நிறைத்தனகொல்."

—[மணிமேகலை: 4 (100)]

"கரும்பார் தோள் முத்தம் கழன்று."

—[சீவகசிந்தாமணி: 170 (1)]

"தாமரைபொன் முத்துச் சவரம் கோரோசனைபால்."

—(நீதிவெண்பா: 1)

"முத்து நல்தாமம் பூமாலை தூக்கி."

—[திருவாசகம்: திருப்பொற் சுண்ணம் 10 (1)]

"முத்துடைத்தாமம் நிரைவந்து எதிர்கொள்ள."

—[நாச்சியார் திருமொழி: 6-6 (2)]

' பவளவாய் முத்து இலங்க."

—[பெரியாழ்வார் திருமொழி: 1-6 (13)]

"முத்தம் கொல்லோ முழுநிலவின் முறியின் திறனோ?"

—(கம்பராமாயணம்: சுந்தரகாண்டம்: உருக்காட்டு 53)

"தென்னாடு முத்துடைத்து."

—(ஔவையார்: தனிப்பாடல் திரட்டு)

"முத்தளந்த கையினாலே மோர் விற்பதா?"

—(பழமொழி)

ஆக முத்து, தமிழ் நாட்டின் சொத்து; இது தூய தமிழ்ச் சொல்லே. முத்து தமிழ் நாட்டு நங்கையர்களின் முக்கிய அணியாக விளங்கிற்று. பெண்களின் பற்களுக்கும் முத்தை உவமையாகக் காட்டுவர் கவிஞர்கள். பரல் என்பது உருண்டை வடிவ முத்து. இதுவே ஆங்கிலத்தில் பெர்ள் (Pearl) என்று ஆயிற்று.

### 6. சோலன் நதி (கழிமுகம்) [River Solon and its Estuary]

சோலன் (Solon) நதி என்பது தாமிரபருணி நதியைக் குறிப்பிடுகிறது. தாமிரபருணி, பொருநை என்று இலக்கியத்தில் வழங்கப்

படுகிறது. பிளினியும், பெரிப்ளூஸ்ஸும் தாமிரபருணி நதியைத் தாப்ரபனே (Taprobanae) என்று வழங்கினர். தாப்ரபனே என்பது இலங்கையையும் குறிப்பிட்டது. மெகஸ்தனிஸ் என்பாரும் (கி.மு. 302—296) இலங்கையைத் தாப்ரபனே என்றே வழங்கினர். த்வீப-ராவண (Dvipa-Ravana) என்பதே தாப்ரபனே என்றாயிற்று என மாக்கிரிண்டில் (Mc Crindle) கூறுகிறார். இராவணன் தீவு என்பதே அதன் பொருள்.

சோலன் (Solon) என்பது தாமிரபருணி நதியையும் அதன் கழிமுகத்தில் இருந்த கொற்கையையும் குறிப்பிட்டதாகும்.

கொற்கைக்கருகில் காயல்பட்டினம் என்ற ஊர் ஏற்பட்டது.

காயல்பட்டினத்தைப் பற்றி மார்க்கோபோலோ மிக விரிவாகவே குறிப்பிட்டுள்ளார்:

"காயல் என்பது மிகப்பெரிய ஒரு நகரம். நாட்டு வியாபாரத் துக்காக இத் துறைமுகம் உகந்ததாகக் காணப்படுகிறது. இந் நாட்டு அரசன் செல்வாக்குள்ள நிலையில் முந்நூற்றுக்கு மேற்பட்ட மங்கையர்களை மாண்புடன் பாதுகாத்து வருகிறான்.

இந் நகர மக்கள் யாவரும் தங்கள் வாயில் தாம்பூலம் என்னும் பெயர்கொண்ட இலைச்சுருளை எப்பொழுதும் சுவைக்கும் பழக் கத்தை உடையவர்கள்."

—(**மார்க்கோபோலோ: பக்கம் 47-48**)

தாமிரப்பருணியின் இருப்பிடம்: 8°·46′வ × 77°·46′ கி.

---

# 11. பாண்டி நாடு

**பாண்டியன் அரசாளும் நாடு**[1]

*ஆர்காலிக் வளைகுடாவில்*[2] *கோரி*

*முனை.*[3] *இம் முனை கள்ளிகரு*[4]

*என்று வழங்கப்பட்டது.* ... 125°·40′கி × 12°·20′வ.

*ஆர்கரு (ஒரு நகரம்)*[5] . 125°·15′கி × 14°·30′வ.

*சலூர் (வாணிகச் சந்தை நகரம்)*[6] ... 125°·20′கி × 15°·30′வ.

## விளக்கவுரை

**1. பாண்டியன் அரசாளும் நாடு** (Country ruled by Pandeya)

பாண்டிநாடு என்பது அக் காலத்தில் திருநெல்வேலி, தஞ்சை, திருச்சி மாவட்டங்களைக் கொண்டிருந்தது. கோவை மாவட்ட எல்லைவரைப் பரவியிருந்தது. பாண்டிநாட்டை அரசாண்டவன் பாண்டியன் ஆவான். ஆனால், பாண்டியனின் பெயர் கொடுக்கப்படவில்லை. பாண்டியர்களின் வரலாறும் சரிவரத் தொகுக்கப்படவில்லை. ஆகையால், தாலமியின் காலத்தில் (கி.பி. 119-161) அரசாண்ட பாண்டிய மன்னன் யார் என்று திட்டவட்டமாகக் கூறமுடியாத நிலையில் உள்ளோம். கடற்கொள்ளைக் கூட்டத்தினரைப்பற்றிப் பெரிப்ளூஸ் குறிப்பிடுவதால், இமயவரம்பன், நன்னன் என்னும் கடற்கொள்ளைக் கூட்டத் தலைவனைக் கொன்றான் என்ற வரலாறு கூறுவதாலும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் காலத்தில் சிலப்பதிகாரம் இயற்றப்பட்டதாலும், சிலப்பதிகாரம் கி.பி. 110 அளவில் இயற்றப்பட்டிருக்கவேண்டும் என்பது தெளிவாகிறது.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 53, குறிப்பு-13, பக்கம் 217)

மதுரையில் பாண்டியன் ஆண்டதாகவும், அவன் மனைவி கோப்பெருந்தேவி என்பதாகவும் சிலப்பதிகாரம் கூறுகிறது. அப் பாண்டியன், நெடுஞ்செழியன் எனப்படுபவன் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். —(Vide A History of South India By K. A. Nilakanta Sastri, M.A. p. 121). கோவலனைக்கொன்றுவிடுமாறு கூறியது தவறு என்று தெரிந்தவுடன் அங்கேயே உயிர்துறக்கிறான். அவன் மனைவி கோப்பெருந்தேவி தானும் அவன் அடிகளில் விழுந்து உயிர்துறக்கிறாள். மதுரை அழிந்துவிடுகிறது. அதற்குப் பிறகு மதுரையை ஆண்டமன்னர்கள் யாவர் என்பது இருள் பொதிந்த வரலாறாகவே காணப்படுகிறது. அழிந்த ஒரு நாட்டைப் புதுபித்து, புதிய அரசன் ஏற்படவேண்டுமென்றால் குறைந்தது இருபது ஆண்டுகளாவது தேவை. ஆக, நெடுஞ்செழியனுக்குப் பிறகு யார் ஆண்டார்கள்? மதுரையை யார் சீர்திருத்தினார்கள்? இவற்றிற்குரிய உண்மையான பதில்கள் கிடைத்தில. அரசனின் மனைவி கோப்பெருந்தேவி என்பது காரணப் பெயராகவும் இருக்கலாம் (கோ-அரசன்; பெருந்தேவி-மனைவி). உண்மைப் பெயர் யாது என்பதும் தெரிந்திலது.

**பாண்டியன் (சொல் விளக்கம்)**

பாண்டி நாட்டு அரசன் பாண்டியன் எனப்பட்டான். இம் மன்னர்களின் குடி மிகப் பழங்கால முதற்கொண்டே விளங்கி வந்தது. இவர்கள் வடநாட்டு அரசராகிய பாண்டு வமிசத்தில்

வந்தவர்கள் என்று கூறுவது பொருந்தாது. பாண்டு வமிசத்தினர் சூரிய குலத்தினர்; பாண்டியர் சந்திர குலத்தினர். பாண்டியர் வேப்பமாலையைத் தரித்தவராவர்; கயல் மீனை உருவமாகத் தம் கொடியில் எழுதிப் பறக்கவிட்டனர். பாண்டியன் மீன் உருவத்தைக் கொடியில் பொறித்துக் கொண்டதால், அவன் கடல் கடந்து பல நாடுகளையும் தனதாக்கிக் கொண்டவன் என்பது தெரிகிறதன்றோ? பாண்டி முத்து என்பது உலகிலேயே மிகச்சிறந்த முத்தாகக் கருதப் பட்டது. இதுவே கொற்கைமுத்து என்பதாகும். ஆக, தென் தமிழ்ப் பாண்டியன் இவ்வாறெல்லாம் சிறப்புப் பெற்றிருந்தான். ஆனால் வடநாட்டுப் பாண்டுவும், அவனுடைய பரம்பரையினரும் எத்தகைய சிறப்பும் பெற்றிலர். ஆகையால், வடநாட்டுப் பாண்டு வமிசத்தினர் வேறு; தென்நாட்டுப் பாண்டியர் வேறு என்பது தெள்ளிதின் உணரப்படுகிறதன்றோ?

மற்றும், பாண்டில் என்னும் சொல் 'வளைந்த' என்னும் பொருள் கொண்டது. இதே சொல் கிரேக்க மொழியில் ஏறி பாண்டஸ் (Pandus) என்றாகி, வளைந்த (bent) எனும் பொருளையே தன் அகத்தே கொண்டுள்ளது. ஆக, வளைந்த நாட்டிற்குடையவர் பாண்டியர் என்பது இதனால் தெரியவருகிறது. தென்கோடியில் இந்தியா வளைந்து செல்கின்றதல்லவா?

வடநாட்டுப் பாண்டு, குலத்தால் குறிப்பிடப்பட்டார். தென் நாட்டுப் பாண்டியர், நாட்டின் நலத்தால் குறிப்பிடப்பட்டார். ஆக, வடநாட்டுப் பாண்டுவையும், தென்நாட்டுப் பாண்டியரையும் ஒன்றுபடுத்திக் குழம்பக்கூடாது.

Pandus—Bent, Curved, Crooked.

—(Vide Latin—English Dictionary: p. 391)

பாண்டில்—வட்டக்கட்டில், கிண்ணி, தேர்வட்டை.

—(Tamil Lexicon: Vol V, p. 2598)

**2. ஆர்காலிக் வளைகுடா** (Gulf of Argalic)

இது நவீன பாக் ஸ்ட்ரெய்ட் (Palk Strait) என்பதைக் குறிப்பிடுகிறது.

பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) பாண்டியனது நாட்டின் எல்லை நெல்கிந்தா (Nelcynda) வரை உள்ளது என்று கூறுகிறார். —(பெரிப்ளூஸ்: அதிகாரம் 54, குறிப்பு-5, பக்கம் 228). அங்கிருந்து பண்டங்களைத் தன் தலைநகரமான மதுரைக்கு ஏற்றிச் சென்றான் என்றும் கூறுகிறார். ஆகையால் கி.பி. முதல் நூற்றாண்டில்

பாண்டி நாட்டின் எல்லை நவீன கேரள நாட்டின் (Kerala) நடுப் பகுதிவரை எட்டியிருந்தது என்பது தெரியவருகிறது.

பாக் ஸ்ட்ரெய்ட்டில் முத்து எடுக்கப்பட்டது.

பாக் ஸ்ட்ரெய்ட்டின் இருப்பிடம்: 10°·0′வ × 80°·0′கி.

**3. கோரிமுனை** (Point Cori)

கோரி (Cori) என்பது கள்ளியகம் அதாவது கால்லிமீர் (Point Calimere) என்பதையும், தனுஷ்கோடியையும் (Dhanushkoti) குறிப் பிடக்கூடும். கோடி என்றால் முனை. இங்குத் தனுஷ்கோடியைக் கொண்டுள்ளதன் காரணம், அடுத்துக் கள்ளிகரு (Calimere) என்பதைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

தனுஷ்கோடியின் இருப்பிடம்: 9°·10′வ × 79°·28′ கி.

**4. கள்ளிகரு** (Kalligaru)

கள்ளிகரு என்பது கள்ளிமேடு (Pt. Calimere) என்பதைக் குறிப்பிடும்.

சப்பாத்திக்கள்ளி மிகுந்திருந்த காரணமாக, அவ்விடம் கள்ளி மேடு எனப் பெயர் பெற்றதாகக் கால்டுவெல் பாதிரியார் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

—(A Comparative Grammar of Dravidian Philology, By Rev. Caldwell, p. 100)

கள்ளிமேட்டின் இருப்பிடம் : 10°·18′வ × 79°·52′கி.

குறிப்பு 3-ல் கோரிமுனை (தனுஷ்கோடி) யைக் கூறிவிட்டு, இதன் முனை கள்ளிகரு என்று கூறியதில், இடையில் ஏதோ சொற்கள் விடுபட்டிருக்கவேண்டும். தனுஷ்கோடி வேறு, கள்ளி மேடு வேறு. இரண்டுமே முனைகள்தாம்.

**5. ஆர்கரு** (Argaru)

இது உறையூர் (Woriyur) என்ற சொல்லின் சிதைவேயாகும்.

உறையூரைப் பிளினி (கி.பி. 23-79) ஓதென்பிரோ (Odenberoes) என்று விளித்தார். ஓதென்பிரோ என்ற சொல் உறந்தையூர் (Uranthaiyur) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. உறையூர் என்பது உறந்தையூர் என்றும் வழங்கப்பட்டது.

—(**பிளினி :** புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-34, பக்கம் 47)

உறையூரைப் பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) ஆர்கரு (Argaru) என்று வழங்கினர்.

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 59, குறிப்பு-7, பக்கம் 212)

சோழ நாட்டின் தலைநகரம் உறையூர்.

"உறையூர் நொச்சி யொருபுடை ஒதுங்கி."

—(சிலப்பதிகாரம் : நாடுகாண் காதை 242)

என்ற பகுதியில் உறையூர் சோழ நாட்டின் தலைநகரமாக விளங்கிற்று என்பது தெரியவருகிறது. உறையூருக்குப் பின்னர் தஞ்சாவூரும் (Tanjore), கும்பகோணமும் (Kumbakonam) தலைநகரங்களாக விளங்கின. இது கி.பி. 8ஆம் நூற்றாண்டு இறுதியில் இருந்திருக்கக்கூடும்.

தமிழ் இலக்கிய நூல்களில் **உறந்தை** குறிப்பிடப்பட்ட இடங்கள்:

"ஓடாப்பூட்கை உறந்தையும் வறிதே அதாஅன்று."

—(சிறுபாணாற்றுப்படை: 83)

"கறங்கு இசைவிழவின் உறந்தைக் குணது."

—[அகநானூறு: 4 (14)]

"பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண்."

—[அகநானூறு: 6 (5)]

"காவிரிப்படப்பை உறந்தை அன்ன."

—[அகநானூறு: 385 (4)]

"திறந்திடுமின் தீயவை பிற்காண்டுமாதர்
இறந்துபடிற் பெரிதாம் ஏதம்—உறந்தையர்கோன்."

—(முத்தொள்ளாயிரம்: 46)

உறையூரில் நூல் சேலைகள் தயாரிக்கப்பட்டன. பெரிப்ளூஸில் இச் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 59, குறிப்பு-8, பக்கம் 264)

உறையூரின் இருப்பிடம்: 10°·50′வ × 78°·46′கி.

'ஆர்கரு மஸ்லின்' என்பது ஒருவகை மெல்லிய புடவை. அச் சேலையை ஒரு தேங்காய்மூடிக்குள் திணித்து ரோம் நாட்டு அரசர்க்கு அனுப்பியதாக வரலாறு கூறுகிறது. உறையூர் சேலை அத்துணை மெல்லிய இழைகளால் நெய்யப்பட்டது.

உறையூரில் தமிழ்ப்புலவர்கள் பலர் வதிந்திருந்தனர்:

1. உறையூர் மருத்துவன் தாமோதரனுர்: பாடினவை:
—(அகம்: 133, 257)

2. உறையூர் முதுக்கூத்தனுர்: பாடினவை:
—(அகம்: 137, 329)

3. உறையூர் முதுக்கண்ணன் சாத்தனுர்: பாடினவை:
—(புறம்: 27, 28, 29, 30, 325)

4. உறையூர் முதுகொற்றனுர்: பாடினவை:
—(குறுந்தொகை: 221, 340)

**6. சலூர் (வாணிகச் சந்தை நகரம்)** (Saloor, Commercial Market Town)

இது ஒருகால் சேலம் (Salem) என்பதைக் குறிப்பிடக்கூடும். பழங்கால இலக்கியத்தில் தகடூர் யாத்திரை என்பது ஒன்று உண்டு. தகடூர் என்பது இன்றைய தர்மபுரியைக் குறிப்பிடும். ஆகையால், தர்மபுரியின் அருகில் உள்ள சேலம் ஒரு வாணிகச் சந்தையாக இருந்திருக்கவேண்டும். இன்றும் சேலம் ஒரு சிறந்த வாணிகத் தலமாக விளங்குகிறது.

சேலத்தின் இருப்பிடம்: 11°·39′வ × 78°·12′கி.

சேலத்தின் முதற் பெயர் சாலைப்புறம் அல்லது சாலப்புரம் என்று இருந்திருக்கக்கூடும். அதையே சலூர் அல்லது சாலூர் (Salur) என்று தாலமி குறிப்பிட்டிருக்கக்கூடும்.

---

# 12. படாய் நாடு

**படாய் நாடு**[1]

| | |
|---|---|
| *நிகமா (தலைநகரம்)*[2] | ... 126°·0′கி × 16°·0′வ. |
| *தெல்கீர்*[3] | ... 127°·0′கி × 16°·10′வ. |
| *கொரூலா (முனையும், நகரமும்)*[4] | ... 128°·0′கி × 16°·0′வ. |

## விளக்கவுரை

### 1. படாய் நாடு (Country of Batai)

இது பூழி நாடு—சேறு நிறைந்த நாடு—என்பதன் திரிபே. கள்ளிமேட்டிலிருந்து கடலூர் வரை உள்ள கடற்கரைப் பகுதி சேற்றுப் பகுதியே. ஆங்காங்கே மீன் பிடிக்கும் துறைகள்தாம் இருந்தன. இக் கடற்கரைப் பகுதி சோழ மண்டலக் கடற்கரை (Coromandel Coast) என்று வழங்கப்படுகிறது. சோழ மண்டலம் என்ற சொல்லே கோரமாண்டல் (Coromandel) என்று உச்சரிக்கப் பட்டது. இது ஆங்கிலேயர் இந்தியாவுக்கு வந்த பிறகு ஏற்பட்ட உச்சரிப்பாகும். அதற்கு முன் அப் பகுதி சோரமாண்டல் என்றே உச்சரிக்கப்பட்டது. இலத்தீன் மொழியில் கே (K) என்னும் எழுத்து கிடையாது. அதற்குப் பதிலாக ஸி (C) பயன்படுத்தப் பட்டது. ஆகையால் முன்னர் உச்சரிக்கப்பட்ட சோரமாண்டல் (சோழமண்டலம்) என்பதைப் பின்னர் வந்தவர் (ஆங்கிலத்தில் K எழுத்து உண்டு) அதைக் கோரமாண்டல் என்று தவருக உச்சரித்தும், பயன்படுத்தியும் வந்தனர். சோழமண்டலம் என்ற பெயர் கோரமண்டலம் எனத் திரிந்தது வியப்புக்குரியதாகும்.

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 59, குறிப்பு-5, பக்கம் 262)

சேற்றுப் பகுதியான கிழக்குக் கரையின் ஒரு பகுதியில் நாகபட்டினமும் (Negapatam), கடலூரும் (Cuddalore) வாணிகத் தலங்களாக விளங்கின. அடுத்து வரும் குறிப்புகள்-3, 4 இக் கடற் கரைப் பட்டினங்களையே குறிப்பிடுகின்றன.

சோழ மண்டலத்தின் இருப்பிடம்: 12°·0′வ × 80°·30′கி.

### 2. நிகமா (தலைநகரம்) (Nigama, the Capital)

நிகமா (Nigama) எனப்படும் சொல் நாகை அல்லது நாக பட்டினம் (Negapatam) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது.

பெரும்பாணாற்றுப்படையில் நாகபட்டினம் குறிப்பிடப்படு கிறது:

“பல்வேற் றிரையர் படர்குவி ராயின்”

—(பெரும்பாணாற்றுப்படை: 37)

இதற்கு நச்சினார்க்கினியர் பொருள்கூறுகிறார்:

“நாகபட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாக லோகத்தே சென்று நாககன்னிகையைப் புணர்ந்த காலத்து, அவள் ‘யான் பெற்ற புதல்வனை என்செய்வேன்’ என்றபொழுது,

தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட, அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசுரிமையை எய்வித்து நாடாட்சி கொடுப்பலென்று அவன்கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரைதருதலின், திரையன் என்ற பெயர் ஏற்பட்டது.''

—(**பெரும்பாணாற்றுப்படை**: டாக்டர் உ. வே. சா. பதிப்பு: பக்கம் 214)

மற்றும் அவ்வாறு திரை தந்த வரலாறு கீழ்வரும் வெண்பாவால் அறியப்படுகிறது:

> ''கங்குலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றாய்
> மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்-வெஞ்சினவேற்
> கான் பயந்த கண்ணிக் கடுமான் றிரையனை
> யான் பயந்தே னென்னுஞ் செருக்கு.''

—(**பெரும்பாணாற்றுப்படை**: இறுதிவெண்பா–டாக்டர் உ. வே. சா. பதிப்பு: பக்கம் 262).

நாகபட்டினம் ஆழ்வார்களாலும், நாயன்மார்களாலும் பிற்காலத்தே பாடல்பெற்ற தலமாகும்.

நாகபட்டினம், நாகராஜனுக்கும், திருமங்கை யாழ்வார்க்கும் அங்கு நின்ற கோலத்துடன் காட்சியளிக்கும் சௌந்தர்யராஜன்-சௌந்தர்யவல்லி பிரத்யட்சம். திருநாகை என்றும் கூறுவதுண்டு.

நாகபட்டினத்தின் இருப்பிடம்: 10°·46′வ × 79°·53′கி.

காரைக்காலுக்குத் (Karaikal) தெற்கில் தலைக்கரை (Thalaikarai) என்று ஓர் ஊர் இருந்ததாகக் கூறப்படுகிறது. அவ்வூரே தெல்கீர் என்று குறிப்பிடப்படுகிறது.

தெல்கீர் இருப்பிடம்: 10°·50′கி × 9°·52′வ.

**4. கொரூலா (ஒரு நகரம்)** [Couroula, a City]

இது கடலூர் (Cuddalore) எனும் பட்டினத்தைக் குறிப்பிடக் கூடும். ஆனல், காரைக்கால் (Karaikal) என்பதையே அவ்வாறு உச்சரித்தார் எனக் கொள்ளுதலே பொருத்தமானது. காரணம் காரைக்கால் அன்றும் இன்றும் ஒரு சிறந்த பட்டினமாகத் திகழ்கின்றது.

காவேரி நதியின் கழிமுகத்தில் (Estuary of Cauveri) இருந்த துறைமுகங்களைக் காபேரூலா (Kaberula) என்று வழங்கினர். அச் சொல்லே கொரூலா எனக் கூறப்பட்டதுபோலும்.

இதற்கடுத்துவரும் பகுதி காவேரி (River Cauveri) நதிக் கழிமுகத்தில் உள்ள காவிரிப்பூம்பட்டினத்தைக் குறிப்பிடுகிறது. காவேரி நதி என்பது கிரேக்க உச்சரிப்பில் காபேரிஸ் (Caberis) என்று குறிப்பிடப்பட்டது.

காரைக்காலின் இருப்பிடம்: 10°·55′வ × 79°·52′ கி.

கடலூரின் இருப்பிடம்: 11°·43′வ × 79°·49′ கி.

காவேரி நதியின் இருப்பிடம்: 11°·20′வ × 77°·50′ கி.

---

# 13. பராலியா

**பராலியாவில்[1] தோரிங்கா நாடு[2]**

*காபேரிஸ் நதியின் கழிமுகம்[3]* ... 129°·15′கி × 15°·15′வ.

*காபேரிஸ்*
*(ஒரு வாணிகச் சந்தை நகரம்)[4]* ... 128°·30′கி × 15°·40′வ.

*சோபோராஸ்[5]* ... 130°·0′கி × 14°·30′வ.

## விளக்கவுரை

**1. பராலியா** (Paralia)

பராலியா என்பது கிரேக்கமொழியில் கரைசார்ந்த இடம் எனப் பொருள்படும். அராபியன் கடலில் கொல்லம் (Quilon) முதல் கொற்கைவரை உள்ள நாட்டைப் பெரிப்ளூஸின் ஆசிரியர் பராலியா (Paralia) என்று வழங்கினர்—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 58, குறிப்பு-4, பக்கம் 255). இங்குக் காபேரிஸ் (Caberis) எனப்படும் நதி காவேரி நதியைக் குறிப்பிட்டதால், இது கிழக்குக் கரையைக் குறிப்பிடுகிறது என்றே கொள்ளவேண்டும். அடுத்துக் காவிரிப்பூம் பட்டினத்தையும் விவரிப்பதால், காவிரி நதியின் கழிமுகத்தையே இச் சொல் குறிப்பிடுகிறது. பராலியா சோழமண்டலக் கரை முழுவதையும் குறிப்பிடவும்கூடும்.

காவேரி நதிக் கழிமுகத்தின் இருப்பிடம்: 11°·20′வ × 77°·50′கி.

**2. தோரிங்கா நாடு** (Thoringa Country)

தோரிங்கா (Thoringa) என்பது தஞ்சை (Tanjore) என்பதன் உச்சரிப்பே. காவேரி நதி தஞ்சை நாடு முழுவதும் பாய்வதால்,

அந் நாட்டைத் தோரிங்கா என உச்சரித்தார். தஞ்சைமாநகரம் புராணவாயிலாகப் பெயர்பெற்ற நகரமாகும். மிகப் பிற்காலத்தே அது பாண்டிய மன்னர்களின் தலைநகராக விளங்கி, அங்குப் பல கோயில்கள் கட்டப்பட்டன.

தஞ்சை மாவட்டத்தின் இருப்பிடம்: 10°·47′வ×79°·10′ கி.

**3. காபேரிஸ் நதியின் கழிமுகம்** (The Estuary of River Caberis)

காபேரிஸ் (Caberis) என்பது காவேரி நதியின் (River Cauveri) கிரேக்க உச்சரிப்பே. கவேரன் என்பான் மகள் காவேரி என்று புராண வரலாறு கூறுகிறது. காவேரி நதி பொன்னி (Ponni) என்ற பெயராலும் வழங்கப்படுகிறது. பொன் கொழிக்கும் மண்ணைக்கொண்ட நதி பொன்னி அல்லவா? காவேரி என்ற சொல்லின் மரூஉவே காவிரி.

ஸ்ரீ வேதாந்த தேசிகர் (கி.பி. 1268-1369) காவேரி நதியைப் பொன்னி என்று வழங்கி அதற்கு அப் பெயர் வந்த காரணத்தையும் பக்திவாயிலாகக் கூறுகிறார்:

விஹரதி புளிநேஷு த்வத்ஸகே ரங்கநாதே
  கநகஸரிதியம் தே பாதுகே! ஹேமதாம்தா!
வஹதிஸலில கேளீஸ்ரஸ்த சோளாவரோத
  ஸ்தந கலனஹரித்ரா பங்கபிங்காம் அவஸ்த் த்தாம்.

—(**ஸ்ரீ பாதுகாஸகஸ்ரம்:** 742)

சுமங்கலிப் பெண்கள் விடியற்காலையில் காவிரிநதியில் ஸ்நானம் செய்யும்பொழுது, அவர்கள் மஞ்சளை அரைத்துத் தம் கால், கை, முகம் முதலான பாகங்களுக்குப்பூசி ஸ்நானம் செய்வதால், அம் மஞ்சள் நீரில் கரைந்து நீருக்கும் ஒரு சௌபாக்கியத்தையும், பொன் போன்ற நிறத்தையும் கொடுக்கிறது என்றும், பாதுகையில் உள்ள பொன் கிரணங்கள் காவிரி நதியின்மீது பிரதிபலித்து, அந் நீர் முழுவதும் பொன்மயமாக விளங்குகிறது என்றும் கூறியுள்ளார்.

தமிழ் இலக்கிய நூல்களில் காவேரி நதி குறிப்பிடப்படும் இடங்கள்:

"மங்கை மாதர் பெருங் கற்பு என்று
  அறிந்தேன் வாழி! காவேரி!"

—(**சிலப்பதிகாரம்:** கானல்வரி, ஆற்றுவரி 2)

"மன்னும் மாதர் பெருங் கற்பு என்று
  அறிந்தேன் வாழி! காவேரி!"

—(**சிலப்பதிகாரம்:** கானல்வரி, ஆற்றுவரி 3)

"வளனே; வாழி! காவேரி!"

—(**சிலப்பதிகாரம்:** கானல்வரி, ஆற்றுவரி 4)

"ஆயிரம் விளையுட்டாகக்
காவிரி புரக்குநாடு கிழவோனே."

—(**பொருநராற்றுப்படை:** 247–248)

"காவிரிப் படப்பை பட்டினத்தன்ன."

—[**அகநானூறு:** 205 (12)]

தமிழ் இலக்கிய நூல்களில் **பொன்னி** குறிப்பிடப்படும் இடங்கள்:

"அலைத்துவரும் பொன்னி வளம்பெருகும் செல்வத்து."

—(**பெரியதிருமொழி:** 7: 8: 3)

இங்குப் **பொன்னி** என்பது காவிரி நதியைக் குறிப்பிடுகிறது.

"பொன்னித் துறைவனை வாழ்த்தினவே."

—(**கலிங்கத்துப்பரணி:** 592)

"வண்டல்பாய் பொன்னி நாடனை வாழ்த்தி."

—(**கலிங்கத்துப்பரணி:** 148)

இங்குச் சோழநாட்டரசன் பொன்னித் துறைவன் என்றும், பொன்னிநாடன் என்றும் வழங்கப்பட்டான்.

இக் காவிரியின் முதல் பெயர் காவேரி; பிற்காலத்தில் ஏற்பட்ட பெயரே பொன்னி என்பது.

காவேரியின் இருப்பிடம்: 11°·20′வ×77°·50′கி.

**4. காபேரிஸ் (ஒரு வாணிகச் சந்தை நகரம்)** (Caberis, Commercial Market Town)

வாணிகச் சந்தை நகரம் என்பது காவிரிபூம்பட்டினத்தைக் (Kaveripoompattinam) குறிப்பிடுகிறது.

பிளினி (கி.பி. 23-79) இவ்விடத்தைக் காபேரிஸ் எம்போரியம் என்று வழங்கினர்.

(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 28, பக்கம் 48)

பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) எனும் நூல் இதைக் காமாரா (Camara) என்று குறிப்பிடுகிறது.

—(**பெரிப்ளூஸ்:** அதிகாரம் 60, குறிப்பு-3, பக்கம் 262)

காவிரிப்பூம்பட்டினம் சோழநாட்டுத் தலைநரகமாகவும், துறை முகமாகவும் விளங்கிற்று. மற்றும், அது புகார் (Pukhar) என்றும், பூம்புகார் (Pumpukar) என்றும் வழங்கப்பட்டது. இவ்விடம் கிழக்குக் கரையில் மாயவரம் அருகில் (29 கிமீ.) காவேரி நதி கடலோடு கலக்கும் இடத்தில் இருந்தது. இன்று அங்கு ஒரு பொருட் காட்சிச் சாலையை அரசாங்கம் ஏற்படுத்தியுள்ளது.

தமிழ் இலக்கிய நூல்களில் காவிரிப்பூம்பட்டினம், புகார் எனும் ஊர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன:

"முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்."

—(**பட்டினப்பாலை**: 218)

"பூம்புகார் போற்றுதும், பூம்புகார் போற்றுதும்."

—(**சிலப்பதிகாரம்**: மங்கலவாழ்த்து 10)

"நீள்புகழ் மன்னும் புகார் நகர்."

—(**சிலப்பதிகாரம்**: மங்கலவாழ்த்து 22)

"வண்டு ஊசலாடும் புகாரே எம்மூர்."

—(**சிலப்பதிகாரம்**: கானல்வரி 6)

சம்புத்தெய்வம் வீற்றிருத்தலால் சம்பாதி என்றும், அச் சம்பாதியே காவிரிப்பூம்பட்டினம் என்றும் வழங்கப்பட்டது என்று மணிமேகலை நூல் கூறுகிறது.

"தெய்வக் கருவும், திசைமுகக் கருவும்
செம்மலர் முதியோன்செய்த அந்நாள்
என்பெயர்படுத்த இவ்இரும்பெயர் மூதூர்
நின்பெயர் படுத்தேன்; நீவாழிய! என
இருபால் பெயரிய உருகெழு மூதூர்..."

—(**மணிமேகலை**: பதிகம் 28-32)

இக் காவிரிப்பூம்பட்டினத்தைப் பற்றிப் பட்டினப்பாலை எனும் தமிழ் இலக்கியம் மிகவும் விரிவாகக் கூறுகிறது. இத் துறைமுகத்தின் ஒருபகுதி கி.பி. 79ஆம் ஆண்டு, ஆகஸ்டு, 23, 24ஆம் நாள் நடைபெற்ற கடல்கோள் காரணமாக அழிவுற்றது.

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் 49)

காவிரிப்பூம்பட்டினத்தின் இருப்பிடம்: 11°·1′வ×79°·54′ கி.

**5. சோபாராஸ்** (Soporos)

'சோ' என்றால் அழகிய என்பது பொருள். திருவல்லிக்கேணி சோ-பத்மா (சோ-பட்ணு) என்று பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறு

கிறர். இங்கு அழகிய சோலை என்று பொருள்படும் சொல்லாகும். காவிரியைச் சூழ்ந்து இருமருங்கிலும் அழகிய சோலைகள் காணப் படும். அழகிய பராய் மரங்கள் உள்ள திருப்பராய்த் துறையைக் (Tirupiraithurai) குறிப்பிடலாம் எனக் கருதப்படுகிறது.

திருப்பராய்த் துறையின் இருப்பிடம்: 10°·58′வ × 78°·39′கி.

---

# 14. அரவரணை

## அரவரணை நாடு[1]

*இந் நாட்டைச் சார்ந்தவை:*

| | | |
|---|---|---|
| *பொதுகே (வாணிகச் சந்தை நகரம்)*[2] | ... | 130°·15′கி × 14°·30′வ· |
| *மலங்கே (வாணிகச் சந்தை நகரம்)*[3] | ... | 131°·0′கி × 14°·20′வ. |
| *திணு (ஆற்றின் கழிமுகம்)*[4] | ... | 131°·40′கி × 12°·45′வ. |
| *கோட்டிஸ்*[5] | ... | 132°·20′கி × 12°·10′வ· |
| *மஞர்பா (மலியார்பா)*[6] *(வாணிகச் சந்தை நகரம்)* | ... | 133°·40′கி × 12°·0′வ. |

### விளக்கவுரை

**1. அரவரணை நாடு** (Aruvarnai Country)

நாகபட்டினத்திலிருந்து கடலூர் வரையிலுள்ள நாடு படாய் நாடு என்று கூறப்பட்டது. கடலூரிலிருந்து சென்னை வரையி லுள்ள கரைப்பகுதிகள் அரவரணை நாடு (Aruvarnai) என்று கிரேக்க உச்சரிப்பில் கூறினர். அரவரணை என்பது அருவா (Aruva) நாடு என்பதன் கிரேக்க உச்சரிப்பே. அருவாநாடு என்பது முன்னர் தென்ஆர்க்காட்டுப் பகுதியைக்குறிப்பிட்டது (Vide **Tamil Lexicon**: p. 135). அருவாவடதலை (Aruva Vadathalai) என்பது செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள பகுதிகளைக் குறித்தது. ஆக, அரவரணை நாடு என்பது அருவா நாடு என்பதன் கிரேக்க உச்சரிப்பே. பின்னர் அதே பகுதிகள் தொண்டைமண்டலம் எனப் பெயர் பெற்றது. சோழமண்டலப்பகுதி, தொண்டைமண்டலப்பகுதி — இவையே

சென்ற அதிகாரத்திலும் (அதிகாரம் 13), இந்த அதிகாரத்திலும் முறையே குறிப்பிடப்பட்டுள்ளன.

**2. பொதுகே (வாணிகச் சந்தை நகரம்)** [Poducae, Commercial Market Town)

'புதுவை' எனப்படும் இடமே பாண்டிச்சேரி (Pondicherry). பாண்டிச்சேரி துறைமுகப்பட்டினம் கி.பி. 1674ஆம் ஆண்டு, பிராங்கோ மார்டின்(Francois Martin) என்பவரால் நிர்மாணிக்கப் பட்டது. அது வெகுவிரைவில் பெருந்துறைமுகமாக வளர்ந்து விட்டது.

—(Vide An Advanced History of India, By R.K. Mookerji, M.A p. 643)

ஃபிரெஞ்சுக்காரர்கள் அங்கு வருவதற்கு முன்னரே—அங்குத் தங்கள் நகரத்தை ஏற்படுத்துவதற்கு முன்னரே—அஃது ஒரு துறைமுகமாக இருந்தது.

இதற்கருகில் உள்ள ஊர் வளவனூர் (Valavanur). அது சோழ மன்னன் வளவன் (Valavan) இருந்த இடம். அவன் நாட்டிற்கு ஒரு துறைமுகம் இருந்தது. அதுவே வளவன் துறை. அவ் வளவன் துறையே இப்பொழுது பாண்டிச் சேரிக்குத் தெற்கில்-ஓர் ஆற்றங்கரைக் கழிமுகத்தில்-12 கிமீ. தொலைவில்-அவ் வளவன்துறை இருந்தது. அதுவே பெரும் வாணிகச் சந்தையாக விளங்கிற்று. அதைத்தான் 'பொதுகே' என்று வழங்கினர்.

பாண்டிச்சேரி, புதுச்சேரி என வழங்கப்பட்டு, அதுவே புதுவை என மருவிற்று. இது முதலில் கூறியபடி கி.பி. 1674-க்கு மேல் ஏற்பட்ட பெயரே.

'பொதுகே, என்பது ஆற்றின் 'படுகை'யில் உள்ள ஊர்என்றும் பொருள்படும்.

திருவாளர்கள் லாஸன் (Lassen), யூல் (Yule) முதலானவர்கள் பொதுகே என்பது புலிக்கட்டத்தைக் (Pulicat) குறிப்பிடுவதாகக் கூறுகின்றனர். இவ்விடம் செங்கல்பட்டு மாவட்டத்தில் பொன்னேரி தாலுகாவில், சென்னைக்கு வடக்கே 40 கிமீ (25 மைல்) தொலைவில் உள்ளது.

தாலமி, பொதுகே, மலங்கே, மலியார்பா என்று வரிசையாகச் சொல்லும்போது, புலிக்கட்டம் சென்னைக்கு வடக்கே இருப்பதால், அவர் வரிசையை மாற்றியல்லவோ கூறியிருக்க வேண்டும்? ஆக, பொதுகே என்பது புலிக்கட்டத்தைக் குறிப்பிடாது.

பகுதி 8-ல் வஞ்சியைப் புதுபெரூரா என வழங்கியபோது வளவன் துறையைப் பொதுகே அல்லது புதுகே என்று வழங்கியது முறையே யன்றோ?

பொதுகே இருப்பிடம்: 21°·58′வ×79°·53′கி.

**3. மலங்கே (வாணிகச் சந்தை நகரம்)** [Malangae, Commercial Market Town)

இது மாமல்லபுரம் இருந்த இடத்தைக் குறிப்பிடுகிறது. மாமல்ல புரம் என்ற பெயர் நரசிம்மவர்மப் பல்லவ அரசரால் (கி.பி. 630-668) கொடுக்கப்பட்டது. மாமல்லன் என்ற விருது பூண்ட அரசர் அவரே. ஆக, மாமல்லபுரம் என்பதைத் தாலமி (கி.பி. 119-161) மலங்கே என்று கூறினர் என்று கால வரையறைப்படி முரண் பாடாகக் காணப்படுகிறது. மலங்கே என்று கூறப்படுவது நிலமங்கை (Nila Mangae) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. மாமல்லபுரத்தில் முன்னர் பெருமலைகள் காணப்பட்டன. அங்கே நிலம், கடல், மலை ஆக மூன்றும் இருந்தமையால், அங்கு உள்ள தெய்வத்தை நிலமங்கை என்றே வழங்கினர்-மலைமங்கை கடல் மங்கை என்றதினின்றும் வேறுபாடு அறிய. ஆக, நிலமங்கை என்பதன் குறுக்கமே மலங்கே-மலைப்பகுதியையுடைய கடற்கரை நாடு என்பதே இதற்குப்பொருள்.

பின்னர் வந்த மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) மாமல்ல புரத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்:

"செய்லான் தீவினைவிட்டகன்று அறுபது மைல் பயணம் செய்தால் மாபர்நாட்டை அடைவீர்."

மாமல்லபுரத்தை அவர் மாபர் துறைமுகம் என்று வழங்கினர். அங்குக் கலங்கரைவிளக்கம் இருந்தது."

—(**மார்க்கோபோலோ:** பக்கம் 15)

காவிரிப்பூம்பட்டினம் கடல்கோள் காரணமாக மூழ்கிவிட்டதால், அதற்கு அடுத்த துறைமுகமாக மாமல்லபுரம் விளங்கிற்று. இத் துறைமுகத்தில்தான் மார்க்கோபோலோ வந்திறங்கினர்.

"கலங்கள் இயங்கும் மல்லைக் கடல் மல்லைத் தலசயனம்."

—(**பெரிய திருமொழி:** 2-6)

மலங்கே என்பது நிலமங்கை என்பதன் கிரேக்க உச்சரிப் பாகும். அங்குக் கோயில் கொண்டுள்ள பெருமாளின் திருநாமம் தலசயனத்துறைவார்; தாயார் நிலமங்கை நாச்சியார். இது கடல்

மல்லை என்றும், கச்சிக் கடல்மல்லை என்றும் வழங்கப்பட்டது. மாமல்லபுரம் செங்கற்பட்டுக்குக் கிழக்கே 18 மைல் (29 கி.மி) தொலைவில் உள்ளது.

இங்குக் கோயில் கொண்ட பெருமாளைத் திருமங்கையாழ்வார் 20 பாடல்களால் மங்களாசாசனம் செய்துள்ளார்.

"தண்ணார்ந்த கடல்மல்லைத் தலசயனத்து உறைவாரை
எண்ணாதே யிருப்பாரை இறைப்பொழுதும் எண்ணேமே."
—[பெரிய திருமொழி: 5-6 (1)]

"காத்தானை, எம்மானைக் கண்டு கொண்டேன்
கடி பொழிசூழ்க் கடல்மல்லைத் தலசயனத்தே."
—[பெரிய திருமொழி:2-5(5)]

"கலங்கள் இயங்கும் மல்லைத்தலசயனம்
வலங்கொள் மனத்தார்வரை வலங்கொள் என் மட நெஞ்சமே!"
—[பெரிய திருமொழி:2-6 (6)]

மேற்கூறப்பட்ட பாடல்களின் இறுதியில் காணப்படும் "கலங் களியங்கும்" என்னும் சொற்கள், திருமங்கையாழ்மார் காலத்திலும் (கி.பி.9 ஆம் நூற்றாண்டு) மாமல்லபுரம் ஒருசிறந்த கடல்துறைமாக விளங்கிற்று என்பதையும், அங்குக் கப்பல்கள் பெருவாரியாக இயங்கிக்கொண்டிருந்தன என்பதையும் எத்துணை ஆதாரத் துடன் தெரிவிக்கின்றன.

மாமல்லபுரத்தில் உள்ள கலங்கரை விளக்கத்தின் சின்னத்தை இன்றும் காணலாம். அக் கலங்கரையின் அமைப்பு, அங்குள்ள சிற்பங்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் அமைக்கப்பட் டிருக்கவேண்டும் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

ஆக, மலங்கை அல்லது மலங்கே என்பது நிலமங்கை என்ற சொல்லின் திரிபே.

மற்றும் கச்சிக் கடல் மல்லை என்று கூறுவதிலிருந்து, காஞ்சி புரம் நாட்டுக்குத் தலைநகராக விளங்கியபொழுது, மாமல்லபுரம் என்ற கடல்மல்லை அதன் பெருந் துறைமுகமாக விளங்கிற்று என்னும் செய்தியையும் தெரிவிக்கிறதல்லவா? 'கச்சி' என்பது காஞ்சீபுரம் என்பதன் குறுக்கமே.

காஞ்சீபுரத்தைப் பற்றிப் பிளினி (கி.பி. 23-79) என்பார் குறிப்பிட்டுள்ளார். அவர் அந் நகரத்தைக் காந்தி பிரமா என்று

வழங்கினர். அதாவது காஞ்சீபுரத்தின் கிரேக்க உச்சரிப்பே ‘காந்திபிரமா’ என்பதாகும். (பிளினி-புத்தம் VI: அதிகாரம் 25, குறிப்பு-57, பக்கம் 101)

கடல்மல்லை சிறந்த துறைமுகமாக விளங்கிய காரணத்தால், அது பெருமை பெற்ற வாணிகச் சந்தையாகவும் விளங்கிற்று.

மாமல்லபுரத்தின் இருப்பிடம்: 12°·37′வ×80°·14′கி.

**4. திறு (ஆற்றின் கழிமுகம்)** (Tyna-Estuary of a River)

திறு என்பது புனிதர் தாமஸ் முனிவர் (Saint Thomas) வாழ்ந்து வந்த இடத்தைக் குறிப்பிடுகிறது. அவ்விடம் அக் காலத்தில் ஓர் ஆறு சென்றிருக்கக்கூடும். காரணம் மலையிருந்தால், இயற்கையாகவே ஆறும் ஏற்படுமல்லவா? அது சின்ன மலை என்றும், பின்னர் செயின்ட் தாமஸ் மௌண்ட் (St. Thomas Mount) என்றும் வழங்கப்பட்டது.

செயிட் தாமஸ், மலையாளக் கடற்கரையில் கி.பி. 52 ஆம் ஆண்டு வந்திறங்கினர். வடநாட்டிற்குச் சென்று கொண்டா போரஸ் (கி.பி. 40) என்ற அரசருடன் சில ஆண்டுகள் இருந்து விட்டு, அவரைக் கிறித்தவராக மாற்றி, மீண்டும் தென்னாடு அடைந்து, மயிலாப்பூர் அருகிலுள்ள சாந்தோமிலும், சின்ன மலையிலும் தங்கியிருந்தார். அவர் சில வேடர்களால் கொல்லப் பட்டார். அது நடந்த ஆண்டு கி.பி. 68 என்று நம்பப்படுகிறது.

—(In The Steps of Saint Thomas By Rt. Rev. Herman D' Souza pp. 23 & 50)

ஆகையால், புனிதர் தாமஸ் இந்தியாவில் தங்கியிருந்த மொத்த ஆண்டுகள் 17 ஆகும். அவர் உடல் மயிலாப்பூர் அருகில் உள்ள சாந்தோமில் (Santhome) அடக்கம் செய்யப்பட்டது.

செயின்ட் தாமஸ் இருந்த (புதையுண்ட)இடம் எனக் கொண்டு அதற்குச் சாந்தோம் (Santhome) எனப் பெயரிடப் பட்டது.

புனிதர் தாமஸைப் பற்றி மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) விரிவாக எழுதியுள்ளார்.

—(**மார்க்கோபோலோ:** பக்கம் 42-46)

செயின்ட் தாமஸ் மௌண்டின் இருப்பிடம்: 13°·0′வ×80°·14′கி.

**5. கோட்டிஸ்** (Cottis)

கோடு, கோட்டுமலை என்பன யானையைக் குறிப்பிடும். இச் சொல் சின்னமலைக்கும், மயிலாப்பூருக்கும் இடையேயிருந்த யானை

கட்டின இடத்தைக் குறிப்பிடும். இது இன்று விளங்கும் ஆனை கவுனி (Elephant Gate) யைக் குறிப்பிடவும்கூடும். அல்லது திருவல்லிக்கேணியையும் குறிப்பிடக்கூடும். "மாமயிலை அல்லிக் கேணி" என்றே இலக்கியங்கள் கூறுகின்றன.

கோட்டிஸின் இருப்பிடம்: 13°·4′வ×80°·17′கி.

**6. மனர்பா (மலியார்பா) வாணிகச் சந்தை நகரம்** (Manarpha, Maleiarpha, Commercial Market Town)

மலியார்பா என்பது மயிலாப்பூர் (Mylapore) என்ற ஊரைக் குறிப்பிடும். மயிலையில் அக் காலத்தில் வாணிகச்சந்தை கூடிற்று. அதற்கு மலியார்பா எம்போரியம் (Maleiarpha Emporeum) என்று பெயர்.

மயிலாப்பூர் பிற்காலத்தில் ஆழ்வார்களாலும் நாயன்மார்களாலும் பாடப்பட்டுள்ளது.

தாமஸ் முனிவர் வாழ்ந்துவந்த இடம் சாந்தோம் (Santhome) ஆகும்.

மயிலாப்பூரைப்பற்றி மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) விரிவாகக் கொடுத்துள்ளார்.

—(**மார்க்கோபோலோ:** பக்கம் 42-45)

'மயில் ஆப்பு உண்ட ஊர்' என்பதே மயிலாப்பூர் என்பதன் சொல் விளக்கம் என்று கூறுகிறார்.

தமிழ் நாட்டில் சோலைகள் இருக்கும் இடங்கள் யாவற்றிலும் மயில்கள் நிறைய வாழ்ந்துவந்தன.

மயிலாப்பூரின் இருப்பிடம்: 13°·02′வ×80°·16′கி.

இதுவரை தமிழ் நாட்டின் எல்லைகளையும், அரசுகளையும் பற்றிக் குறிப்புகள் கொடுத்தார். இதைத் தொடர்ந்து பகுதி 84-ல்தான் மற்றும் சில செய்திகளைக் கொடுக்கிறார். இதன் இடையில் ஆந்திரம், கங்கை நாடு, கலிங்கம் முதலிய பகுதிகளை விவரிக்கிறார்.

ஆக, தாலமி தமிழ்நாட்டைப் பற்றிக்கூறி, அந் நாட்டு மூவேந்தர்கள் ஆண்ட பகுதியில் உள்ள துறைமுகங்களையும் பற்றிக் குறிப்பிட்டார்:

1. சேர நாடு—அதன் துறைமுகம் முசிறிஸ் (முசிறி).
2. பாண்டி நாடு—அதன் துறைமுகம் கோல்கே (கொற்கை).

3. சோழ நாடு—அதன் துறைமுகம் காபேரிஸ் (காவிரிப்பூம்பட்டினம்).

தாலமி கூறிய தமிழ்நாட்டு ஊர்களும், துறைமுகங்களும், அரசர் பெயர்களும் அவர் காலத்தில் விளங்கின என்பது வரலாற்று ஆராய்ச்சிக்கு எத்துணை உதவி அளிக்கிறது என்பதை நம் மனத்தில் பதியவைக்கவேண்டும்.

---

# 15. மசோலியா

**மசோலியா நாடு**[1]

| | |
|---|---|
| *மசோலிஸ் நதி (கழிமுகம்)*[2] | ... 134°·0′கி × 11°·40′வ. |
| *கண்டகோஸில்லா (வாணிகச் சந்தை நகரம்)*[3] | ... 134°·30′கி × 11°·40′வ. |
| *கடௌரா*[4] | ... 135°·0′கி × 11°·30′வ. |
| *அலோஸிஜன் (வாணிகச் சந்தை நகரம்)*[5] | .. 135°·40′கி × 11°·20′வ. |
| *கிரிசேவுக்குச் செல்லும் கப்பல்கள் (வெளியே இருப்பன)*[6] | ... 136°·20′கி × 10°·11′வ. |

### விளக்கவுரை

**1. மசோலியா** (Masolia)

இனி ஆந்திரநாட்டைப் பற்றிய குறிப்புரைகள் கொடுக்கிருர். மசோலியா (Masolia) என்பது மசூலிப்பட்டினம் (Masulipatnam) என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும். இது கிருஷ்ணநதிக் கழி முகத்துக்கும், கோதாவரிநதிக் கழிமுகத்துக்கும் இடையே உள்ளது. இந் நாட்டைப் பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50–80) மசாலியா (Masalia) என்று வழங்கினர்.

—(**பெரிப்ளூஸ்:** அதிகாரம் 62 குறிப்பு-1, பக்கம் 278)

இம் மசூலிப்பட்டினத்தில் துணிகள் பெருவாரியாக நெய்யப் பட்டன.

மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) இந் நாட்டை மான்சூல் (Mansul) என்றும், மார்பிலி (Marpili) என்றும் வழங்கினர்.

"இந் நாட்டில் மற்ற இந்திய நகரங்களில் தயாரிக்கப்படும் துணிகளைவிடச் சிறந்தமுறையில் துணிகள் தயாரிக்கப்படுகின்றன. இங்குத் தயாரிக்கப்படும் ஆடை வகைகள் 'சின்செஸ்' (Chintsez) என்றும் வழங்கப்படும். மஸ்லின் (Muslin) ஆடைகளும் நெய்யப் படுகின்றன."

—(**மார்க்கோபோலோ**: பக்கம் 64)

மசூலிப்பட்டினத்தின் இருப்பிடம்: 16°·9′வ × 81°·12′கி.

**2. மசோலிஸ் நதி (கழிமுகம்)** [River Masolis-Estuary]

இது கிருஷ்ணுநதி (River Krishna) யைக் குறிப்பிடுகிறது. கிருஷ்ணுநதியின் கழிமுகத்தில் மசூலிப்பட்டினம் உள்ளது. இந் நதியின் உள்பகுதியில் விஜயவாடா (Bezwada or Vijayawada) உள்ளது; விஜயவாடா முன்னர் தானியகடகம் (Danyakataka) என்று வழங்கப்பட்டது.

இதை யுவான் சுவாங் (கி.பி. 629-645) தெ-ன-கா-சி-கா (Tena-ka-si-ka) என்று வழங்கினர். தென-கா-சி-கா என்பது தானிய கடகம் என்பதைக் குறிப்பிடும். நெல்குவிந்த பூமி என்று பொருள் பட்டு விஜயவாடாவைக் குறிப்பிடுகிறது.

—(**யுவான் சுவாங்**: பக்கம் 157-158)

மசோலிஸ் நதிக் கழிமுகம் என்பது கிருஷ்ணுநதியின் கழிமுகம் ஆகும்.

கிருஷ்ணுநதிக் கழிமுகத்தின் இருப்பிடம்: 16°·05′வ × 81°·12′கி

**3. கண்டகோஸில்லா (வாணிகச் சந்தை நகரம்)** (Candakosyla, the Commercial Market Town)

இது கோல்கொண்டா (Golconda) எனும் வைரம் எடுக்கும் இடத்தைக் குறிப்பிடக்கூடும். முற்காலத்தில் இந்தியாவிலிருந்து வைரக்கற்களும் (Diamonds) மரகதக் கற்களும் (Beryls) அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாயின.

வைடூரியம், வைரக்கற்கள், இந்திய லினன் ஆடைகள், வழவழப் பான ஆடைகள், சாதாரண பஞ்சு ஆடைகள் பலவும் பாரிகாஸா விற்கு ஓஜினி (Ujjain) யிலிருந்து எடுத்துச் செல்லப்படுகின்றன."

—(**பெரிப்ளூஸ்**: அதிகாரம் 48, குறிப்பு-10, பக்கம் 181)

கண்ட என்பது கொண்டா என்பதன் திரிபாக இருத்தல் வேண்டும்.

கோல்கொண்டாவில் வைரம் எடுக்கப்பட்ட முறை மார்க்கோ போலோவினுல் (கி.பி.1254-1324) குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**மார்க்கோபோலோ:** பக்கம் 60)

சிந்துபாது எனும் நூலில் (கி.பி. 850) வைரம் எடுக்கும் முறை குறிப்பிடப்பட்டுள்ளது. —(**சிந்துபாது:** பக்கம் 27-34)

வைரம் எடுக்கும் இடமாக இருந்ததால், கோல்கொண்டா (Golconda) ஒரு வாணிகநகர்ச் சந்தையாக விளங்கிற்று.

கோல்கொண்டாவின் இருப்பிடம்: 17°·23′வ×78°·27′கி.

**4. கடௌரா** (Cadaura)

இச் சொல் கூடூர் (Gudur) எனும் நவீன ஊரைக் குறிப்பிடுகிறதென்று திரு. யூல் (Yule) கூறியுள்ளார். ஆனுல், கூடூர் என்பது தெற்கில் சென்னைக்கருகில் இருப்பதால், கிருஷ்ணுநதியின் கழிமுகத்தை மட்டும் குறிப்பிடுவதால், கடௌரா கூடூரைக் குறிப்பிடுவதாகக் கருதுவது பொருத்தமாயில்லை.

கடௌரா எனும் சொல் குண்டூர் (Guntur) என்பதையே குறிப்பிடுகிறது. இவ்வூர் கிருஷ்ணு நதிக்கரையில் உள்ள விஜயவாடாவுக்குத் தென்மேற்கில் உள்ளது.

குண்டூரில் பண்டமாற்று வாணிகம் நடைபெற்றது; இவ்விடம் மிளகாய் வற்றலுக்குப் புகழ்பெற்றது. வாணிகச் சந்தை நகரமாக விளங்கிற்று.

குண்டூரின் இருப்பிடம்: 14°·18′வ×80°·29′ கி.

**5. அலோஸிஜன் (வாணிகச் சந்தை நகரம்)** (Alosygen, Commercial Market Town)

இது பெஜவாடா (Bezwada) எனப்படும் இடத்தைக் குறிப்பிடக் கூடும். பெஜவாடா, இன்று விஜயவாடா (Vijayawada) என்று வழங்கப்படுகிறது.

இது கலிங்கப்பட்டினத்தைக் குறிப்பிடவும்கூடும். கலிங்கப் பட்டினம் முக்கியத் துறைமுகமாக விளங்கிற்று என்று பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறியுள்ளார் —(**பெரிப்ளூஸ்:** அதிகாரம் 62, குறிப்பு-5, பக்கம் 279). இவை இரண்டுமே வாணிகச்சந்தை நகரங்களாக விளங்கின.

விஜயவாடாவின் இருப்பிடம்: 16°·31′வ×80°·39′கி.
கலிங்கப்பட்டினம் இருப்பிடம்: 18°·20′வ×84°·10′கி.

**6. கிரிஸேவுக்குச் செல்லும் கப்பல்கள் (வெளியே யிருப்பன)**
**(Ships bound for Chrysae-waiting outside)**

கிரிஸே (Chrysae) என்பது பொன் தீவு என்று பொருள்படும் சொல்லாகும். ஸ்வர்ணத்வீபம் என்பதற்குப் பொன்தீவு என்று பொருள். ஸ்வர்ணத்வீபம் நவீன சுமத்ரா தீவின் (Sumatra) பழைய பெயர். ஆக, கிரிஸே என்னும் சொல் நவீன சுமத்ரா தீவைக் குறிப்பிடுகிறது.

சுமத்ராவுக்குச் செல்கின்ற கப்பல்கள் யாவும் கலிங்கப் பட்டினத்துக்கு வடமேற்கில் உள்ள பருவா (Baruva) என்னும் துறைமுகத்தில் தங்கி, அங்கிருந்து சுமத்ரா சென்றன. அப் பருவாவே சுமத்ரா செல்லும் கப்பல்கள் தங்கும் இறுதி இடமாகும். அதற்கும் அப்பால் செல்லும் கப்பல்கள், சுமத்ராவுக்குச் சென்றதில்லை.

பருவாவின் இருப்பிடம்: 18°·54′வ×84°·0′கி.

கிரிஸே என்னும் இடத்தைப் பிளினியும், பெரிப்ளூஸின் ஆசிரியரும் குறிப்பிட்டுள்ளனர்.

பிளினி (கி.பி. 23-79) கூறுகிறார்:

“கிரிஸே, ஆர்கிரே என்று வழங்கப்படும் தீவுகள் உள்ளன.”

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் 42)

பெரிப்ளூஸ் (கி.பி. 50-80) எனும் நூல் கூறுகிறது:

“கிரிஸே தீவினின்று வரும் பொருள்கள், டிமிரிகா கடற்கரை யோரமாகவே அந்தந்தத் தீவுகளுக்கு எடுத்துச் செல்லும் பொருள் கள் ஆகிய இவையாவும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.”

—(**பெரிப்ளூஸ்**: அதிகாரம் 56, குறிப்பு-31 பக்கம் 246)

கிரிஸே என்றால் பொன்என்று பொருள். அது பொன்தீவான சுமத்ரா தீவினைக் குறிக்கும். ரஜதம் என்றால் வெள்ளி என்பது பொருள். வெள்ளித் தீவு ஆர்கிரோ (Argyro) என்று வழங்கப் பட்டது. இச் சொல் ரஜதம் என்றதன் அடிப்படைச் சொல்லிலே தான் பிறந்தது.

“தொடுகடற் காவற்கடுமுரட் கடாரமும்.”

—(S.I.I. Vol. II-17)

என்றதில் கடாரம் பர்மாவைக் குறிப்பிடுகிறது. பர்மாவில் பொன்னும், அதன் தெற்கில் தென்னசேரின் பகுதியில் வெள்ளியும் எடுக்கப்பட்டன.

'கடாரம் வென்ருன்' என்ற பகுதியில், 'கடாரம்' என்ற சொல் பர்மாவைக் குறிப்பிடும்.

கடாரம் (Kadaram) எனும் இடம் பர்மாவைக் (Burma) குறிப்பிடுகிறது. கேடோ (Caudo), ஆரம் (Aurum) என்ற இரு கிரேக்கச் சொற்களின் இணைப்பே கடாரம் என்பதாகும். 'கேடோ' என்ருல் தோண்டுதல் என்றும், 'ஆரம்' என்ருல் பொன் என்றும் பொருள் படும். ஆக, கடாரம் என்பது பொன் தோண்டப்பட்ட இடம் ஆகும்.

—(Vide Latin-English Dictionary, p. 77)

"கங்கைவாரியும், காவிரிப்பயனும்
ஈழத்துணவும், காழகத்தாக்கமும்."

—(பட்டினப்பாலை: 190-191)

இதில் 'காழகம்' என்பது சுமத்ரா தீவைக் குறிப்பிடும். காழகம் என்ருல் பொன் என்றும் பொருள் உண்டு. இதிலிருந்து 'கழஞ்சு' எனும் சொல் உருவாயிற்று. கழஞ்சு என்பது பொன் நிறையை அளவிடப் பயன்பட்ட சொல்லாகும்.

"விதிமுறைக் கொள்கையின் ஆயிரத்து எண்கழஞ்சு
ஒருமுறை யாகப் பெற்றனள்; அதுவே."

—(சிலப்பதிகாரம்: அரங்கேற்று காதை 162-163)

ஆக, கிரிஸே என்பது பொன் தீவு என்பதும், அப் பொன் தீவு எனப்படுவது சுமத்ரா (Sumatra) தீவினைக் குறிப்பிடுகிறது என்பதும் இதனுல் பெறப்படுகின்றன.

கிரிஸே தீவின் (சுமத்ரா) இருப்பிடம்: 0°·0′ × 100°·0′கி.

---

# 16. கங்கே வளைகுடா

**கங்கே வளைகுடாப் பகுதி**[1]

| | |
|---|---|
| *பாலூரா (பாகௌரா)* | |
| *ஒரு நகரம்*[2] | ... 136°·40′கி × 11°·20′வ. |
| *நானிகைஞு*[3] | ... 136°·20′கி × 12°·0′வ. |
| *கதிகார்தாமா*[4] | ... 136°·20′கி × 12°·40′வ. |
| *கன்னகரா*[5] | ... 136°·30′கி × 13°·30′வ. |
| *மனடா நதி (கழிமுகம்)*[6] | ... 137°·0′கி × 14°·0′வ. |
| *கொட்டேபரா*[7] | ... 137°·15′கி × 14°·0′வ. |
| *சிப்பாரா*[8] | ... 137°·40′கி × 15°·30′வ. |
| *திண்டிஸ் நதி (கழிமுகம்)*[9] | ... 138°·30′கி × 16°·0′வ. |

## விளக்கவுரை

**1. கங்கே வளைகுடாப் பகுதி** (Gangetic Sinus Region)

இப் பகுதியில் கங்கை வளைகுடா (Mouth of the Ganges) பகுதியில் உள்ள நாடுகள் குறிப்பிடப்படுகின்றன.

கங்கை என்பதை ஆங்கிலேயர்கள் காஞ்சஸ் (Ganges) என்று வழங்கினர். அதுவே நாளடைவில் ஆங்கில உச்சரிப்பாக நிலை பெற்று நின்றுவிட்டது ஆனால், பழைய வரலாற்றாசிரியர்கள் கங்கே என்றே உச்சரித்தனர். Ganges என்ற சொல்லில், இறுதியில் உள்ள (s) ஒலிக்கப்பெறுவதில்லை. ஆக, அவர்கள் கங்கே (Gange or Gangae) என்றே உச்சரித்து வந்தனர். கங்கா அல்லது கங்கை என்பதே சரியான உச்சரிப்பாகும்.

"கங்கை வாரியும் காவிரிப் பயனும்."

—(**பட்டினப்பாலை**: 190)

கங்கை வளைகுடாவின் இருப்பிடம்: 21°·0′வ × 90°·0′கி.

**2. பாலூரா (பாகௌரா)-ஒரு நகரம்** [Paloora (Pakoura)-A City]

இது நவீன பாகர்கஞ்ச் (Backergunge) எனப்படும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இதுவே பாகௌரா எனக் கிரேக்கமொழியில் உச்சரிக்கப்பட்டது. அன்று இஃது ஒரு நகரமாக விளங்கிற்று.

பாகர்கஞ்ச் இருப்பிடம்: 22°·29′வ × 90°·18′கி.

இப் பகுதியில் கங்கை வளைகுடா (Mouth of the Ganges) பகுதியில் உள்ள நாடுகள் குறிப்பிடப்படுகின்றன.

**3. நானிகைன** (Nanigaina)

இது நவீன நாராயண்கஞ்ச் (Narayanganj) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இப் பகுதி மேக்மா ஆறுக்கும் (Megma River), பத்மாநதிக்கும் (River Padma) இடையில் உள்ள பகுதியாகும். இது கங்கைக் கழிமுகத்தைச் சார்ந்த பகுதியாகும்.

நாராயண்கஞ்ச் இருப்பிடம்: 23°·37′வ × 90°·32′கி.

**4. கதிகார்தாமா** (Cadicardama)

இது நவீன நந்திகிராமம் (Nandigrama) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. இது கங்கைக் கழிமுகத்தில் உள்ளது. இவ்விடம் ஆனந்த்பூர் கிளைநதியின்மீது உள்ளது. கங்கைக்கழிமுகத்தில் கலக்கிறது.

நந்திகிராமம் இருப்பிடம்: 22°·10′வ × 88°·10′கி.

இராமாயணத்தில் வரும் நந்திகிராமம் வேறு; இந்த நந்தி கிராமம் வேறு. அப் பெயரால் ஏற்பட்ட பிற்கால நகரம்.

**5. கன்னகரா** (Cannakara)

இது நவீன சந்திரநாகூர் (Chandranagore) எனப்படும் ஊரைக் குறிப்பிடுகிறது. சந்திரநாகூரை முன்னர் பழங்காலத்தில் தாலமி கிரேக்க மொழியில் கன்னகரா என்று உச்சரித்தார். இவ்விடம் சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் வரை ஃபிரெஞ்சு ஆதிக்கத்தின் கீழிருந்தது. இஃது ஒரு வாணிகச் சந்தை நகரமாக விளங்கிற்று.

கன்னகரா (சந்திரநாகூர்) இருப்பிடம்: 22°·52′வ × 88°·25′கி.

**6. மனடா நதி (கழிமுகம்)** (River Manada-Its Estuary)

இது மஹாநதி (Mahanadhi) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பேயாகும். இஃது ஒரிஸாவில் ஓடும் நதி. இதன் கரைமீது தான் அந் நாட்டின் தலைநகரமான கட்டாக் (Cuttack) உள்ளது.

மஹாநதியின் இருப்பிடம்: 20°·17′வ × 86°·44′கி.

**7. கொட்டோபரா** (Cottopara)

இது நவீன கட்டாக் (Cuttack) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. கட்ட-பரா எனப்படுவதே பின்னர் கட்டாக் (Cuttack) என வழங்கப்பட்டதுபோல் தோன்றுகிறது. மற்றும், கட்டாக் அருகில்

கேந்திரபரா என்றோர் இடமும் உள்ளது. இதுவும் கிரேக்க உச்சரிப்பில் கொட்டோபரா என்று வழங்கப்பட்டிருக்கக்கூடும்.

கட்டாக் இருப்பிடம்: 20°·29′வ × 85°·54′கி.

கேந்திரபரா இருப்பிடம்: 20°·30′வ × 86°·28′கி.

## 8. சிப்பாரா (Sippara)

திரு. யூல் (Yule) என்பார் இவ்விடம் சுபாரகம் (Suparaka) என்ற துறைமுகத்தைக் குறிப்பிடும் எனக் குறிப்பிட்டுள்ளார். சுபாரகம் என்பது அராபியன் கடற்கரையில் உள்ள சுபாரகா (Suparaka) என்பதையே குறிப்பிடும். சுபாரகா என்பது சுபாரா என்றும், சுர்பாரகா என்றும் வழங்கப்பட்டது (பகுதி 6, குறிப்பு-2 பார்க்கவும்). மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296), பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) இதைச் சுபாரா (Supara) என்றே வழங்கினர். ஆக, அராபியன் கடலில் உள்ள சுபாரகா வேறு; இங்குக் குறிப்பிடப்படும் சிப்பாரா (Sippara) வேறு. இச் சிப்பாரா கங்கைக் கழிமுகத்தில் இருப்பதாக இவ் அதிகாரத்தில் மேலே கொடுக்கப்பட்டுள்ளது. ஆக, சுபாரகா என்று சிப்பராவைக் கூறுவது சற்றும் பொருத்தம் இல்லை.

இங்குக் குறிப்பிடப்படும் சிப்பாரா நதியின் நவீன பெயர் சுபர்நாரகா (Subarnareka) என்பதாகும். சுபர்நாரகா கங்கைக் கழிமுகத்தருகில் வங்காளக்குடாக் கடலில் சேர்கிறது. அதன் கழி முகத்தில் படியபால் (Patiapal) எனும் துறைமுகம் உள்ளது. கடலுக்குச் சற்று உள்ளே தள்ளி உள்ளது. ஆக, சுபர்நாரகா என்ற நதியின் கிரேக்க உச்சரிப்பே சிப்பாரா என்பதாகும்.

சுபர்நாரகாவின் இருப்பிடம்: 22°·0′வ × 87°.0′கி.

## 9. திண்டிஸ் நதியின் (கழிமுகம்) (River Tyndis-Its Estuary)

இது மகாநதியின் கிளைநதியாகும் எனத் திரு. யூல் (Yule) கூறுகிறார். ஆனல், அது பொருந்தாமைக்குக் காரணம் கங்கைப் பகுதியிலும் அதன் அருகில் உள்ள இடங்களையுமே இப் பகுதியில் கொடுத்துள்ளார் தாலமி.

இது ஹூக்ளி நதிக் கழிமுகத்தைக் (Estuary of River Hoogly) குறிப்பிடுகிறது. இதன் கழிமுகத்தில் மிகப் பழம்பெருந்துறைமுக மான தாமிரலிப்தி (Tamluk) எனும் துறைமுகப்பட்டினம் இருந்தது. அதுவே இன்றைக்குத் தாம்லுக் (Tamluk) என்று வழங்கப் படுகிறது. பிளினி, பெரிப்ளூஸின் நூலாசிரியர் ஆகியவர்களாலும் தாமிரலிப்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 24, பக்கம் 81)
—(பெரிப்ளுஸ்: அதிகாரம் 63, குறிப்பு-5, பக்கம் 283)

ஹூக்ளி நதியின் இருப்பிடம்: 22°·55′வ × 88°·56′கி.

தாமிரலிப்தி இருப்பிடம்: 22°·18′வ × 87°·58′கி.

# 17. தோசரீன்

## தோசரீன் நாடுகள்[1]

| | |
|---|---|
| மாபௌரா[2] | 139°·0′வ × 16°·30′கி. |
| தோசரீன் கழிமுகம்[3] | 141°·0′வ × 17°·15′கி. |
| கோகாலா[4] | 142°·0′வ × 18°·0′கி. |
| அடமஸ் நதி (கழிமுகம்)[5] | 142°·10′வ × 18°·0′கி. |
| கோஸொபா (கோஸாபா)[6] | 143°·30′வ × 18°·0′கி. |

### விளக்கவுரை

**1. தோசரீன் நாடுகள் (Country of Dosarene)**

இது நவீன ஒரிஸ்ஸா (Orisa) பகுதியைக் குறிப்பிடுகிறது. வைதர்ணிநதிக்கு (River Vaitarni) இருமருங்கிலும் உள்ள பகுதிகளைக் குறிப்பிடுகிறது. வைதர்ணிநதியைத் தோசரீன் என்று கிரேக்க உச்சரிப்பில் தாலமி குறிப்பிட்டார்போலும். தூர்வாச மகரிஷியால் நிர்மாணிக்கப்பட்டதால், அந் நாடு ஒரிஸ்ஸா எனப் பெயர் பெற்றதென்பர்.

**2. மாபௌரா (Mapaura)**

இது மஹாபர்வதம் என்பதன் திரிபே. மகாபர்வதம் எனும் சொல் மகேந்திரகிரி (Mahendragiri) யைக் குறிப்பிடுகிறது. இம் மகேந்திரகிரி பருவா (Baruva) துறைமுகத்துக்கு மேற்கே 48 கிமீ. (30 மைல்) தொலைவில் உள்ளது.

மகேந்திரகிரியின் இருப்பிடம்: 17°·29′வ × 76°·17′கி.

இம் மகேந்திரகிரி, மந்திரகிரி என்றும், மகேந்திரமாமலை என்றும் குறிப்பிடப்படுகிறது.

"மாலேந்த ஓங்கு நெடுமந்தர மேயுமான."

—(**கம்பராமாயணம்:** சுந்தரகாண்டம்: கடல்தாவு படலம் 41)

மகேந்திரமலை இமயமலையில் இருந்ததென்றும், அது கடலில் முழுகிவிட்டதென்றும் பொருத்தமில்லாமலே புராணங்களில் கூறப்படுகின்றன. இமயமலைக்கும் கடலுக்கும் எத்துணைத் தொலைவு என்பதும், மகேந்திரமலை கடலில் முழுகினபோது இமயமலைமட்டும் இருந்ததா என்பதற்கான விடைகள் தெளிவாகக் கிடைக்காது. விளக்கம் கிடைக்கவில்லை என்றால் கடலை உதவிக்கு அழைத்து அதில் யாவற்றையும் மூழ்கும்படிச் செய்துவிடுவர் ஒரு சாரார்.

### 3. **தோசரீன் கழிமுகம்** (Estuary of River Dosarene)

தோசரீன் (Dosarene) என்ற சொல் ஒரிஸ்ஸாவின் வடபகுதியில் ஓடிய வைதர்ணி (Vaitharni) நதியைக் குறிப்பிடுகிறது. நதியின் நவீனபெயர் பிராமனி (Brahmani). இந் நதி ஒரிஸ்ஸாவின் வடபகுதியில் ஓடிக் கடலில் கலக்கிறது. கழிமுகத்தில் உள்ள முனை பல்மிராமுனை (Palmyra Point) என்று வழங்கப்படுகிறது.

இது மகாநதியைக் குறிப்பிடுகிறது என்று ஒரிருவர் கூறியுள்ளனர். ஆனால், மகாநதியை, முன்பகுதியில் (அதிகாரம் 16, குறிப்பு-6) மனடாநதி (River Manada) என்று குறிப்பிட்டுள்ளார். ஆக, ஒரே நதியை இருபெயர்களால் தாலமி வழங்கியிருக்க மாட்டார் என்பது துணிபு. ஆக, தோசரீன் எனும் சொல் மகாநதி (Mahanadhi) யைக் குறிப்பிடும் என்று கூறுவது பொருந்தாது.

வைதர்ணி (பிராமனி) நதியின் இருப்பிடம்: 22°·0′வ × 85°·0′கி.

### 4. **கோகலா** (Cocala)

இது கோயெல் (Coel) எனும் நதியினைக் குறிப்பிடுகிறது; வைதர்ணிக்கு வடக்கே உள்ளது.

கோயல்நதியின் இருப்பிடம்: 23°·50′வ × 85°·0′கி.

### 5. **அடமஸ்நதி (கழிமுகம்)** (River Adamas-Its Estuary)

அடமஸ் (Adamas) எனுஞ்சொல் வைரம் அல்லது நவரத்தினம் எனும் பொருள்படும் சொல்லாகும். இதே பொருள் கொண்ட நதி சுவர்ணரேகா (Subarnareka) வைதர்ணி நதிக்கு வடக்கே, கடலில் கலக்கிறது. இது ஜாம்ஷெட்பூர் (Jamshedpur) வழியாக ஓடுகிறது.

சுவர்ணரேகாவின் இருப்பிடம்; 22°·50′வ × 86°·10′கி.

**6. கோஸொபா (கோஸாபா)** [Cosauba]

இச் சொல் கஸாய் நதியைக் (River Kasai) குறிப்பிடுகிறது. இந் நதிக் கரைமீது மிதுனபுரி (Midnapore) உள்ளது. இந் நதி சுவர்ணரேகாவுக்கு வடக்கே உள்ளது.

கஸாய் நதியின் இருப்பிடம்: 22°·25′வ×87°·21′கி.

இதை திரு. யூல் (Yule) என்பவர், புத்தபிரானுர் பிறந்த இடமாகிய கௌசாம்பி (Kausambi) யைக் குறிப்பிடுவதாகக் கூறுகிருர். ஆனல், தாலமி ஒரிஸ்ஸா பகுதியின், அதற்கும் 440 கி.மீ (400 மைல்) வடக்கே உள்ள ஓர் ஊரை இணைத்துக் கூறமாட்டார். ஆகையால், கோஸொபா என்பது கௌசாம்பியைக் குறிப்பிடாது என்பது தெளிவாகிறது.

கஸாய் நதி ஹுக்ளி நதிக் கழிமுகத்தில் கடலுடன் கலக்கிறது. அதன் இரு கிளை நதிகள் ஹால்டி (River Haldi), ஆனந்த்பூர் (Anand pur) என்பனவாகும்.

மற்றும் இது கௌசுபா (GausubaRiver) நதியைக் குறிப்பிடக் கூடும். கௌசுபா கங்கைநதிக் கழிமுகத்தில் இணைகிறது. இது காளிந்தி (River Kalindi)க்கு மேற்கில் உள்ளது.

கௌசுபா நதி இருப்பிடம்: 22°·0′வ×89°·18′கி.

---

# 18. கங்கே நதி

**கங்கே நதி (கழிமுகப் பகுதி)**[1]

| | |
|---|---|
| காம்பிஸான் (மேற்குக் கழிமுகம்)[2] | ... 144°·30′கி×18°·15′வ. |
| பாலௌரா (ஒரு நகரம்)[3] | ... 145°·30′கி×18°·30′வ. |
| மேகா (இரண்டாவது கழிமுகம்)[4] | ... 145°·45′கி×18°·30′வ. |
| காம்பேரிகான் (மூன்றும் கழிமுகம்)[5] | ... 146°·30′கி×18°·30′வ |
| திலோக்கிராமா (ஒரு நகரம்)[6] | ... 147°·40′கி×18°·30′வ. |

சூடோஸ்தாமன்
(நான்காம் கழிமுகம்)[7] ... 147°·40'கி × 18°·30'வ.

ஆண்டிபோல்
(ஐந்தாம் கழிமுகம்)[8] ... 148°·30'கி × 18°·15'வ.

## விளக்கவுரை

### 1. கங்கே நதி (கழிமுகப் பகுதி) (River Ganges-Its Estuary)

கங்கை என்பதைக் கங்கே (Gange-s) என்றுதான் குறிப்பிட்டுள்ளார். இறுதியில் உள்ள S எழுத்து உச்சரிக்கப்படுவதில்லே. ஆக, கங்கை என்பது கங்கே (Gange) என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. வடமொழியில் கங்கா (Ganga) என்று உச்சரிக்கப்படுகிறது. இவ் அதிகாரத்தில் கங்கை நதி பாயும் பகுதிகள் சில விளக்கப்பட்டுள்ளன. ஆங்கிலேயர்களே கங்கையைக் காஞ்சஸ் (Ganges) என்று உச்சரித்தனர். அவ் உச்சரிப்பே வரலாற்றில் நிலேத்து நின்றுவிட்டது.

தாலமிக்கு முன்னரிருந்த வரலாற்றுசிரியர்களான மெகஸ்தனிஸ், பிளினி, பெரிப்ளூஸின் ஆசிரியர், ஸ்டிராபோ முதலானவர்கள் நதிகளின் போக்கு, நீளம் முதலிய செய்திகளைக் கொடுத்துள்ளனர். ஆனுல், அவை எங்கே உற்பத்தியாகின்றன, எக் கடலில் விழுகின்றன என்ற செய்திகளைக் கூறவில்லே. ஆனுல் தாலமியோ, சிந்து நதிக்கும், கங்கை நதிக்கும் கழிமுகத்தில் எத்துணைப்பிரிவுகள் இருந்தன என்பதையும், அவை எக் கடலில் கலக்கின்றன என்பதையும் விரிவாகவே கொடுத்துள்ளார்.

ஆனுல், தாலமி கொடுத்துள்ள கழிமுகங்களின் பெயர்கள் இன்று மாறிவிட்டிருக்கவேண்டும். மற்றும், அக் கழிமுகங்களும் தம் போக்குகளை மாற்றிக் கொண்டு, சில பொழுது மறைந்தும் போயிருக்கவேண்டும். கங்கை, சிந்து முதலிய ஆறுகளின் கழிமுகங்களின் பெயர்களும் இவ்வாறு மாறிவிட்டிருக்கவேண்டும். தாலமி கூறிய இடங்களும் பெயர்களும் இன்று எவற்றைக் குறிப்பிடுகின்றன என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாவிட்டாலும், பெயர் ஒற்றுமைகளைக் கொண்டும், பொருளின் போக்கைக் கொண்டும் பலவற்றை ஒருவாறு நிர்ணயிக்கக்கூடும்.

மலேகளே குறுகிப்போய்த் தோற்றம் மாறிக் காணப்படும் பொழுது ஆறுகள் தத்தம் போக்குகளை மாற்றிக் கொண்டு, அடிச்

சுவடே சிலபொழுது இல்லாமல் மறைந்து விட்டிருப்பதில் வியப்பேதும் இல்லையல்லவா?

கங்கை நதியின் இருப்பிடம்: 21°·30′வ×89°·30′கி.

**2. காம்பிஸான் (Cambison) மேற்குக்கழிமுகம் (Western Estuary)**

காம்பிசான் (Cambison) என்பது காம்போஜம் (Cambojam) என்பதன் கிரேக்க உச்சரிப்பேயாகும். காம்போஜம் என்பது கன்யா குப்ஜம் என்பதன் மரூஉவே. கன்யா குப்ஜத்தின் இன்றைய பெயர் கனோஜ் (Kanauj).

கன்யாகுப்ஜம் என்பதைக் கனோ-கு-ஷி (Kanu-Ku-She) என்று யுவான் சுவாங்(கி.பி.629-645) எனும் சீனப்பயணி குறிப்பிட்டுள்ளார். கன்யாகுப்ஜத்தின் பழையதலைநகரம் குசுமபுரம் (Kasumapura). அதன் சீன உச்சரிப்பு கிய-ஷி-மா-புலோ (Kia-So-ma-Pu-Lo) அதற்கு நறுமணம் பொருந்திய நகரம் என்பது பொருள். அதன் பிற்காலத்தியத் தலைநகரம் கனோஜ் ஆகும்.

—(**யுவான் சுவாங்**. பக்கம் 200)

மேலே மேற்குக் கழிமுகம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அது மேற்குமுகம் (Western) என்றிருக்க வேண்டும்.

கன்யாகுப்ஜம் கங்கையின் மேற்குப்பகுதியல்லவா? ஏடெழுதுவர்கள் சற்றுக் கவனமறதியாக இருந்திருப்பர் போன்று தோன்றுகிறது என்பது இதனால் தெரியவருகிறது.

கன்யாகுப்ஜம் என்பதைப் பாஹியான் (கி.பி. 399-414) கி-ஜொ (Ki-Jou-I) என்று எழுதியுள்ளார். இதன் பழைய தலைநகரம் குசுமபுரம் (நந்தவனம்).

—(**பாஹியான்**: பக்கம் 94)

இதைக் காளினி பாக்ஸா (Calinifaxa) என்று பிளினி (கி.பி. 23-79) குறிப்பிட்டுள்ளார்.

"அலெக்சாந்தர் திரும்பிச் சென்ற இடத்திலிருந்து காளிநி பாக்ஸா என்ற நகரம் வரைக்கும் 167 மைல்கள் தொலைவு உள்ளது."

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-54, பக்கம் 17)

கனோஜ் (காம்பிஸான்) இருப்பிடம்: 27°·3′வ×79°·58′கி.

மற்றும், கார்ப்பசம் என்றால் பருத்தி எனப் பொருள்படும் சொல்லாகும். ஆக, பருத்தி நெய்யப்படும் இடமே காம்பிஸான்

என்று வழங்கப்பட்டது என்றும் ஒரிருவர் கொள்கின்றனர். காம்பிஸான், கார்ப்பசம் ஒன்ருகவே ஒலிக்கின்றன. இதனுல் நல்ல பருத்தி நூல் நெய்யப்படும் இடமாகிய டாக்கா (Dacca) உள்ள ஹூக்ளி (Hoogly) நதியைக் குறிப்பிடும் என்று கூறுகின்றனர். இதுவும் ஒப்புக் கொள்ளக் கூடியதே. ஆயினும் கனேஜ் (Kanauj) என்ற இடமே அதிகப் பொருத்தமாயுள்ளமை காணப்படும்.

டாக்காவின் இருப்பிடம்: 23° 23′வ × 90°·26′கி.

**3, பாலௌரா ஒரு நகரம்** (Palaura A City)

இச் சொல் ஹௌரா (Howrah) என்றதன் கிரேக்க உச்சரிப்பே. பாலிகை-ஹௌரா என்பதே அதன் முதல் உருவம். (பாலிகை-பாலிகா-அன்னை என்பது பொருள்).

ஹௌராவின் இருப்பிடம்: 22°·35′வ × 88°·23′கி.

இவ்விடம் கங்கைக் கழிமுகத்தின் மேற்குப்பகுதியில் உள்ளது.

இச் சொல் நவகாளியைக் (Naokali) குறிப்பிடக்கூடும்.

நவகாளியின் இருப்பிடம்: 22°·48′வ × 91°·9′கி.

மற்றும் பாலௌரா என்ற சொல் தேவதையின் உறைவிடம் என்றும் பொருள்படும். மேலே அதிகாரம் 16-ல் இதே சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. பாலர் என்ற சொல்லுக்குத் தேவதை என்று பொருள் உண்டு. மற்றும், பாலினியம் (Balinium) என்ற கிரேக்கச் சொல்லுக்குக் குளிக்குமிடம் (Bathing place) என்று பொருள் உண்டு. ஆக பாலினியம் என்பதே பாலூரா ஆகி, அதுவே, குளிக்கும் புனித இடமாக விளங்கிற்று.—(Vide Latin-English Dictionary, p. 67.) இது காளிகட்டம் என்னும் நவீன கல்கத்தாவைக் குறிப்பிடுகிறது. இவ்விடத்தில் பண்டைநாள் முதல்கொண்டு வாணிகம் நடைபெற்று வந்தது. இப்பிரதேசத்துக்குத் தாமிரலிப்தி முக்கியமான ஏற்றுமதித் துறைமுகமாகும்.

கல்கத்தாவின் இருப்பிடம்: 22°·34′வ × 80°·24′கி.

திரு. யூல் என்பார் இச் சொல் சுபன்ரேகா எனப்படும் சுவர்ணரேகா அருகில் உள்ள ஜலாஸ்பூர் என்ற ஊரைக் குறிப்பிடு வதாகக் குறிப்பிட்டுள்ளார். ஆனல், தாலமி ஏற்கெனவே இச் சொல்லைக் குறிப்பிட்டுள்ளதால், அதேபொருளில்தான் இங்கும் அச் சொல்லைப் பயன்படுத்தியிருக்கவேண்டும். ஆகையால் அச் சொல் ஜலாஸ்பூர் என்பதைக் குறிப்பிடாமை அறியப்படும்.

**4. மேகா (இரண்டாவது கழிமுகம்)** [Mega, the Second Estuary]

இச் சொல் மேக்மா (Megma River) நதியின் கிரேக்க உச்சரிப்பேயாகும். இந் நதி பத்மா (Padma) எனும் நதியுடன்கூடி, வங்காள விரிகுடாவில் கலக்கிறது.

மேக்மாநதியின் இருப்பிடம்: 24°·0′வ×91°·0′கி.

சிலர் இது ஹூக்ளி (Hoogly) நதியைக் குறிப்பிடுவதாகவும் கொள்கிறார்கள். அதற்குக் காரணம் மேகா (Mega) எனும் சொல் மிகப் பெரியது, உன்னதமானது என்ற பொருள் தருவதே. கங்கைநதித் கழிமுகத்தில் இருக்கும் பெரியநதி ஹூக்ளி நதி அல்லவா?

ஹூக்ளிநதியின் இருப்பிடம்: 22°·55′வ×88°·26′கி.

**5. காம்பேரிகான் (மூன்றும் கழிமுகம்)** (Cambericon, the third Estuary)

இச் சொல் கருநாகம் என்ற சொல்லின் அடிப்படையில் உண்டான நகரமும், கழிமுகமும் ஆகும். கருநாகம் என்ற பொருளில் கருநாபுளி (Karnaphuli) என்னும் ஒரு நதி சிட்டகாங் (Chittagong) வழியாக ஓடுகிறது. கருநாபுளி என்னும் சொல் கருநாகப்பள்ளி (Karunahapalli) என்பதன் சுருக்கமே. ஆக, காம்பேரிகான் கழிமுகம் என்பது, கருநாபுளி (Karnaphuli) எனும் நதி ஏற்படுத்தும் கழிமுகத்தைக் குறிப்பிடுகிறது.

கருநாபுளியின் இருப்பிடம்: 22°·21′வ×92°·53′கி.

**6. திலோக்ராமா (ஒரு கிராமம்)** (Tilograma-A Village)

இது இருசொற்களின் இணைப்பாக உள்ளது. திலம்-கிராமம். அதாவது திலம்(எள்) அதிகமாக விளையும் நாடு என்பதே அதன் பொருள்.

ஒருகால் நவீன ஜெஸ்ஸூர் என்ற இடத்தைக் குறிப்பிடலாம் என்று நம்பப்படுகிறது.

ஜெஸ்ஸூரின் இருப்பிடம். 23°·10′வ×89°·10′கி·

சிராம்பூர் (Serampore) எனப்படும் இடத்தையும் குறிப்பிடக் கூடும். இவ்விடம் ஹௌரா (Howrah) அருகில் உள்ளது.

சிராம்பூரின் இருப்பிடம்: 22°·45′வ×88°·25′கி.

சிராம்பூர் ஸ்ரீராம்பூர் என்பதன் குறுக்கமாக இருக்கக்கூடும். திலோக் ராமா என்பதும் ராமா எனும் சொல்லையடிப்படையாகக் கொண்ட சொல்லாகவும் காணப்படுகிறது.

**7. சூடோஸ்தாமன் (நான்காம் கழிமுகம்)** (Psedosthoman, the Fourth Estuary)

சூடோஸ்தாமன் எனுஞ்சொல் பகுதி 8–ல் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன்பொருள் மறைமுகமான இடம் அல்லது பொய் வாயில் என்பதாகும். மறைவாயில் என்றும் கூறலாம்.

இச் சொல் நவீன பேக்கர்கஞ்ச் (Backergunge) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. உப்பளம் நிறைந்த இடம் பேக் வாட்டர்ஸ் என்று பொருள்படும். பேக்வாட்டர்ஸ் கஞ்ச் என்பது பேக்கர்கஞ்ஸ்ச் என்று நாளடைவில் வழங்கப்பட்டது. இவ்வுப்பளங்கள் கடற்கரைக்குப் பின்பக்கமாகச் சற்று மறைந்தே காணப்படும். இப் பிரதேசத்தில் சந்திரத் வீபம் என்னும் தீவு ஒன்று உள்ளது. இத் தீவு இன்று சந்த்வீப் (Sandwip) என்று வழங்கப்படுகிறது. இது சிட்டகாங்கிற்கு மேற்கில் உள்ளது.

சந்த்வீப்பின் இருப்பிடம்: 22°·5′வ × 91°·50′கி.

**8. ஆண்டிபோல் (ஐந்தாம் கழிமுகம்)** [Antipole-the Fifth Estuary)

இது கங்கை வடி நிலத்தின் இறுதியானதாகவும், ஐந்தாவது கழிமுகமாகவும் கொடுக்கப்பட்டுள்ளது. ஆண்டிபோல் என்றசொல் எதிர்முனை என்பதைக் குறிப்பிடும். கார்ஞக்கிலிருந்து தொடங்கி சந்த்வீபம் வரையில் கழிமுகங்களைக் கொடுத்துள்ளார். ஆக, கிழக்குப்பகுதியில் தொடங்கிய காரஞக்கிற்கு எதிர்முனை என்பதைக் குறிப்பிடுகிறது. இக் கழிமுகம் பிரமபுத்ரா நதியால் உண்டாக்கப்படும் கழிமுகம் ஆகும்.

பிரமபுத்திரா மூன்று பெயர்களால் குறிப்பிடப்படுகிறது. இமயமலையில் புறப்படும்போது பிரமபுத்ராநதி என்றும், தூப்ரியிலிருந்து பரீட்பூர்வரை அதே நதி ஜமுனு (Jamuna) என்றும், பரித்பூரிலிருந்து வங்காளவிரிகுடாவில் விழும்வரை அது பத்மாநதி (Padma)என்றும் வழங்கப்படுகிறது. இம் மூன்று நதிகளும் பிரமபுத்திராவையே குறிப்பிடுகின்றன. இந் நதி கடலோடு கலக்கும் இடத்தில் ராய்பூர், நவகாளி முதலிய இடங்கள் உள்ளன.

பிரமபுத்ரா நதியின் இருப்பிடம்: 26°·45′வ × 93°·45′கி.

ஜமுனுநதியின் இருப்பிடம்: 24°·25′வ × 89°·50′கி.

பத்மாநதியின் இருப்பிடம்: 23°·30′வ × 90°·0′கி.

தாலமி இதுகாறும் சிந்துநதி முதல் வங்காளவிரிகுடாவில் விழும் கங்கைநதி, பிரமபுத்ராநதி வரையிலுள்ள நதிகளையும்,

துறைமுகங்களையும் விவரித்தார். இனி அவர் ஆங்காங்குள்ள மலைத் தொகுதிகளைப் பற்றிய வரலாறுகளையும் கொடுக்கிறார்.

ஆற்று வளமும், மலைவளமும் ஒரு நாட்டின் நல்வாழ்வுக்கு அமைந்த நல்வளங்கள் அன்றோ? மக்கள் வாழ்வும் பண்பாடும் இவற்றை யொட்டியே அமைந்துவிடுவது, வரலாறு அளிக்கும் விளக்கம் அல்லவா?

---

# 19. கங்கேவடி நிலக் கிழக்கெல்லை மலைகள்

*கங்கே வடிநிலத்தைக் கிழக்கெல்லையாகக் கொண்ட இந்தியாவின் மலைகள் பின்வருமாறு பெயரிடப்பட்டுள்ளன:*

*பொய்னைதியான்[1] என்று வழங்கப்படும் அபோகோபா[2] மலை, திர்க்காம்சரேகை 116° முதல் 124° வரையிலும், அட்சாம்ச ரேகை 23° மேற்கிலிருந்து 26° கிழக்கு எல்லை வரையிலும் பரவியுள்ளது.*

### விளக்கவுரை

**1. பொய்னைதியான்** (Poinai Theon)

'பொய்னை' என்ற சொல்லுக்குத் துரோகம் என்ற பொருளும், தியான் என்பதற்குக் கடவுளரின் வரிசை என்ற பொருளும் தரப் பட்டுள்ளன. ஆக, இது துரோகம் செய்த கடவுளரின் மலை என்று பொருள்படுகிறது.

இன்று விளங்கும் மைகலா மலைத்தொடர் (Maikala Range) மேற்கூறப்பட்ட பொய்னைதியான் என்பதைக் குறிப்பிடுவதாகும். மைகலா என்ற சொல் மந்திரத்தால் பல இன்னல்களை விளைத்த என்ற பொருளைத் தரும். ஒருகால் இம் மலை பூகம்பத்தினாலோ அல்லது வேறெதாகிலும் இயற்கைச் சீற்றத்துக்குக் காரணமான தாலோ, அப் பெயர் இடப்பட்டிருத்தல் வேண்டும். 'கடவுளின் தண்டனை' என்றும் அதற்கு விளக்கம் கொடுக்கப்படுகிறது. பிளினி (கி.பி. 23-79) இதை, மான்ஸ் காபிடாலியா (Man's Capitalia) என்று வழங்குகிறார்.

மைகலா மலைத்தொடரின் இருப்பிடம்: 22°·50′வ × 81°·54′கி.

**2. அபோகோபா** (Abocoba)

இச் சொல் பொய்நைதியான் மலைத்தொடரின் மறுபெயர் என்று தாலமி கூறுகிறார். இச் சொல் 'கடவுளின் கோபம்' என்று பொருள்படும். தாலமி தரும் விளக்கமும், மைகலாவின் பெயர் விளக்கமும் ஒன்றுகவே காணப்படுகின்றன. ஆக, பொய் நைதியான் எனுஞ் சொல் மைகலா மலைத்தொடரையே குறிப்பிடு கிறது.

மைகலா மலைத்தொடரின் இருப்பிடம்: 22°·50′வ×81°·54′கி.

---

# 20. சார்டானிக்ஸ்

*சார்டானிக்ஸ்*[1] *எனப்படும் மலையும், அதில் காணப்படும் அதே பெயருள்ள நவரத்தினக் கற்களும்:*[2]

*சார்டானிக்ஸ் (நடுப்பகுதி) இருப்பிடம்:* 117°·0′கி×21°·0′வ.

## விளக்கவுரை

**1. சார்டானிக்ஸ்** (Sardonyx)

ஆனிக்ஸ் (Onyx) என்ற சொல் பலவித வண்ணமணிகள் எனும் பொருள்கொண்டதாகும். இவை ஆனிக்ஸ் ஸ்டோன்ஸ் (Onyx Stones) என்று வழங்கப்பட்டன.

சார்டானிக்ஸ் மலைத்தொடர் சாத்பூரா (Satpura) மலைத்தொடரைக் குறிப்பிடுகிறது. இது நர்மதை (Narmada), தபதி (Tapti) ஆகிய இரு ஆறுகளுக்கும் இடையே உள்ளது. பாரசீக வரலாறு எழுதிய டேசியஸ் (Ctesias) (கி.மு. 401-383) என்பார், இதைச் சார்டௌஸ் (Sardous) என்றே குறிப்பிட்டார்.—(Vide **Ctesias**: Part IV). அங்குக் கருநீலக் கற்கள் நிறையக் கிடைக்கின்றன. கருநீலம் என்றே சொல்லே கார்நீலியன் என்று மருவி, அக் கற்கள் யாவும் கார்னீலியன் கற்கள் (Cornelian Stones) என்றே வழங்கப் பட்டன. மற்றும் அவற்றுள் மங்கிய சிவப்பு நிறங்கொண்ட உயர்ந்த மணிவகையும் ஒன்றுகும்.

சார்டானிக்ஸ் (சாத்பூரா) இருப்பிடம்: 21°·40′வ×75°·0′கி.

பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) கூறுகிறார்:

"பாரிகாஸா துறைமுகத்திலிருந்து ஆனிக்ஸ் கற்கள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அவை உள்நாட்டி லிருந்து பாரிகாஸா துறைமுகத்துக்குக் கொண்டுவரப்படுகின்றன."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 49, குறிப்பு-27, பக்கம் 196)

**2: நவரத்தினக் கற்கள்** (Gem Stones)

சார்டானிக்ஸ் என்பது கோமேதக வகை இரத்தினக் கல்லைக் குறிப்பிடும். சார்ட் ஆனிக்ஸ் (Sard-Onyx) எனப் பிரிந்து, சிவந்த நவரத்தினக் கல் எனப் பொருள்தருகிறது.

சாத்பூரா மலைத்தொடரின் இருப்பிடம்: 21°·40′வ×75°·0′கி.

---

# 21. ஒயிந்தியான்

*ஒயிந்தியான் மலைத்தொடர்[1] தீர்க்காம்ச ரேகையில்[2] 126° முதல் 135° வரையிலும், அட்சாம்ச ரேகையில்[3] 27° வரையிலும் பரவியுள்ளது.*

## விளக்கவுரை

**1. ஒயிந்தியான் மலைத்தொடர்** (Ouindion Range)

ஒயிந்தியான் மலை என்பது விந்தியமலை (Vindhya Mountain) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. இம் மலைத்தொடர் வட இந்தியா வையும் தக்காணத்தையும் பிரிக்கும் எல்லைக்கோடாக அமைந் துள்ளது. இம் மலை இராமாயணம் முதலான பண்டைக்காவியங் களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இன்றைக்கும் அம் மலை விந்திய மலை (விந்திய பர்வதம்) என்றே வழங்கப்பட்டு வருகின்றது.

இம் மலைத்தொடர் பரோடா அருகில் தொடங்கி இந்தூர், போபால் வழியாக ஜபல்பூர் அருகில் உள்ள பான்ரேர் மலைத் தொடர் வரைச் (Banrer Mountain) செல்கிறது. நர்மதை ஆற்றின் நடுப்பகுதிவரை ஓடும் தொகுதி விந்திய மலை என்று வழங்கப் படுகிறது.

அகத்திய முனிவர் அக் காலத்தில் விந்திய மலை, கிரவுஞ்ச மலை முதலியவற்றை மேலோங்கிப் போகாதவாறு அடக்கினார் என்று கந்தபுராணம் கூறுகிறது. அகத்தியர் 'விந்தம் அடக்கினார்' என்ற

சிறப்புப் பெயரால் குறிப்பிடப்படுகிருர். விந்தம் என்பது விந்திய மலேயேயாகும்.

விந்திய மலேயின் இருப்பிடம்: 22°·30′வ×76°·0′கி.

**2. நிர்க்காம்ச ரேகை (Longitude)**

மெரிடியனுக்குக் (Meridian) கிழக்காகவோ அல்லது மேற்காகவோ ஓர் இடத்தின் இருப்பிடத்தைக் குறிப்பிடுவதாகும். (E or W).

**3. அட்சாம்ச ரேகை (Latitude)**

நிலநடுக்கோட்டிற்கு (Equator) வடக்காகவோ அல்லது தெற்காகவோ ஓர் இடத்தின் இருப்பிடத்தைக் குறிப்பிடுவதாகும். (N or S).

---

# 22. பெடிகோ

## பெடிகோ மலேத்தொடர்[1]

*பெடிகோ மலேந் தொடர் நிர்க்காம்சம் 123° முதல் 130° வரையிலும், அட்சாம்சம் 21° முதல் 23° வரையிலும் பரந்துள்ளது.*

### விளக்கவுரை

**1. பெடிகோ (Betigo)**

பெடிகோ என்பது பொதியில் (Podiyil) என்று வழங்கப்படும் மலேயின் கிரேக்க உச்சரிப்பாகும். பொதியில் என்பது பொதிகை மலே என்பதன் குறுக்கமே. இம் மலேயில் அகத்திய முனிவர் வசித்துவந்ததாகவும், மாணவர் பலரைக் கொண்டவராகவும், அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்துபவராகவும், மகேந்திர மலேயைக் கடலில் அமிழ்த்தியவராகவும், விந்தியமலே, கிரவுஞ்ச மலே ஆகியவற்றை மேலெழுவொட்டாதவாறு அடக்கினவராகவும், லோபா முத்திரை என்னும் வடநாட்டுப் பெண்ணேத் தம் மனேவியாகக் கொண்டவராகவும், அகத்தியம் முதலிய பேரிலக்கியங்களுக்கு ஆசிரியராகவும், தொல்காப்பியருக்கு முன்னர் விளங்கியவராகவும் பல வரலாறுகள் அகத்தியரைப்பற்றித் தமிழ்நாட்டில் நிலவிவருகின்றன.

பொதியில் எனப்படும் மலை தமிழ் இலக்கிய நூல்கள் பலவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன:

"திருந்து இலை நெடுவேல் தென்னவன் பொதியில்."

—[அகநானூறு: 138-(7)]

"போர்மடி நல்இறைப் பொதியிலானே?"

—[அகநானூறு: 167-(20)]

"தொல் மூதாலத்து அரும்பணைப் பொதியில்."

—[அகநானூறு: 251-(8)]

"புகலரும் பொதியில் போல."

—[அகநானூறு: 322-(14)]

"செதுகாழ் சாய்ந்த முதுகாற் பொதியில்."

—[அகநானூறு: 373-(4)]

"பெருநலம் சிதைந்த பேஎம் முதிர்பொதியில்."

—[அகநானூறு: 377-(10)]

"பொதியிற் செல்வன், பொலந்தேர்த் திதியன்,"

—[அகநானூறு: 25-(20)]

"வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்."

—(பொருநராற்றுப்படை: 249)

இப் பெடிகோ மலையை (Betigo), அதிகாரம் 34-ல் மீண்டும் குறிப்பிடுகிருர். அதிகாரம் 35-ல் காவிரிநதி உற்பத்தியாகும் இடத்தை அடைசத்ரோ (Adaisatro) என்று வழங்குகின்ருர். அடைசத்ரோ என்பது அகஸ்தியர் மலை (Agastia Mountain) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. மற்றும் அடுத்துவரும் அதிகாரம் 23 ஐப் பார்க்கவும்.

பொதியில் என்னும் மலை திருநெல்வேலி மாவட்டத்தில் திருக்குற்ருல மலையைக் குறிப்பிடுகிறது. திருக்குற்ருல மலைமீது ஏறி, 5 மைல் (8 கிமீ.) தொலைவு சென்ருல், ஓர் ஏரி காணப்படுகிறது. அவ்வேரி அகஸ்தியர் ஏரி; அங்கே அகஸ்திய ஆச்ரமும் காணப்படுகின்றன. அவ்விடம் இயற்கை வனப்பு மிகுந்து காணப்படுகின்றது. இவ் ஏரியிலிருந்துதான் தாமிரபருணி உற்பத்தியாகிறது. இந் நதி பொதியில்மலையில் பிறந்து, காயல்பட்டினத்தருகில் கடலுடன் கலக்கிறது. கடலுடன் கலக்கும் இடத்தில் தான் முன்னர் கொற்கைத் துறைமுகம் விளங்கிற்று. (அதிகாரம் 10, குறிப்பு-2, பக்கம் 64 காண்க). இன்று அத் துறைமுகம் கடலுள்

மூழ்கிவிட்டது. கொற்கை என்னும் துறைமுகமே பண்டை நாளில் கபாடபுரம் என்று வழங்கப்பட்டதாகப் பேராசிரியர்கள் கூறுகின்றனர்.

பொதியில் மலையின் இருப்பிடம்: 8°·58′வ×77°·0′கி.

ஆனால் விந்தியமலையை எழுதிவிட்டு, உடன் தென்தமிழ் நாட்டின் கோடியில் உள்ள பொதிகை மலையை விவரிப்பாரா என்பது ஐயப்பாடே. ஆகையால், பெடிகோ என்பது பொதுவாக மலையைக் குறிப்பிடுவதாகவும், இங்கு அம் மலை மகாதேவ மலையைக் குறிப்பிடுவதாகவும் கொள்ளலாம். மகாதேவமலை, விந்தியமலைக்குத் தெற்கில் உள்ளது.

மகாதேவ மலையின் இருப்பிடம்: 22°·24′வ×78°·0′கி.

மற்றும் அதிகாரம் 23, 35-ல் அகஸ்தியர் மலையைக் குறிப்பிட்டுள்ளார். அம் மலையில் காவிரி உற்பத்தியாகிறது என்றும் கூறுகிறார். காவிரி நதி உற்பத்தியாகும் மலை, குடகு மலை. ஆக, குடகு மலையையே, தாலமி பெடிகோ மலை (Betigo) என்று வழங்கினர் என்று கொள்வதும் மிகப் பொருத்தமானதே.

குடகு மலையின் இருப்பிடம்: 12°18′வ×76°·0′கி.

---

# 23. அடைசத்திரான்

**அடைசத்திரான் மலைத்தொடர்:**[1]

*இதன் நடுப்பகுதி நிர்க்ஷாம்சம் 132° யிலும், அட்சாம்சம் 23° யிலும் உள்ளது.*

## விளக்கவுரை

**1. அடைசத்திரான் மலைத்தொடர்** (Adaisatran Range)

இம் மலை சக்யாத்ரி பர்வதம் (Sakyadri Parvata) என்று வழங்கப்படுகிறது. அஜந்தா மலைக்குகைகள் இங்குக் காணப்படுகின்றன. இம் மலையில் பென்-கங்கா (Penganga) எனப்படும் கோதாவிரியின் கிளைநதி உற்பத்தியாகிறது. சக்யாத்திரி என்ற சொல்லே சத்திரான் என்று கிரேக்க மொழியில் உச்சரிக்கப்பட்டது. இம் மலைத்தொடர், தப்தி நதிக்குத் (River Tapti) தெற்கில் உள்ளது.

அடைசத்ரோ (Adai Satro) என்றும் இம் மலை வழங்கப் பட்டது. இச் சொல் அகஸ்தியர் மலை என்றதன் திரிபாகக் கொள் ளப்படுகிறது. அடைசத்ரோ என்பது அகஸ்தியர் (Agasthiar) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. அகஸ்தியர் மலை என்பது குடகு மலையைக் (Coorg Mountain) குறிப்பிடுவதாகவும் கொள்ளப் படுகிறது. மற்றும் அதிகாரம் 35, குறிப்பு-2 அடைசத்ரோவின் விளக்கவுரை காண்க.

சக்யாத்ரி பர்வதம் இருப்பிடம்: 20°·20′வ×77°·10′கி.

# 24. ஆக்ஸெண்டான்

## ஆக்ஸென்டான் மலைத்தொடர்:[1]

*இம் மலைத்தொடர் நீர்க்காம்சம் 136° முதல் 143° வரைப் பரவியுள்ளது. அதன் மேற்கு எல்லை அட்சாம்சம் 22° யிலும், கிழக்கு எல்லை 84° யிலும் காணப்படுகிறது.*

**1. ஆக்ஸெண்டான் மலைத்தொடர்** (Occentan Range)

ஓரியண்டல் (Oriental) என்றால் கிழக்கு; ஆக்சிடெண்டல் (Occidental) என்றால் மேற்கு என்பது பொருள். இங்கு ஆக்ஸென்டான் என்று கூறுவது இந்தியாவில் மேற்கு மலைத் தொடர் முழுவதையும் குறிப்பிடுவதாகும். இன்று இது வெஸ்டர்ன் காட்ஸ் (Western Ghats) என்று வழங்கப்படுகிறது. இம் மலைத் தொடர் தப்தி (Tapti) நதிக்குத் தெற்கே தொடங்கி கன்னியாகுமரி (Cape Camorin) வரையில் செல்கிறது. இதன் தொடக்கம் சந்தோர் மலை (Chandor Hills); கன்னியா குமரியில் முடிவது ஏலக்காய் மலை (Cardamon Hills). இவற்றுக்கிடையேயுள்ள மலைகள்: ஆனை மலை, பழனி மலை, நீலகிரிமலை (Nilgiri Mountains), குடகு மலை (Coorg Mountains), பாலக்காடு மலைகள் (Palghat Mountains), மலையாள மலை (Malabar Hills), சக்யாத்திரி மலைகள் (Sakyadri Mountains) முதலியனவாகும்.

மலையாள நாட்டில் உள்ள மலைகளில் பண்டைக் காலத்தில் பலமூலிகைகள் பயிராக்கப்பட்டன. மிளகு, ஏலக்காய், இலவங்கம் சடாமாஞ்சி, இஞ்சி முதலியன பெருவாரியாகப் பயிராக்கப்பட்டு

ரோம், ஆப்பிரிக்கா, அரேபியா முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அவ்வாறு இப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப் பட்ட துறைமுகங்கள் திண்டிஸ் (Tyndis) அதாவது தொண்டியும், முசிறிஸ் (Muziris) அதாவது முசிறியும் ஆகும். இச் செய்தி பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸின் (கி.பி. 50-80) ஆசிரியர், மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) முதலான பயணிகளால் குறிப்பிடப்பட்டுள்ளன. அன்று அயல் நாட்டு வாணிகம் முழுவதும் மேற்குக் கடற்கரையிலிருந்து, தொண்டி, முசிறி, பாரிகாஸா, சிந்து நதிக்கழிமுகத்திலிருந்த பார்பரிகம் முதலான துறைமுகங்களின் வழியாகவே நடைபெற்றன.

"மிகவும் அண்மையிலுள்ள இந்தியாவின் துறைமுகமான முசிறிஸ் என்னும் இடத்தை 40 நாள்கள் பயணமேற்று அடைந்து விடலாம்."

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 26, குறிப்பு-80, பக்கம் 128)

"பகாரேயில் சந்தை கூடும் வாணிக நகரங்களுக்கு அவர்கள் உருவத்தில் பெரிய கப்பல்களை அனுப்பிவைக்கின்றனர். அதற்குக் காரணம், மிகப்பெரிய அளவில் மிளகும் இலவங்கப்பத்திரியும் இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றன."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 57, குறிப்பு-1, பக்கம் 233)

"இங்கே காட்டுப்பிரதேசத்திலும், நாட்டினுள்ளும் மிளகு பெருவாரியாகப் பயிரிடப்படுகிறது. அம் மிளகை மே, ஜூன், ஜூலை ஆகிய மாதங்களில் சேகரிப்பர்.

மிளகு, இஞ்சியும், பாக்கும் உலகிலே எங்கும் கிடைத்தற்கரிய அவ்வளவு விலையுயர்ந்த துணிமணிகளும் இவ்விடத்தில் பெருவாரி யாக உற்பத்தி செய்யப்படுகின்றன. இந் நாட்டில் விளையும் பண்டங்களை ஏடென் முதலிய நகரங்களுக்கு ஏற்றுமதி செய்யத் தகுந்த வியாபாரிகள் இந் நாட்டின் துறைமுகங்களில் எப்பொழுதும் காத்திருப்பர். ஏடெனிலிருந்து இப் பொருள்கள் அலெக்சாந்திரியா நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன."

—(மார்க்கோபோலோ: பக்கம் 80)

போர்த்துக்கீசியர் காலத்தில் (கி.பி. 1505-1759) கொச்சி (Cochin) எனும் இடத்தில் மிளகைச் சேமித்து வைக்க ஒரு கிடங்கைக் கட்டிவைத்தனர். அதன் பெயர் பெப்பர் ஹௌஸ் (Pepper House) என்பதாகும்.

"ஏலவல்லியும் இருங்கறிவல்லியும்"

—(சிலப்பதிகாரம்: காட்சிக் காதை 41)

இதில் இருங்கறி என்பது கரியமிளகு என்பதையும், வல்லி அதன் கொடியையும் குறிப்பிடுகிறது. ஆக, கரிய மிளகுக்கொடி இங்குக் குறிப்பிடப்படுகிறது.

மேற்குமலைத் தொடரின் இருப்பிடம்:
8°·4′வ—21°·06′வ × 74°·19′கி—77°·36′கி.

# 25. உரோடியன்

**உரோடியன் மலைகள்**[1]:

*இவை தீர்க்காம்சம் 138° முதல் 133° வரையில் பரவியுள்ளன. இவற்றின் கிழக் கெல்லை 18° அட்சாம்சத்திலும் மேற்கெல்லை 16° அட்சாம்சத்திலும் உள்ளது.*

## விளக்கவுரை

**1. உரோடியன் மலைகள்** (Oroudian Mountains)

உரோடியன் (Oroudian) எனும் சொல் வைடூரியம் எனும் சொல்லினடியாகப் பிறந்தது. இத் தொடர் இன்று பார்சநாத் (Parsanath) என்று வழங்கப்படுகிறது. இங்கிருந்துதான் ஸ்வர்ண ரேகா (Subarnareka), தாமோதர் (Damodar) முதலிய நதிகள் உற்பத்தியாகின்றன. இங்குப் பொன் அதிகமாகக் கிடைத்தது. இங்கிருந்து உற்பத்தியாகும் ஆறுகளுள் சோன் (River Son) என்னும் நதியும் ஒன்றாகும். சோன் என்பது ஸ்வர்ணவதி என்ற சொல்லின் குறுக்கமே. ஸ்வர்ணம் என்ற சொல் பொன் என்னும் பொருள்படும். மற்றொரு நதி ஸ்வர்ணரேகா. இதுவும் பொன் கொழிக்கும் நதியாகக் கருதப்பட்டது.

ஆகையால் உரோடியன் மலை என்பது வைரம், வைடூரியம், பொன் முதலியன கொழிக்கும் மலையாகக் கருதப்பட்டது.

மற்றும் குரோதம் என்பது கோபத்தைக் குறிக்கும் சொல்லாகும். அக் கோபத்தை வென்றவர் நிக்ரோதர் எனப்படுவர். அவ்வகை நிக்ரோதர் போன்ற ரிஷிகள் வாழும் மலை என்றும்

பொருள்படும். நிக்ரோதர்மலை என்பது உரோடிய மலை என்று திரிந்து வழங்கியிருக்கக்கூடும்.

பார்சுவநாதர் ஜைன தீர்த்தங்கரர்களுள் ஒருவர். அவர் பெயரால் உண்டான மலையே பார்சுவநாத் மலை எனப்பட்டது. இது சைனர்களின் கூற்று. பார்வதி-பரமேஸ்வரர் மலையே பார்சுவநாத் மலை ஆயிற்று என்றும் சைவ அபிமானிகள் கூறுவர்.

பார்சுவம் என்றால் கிழக்கு என்று பொருள். ஆக கிழக்கில் உள்ள மலை பார்சுவநாதர்மலை என்று வழங்கப்பட்டதாக வைதிகர்கள் கூறுவர்.

எது எவ்வாறுயிருப்பினும், பழம் பெருமை வாய்ந்த மலை பார்சுவநாத் மலை. அங்கு ரிஷிகள் தவம் செய்து கொண்டிருந்தனர் என்பதற்குப் போதிய ஆதாரங்கள் உள்ளன.

பார்சுவநாத் மலையின் இருப்பிடம்: 24°·0′வ×86°·11′கி.

# 26. சிந்தஸ்

*இமௌஸ் மலையிலிருந்து[1] புறப்பட்டுச் சிந்தஸ் நதியில்[2] கலக்கும் நதிகளின் பெயர்கள் பின்வருமாறு:*

| | | |
|---|---|---|
| *கோவா நதியின் உற்பத்தியிடம்[3]* | ... | 120°·0′கி ×37°·0′வ. |
| *சுவாஸ்டஸ் நதியின்* ,, | ... | 122°·30′கி × 36°·0′வ. |
| *இண்டஸ் நதியின்[5]* ,, | ... | 125°·0′கி × 37°·0′வ. |
| *பிடாஸ்பஸ் நதியின்[6]* | ... | 127°·30′கி × 36°·40′வ. |
| *சண் 'ல்[7]* ,, | ... | 129°·0′கி × 36°·0′வ. |
| *ஆட்ரிஸ்[8]* ,, | ... | 130°·0′கி × 37°·0′வ. |
| *பிபாஸிஸ்* | ... | 131°·0′கி × 35°·30′வ. |

### விளக்கவுரை

**1. இமௌஸ் மலை (Imaus Mountain)**

ஹிமம் என்ற வடசொல் பனி என்று பொருள்படும். பனி என்றும் இருக்கும் மலை ஹிமயமலை (Himalayas). ஹிமம் என்ற சொல்லின் உச்சரிப்பே இமௌஸ் (Imaus).

பிளினி (கி.பி. 23-79) இமயமலையை ஹெமோடஸ் என்றே குறிப்பிட்டுள்ளார்.

"ஹெமோடஸ் என்ற மலைத்தொடர் எங்குத் தொடங்குகிறதோ, அங்கிருந்தே இந்தியாவின் நாடுகளும் தொடங்குகின்றன."

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-1, பக்கம் 7)

தமிழ் இலக்கியங்களில் இமயமலை குறிப்பிடப்பட்டுள்ளது:

"மாறிப் பிறவாராயினும் இமயத்துக்
கோடுயர்ந்தன்ன தம்மிசை நட்டு."

—(**புறநானூறு:** 214)

"பொன்னுடை நெடுங்கோட்டு இமயத்தன்ன."

—(**புறநானூறு:** 369)

இமயமலையின் இருப்பிடம்: 28°·0'வ×88°·0'கி.

**2. சிந்தஸ் நதி** (River Sindus)

சிந்தஸ் (Sindus) என்று கிரேக்க வரலாற்றாசிரியர்களால் உச்சரிக்கப்படும் நதியே இன்று சிந்து (Indus) என்று வழங்கப்படுகிறது. Sindus என்ற சொல்லின் இறுதியில் உள்ள S உச்சரிப்பில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. அவ்வாறானால், கிரேக்கர்களும் சிந்து (Sindu) என்றே உச்சரித்திருப்பார்கள். எழுத்தில்மட்டும் S சேர்த்து எழுதுவர்.

கங்கை என்ற சொல்லும் அத்தன்மையதே. Ganges என்ற சொல்லின் இறுதி S உச்சரிப்பில் எடுத்துக் கொள்ளாவிட்டால், கங்கே (Gange) என்றே அச்சொல் காணப்படும். எழுதும்போது மட்டும் S ஐச் சேர்த்துக்கொள்வர்.

இந் நதி சிந்தஸ் இண்டஸ், சிண்டஸ், சிந்து எனப் பல வாறாக உச்சரிக்கப்பட்டும் எழுதப்பட்டும் வந்தது. சிண்டஸ் (Sindus) என்பதே இண்டஸ் (Indus) ஆகி, அதுவே சிண்டு, இண்டு எனக் குறுகி, அப் பகுதிகளில் வாழும் மக்கள் இண்டூஸ் (Hindus) என்றும் வழங்கப்பட்டனர் போலும். இண்டஸ் நதி ஓடும் பகுதியை உடையநாடே இண்டியா (India) என்று வழங்கப்பட்டது.

மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) இந்தியாவை இண்டி-கா (Indika) என்று வழங்கினர். இதில் உள்ள-கா என்னும் சொல் நாடு என்னும் பொருளைத் தரும். அகம் என்ற தமிழ்ச்சொல் நாடு எனும் பொருள்படும். எ-டு: தமிழகம்-தமிழ்நாடு. அகம் என்ற சொல்லே குறுகி, 'கா' எனக்கிரேக்கமொழியில் விளங்குவதாயிற்று,

சிந்து நதி முதன் முதலாகக் கிரேக்கர்களால் இண்டஸ் என்றே வழங்கப்பட்டது. இச் சொல் கிரேக்கர்கள் தமக்கு அண்மையிலிருந்த பாரசீகர்களிடமிருந்து அறிந்ததாகும்.

சிந்து என்ற சொல்லுக்குப் பிரித்தல், பாதுகாத்தல் தன்னைக் காத்துக் கொள்ளல் என்ற பல பொருள்கள் உள்ளன. மற்ற அயல் நாட்டிலிருந்து இந்தியாவின் எல்லையைப் பிரித்தலாலும், நீர் வளத்தால் தன்னைத் தான் பாதுகாத்துக் கொள்வதாலும், மற்ற மக்களையும் பாதுகாப்பதாலும் இப் பெயர் பெற்றது மிகவும் பொருத்தமே யன்றோ?

டாரியஸ் ஹிஸ்டாஸ்பஸ் (கி.மு. 521-486) (Darius Histaspus) என்னும் அரசர் தாம் படையெடுத்தபோது, சிந்து நதியின் கழிமுகத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

சிந்துநதி கைலாஸ் மலைக்குச் சற்று வடக்கே ஓர் ஏரியிலிருந்து புறப்படுகிறது. அதன் கிளையான சட்லெஜ், மானசரோவர் ஏரியிலிருந்து புறப்படுகிறது. ஆனால், தாலமி இதை இன்னும் வடகோடிப் பகுதியில் உற்பத்தியாவதாகக் கூறுகிறார். அன்றைக்குத் தெரிந்த புவியியலிலிருந்து அவர் குறிப்பிட்டுள்ளார். இன்றைக்கிருப்பதைப் போன்று பயண வசதிகளும், வான ஊர்திகளும் அன்றைக்கு இருந்தனவல்ல அல்லவா?

சிந்துநதி ருக் வேதத்தில் (Rig Veda) குறிப்பிடப்பட்டுள்ளது: "முதலில் இரிஷ்டமா கிளையுடன் சேர்வாயாக; பின்னர் ஸஸத்ரு, ரஸா, ஸ்வேதி; அதன் பின்னர் கோமதி, க்ரும் ஆகிய இரு நதிகளுடன் சேர்வாயாக; அதன் பின்னர் கூபா, மகருறு என்னும் நதிகளுடன் சேர்வாயாக."

—(ருக் வேதம்: X: 5.)

"இப்பனுவலை ஏற்றுக்கொள்ளுங்கள் ஹே கங்கா ! யமுனா, சரஸ்வதி, சதத்ரி, பரஸ்னி; ஓ! பருத்விதா, அஸிக்னி, விதஸ்தா, அர்ஜிக்யா, ஸுஸாமாவுடன் சேர்வாயாக !"

—(ருக் வேதம்: X-6)

இந் நதி மெகஸ்தனிஸ், பிளினி, ஸ்டிராபோ, அர்ரியன், பெரிப்ளூஸ் ஆசிரியர் ஆகிய பலராலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பிளினி** (கி.பி. 23-79). கூறுகிறார்:

"இப் பிரதேசத்து ஆதிவாசிகளால் இந் நாட்டில் பாயும் நதி சிந்தி (Sindhi) என்று வழங்கப்படுகிறது. தான் போகும் பாதையில்

19 கிளைநதிகள் கொணர்ந்து கொட்டும் நீரைச் சேர்த்துக் கொண்டு இறுதியில் கடலில் சேர்கிறது.''

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-1, பக்கம் 36)

**பெரிப்ளூஸின்** நூலாசிரியர் (கி.பி. 50-80) கூறுகிறார்:

"அதற்குப் பிறகு சிந்தியா எனும் நாட்டின் கடற்கரை படர்ந்து செல்கிறது. அக் கடற்கரைப் பகுதியில் ஓர் ஆற்றின் கழிமுகம் உள்ளது. அக் கழிமுகம் நீர் நிறைந்தும், சேறு அதிகமாயும் காணப்படுகிறது. அந்த இடத்தில் வந்து விழும் நதியின் பெயர் தான் சிந்தஸ் என்பது.''

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 38, குறிப்பு-3, பக்கம் 137)

**மெகஸ்தனிஸ்** (கி.மு. 302-296) கூறுகிறார்:

"மற்றொரு நதி கங்கைநதியின் அளவேயுள்ளதாயும், இண்டஸ் (Indus) எனும் பெயரைக் கொண்டதாயும், அதன் எதிரில் உள்ள கங்கையைப் போல வடக்கே இமயமலையில் உற்பத்தியாகிக் கடலில் கலக்கிறது. இந் நதி இந்தியாவின் எல்லை நதிபோன்று காட்சி யளிக்கிறது.''

—(**மெகஸ்தனிஸ் இண்டிகா**: அதிகாரம் 3, குறிப்பு-11, பக்கம் 23)

சிந்துநதியின் இருப்பிடம்: 24°·30'வ × 68°·00'கி.

**3. கோவா நதி** (River Coa)

இது காபூல் நதி (River Kabul) யைக் குறிப்பிடுகிறது. காபூல் என்பது கோபஸ் (Copes) என்றும், கூபா (Kuba) என்றும் வழங்கப் பட்டது. காபூல் நதி ஹிந்துகுஷ் மலையில் (Hindukush) உற்பத்தி யாகி, சிந்து நதியுடன் கலக்கிறது. இவ்வாறு சேரும் இடம் ஆட்டாக் (Attock) என்று வழங்கப்படுகிறது.

காபூல் நதியின் இருப்பிடம்: 34°·30'வ × 69°·18'கி.

**4. சுவாஸ்டஸ் நதி** (Suvastos)

இது ஸ்வாத் நதி (Swat River) யைக் குறிப்பிடுகிறது. இந் நதி ஹிந்துகுஷ் (Hindukush) மலையில் உற்பத்தியாகிக் காபூல் நதியுடன் (River Kabul) சேர்கிறது.

ஸ்வாத் என்பது ஸுவஸ்து (Suvastu) என்ற பெயரால் வழங்கப் பட்டது. முன் குறிப்பு-2-ல் ருக் வேதம் X-5-ல் ஸ்வேதி எனும் சொல் ஸ்வாத் நதியைக் குறிப்பிடுகிறது.

இன்று பஞ்சாப் (Punjab) என்று வழங்கப்படும் பிரதேசத்தில் அன்று ஓடிய நதிகளின் வரிசை - தாலமியின் கூற்றுப்படி பின்வருமாறு:

(i) பிடாஸ்பஸ் (ii) சண்டபல் (iii) ஆட்ரிஸ் (iv) பிபாஸிஸ் (v) ஜாரோட்ராஸ்.

முன்னர் சிந்துநதி ஏழு கிளைநதிகளைத் தாங்கி நின்றதாகவும், அது 'சப்த சிந்து' என்ற பெயரால் குறிப்பிடப்பட்டதாகவும் தெரிகிறது. நெடுங்காலம் பின்னரே, இரண்டு நதிகள் விடப்பட்டு, ஐந்து நதிகளைச் சேர்ந்த இடமே பஞ்சாப் (Punjab) என்று வழங்கப்பட்டது (சப்த சிந்து–ஏழு கிளைநதிகளையுடைய சிந்துநதி; பஞ்ச்- ஐந்து; ஆப்-நதி. அதாவது ஐந்து நதிகளையுடைய பிரதேசம் பஞ்சாப்).

ஸ்வாத் நதியும் காபூல் நதியும் கூடும் இடத்தில் புஷ்கலபுரம் (Pushkalapura) எனும் பண்டைய நகரம் காணப்படுகிறது. அந் நகரம் கிரேக்கர்களால் பியூகலாடிஸ் (Peucalatis) என்று வழங்கப்பட்டது. இது இராமாயண காவியநாயகனுன இராமனின் இளைய சகோதரன் பரதனின் புதல்வர்கள் இருவருள் ஒருவர் பெயராகிய புஷ்கலன் (Pushkalan) என்பவன் பெயரால் நிர்மாணிக்கப்பட்டது. மற்ரெரு மகன் தக்ஷன் என்பவன் பெயரால் நிர்மாணிக்கப்பட்டது தக்ஷசீலம் (Taxila) ஆகும். இதைப் பாஹியான் (கி.பி. 399–414) என்பாரும், யுவான் சுவாங் (கி.பி 629–645) என்பாரும் குறிப்பிட்டுள்ளனர்.

—(**யுவான் சுவாங்:** பக்கம் 70-80; **பாஹியான்:** பக்கம் 53-55)

ஸ்வாத் நதியின் இருப்பிடம்: 35°·0'வ×75°·5'கி.

**5. இண்டஸ் நதி (சிந்தஸ்)** [River Indus]

சிந்தஸ் (குறிப்பு-1), இண்டஸ் இரண்டும் ஒரேநதியைக் குறிப்பிடுகிறது. இண்டஸ் நதியின் ஒரு கிளை ஹிந்துகுஷ் மலையிலும், மற்ரெரு கிளை மானசரோவர் ஏரிக்கருகிலும் உற்பத்தியாகின்றன. மற்றும் மேலே குறிப்பு-2 பார்க்கவும்.

சிந்து நதியின் இருப்பிடம்: 24°·30'வ×68°·0'கி.

**6. பிடாஸ்பஸ் நதி** (River Bidaspes)

இந் நதியின் நவீன பெயர் ஜீலம் (Jhelum). பிடாஸ்பஸ் என்ற சொல் வடமொழியில் விளங்கும் விதஸ்தா (Vitasta) என்பதன் கிரேக்க உச்சரிப்பே, இவ் விதஸ்தா என்பதே பிளினி, பெரிப்ளூஸ்

நூலாசிரியர், மெகஸ்தனிஸ் முதலானவர்களால் ஹிடாஸ்பஸ் (Hydaspus) என்று வழங்கப்பட்டது.

மாவீரர் அலெக்சாந்தர் (Alexander, the Great) (கி.மு.356-323) இந் நதியின் மேற்குக் கரைமீது முகாமிட்டு, போரஸ் (Porus) என்று வழங்கப்பட்ட புருஷோத்தமர் (Purushottama) என்பவரைப் போரில் வென்றார். அவ் வெற்றியின் சின்னமாக, போர்நடந்த இடத்திலேயே நிகையா (Nigaya) எனும் நகரத்தை நிர்மாணித்தார்.

இந் நதி காஷ்மீர் பள்ளத்தாக்கு முழுவதற்கும் நீர் அளிக்கிறது. இது அகேசினஸ் (Akesinas) அல்லது செனுப் (Chenab) எனும் நதியுடன் இணைகிறது. ஜீலம் நதி ஊலர் (Wuhlar) ஏரியில் உற்பத்தியாகிறது.

"அகிஸினஸ், ஹைபாஸிஸ் என்ற நதிகள் போக்குவரத்துக்கு ஏற்றதாக அமைந்துள்ளன."

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-7, பக்கம் 43)

ஜீலம் நதியின் இருப்பிடம்: 32°·35′வ × 73°·47′கி.

**7. சண்டபல் (Santapal)**

இது சந்திரபாகா (Chandrabaga) என்ற பெயரின் கிரேக்க உச்சரிப்பாகும். சந்திரபாகா நதிக்கும், ஜீலம் நதிக்கும் இடையிலேதான் கேகயநாடு (Kekaya Nadu) இருந்தது. வேதங்களில் இந் நதி அஸிக்னி (Asikni) என்று வழங்கப்படுகிறது. அஸிகினி என்பது கருநிறம் பொருந்தியது என்று பொருள்படும். அஸிகினி என்பதையே கிரேக்கர்கள் அகேசினி (Akesinis) என்று வழங்கினர். மெகஸ்தனிஸும் (கி.மு. 302-296) இப் பெயராலேயே வழங்கினார். இந் நதி மிகப் பெரிய நதியாகும்.

பிளினி (கி.பி. 23–79) இதைக் கண்டபா (Cantaba) என்றும், கான்டப்ரா (Cantabra) என்றும் இருவகையாக வழங்கினார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-5, பக்கம் 43)

சந்திரபாகா நதியின் நவீன பெயர் செனுப் (Chenab).

செனுப் நதியின் இருப்பிடம்: 32°·0′வ × 73°·14′கி.

**8. ஆட்ரிஸ் நதி (River Adris)**

ஐராவதி எனும் வட சொல்லின் கிரேக்க உச்சரிப்பே ஆட்ரிஸ் (Adris). இதை அர்ரியன் என்பார் (கி.பி. 90-180) ஹைடிரோடிஸ்

(Hydrotis) என்று வழங்கினர். ஸ்டிராபோ (கி.மு.64–கி.பி. 24) இதை ஹைடிரோடிஸ் (Hydrotis) என்று குறிப்பிட்டார்.

ஐராவதி (Irrawady) எனும் பெயரே இன்று ராவி (Ravi) என்று குறுகி வழங்கப்படுகிறது. ஐராவதியின் தெற்குப்பகுதியில் ஹரப்பா (Harappa) எனும் பண்டை நாகரிகம் விளங்கிய இடம் உள்ளது. இங்குப் பல அழிபாடுகள் அகழ்ந்தெடுக்கப்பட்டன. ஐராவதிநதி கைலாஸ் மலையில் உற்பத்தியாகிறது.

ராவிநதியின் இருப்பிடம்: 31°·0′வ×73°·30′கி.

ஹரப்பாவின் இருப்பிடம்: 30°·35′வ×72·°·58′கி.

**9. பிபாஸிஸ்நதி** (River Bibasis)

இது விபாஸா (Vibhasa) என்ற வடசொல்லின் கிரேக்க உச்சரிப்பே. பிளினி (கி.பி.23–79) இதை ஹைபாஸிஸ் (Hyphasis) என்றும், ஸ்டிராபோ (கி.மு.64-கி.பி.24), ஹைபானிஸ் (Hyphanis) என்றும் வழங்கினர்.

இந் நதி சதத்ரு (Sadatru) எனும் நதியுடன் இணைகிறது. சதத்ரு என்பதே நவீன சட்லெஜ் (Sutlej). சதத்ருவைக் கிரேக்கர்கள் ஹெஸிட்ராஸ் (Hesidras) என்று வழங்கினர்.

இவ்வைந்து நதிகளுடன் மற்றும் இரண்டுநதிகளும் சிந்துவுடன் இணைந்து 'சப்த சிந்து' (Sapta Sindhu) என்று வழங்கப்பட்டதாக வேதநூல்கள் கூறுகின்றன. அவ்விருநதிகளாவன: சரஸ்வதி, திரஷத்வதி. இவ்விரு நதிகளுக்கும் இடையே இருந்த நாடு பிரம்ம வர்த்தா (Brahma Vartha) என்று வழங்கப்பட்டது. இந்நதிகள் சதத்ரு என்று வழங்கப்பட்ட சட்லெஜ் (Sutlej) நதிக்குச் சற்றுத் தெற்கில் ஓடின. இப் பொழுது அந் நதிகள் கிடையா. கால அடைவில் மறைந்துவிட்டனபோலும்.

விபாஸாவின் நவீனபெயர் பீயாஸ் (Beas).

பீயாஸின் இருப்பிடம்: 32°·0′வ×76°·0′கி.

பீயாஸ்நதி கைலாஸமலையின் முற்பகுதியில் உற்பத்தியாகிறது, சிறிது தொலைவு சென்றதும் ஸட்லெஜ் நதியுடன் இணைகிறது. அவ்வாறு இணையும் இடம் சுல்டான்பூர் (Sultanpur) என்று வழங்கப் படுகிறது.

சரஸ்வதியின்(முன்) இருப்பிடம்: 28°·0′வ×71°·0′கி.

திரஷத்வதியின் (முன்) இருப்பிடம். 30°·0′வ×72°·0′கி.

ஆக சிந்து நதி முன்னர் ஏழு கிளை நதிகளைக் கொண்டிருந்தது என்றும், அதுவே சப்த-சிந்து என்று வழங்கப்பட்டதாகவும் தெரிகிறது (சப்த-ஏழு).

ஏழு கிளைநதிகளாவன: ஜீலம், செனுப், ராவி, பியாஸ், சட்லெஜ், சரஸ்வதி, திரஷத்வதி; இவற்றுள் இறுதியில் உள்ள இரு நதிகள் கால ஏட்டில் மறைந்துவிட்டன. இன்று இருப்பன ஐந்து நதிகளே.

சிந்து நதிக்கு ஏழு கழிமுகங்கள் இருந்தன என்று பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி.50-80) கூறியுள்ளார்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 38, பக்கம் 135)

முன்னர் சப்த-சிந்து என்று வழங்கப்பட்ட பிரதேசமே இன்று பஞ்சாப் (Punjab) என்று வழங்கப்படுகிறது. ஏழு நதிகள் ஐந்தாகக் குறைந்ததே இப் பெயர் மாற்றத்துக்குக் காரணம் ஆகும் (பஞ்ச்-ஐந்து; ஆப்-நதிகள்).



# 27. ஜாரோட்ராஸ்

| | |
|---|---|
| ஜாரோட்ராஸ் நதியின்[1] உற்பத்தியிடம் | ... 132°·0′கி × 36°·0′வ. |
| கோவா, இண்டஸ்[2] கூடுமிடம் | ... 124°·0′கி × 31°·′0வ. |
| கோவா, சுவாஸ்டஸ்[3] ” | ... 122°·30′கி × 31°·40′வ. |
| ஜாரோட்ராஸ், இண்டஸ்[4] ” | ... 124°·0′கி × 30°·0′வ. |
| ஜாரோட்ராஸ், பிடாஸ்பஸ்[5] ” | ... 125°·0′கி × 30°·0′வ. |
| ஜாரோட்ராஸ், பிபாஸிஸ்[6] ” | ... 131°·0′கி × 34°·0′வ. |
| பிடாஸ்பஸ், ஆட்ரிஸ்[7] ” | ... 126°·30′கி × 31°·30′வ. |
| பிடாஸ்பஸ், சண்டபல்[8] ” | ... 126°·40′கி × 32°·40′வ. |

### விளக்கவுரை

**(1) ஜாரோட்ராஸ் நதி** (River Zarodras)

இது நவீன சட்லெஜ் (Sutlej) நதியைக் குறிப்பிடுகிறது. சட்லெஜ்ஜின் முந்தைய பெயர் சதத்ரு (Sadatru). சதத்ரு அல்லது சதுத்ரி என்பதே, கிரேக்க உச்சரிப்பில் ஹெஸிட்ரஸ் (Hesidrus) என்று வழங்கப்பட்டது. ஹெஸிட்ரஸ் எனும் சொல்லே ஜாரோட்ராஸ் (Zarodras) என்று மருவிற்று.

சட்லெஜ் நதி மானசரோவர் ஏரியில் (Lake Manasarover) உற்பத்தியாகிறது. இவ் ஏரி கைலாஸ் மலைக்குத் தெற்கில் உள்ளது. இவ் ஏரியிலிருந்தே பிரம்மபுத்திரா நதி (Brahmaputra River) உற்பத்தியாகி வங்காள விரிகுடாவில் கலக்கிறது.

சட்லெஜ் நதியின் உற்பத்தியிடம்: 30°·8′வ × 81°·53′கி.

சட்லெஜ் நதியின் (மானசரோவர் ஏரி) இருப்பிடம்: 28°·25′வ × 72°·0′கி.

**பிளினி** (கி.பி. 23-79) சட்லெஜ் நதியை ஹெஸிட்ரஸ் (Hesidrus) என்றும், ஹைபாஸிஸ் (Hyphasis) என்றும் வழங்கினர்.

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-7, பக்கம் 43)

2. **கோவா, இண்டஸ் நதிகள் கூடுமிடம்** (The Confluence of Rivers Coa and Indus)

கோவா (Coa) என்பது காபூல் நதியைக் குறிப்பிடுகிறது. காபூல் நதி, கோபஸ், கோபன் என்றும் வழங்கப்பட்டது. சிந்து நதியும், காபூல் நதியும் கூடும் இடத்தில் அட்டாக் (Attock) என்னும் பெயர் கொண்ட நகரம் ஒன்று உள்ளது. இப் பகுதியில்தான் தக்ஷசீலம் (Taxila) என்னும் பண்டைப் பல்கலைக்கழகம் விளங்கிற்று.

அட்டாக்கின் இருப்பிடம் : 33°·55′வ × 72°·17′கி.

இவ்விடம் மலைப்பகுதியின் அருகில் உள்ள காரணத்தால், இங்கு நதியின் வேகம் மிகவும் பயங்கரமாக இருக்கும். ஆங்காங்குப் பெரும் பாறைகள்மீது நதி மோதிச் செல்வதால், சிலபொழுது சிறு பாறைகளும் நதியினூடே அடித்துச் செல்லப்படுகின்றன.

அட்டாக், பெஷாவருக்குத் தென்கிழக்கில் உள்ளது. பெஷாவரின் (Pehsawar) முந்தைய பெயர் புருஷபுரம் என்பதாகும்.

3. **கோவா, சுவாஸ்டஸ் நதிகள் கூடுமிடம்** (The Confluence of Coa and Suvasto Rivers)

கோவா (Coa) என்பது காபூல்நதியையும் (River Kabul), சுவாஸ்டஸ் (Suvasto) என்பது ஸ்வாத் (Swath) நதியையும் குறிப்பிடுவதை மேலே கண்டோம் அன்றோ? இங்கு இவ்விரு ஆறுகளும் கூடும் இடத்தைக் குறிப்பிடுகிறார் தாலமி.

இவ்விரு நதிகளும் கூடும் இடம் இன்று நௌஷீரா (Nausheera) என்று வழங்கப்படுகிறது. இது பெஷாவருக்குக் கிழக்கிலும், அட்டாக்கிற்கு வடமேற்கிலும் உள்ளது.

காபூல்நதியும், ஸ்வாத் நதியும் கூடுமிடம் : 34°·0′வ × 72°·2′கி.

இவ்விருநதிகளும் இயற்கையாக இன்று ஒன்றுசேராவிட்டாலும் அவற்றை ஒரு கால்வாய் மூலமாகச் சேருமாறு செய்துள்ளனர். நௌ-ஷீரா (Nau-Sheera)என்பதன் பொருள் புதியகடல். அங்குள்ள மக்கள் புதியதாக வெட்டிவிட்ட கால்வாய் ஒரு கடல்போன்று காட்சி அளித்ததன் காரணமாக, அப் பெயர் பெற்றதல்லவா ?

4. **ஜாரோட்ராஸ், இண்டஸ் நதிகள் கூடுமிடம்** (The Confluence of Rivers Zarodras and Indus)

ஜாரோட்ராஸ் (Zarodras) எனும் நதி சதத்ரு நதியின் கிரேக்க உச்சரிப்பு (மேலே குறிப்பு-1 பார்க்கவும்). இண்டஸ் (Indus) என்பது

சிந்துநதி. ஆக இவ்விரு நதிகளும் கூடுமிடம் நவீன மிதன்கோட் (Mithankot) ஊருக்கு 5 கிமீ. (3 மைல்கள்) தொலைவில் தெற்கில் உள்ளது.

மிதன்கோட் இருப்பிடம். 28°·39′வ × 70°·52′கி.

**5. ஜாரோட்ராஸ், பிடாஸ்பஸ் நதிகள் கூடுமிடம்** (The Confluence of Rivers Zarodras and Bidaspes)

ஜாரோட்ராஸ் (Zarodras) என்பது சட்லெஜ் (Sutlej). பிடாஸ்பஸ் (Bidaspes) என்பது நவீன ஜீலம் (Jhelum). ஆக இவ்விரு நதிகளும் கூடும் இடம் மிதன் கோட்டிற்கு 104 கிமீ. (65 மைல்) தொலைவில், வட கிழக்கில் உள்ளது. அலிபூருக்கு (Alipur) 12 கிமீ. (8 மைல்) கிழக்கில் உள்ளது.

சட்லெஜ் நதி, ஜீலம் நதியுடன் நேரிடையாகக் கூடுவதில்லை. ஜீலம் நதியும் செனுப் நதியும் கூடுகிறது. செனுப் நதி, சட்லெஜ் ஜுடன் கூடுகிறது. ஆக சட்லெஜ் நதியும், செனுப் நதியும் கூடும் இடமே இங்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

சட்லெஜ் நதியும், செனுப் நதியும் கூடுமிடம்:
29°·23′வ × 70°·57′கி.

**6. ஜாரோட்ராஸ், பிபாஸிஸ் நதிகள் கூ( )டம்** (The Confluence of Zarodras and Bibasis)

ஜாரோட்ராஸ் (Zarodras) என்பது சட்லெஜ் நதியையும் (River Sutlej), பிபாஸிஸ் (Bibasis) என்பது நவீன பியாஸையும் (Beas) குறிப்பிடுகிறது. விதஸ்தா (Vitasta) என்பதே பியாஸ் நதியின் பண்டைக்காலப் பெயர். விதஸ்தா என்பதே பியாஸ் என மருவிற்று.

சட்லெஜ் நதியும் பியாஸ் நதியும் கூடும் இடத்தில் இன்று குர்தாஸ்பூர் (Gurdaspur) மாவட்டம் உள்ளது. இவ்விடம் அமிர்த சரசுக்கு (Amritsar) வடக்கில் உள்ளது. குர்தாஸ்பூர் நகரத்துக்கும், அவ்விரு நதி சங்கமத்துக்கும் இடையே உள்ள தொலைவு 16 கிமீ. (10 மைல்கள்).

குர்தாஸ்பூரின் இருப்பிடம்: 32°·3′வ × 75°·27′கி.

**7. பிடாஸ்பஸ், ஆட்ரிஸ் நதிகள் கூடுமிடம்** (The Confluence of Rivers Bidaspes and Adris)

ஹிடாஸ்பஸ் என்னும் சொல்லே பிடாஸ்பஸ் (Bidaspes) என்று வழங்கப்பட்டது. பிடாஸ்பஸ் என்பது ஜீலம் (Jhelum) நதியைக் குறிப்பிடுகிறது. ஆட்ரிஸ் (Adris) எனும் சொல் ஹைடிரோடிஸ் (Hydrotis) என்பதன் குறுக்கமே. ஹைடிரோடிஸ் என்பது ஐரா வதியைக் குறிப்பிடுகிறது (Irrawady). ஆக இங்கு ஜீலம் நதியும், ஐராவதி நதியும் கூடும் இடத்தைக் குறிப்பிடுகிறார். ஐராவதியே நவீன ராவியாகும் (Ravi).

ஜீலம் நதி செனுப் நதியுடன் கூடி, ஜீலமும் செனுப்பும் சேர்ந்த நதியே சிந்துவுடன் கூடுகிறது. ராவிநதி செனுப் நதியுடன் கூடு கிறதே தவிர, நேரிடையாக ஜீலம் நதியுடன் கூடுவதில்லை.

ராவி நதியும், செனுப் நதியும் கூடுமிடம்: 29°·6′வ×71°·16′கி. இவ்விணைப்பு அகமத்பூர் (Ahmedpur) என்னும் இடத்தில் காணப் படுகிறது.

ஜீலம் நதி செனுப் நதியுடன் கூடும் இடத்தில் ஜங்மகியானு (Jhang Maghiana) என்ற ஊர் உள்ளது. இது ஜங் (Jhang) பகுதியைச் சேர்ந்தது.

ஜீலம் நதியும் செனுப் நதியும் கூடும் இடம்: 31°7′வ×72°·6′கி.

**8. பிடாஸ்பஸ், சண்டபல் நதிகள் கூடுமிடம்** (The Confluence. of Rivers Bidaspes and Santapal)

பிடாஸ்பஸ் என்பது ஜீலம் நதியையும் (Jhelum), சண்டபல் என்பது சந்திரபாகா (Chandra Baga) என்பதையும் குறிப்பிடு கிறது. சந்திரபாகா என்பது நவீன செனுப் (Chenab) ஆகும். ஆக இங்கு ஜீலம் நதியும், செனுப் நதியும் கூடும் இடம் கொடுக்கப் பட்டுள்ளது. இவ்விடம் ஜங் மாவட்டத்தில் ஜங்மகியானு என்னும் இடத்தினருகில் உள்ளது.

ஜீலம் நதியும், செனுப் நதியும் கூடும் இடம்: 31°·7′வ×72°·6′கி.

மேலே குறிப்பிட்ட நதிகளின் அட்டவணை அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. இதில் வேதகாலத்தில் அந் நதிகள் எவ்வாறு வழங்கப்பட்டன என்பதும், கிரேக்கர்களால் எவ்வாறு உச்சரிக்கப் பட்டன என்பதும், அவ்வவற்றின் நவீன பெயர் யாவை என்பதும் கொடுக்கப்பட்டுள்ளன.

| வேதத்தில் உள்ளபடி | கிரேக்க உச்சரிப்பு | நவீன பெயர் | ஆங்கில உச்சரிப்பு |
|---|---|---|---|
| சிந்து | இண்டஸ், சிண்டஸ் | சிந்து | Indus |
| கூபா | கோபஸ்; கோவா; கோபன் | காபூல் | Kabul |
| சுவஸ்து | சுவாஸ்டஸ் | ஸ்வாத் | Swat |
| விதஸ்தா | ஹிடாஸ்பஸ்; பிடாஸ்பஸ் | ஜீலம் | Jhelum |
| சந்திரபாகா | சண்டபல் காண்டபா | செனுப் | Chenab |
| ஐராவதி | ஆட்ரிஸ் ஹைட்ரோடிஸ் | ராவி | Ravi |
| விபாஸா | பிபாஸிஸ் ; ஹைபாஸிஸ் ; ஹைபானிஸ் | பீயாஸ் | Beas |
| சதத்ரு | ஜாரோட்ராஸ் ஹெஸிட்ரஸ் | சட்லெஜ் | Sutlej |
| சரஸ்வதி | | | மறைந்துவிட்டது |
| திரஷத்வதி | | | do |

# 28. மலையும் நதிக் கிளையும்

ஒயிந்தியான் மலைப் பக்கமாக[1]ச் சிந்து நதியினின்றும்[2] கிளை பிரிதல். ... 123°·0′கி × 29°·30′வ.

பிரிந்து செல்லும் கிளை நதியின் உற்பத்தியிடம். ... 127°·0′கி × 27°·0′வ.

அரக்கோசியா மலைப்பக்கமாகச் சிந்து நதியினின்றும் கிளை பிரிதல்[3]. ... 121°·30′கி × 27°·30′வ.

பரப்பனிசதே மலைப் பக்கமாகக் கோவா நதியினின்றும் கிளை பிரிதல்.[4] ... 121°·30′கி × 33°·30′வ.

பிரிந்துசெல்லும் கிளை நதியின் உற்பத்தியிடம்.[5] ... 115°·0′கி × 24°·30′வ.

| | |
|---|---|
| ஆர்பிடே மலைப் பக்கமாகச் சிந்து நதியினின்றும் கிளை பிரிதல்.[6] | ... 117°·0'கி ×25°·10'வ. |
| பரப்பனிசதே மலைப் பக்கமாகச் சிந்து நதியினின்றும் கிளை பிரிதல்.[7] | ... 124°'30'கி ×31°·20'வ. |
| சகாபா கழிமுகத்தில் சிந்து நதி கிளையாகப் பிரிந்து செல்லல்.[8] | ... 113°'40'கி ×23°·15'வ. |
| சகாபாவிலிருந்து சிந்துவரை.[9] | ... 111°'0'கி ×21°·30'வ. |
| கிரிசோன் கழிமுகத்தில் (பொன் வாயிலில்) சிந்து நதி கிளையாகப் பிரிந்து செல்லல்.[10] | ... 112°·30'கி ×22°·0'வ. |
| கரிபோன் கழிமுகத்தில் சிந்து நதி கிளையாகப் பிரிந்து செல்லல்[11] | ... 113°·30'கி ×22°·20'வ. |
| கரிபோன் முனையிலிருந்து சபாராவரை.[12] | ... 112°·30'கி ×21°·45'வ. |
| கரிபோன், சபலஸ்ஸா கழிமுகத்தில் கிளையாகப் பிரிந்து செல்லல்.[13] | ... 113°·0'கி ×21°·20'வ |
| கரிபோன் நதி, லோனிபரே முனையில் கிளையாகப் பிரிந்து செல்லல்.[14] | ... 113°·0'கி ×24°·0'வ. |

**1. ஒயிந்தியான் மலைப்பக்கமாக (Towards the Ouindian Mountain)**

இப் பகுதியில் சிந்துநதி கிளைகளாகப் பிரிந்து செல்வதும், எம் மலைப்பகுதி வழியாகப் பிரிந்து செல்கிறது என்பதும், எக் கழி முகத்தில் பிரிந்து செல்கிறது என்பதும் விளக்கப்பட்டுள்ளன.

இங்கு ஒயிந்தியானுக்குப்பதில் இமோடியன் (Emodean) என்ற சொல் இருந்திருக்க வேண்டும். காரணம் பகுதி 21-ல் ஏற்கெனவே ஒயிந்தியான் என்ற சொல் விந்திய மலையைக் குறிப்பிடுவதாகக் கொள்ளப்பட்டது. இங்கு விந்திய மலைக்கும் சிந்துநதி உற்பத்தி

யிடத்துக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. ஆகையால், இங்கு இமோடியன் எனப்படும் இமயமலை குறிப்பிடப்படுகிறது. ஏட்டி லிருந்து எழுதுபவர் மறதி காரணமாக மாற்றி எழுதியிருக்கக்கூடும்

சிந்துநதி இமயமலையில் கைலாயமலையில் மானசரோவர் ஏரிக்கு வடக்கில் (Lake Manasarovar) உற்பத்தியாகிப் பல சிறுகிளைகள் அதனுடன் சேர்ந்து, நங்காபர்வதம் வரை சென்று, அங்குத் தென் மேற்காகத் திரும்பி, நீண்ட தொலைவு தென்திசை நோக்கிச் சென்று இறுதியில் அராபியன் கடலுள் (Arabian Sea) விழுகிறது. நங்காபர்வதத்தின் அருகில் கில்கிட் (Gilgit) என்னும் சிற்றாறு சிந்துநதியுடன் இணைகிறது.

கில்கிட் ஆற்றின் இருப்பிடம்: 35°·55′வ × 74°·22′கி.

**2. சிந்துநதியினின்று கிளை பிரிதல்** (Branching from the River Indus).

சிந்துநதியின் கிளைநதிகள் எம்மலைப்பகுதியின் பக்கமாகப் பிரிதல் என்னும் செய்திகள் இங்குத் தரப்பட்டுள்ளன.

பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) ஆகியவர்கள் சிந்துவின் கிளைநதிகளைக் குறிப்பிட்டுள்ளனரேயன்றி, அவை எம்மலைகளினின்று உற்பத்தியாகின்றன என்பதையும், எம்மலைகளின் பக்கமாகச் சிந்துநதியினின்று பிரிந்து செல்கின்றன என்பதையும் குறிப்பிடவில்லை. தாலமி ஒருவரே இவ்வாற்றின் கிளைகளின் நுணுக்கங்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**3. அரக்கோசியா மலைப்பக்கமாகச் சிந்துநதிக் கிளை பிரிதல்** (The Tributary of Indus branching towards Arachosia)

அரக்கோசியா என்பது ஆப்கானிஸ்தானத்தைக் குறிப்பிடுகிறது. ஆப்கானிஸ்தானத்திலிருந்து இருநதிகள் சிந்துநதியுடன் கூடு கின்றன. அவை குர்ரம் (Kurram), கோமல் (Gomal) என்பவை. குர்ரம் நதி, காபூல் நதிக்குச் சற்றுத் தெற்கே உள்ளது. கோமல் நதி குர்ரம் நதிக்குத் தெற்கில் உள்ளது. இவை சிந்துநதியுடன் இணை யும் பகுதி டேரா இஸ்மாயில்கான் (Dehra Ismail Khan) எனும் பெயர்கொண்ட இடமாகும்.

கோமல் நதியின் இருப்பிடம்: 32°·3′வ × 70°·6′கி. இந்நதி பாயும் வழியில்தான் கோமல் பாஸ் (Gomal Pass) எனப்படும் இந்தியாவுள் மக்கள் புகும் மலை நுழைவுப் பாதை உள்ளது.

குர்ரம் நதியின் இருப்பிடம்: 33°·24′வ × 70°·30′கி.

குர்ரம் நதி கோகாட் மாவட்டம் (Gogat District) வழியே பாய்ந்து சிந்துநதியுடன் இணைகிறது.

அரக்கோசியா மலைகளின் இருப்பிடம்: 22°·0′வ × 70°·0′கி.

4. பரப்பனிசதே மலைப்பக்கமாகக் கோவா நதியினின்று கிளை பிரிதல் (Branching of the Coa Tributary towards Parapanisadae)

ஆப்கானிஸ்தானத்துக்கும் வடக்கேயுள்ள பகுதி பரப்பனிசதே. அங்கிருந்து உற்பத்தியாகும் நதியின் பெயர் காபூல். இந் நதியே கோவா என்று வழங்கப்பட்டதாக, அதிகாரம் 26-ல் குறிப்பிடப் பட்டுள்ளது. ஆக, காபூல் நதியே இங்குக் கிளைநதியாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. அக் கிளைநதி சிந்துநதியுடன் இணையும் பகுதியில் அட்டாக் என்னும் ஊர் உள்ளது (அதிகாரம் 27, குறிப்பு-2 காண்க.)

பரப்பனிசதே மலையின் (ஹிந்துகுஷ்) இருப்பிடம்:
36°·10′வ × 71°·30′கி.

காபூல் நதியின் இருப்பிடம்: 34°·17′வ × 70°·58′கி.

5. பிரிந்து செல்லும் கிளைநதியின் உற்பத்தியிடம் (The starting place or orign of the branching river)

இங்குப்பிரிந்து செல்லும்நதி கோவா எனப்பட்டது. கோவா (Coa) என்பது காபூல் (Kabul) நதியைக் குறிப்பிட்டது. இந் நதி ஹிந்துகுஷ் மலையில் (Hindukush) உற்பத்தியாகி, சிந்துநதியுடன் கலக்கிறது.

ஹிந்துகுஷ்மலையின் இருப்பிடம்: 36°·10′வ × 71°·30′கி.

6. ஆர்பிடே மலைப்பக்கமாகக் கிளைநதி பிரிதல் (Branching of the Tributary towards the Arbitae Mountains)

ஆர்பிஸ் (Arbis) நதி ஓடும் நாடு ஆர்பிடே (Arbitae). இந் நாடு சிந்துவின் மேற்குப் பகுதியில் பலுசிஸ்தானத்தில் உள்ளது. ஆர்பிடே மலை என்பது இன்று கிர்தார் மலைத் தொடர் (Kirthar Range) என்று வழங்கப்படுகிறது. ஆர்பிஸ் என்பது நவீன ஹாப் (Hab) நதியைக் குறிப்பிடும்.

பிளினி (கி.பி. 23-79) ஆர்பிடே நாட்டை, ஒரிதே (Oritae) என்று வழங்கினர். ஒரிதே இன்று மகரான் (Makran) என்று வழங்கப்படுகிறது.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-117, பக்கம் 65)

கிர்தார் மலையின் இருப்பிடம்; 26°·0′வ × 66°·0′கி.

**7. பரப்பனிசதே மலைப்பக்கமாகக் கிளைபிரிதல்** (Branching of the Tributary towards the Parapanisadae Mountains)

பரப்பனிசதே (Parapanisadae) எனப்படும் ம தொடர் ஹிந்துகுஷ் மலைத்தொடரைக் (Hindukush) குறிப்பிடும். இதைப் பிளினி (கி.பி. 23-79) குறிப்பிட்டுள்ளார்.

"ஹிமௌஸ் என்ற மலைத் தொடரும், ஹெமோடஸ் என்ற மலைத் தொடரும், பரப்பனஸஸ் என்ற மலைத் தொடரும், காகஸஸ் என்ற மலைத் தொடரும் இவையாவும் ஒன்றனுக்கொன்று தொடர்புகள் கொண்டு விளங்குகின்றன."

—(பிளினி : புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-32, பக்கம் 13)

இங்குக் குறிப்பிடப்படும் நதி காபூல் நதியுடன் இணையும் பஞ்ச்ஸ்ரீ (Panchsri) என்று வழங்கப்படும் நதியாகும். இந் நதி ஆப்கன்—துர்க்கிஸ்தானத்து மலையில் உற்பத்தியாகிச் சாரைக்கார் (Charikkar) எனுமிடத்தில் சிந்துநதியுடன் இணைகிறது.

பரப்பனிசதே மலை (ஹிந்துகுஷ்)யின் இருப்பிடம் :
36°·10′வ × 71°·30′கி.

பஞ்ச்ஸ்ரீ நதியின் இருப்பிடம் : 35°·0′வ × 70°·0′கி.

**8. சகாபா கழிமுகத்தில் கிளையாகப் பிரிந்து செல்லல்** (Branching of the Tributary in the Estuary of Sagapa)

சகாபா (Sagapa) என்பது சிந்து கழிமுகத்தில் விளங்கும் ஷாபந்தர் (Sha-Bandar) எனும் நவீன இடத்தைக் குறிப்பிடுகிறது.

இது ஹாப் (River Hab) எனும் நதியின் கழிமுகத்தையும் குறிப்பிடும். ஹாப் என்பது ஸ—ஆபா என்று இருந்திருக்கவேண்டும். ஸ—ஆபாவே கிரேக்க உச்சரிப்பில் சகாபா என்று விளங்கிற்று எனவும் கூறலாம்.

ஷாபந்தரின் இருப்பிடம் : 24°·10′வ × 67°·56′கி.

ஹாப் நதியின் இருப்பிடம் : 25°·0′வ × 67°·0′கி.

**9. சகாபாவிலிருந்து சிந்து வரை** (From Sagapa to Indus)

இது ஹாப் (Hab) நதியைக் குறிப்பிடுகிறது. மேலே குறிப்பு-8 பார்க்கவும்.

**10. கிரிசோன் கழிமுகத்தில் கிளையாகப் பிரிந்து செல்லல்** (Branching of the Tributary in the Estuary of Chrysone)

கிரிஸோன் (Chrysone) என்பது (Chrysum) என்ற சொல்லின் திரிபே. கிரிஸம் என்ற சொல்லுக்குப் பொன் என்பது பொருள்,

சிந்துநதிக் கழிமுகத்தில் கிரிசோன் நதி (பொன் நதி) ஓடிக் கொண்டிருத்தல் வேண்டும்.

இன்று சோன்மியானி (Sonmiyani) என்று வழங்கப்படும் இடம் முன்னர் ஸ்வர்ணத் தீவு என்று வழங்கப்பட்டது. சோன் (Son) என்ற சொல் ஸ்வர்ணம் (பொன்) என்பதன் திரிபே. ஆக சிந்துவின் கழிமுகம் அன்று சோன்மியானி உள்ள இடம் வரைப் பரந்து விளங்கியிருத்தல் வேண்டும்.

இத் தீவு பெரிப்ளூஸின் ஆசிரியர், பிளினி ஆகியவர்களாலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பிளினி (கி.பி. 23-79) பின்வருமாறு கூறுகிருர் ;

"இச் சிந்து நதிக் கழிமுகத்தில் கிரிஸே, ஆர்கிரே என்று வழங்கப்படும் தீவுகள் உள்ளன."

—(**பிளினி :** புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-115, பக்கம் 65)

கிரிஸோ என்ருல் பொன் என்று பொருள்; ஆர்கிரே என்பது ரஜதம் எனும் சொல்லினடியாகப் பிறந்தது. ரஜதம் என்ருல் வெள்ளி. ஆக, சிந்துநதிக் கழிமுகத்துக்கருகில் பொன்தீவு வெள்ளித் தீவுகள் இருந்தன. தீவுகள் என்பன திட்டுகள் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். பொன்தீவு இன்று சோன்மியானி எனும் இடத்தில் இருந்தது. ஸ்வர்ண-மியானி என்ருல் பொன் சுரங்கம் உள்ள இடம் என்பது பொருள்.

பெரிப்ளூஸின் ஆசிரியர் கூறுகிருர் :

"ஓரியா என்பது ஓரிடே (Oritae) என்று வழங்கப்பட்டது."

இது சோன்மியானிக் கடற்கரைப் பகுதியைக் குறிப்பிடுகிறது.

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 36, குறிப்பு-6, பக்கம் 131)

சோன்மியானியின் இருப்பிடம் : 25°·23′வ × 66°·35′கி.

## 11. கரிபோன் கழிமுகத்தில் கிளையாகப் பிரிதல் (Branching of the Tributary at the Estuary of Cariphon)

இங்குக் கரிபோன் (Cariphon) என்று கூறுவது ஏட்டில் ஏதோ தவறு நேர்ந்திருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. மேலே கிரிஸோன் (பொன்நதி) என்று கூறிவிட்டு, உடன் கரிபோன் நதி என்று கூறுவது இங்கேயும் அதே கிரிசோன் என்பதற்குப் பதிலாகக் கரிபோன் என்று எழுதியிருக்கக்கூடும். கரிபோன் பெயரை மற்ற வரலாற்றுசிரியர்கள் எவரும் குறிப்பிடவில்லை.

கிரிஸோன் எனும் நதி முன்பு ஒரு கிளை நதியாக இருந்திருக்க வேண்டும். கால அடைவில் இந் நதி மறைந்து போயிருக்கவேண்டும். இந் நதியின் வழியாக அடித்து வரப்படும் பொன்மணல் சோன்மி யானி (Sonmiyani) என்ற இடத்தில் சேமித்து வைக்கப்படுவதன் காரணமாக, அவ்விடம் ஸ்வர்ண—மியானி (பொன் சுரங்கம்) என்று வழங்கப்பட்டது போலும்.

**12. கிரிஸோன் (கரிபோன்) முனையிலிருந்து சபாராவரை (From Cariphon to Sabara)**

இங்குச் சபாரா என்பது இன்று ஷாபந்தர் (Shabandar) என்று வழங்கப்படுகிறது. இவ்விடம் சிந்து நதியின் கழிமுகத்தில் உள்ளது.

ஷாபந்தரின் இருப்பிடம்: 24°·10′வ × 67°·56′ கி.

**13. கரிபோன் (கிரிஸோன்) சபலஸ்ஸா கழிமுகத்தில் பிரிந்து செல்லல் (River Cariphon branching away at Sabalassa)**

சபலஸ்ஸா என்பது ஹாப் ஹாலா (Hab Hala) எனும் இரு இடங்களிலும் பாயும் சிந்துநதியின் கிளைநதியைக் குறிப்பிடுகிறது. ஹாப் என்பது ஆர்பிஸ் (Arbis). இதை முன்னரே குறிப்பு 6-ல் கண்டோம். ஹாலா (Hala) என்பது சிந்துநதிக் கழிமுகத்தில் பாயும் பல கிளை நதிகளுள் ஒன்றைக் குறிப்பிடுகிறது.

ஹாலாவின் இருப்பிடம்: 25°·49′வ × 68°·28′கி.

**14. கரிபோன் நதி லோனிபர் முனையில் கிளையாகப் பிரிந்து செல்லல் (River Cariphon branching at Cape Lonipar)**

லோனிபர் (Lonipar) என்பது இலவணம், இருணம், இரிணம் என்ற சொற்களில் மரூஉ. இச் சொற்கள் உவர் நிலத்தைக் குறிப்பிடும். ரான் ஆப் கட்ச் (Rann of Cutch) எனப்படும் சொல்லில் உள்ள ரான் (Rann) என்பதும் இருணம், இரிணம் என்பதன் திரிபே. அங்கு உப்பு மலைகள் உள்ளன. நிலமும் உவர் நிலமாக உள்ளது.

ரான் ஆப் கட்ச் என்ற இடத்தின் முனை கோரி க்ரீக் (Kori Creek) என்று வழங்கப்படுகிறது.

கோரி க்ரீக்கின் இருப்பிடம்: 23°·30′வ × 67°·34′கி.

---

# 29. கங்கே நதியின் கிளை நதிகள்-I

கங்கே நதியுடன்[1] இணையும் கிளை நதிகளுள் முக்கியமானவை :

| | | |
|---|---|---|
| டையமௌனுவின் உற்பத்தியிடம்[2] | ...134°·30′ கி. × 36°·0′ வ. | |
| கங்கே நதியின்[3] ,, | ...136°·0′ கி. × 37°·0′ வ. | |
| சரபோ நதியின்[4] ,, | ...140°·0′ கி. × 56°·0′ வ. | |
| டையமௌனுவும் கங்கேயும் கூடுமிடம்.[5] | ... 136°·30′ கி. × 32°·30′வ. | |
| சரபோ நதியும், கங்கேயும் கூடுமிடம்.[6] | ...136°·30′ கி. × 32°·30′வ. | |

### விளக்கவுரை

**1. கங்கே நதியுடன் இணையும் கிளை நதிகள்** (Tributaries of River Ganges)

கங்கே (Gange-s) என்பது கங்கையைக் குறிப்பிடுகிறது.

இப் பகுதியில் கங்கையுடன் இணையும் கிளை நதிகளைக் குறிப்பிடுகிறார்.

கங்கே (கங்கை) நதியின் இருப்பிடம்: 21°·30′ வ.×89°·30′ கி.

கங்கை நதியையும் அதன் கிளை நதிகளையும்பற்றித் தாலமி மிகக் குறைவான செய்திகளையே தந்துள்ளார். தாலமி இங்குக் குறிப்பிட்டது, கங்கையின் மூன்று கிளைகளை மட்டுமே.

மெகஸ்தனிஸ் (கி.மு. 302 - 296), பிளினி (கி.பி. 23 - 79) ஆகிய இருவரும் கங்கையின் 19 கிளை நதிகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

அர்ரியன் (Arrian) (கி. பி. 90 - 180) என்பார், மெகஸ்தனிஸ் கூறியதாக 17 கிளை நதிகளைக் குறிப்பிட்டுள்ளார். அக் கிளை நதிகளின் பெயர்கள் பின்வருமாறு :

1. கைனஸ் (Kainas)
2. எரனபோ (Erranaboas)
3. கஸ்ரனோ (Kosranos)
4. சோனு (Sona)
5. சிட்டோகிடிஸ் (Cittogitis)
6. சோலோமாடிஸ் (Solomatis)
7. கொண்டாகேடஸ் (Kondokates)
8. சாம்ப்ரோ (Sambro)

| | |
|---|---|
| 9. மோகன் (Moghan) | 10. ககௌந்திஸ் (Kakonthis) |
| 11. அண்டோமாடிஸ் (Andomatis) | 12. கோமனேஸஸ் (Komhaneses) |
| 13. அக்ரோனிஸ் (Agronais) | 14. ஓமாலிஸ் (Omalis) |
| 15. அமிஸ்திஸ் (Amysthis) | 16. ஆக்ஸிமேஜிஸ் (Oxymagis) |
| 17. இரணியஸிஸ் (Erranyasis) | |

இப் பதினேழு நதிகளுடன், பிளினி (கி. பி. 23 - 79) மற்றும் இரு நதிகளின் பெயர்களைச் சேர்த்து 19 ஆகக் கங்கைக் கிளை நதிகளைக் குறிப்பிட்டுள்ளார். பிளினி குறிப்பிடும் கூடுதலான இரு நதிகள் :

1. பிரிஞஸ் (Prinas)    2. ஜொமேனஸ் (Jomanes)

ஆக, பிளினி, அர்ரியன் குறிப்பிடும் கிளை நதிகளின் எண்ணிக்கையை விடத் தாலமி குறைவாகவே கொடுத்துள்ளார். ஆனல் கொடுத்திருக்கும் நதி, கிளை நதி ஆகியவற்றின் இருப்பிடங்களை டிக்கிரிக் கணக்கில் கொடுத்துள்ளார். அவ்வாறு டிகிரிக் கணக்கில் தீர்க்காம்சம், அட்சாம்சம் இரண்டையும் கொடுத்தவர்களுள் தாலமியே முதன்மையானவர்.

மேற் குறிப்பிட்ட நதிகளுள்:

கைனஸ் (Kainas) — கர்ணவதி நதி (Karnavathi) யையும்,

சோண (Sona) — ஸ்வர்ணவதி நதி (Swarnavathi) யையும்,

கொண்டாகேடஸ் (Kondokates) — கண்டகி நதி (Ghantaki) யையும்,

மோகன் (Moghan)—மோகன நதி (Mohana) யையும்,

அக்ரோனிஸ் (Agoranis)—குக்ரி நதி (Gugri) யையும்,

பிரிஞஸ் (Prinas) — புண்ணிய நதி (Punya) யையும்,

ஜொமேனஸ் (Jomanes) — யமுனை நதி (Jumna) யையும்

குறிப்பிடுகின்றன.

பெரிப்ளூஸின் நூலாசிரியர் (கி.பி. 50 - 80) கூறுகிருர் :

"கங்கைக் கரையிலிருந்து எடுத்துவரப்படும் சடாமாஞ்சியும் உள்நாட்டிலிருந்து வரும் இலவங்கபத்ரியும்.....ஆகிய இவை யாவும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன."

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 56, குறிப்பு - 25, பக்கம் 233) மற்றும் அதிகாரம் 18, குறிப்பு-1 பார்க்கவும்.

**2. டையமௌனு நதியின் உற்பத்தியிடம்** (The starting point of River Diamouna)

யமுனை நதி (Jamuna) என்பதையே டையமௌனு என்று கிரேக்க மொழியில் உச்சரிக்கிருர். இந் நதி காமெட் மலையில் (Gamet) உற்பத்தியாகிறது. இம் மலை கைலாஸ் மலைத் தொடரைச் (Kailas Range) சேர்ந்ததாகும். யமுனை நதி, டெல்லி, ஆக்ரா நகரங்களின் வழியே பாய்ந்து, கங்கையுடன் அலகாபாது (Allahabad) என்னுமிடத்தில் கூடுகிறது. அலகாபாது என்னும் இடம் 'திரிவேணி சங்கமம்' என்றும் வழங்கப்படுகிறது. அவ் விடத்தில் மூன்று நதிகள் கூடுவதாகக் கூறப்படுகிறது. 1. யமுனை 2. கங்கை 3. சரஸ்வதி என்ற நதி பூமிக்கடியிலிருந்து உற்பத்தி யாகி, கங்கை, யமுனை, சேருமிடத்தில் இணைகிறது என்று வேதங் களும், புராணங்களும் கூறுகின்றன.

யமுனை நதியின் இருப்பிடம் : 24°·25′ வ. × 89°·50′ கி.

யமுனை நதியைப் பிளினி (கி.பி. 23 - 79) என்பார், ஜொமே னஸ் (Jomanes) என்று வழங்குகிருர். (**பிளினி : புத்தகம் VI, அதிகாரம் : 19**). இந் நதி மதுரா, கிரிசோப்ரா வழியாகப் பாய்ந் தது என்றும் கூறுகிருர். கிரிசோப்ரா (Chrysobra) என்ற சொல் கிருஷ்ணுபுரம் என்பதைக் குறிப்பிடுகிறது; அவ்விடம் கிருஷ்ணன் யமுனை நதியில் காளிங்கன் என்னும் நச்சுப் பாம்பின்மீது நின்று நடனம் ஆடி அதைக் கொன்ற இடமாகும். யமுனைக்கே காளி நதி என்ற மறு பெயரும் உண்டு.

**3. கங்கே நதியின் உற்பத்தியிடம்** (The Starting point of River Ganges)

கங்கை நதி (Ganges River) நந்தாதேவிமலையில் (Nandadevi Mountain) உற்பத்தியாகிறது. இமாலய மலைத் தொடரைச் சார்ந் தது நந்தாதேவி மலை. இது ஹரித்வாரம், கனோஜ், பெரெய்லி வழி யாகப் பாய்ந்து, யமுனையுடன் சங்கமம் செய்து, பெனரஸ் (Benaras) வழியாகச் சென்று, கழிமுகத்தில் பத்மா நதி (River Padma) எனப் பெயர் பெற்றுக் கடலில் கலக்கிறது. வங்காள விரிகுடா முன்னர் காஞ்சடிக் சைனஸ் (Gangetic Sinus) என்று வழங்கப்பட்டது,

கங்கை நதி ஒரு புண்ணிய நதியாக ஹிந்துக்களால் கருதப்படு கிறது.

கங்கைக் கரைமீது இன்று புகழ்பெற்று விளங்கும் அலகாபாது பெனரஸ் (காசி), பாட்னு நகரங்கள் முறையே அக் காலத்தில்

பிரயாகை (Prayag), காசி (Kasi), பாடலிபுத்திரம் (Pataliputra) என்ற பெயர்களுடன் புகழ் பெற்று விளங்கின.

கங்கை நதியின் இருப்பிடம்: 21°·30′வ×89°30′ கி.

4. **சரபோ நதியின் உற்பத்தியிடம்** (The starting point of River Sarabo)

இந் நதி சரயு (Sarayu) என்பதன் திரிபே ஆகும். இது கோசல நாட்டில் பாயும் நதியாகும். இதன் நவீன பெயர் கோக்ரா (Gogra).

கோக்ரா நதி மானசரோவர் ஏரிக்குத் தெற்கில் உற்பத்தியாகி, பைசாபாத் வழியாகப் பாய்ந்து, பாட்னுவுக்கு முன்னர் உள்ள சாப்ரா (Chapra) என்னுமிடத்தில் கங்கையுடன் இணைகிறது.

கோக்ரா நதியின் இருப்பிடம்: 27°·30′வ×81°·20′கி.

5. **டையமௌனுவும் கங்கேயும் இணையும் இடம்** (The Confluence of Gange-s and Diamouna)

யமுனையும் (Yamuna) கங்கையும் கூடும் இடமான அலகாபாது அல்லது பிரயாக் எனப்படும் இடத்தைக் குறிப்பிடுகிருர். இது திரிவேணி சங்கமம் எனப்படும். (மேலே டையமௌனு உற்பத்தி யிடம்—குறிப்பு-2 காண்க.) இச் சங்கமத்தைப் பிற்காலச் சீனப் பயணிகள் பாஹியான் (கி.பி. 399-414), யுவான் சுவாங் (கி.பி. 629-645) குறிப்பிட்டுள்ளனர். இவ்விடத்தில் ஹர்ஷப் பேரரசர் (கி.பி. 606-647) ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை தம் பொருள் யாவற்றையும் தானமாக மக்களுக்கு வழங்கினுர் என்று யுவான் சுவாங் கூறியுள்ளார். —(**யுவான் சுவாங்**: பக்கம் 217.)

அலகாபாத்தின் இருப்பிடம்: 25°·28′வ×81°·54′கி.

6. **சரபோ நதியும் கங்கேயும் கூடுமிடம்** (The Confluence of River Sarabo and Gange-s)

**சரபோ நதியும், கங்கேயும் கூடும் இடம்**

கோக்ரா (Gogra) எனப்படும் சரபோ நதியும், கங்கை நதியும் பாட்னுவுக்கு (Patna) முன்னர் உள்ள சாப்ரா (Chapra) என்னும் இடத்தில் கூடுகின்றன. சரபோ என்பதே பழைய சரயு நதியாகும்.

கோக்ராவும், கங்கையும் கூடுமிடம்: 25°·47′ வ×84°·47′ கி.

வட நாட்டில் மூன்று நதிகள் கூடும் இடம் திரிவேணி சங்கமம் என்று வழங்கப்படும். (திரி-மூன்று; வேணி-ஆறு; சங்கமம்-கூடுதல்.) தமிழ் நாட்டில் அவ்வாறு மூன்று நதிகள் கூடுமிடம் முக்கூடல் என்று வழங்கப்படுகிறது. திருநெல்வேலி மாவட்டத்தில் மூன்று ஆறுகள் கூடும் இடம் முக்கூடல் என்று இன்றும் வழங்கப் படுகிறது. 'முக்கூடற்பள்ளு' என்ற தமிழ் இலக்கியம் அம் முக்கூடல் இடத்தைப் போற்றுகிறது. இப் பள்ளு என்னுயினுப் புலவர் என்பவரால் இயற்றப்பட்டது.

---

# 30. கங்கே நதியின் கிளை நதிகள்-II

| | |
|---|---|
| *ஒயிந்தியான்[1] மலைப்பக்கமாக, கங்கே நதி,[2] சோன் நதி,[3] கழிமுகத்துக் கருகில் கிளையாகப் பிரிதல்.* | ... 136°·10′கி × 31°·30′வ. |
| *கிளை நதியின் உற்பத்தியிடம்.* | ... 131°·0′கி × 28°·0′வ. |
| *ஆக்ஸென்டான் மலைத்தொடர்[4] பக்கமாகக் கங்கை கிளை பிரிதல்.* | ... 142°·0′கி × 28°·0′வ. |
| *கிளை நதியின் உற்பத்தியிடம்.* | ... 137°·0′கி × 23°·0′வ. |
| *காம்பிஸான் கழிமுகத்தில்[5] கங்கை கிளை பிரிதல்.* | .... 146°·0′கி × 22°·0′வ. |
| *ஆன்டிபோல் கழிமுகத்தில்[6] கங்கை கிளை பிரிதல்.* | ... 146°·30′கி × 21°·0′வ. |
| *காம்பிஸான் நதியிலிருந்து, மெகா கழிமுகத்திற்குக் கிளைபிரிதல்.[7]* | ... 145°·0′கி × 20°·1′வ. |
| *மெகா கழிமுகத்திலிருந்து, காம்பேரிகான் கழிமுகத்துக்குக் கிளை பிரிதல்[8].* | ... 145°·30′கி × 19°·30′வ. |

## விளக்கவுரை

**1. ஒயிந்தியான் மலை** (Ouindian Mountain)

ஒயிந்தியான் மலை என்பது விந்திய மலை (Vindhya Mountains) யைக் குறிப்பிடுகிறது. சோன் நதி (ஸ்வர்ண நதி) விந்தியமலைக் கருகில் கங்கையிலிருந்து பிரிந்து செல்கிறதென்று கூறுகிருர்.

விந்திய மலையின் இருப்பிடம்: 22°·30′வ × 76°·0′கி.

**2. கங்கே நதி** (River Gange-s)

கங்கை நதி நந்தா தேவி மலையில் (Nandadevi Mountain) உற்பத்தியாகி, வங்காள விரிகுடாவில் கலக்கிறது. மற்றும் அதிகாரம் 18, குறிப்பு-1; அதிகாரம் 29, குறிப்பு-3 பார்க்கவும்.

கங்கை நதியின் இருப்பிடம்: 21°·30′வ×89°·30′கி.

**3. சோன் நதி** (River Son)

சோன் (Son) என்பது சோணை அல்லது ஸ்வர்ணவதி என்பதன் குறுக்கமே. ஒயிந்தியான் என்பது விந்திய மலையைக் குறிப்பிடும்.

சோன் நதி மைகலா மலைத்தொடரில் (Maikala Range) உற்பத்தியாகி, பாட்னுவுக்கருகில் கங்கையுடன் இணைகிறது.

சோன் நதியின் இருப்பிடம்: 25°·0′வ×84°·0′கி.

**4. ஆக்ஸென்டான் மலைக்கருகில் கங்கே கிளை பிரிதல்** (The Tributary of Ganges branches off near Occenton Mountain)

ஆக்ஸென்டான் என்னும் மலைத்தொடர், நவீன மைகலா மலைத்தொடரைக் (Maikala Range) குறிப்பிடுகிறது. மற்றும் அதிகாரம் 24, குறிப்பு-1 பார்க்கவும்.

இது மேற்கு மலைத்தொடரைக் குறிப்பதாக ஆக்ஸென்டான் என்ற சொல் காணப்படுகிறது. ஆனல், மேற்கில் உள்ள மலை என்றே இதற்குப் பொருள் கொள்ளவேண்டும்.

இங்கு விந்தியமலையில் உற்பத்தியாகும் நதி சாம்பல் நதி (Chambal River) ஆகும். சாம்பல் நதி யமுனையுடன் கலக்கிறது.

சாம்பல் நதியின் இருப்பிடம்: 24°·48′வ×75°·20′கி.

**5. காம்பிஸான் கழிமுகத்தில் கங்கே பிரிதல்** (River Gange-s branching off at the Estuary of Campison)

காம்பிஸான் என்பது சுந்தரவனம் (Sundarbans) எனப்படும் இடத்தின் கிரேக்க உச்சரிப்பாகக் கருதப்படுகிறது. இக் கழிமுகத்தில் கங்கையின் பல கிளைகள் கழிமுகங்களை ஏற்படுத்திக்கொண்டு, வங்காள விரிகுடாவில் கலக்கின்றன.

காம்பிஸான் இருப்பிடம்: 22°·0′ வ×89°·0′கி.

**6. ஆண்டிபோல் கழிமுகத்தில் கங்கே கிளை பிரிதல் (Ganges branching off at the Estuary of Antipole)**

ஆண்டிபோல் (Antipole) என்பது ஆனந்தபூர் நதியைக் (River Anandpur) குறிப்பிடுகிறது. இது ஹூக்ளி (Hoogly River) நதிக் கழிமுகத்தில் வங்காள விரிகுடாவில் கலக்கிறது. இந் நதி மிதுனபுரி (Midnapore) வழியாகப் பாய்கிறது.

ஆனந்தபூர் நதியின் இருப்பிடம்: 22°·5′வ × 88°·0′ கி.

**7. காம்பிஸானிலிருந்து மெகா கழிமுகத்துக்குக் கிளை பிரிதல் (Branching of the Tributary Mega from Campison)**

மெகா (Mega) என்பது மேக்மா (Megma) நதியைக் குறிப்பிடுகிறது. மேக்மா என்பது பிரமபுத்ராவுடன் திப்பெராவில், சந்த்பூர் (Chandpur) எனும் இடத்தில் இணைகிறது. மேக்மா என்பது குறுகி மெகா எனப்பட்டது.

மேக்மா நதி இருப்பிடம்: 23°·5′வ × 90°·40′கி.

**8. மெகா கழிமுகத்திலிருந்து காம்பேரிகான் கழிமுகத்துக்குக் கிளை பிரிதல் (Branching of the Tributary Megma to the Estuary of Combericon)**

மெகா (Mega) என்பது மேக்மா (Megma) என்பதன் குறுக்கமே என்பதைக் குறிப்பு 7-ல் கண்டோம். காம்பேரிகான் என்பது பேகர்கஞ்ச் (Backergunge) என்பதைக் குறிப்பிடவும் கூடும். இவ்விடத்தில் பல தீவுகள் உள்ளன. அத் தீவுகள் உள்ள கடலிலே தான் மேக்மா நதி கலக்கிறது.

பேகர்கஞ்ச் இருப்பிடம்: 22°·29′வ × 90°·18′கி.

இதுவரை தாலமி கங்கை நதியையும், அதன் கிளை நதிகளையும் பற்றிய குறிப்புகளைக் கொடுத்து வந்தார்.

# 31. நம்மதூஸ்

மற்ற நதிகள் பற்றிய விவரங்களும் இருப்பிடங்களும் கீழே தரப்படுகின்றன :

| | |
|---|---|
| ஒயிந்தியான் மலைத் தொடரில் நம்மதூஸ் ஆற்றின் உற்பத்தியிடம்.[1] | ... 127°·0′கி × 26°·30′வ. |
| சரிபலா என்னுமிடத்தில் அந்த ஆறு திருப்பமடைதல்.[2] | .... 116°·30′கி × 22°· 0′வ. |
| மோபிஸ் ஆற்றுடன் இணைதல்.[3] | ... 115°· 0′கி × 18°·30′வ. |

## விளக்கவுரை

**1. ஒயிந்தியான் மலைத்தொடரில் நம்மதூஸ் ஆற்றின் உற்பத்தி யிடம்** (The starting point of River Nammadus in the Ouindian Mountains)

ஒயிந்தியான் மலை என்பது விந்திய மலையைக் குறிப்பிடுகிறது. அதிகாரம் 21, குறிப்பு-1 காண்க.

நம்மதூஸ் (Nammadus) என்பது நர்மதை ஆற்றைக் (River Narmada) குறிப்பிடுகிறது. (அதிகாரம் 5, குறிப்பு-3). நர்மதை ஆறு மைகலா மலைத் தொடரில் உற்பத்தியாகி, மேற்கு முகமாகப் பாய்ந்து, அராபியன் கடலில் விழுகிறது. அதன் ஆற்றுக்கழி முகத்தில்தான் பாருகச்சா (Barugachcha) எனும் துறைமுகம் விளங்கிற்று. பிருகு-கச்சா எனுஞ் சொற்களே பாருகச்சா ஆயிற்று. அப் பாருகச்சாவே, பாரிகாஸா (Barygaza) என்று விளங்கி, பின்னர் அதுவே இன்று புரோச் (Broach) என்று வழங்கப்பட்டு வருகிறது.

இத் துறைமுகம் மெகஸ்தனிஸ் (கி.மு. 302 - 296), பிளினி (கி.பி. 23 - 79), பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி. பி. 50 - 80), அர்ரியன் (கி.பி. 90 - 180) ஆகியவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

பிளினி (கி.பி. 23 – 79) பின் வருமாறு கூறுகிறூர்:

"இந்த முந்நூறு நகரங்களையும் கடந்து சென்றுல் பிரன்காசி எனும் துறைமுகம் காணப்படும்."

—(பிளினி : புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு -53, பக்கம் 55)

பிரன்காசி (Brencosi) என்பது பாரிகாசாவைக் குறிப்பிடும் சொல்லாகும்.

பெரிப்ளூஸின் நூலாசிரியர் (கி.பி. 50 - 80) பின்வருமாறு கூறுகிறார்:

"இந்த நதியின் பெயர்தான் நம்மதூஸ்."

(—பெரிப்ளூஸ் : அதிகாரம் 42, குறிப்பு-5, பக்கம் 164)

"பஞ்சாலான ஆடைகள் பெருமளவில் ஏற்றுமதி செய்யப் பாரிகாசாவிற்குக் கொண்டுவரப்படுகின்றன."

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 41, குறிப்பு-2, பக்கம் 15)

பாரிகாஸாவின் இருப்பிடம் : 21°·41 வ × 73°·1′ கி.

நம்மதூஸ் (நர்மதை) இருப்பிடம் : 21°·38′ வ × 74°·0′ கி.

**2. சரிபாலா எனுமிடத்தில் ஆறு திருப்பமடைதல்** (The River making a turn at Saripala)

சரிபாலா இன்று பேரகாட் (Beraghat) என்று குறிப்பிடப்படுகிறது. இப் பேரகாட், ஜபல்பூருக்குத் தென்மேற்கில் 15 மைல்கள் (24 கிமீ.) தொலைவில் உள்ளது. இவ்விடம் மார்பிள் ராக் (Marble Rock) என்றும் வழங்கப்படுகிறது.

பேரகாட்டின் இருப்பிடம் : 23°·10′ வ × 79°·59′ கி.

**3. மோபிஸ் ஆற்றுடன் இணைதல்** (Confluence with the River Mopis)

மோபிஸ் நதி நவீன மாஹி நதியைக் (River Mahe) குறிப்பிடுகிறது. (அதிகாரம் 4, குறிப்பு-2 பார்க்கவும்). இது காம்பே வளைகுடாவில் விழுகிறது. மாஹி நதியின் கழிமுகம் நர்மதை ஆற்றின் கழிமுகத்துக்கு 48 கிமீ. (30 மைல்கள்) வடக்கே உள்ளது.

மாஹி நதி நர்மதை ஆற்றுடன் கூடுவதில்லை. மாஹேஸ்வர் (Maheswar) என்னுமிடத்தில் ஓர் ஆறு கூடுகிறது. தாலமி காலத்தில் அவ்வாறு இருந்திருக்கலாம். நதிகள் அடிக்கடி தங்கள் போக்குகளை மாற்றிக்கொள்கின்றனவல்லவா?

மாஹி நதியின் இருப்பிடம் : 22°·20′ வ × 73°·5′ கி.
மாஹேஸ்வர் இருப்பிடம் : 22°·11′ வ × 75°·37′ கி.

# 32. நாறு கௌறு

ஒயிந்தியான் மலையில்[1] புறப்படும் நாறு கௌறு
நதியின் உற்பத்தியிடம்.[2] ... 132°·0′கி × 26°·30′வ.
அந்நதி கோவாரிஸ்,[3] பிண்டா[4]
என இரு கிளைகளாகப் பிரியு
மிடம். ... 114°·0′கி × 16°·0′வ.

## விளக்கவுரை

**1. ஒயிந்தியான் மலை** (Ouindian Mountains)

இது விந்திய மலையைக் குறிப்பிடுகிறது (அதிகாரம் 21, குறிப்பு-1 பார்க்கவும்). இம் மலையில் கோதாவரி நதியின் கிளை நதிகள் உற்பத்தியாகின்றன.

விந்திய மலையின் இருப்பிடம்: 22°·30′வ × 76°·0′கி.

**2. நாறு கௌறு நதியின் உற்பத்தியிடம்** (The starting point of River Nana Gouna)

நாறு கௌறு என்பது கங்கவல்லி (Gangavalli) என வழங்கப்படும் வெயின் கங்கா (Wain Ganga) எனும் நதியைக் குறிப்பிடுகிறது. விந்திய மலையில் ஒரு பகுதியாக விளங்கும் மஹாதேவ மலையில் (Mahadeo Hills) வெயின் கங்கா உற்பத்தியாகிறது.

வெயின் கங்காவின் இருப்பிடம்: 22°·24′வ × 78°·0′கி.

**3. கோவாரிஸ்** (Govaris)

கோவாரிஸ் (Govaris) என்னும் சொல் கோதாவரி நதியைக் (River Godavari) குறிப்பிடுகிறது. கோதாவரி நதி பல இலக்கியங்களிலும் வேதங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

"கவியெனக் கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்"—(**கம்பராமாயணம்**: ஆரண்ய, சூர்ப்பணகை. 1)

கோதாவரி நதியின் இருப்பிடம்: 16°·35′வ × 82°·15′கி.

**4. பிண்டா** (Pinda)

பிண்டா (Pinda) என்பது வர்தா (Wardha) நதியைக் குறிப்பிடுகிறது. வெயின் கங்கா (Wain Ganga) எனப்படும் ஆறு கோதாவரியுடன் கூடுமிடம் சியோனி (Seoni) ஆகும். பென்கங்காவும் (Pen Ganga) வர்தாவும் கூடுமிடம் சந்தா (Chanda) அருகில் உள்ளது. வர்தா, பென்கங்கா, கோதாவரியுடன் கூடும் இடத்தையே

தாலமி குறிப்பிடுகிறார். இம் மூன்று நதிகளும் கூடும் இடம் முக்கூடல்.

பென்கங்கா, வர்தா, கோதாவரி
நதிகள் கூடுமிடம் : 19°·53′ வ × 79°·20′ கி.

---

# 33. பெடிகோவின் ஆறு

பெடிகோ மலைத் தொடரி[1] லிருந்து
புறப்படும் ஆற்றின் சூடோஸ்
தாமஸ் கழிமுகம்[2] ... 123°· 0′ கி × 21°· 0′ வ.
அவ்வாற்றின் இருப்பிடம்[3] (பேரிஸ்)... 118°·30′ கி × 17°·15′ வ.

## விளக்கவுரை

**1. பெடிகோ மலைத்தொடர்** (Betigo Mountain)

இது பொதியில் மலையைக் (Podiyil) குறிப்பிடுகிறதென்று அதிகாரம் 22, குறிப்பு 1-ல் குறிப்பிடப்பட்டுள்ளது. சூடோஸ்தாமஸ் (Pseudosthomas) என்பது பொய்வாயில்.

பொதியில் மலையில் அகத்தியர் வாழ்ந்து வந்தார். அது குடகு மலையையும் குறிப்பிடக் கூடும். குடகு மலையிலிருந்து காவேரி நதி உற்பத்தியாகிறது. அகஸ்தியர் மலை என்பது அடைசத்ரான் (Adaisathron) என்று வழங்கப்பட்டது. (அதிகாரம் 23, குறிப்பு-1)

இப் பகுதிக்கு அடுத்தபடியாகப் பேரிஸ் என்னும் நதியைக் குறிப்பிடுவதால், இங்குப் பெடிகோ என்பது பொதியில் மலையைக் பிடுகிறது.

பொதியில் மலையின் இருப்பிடம் : 8°·58′வ × 77°·0′கி.

**2. ஆற்றின் சூடோஸ்தாமஸ் கழிமுகம்** (Pseudosthomas of the River)

ஆறு என்பது இங்குப் பேரியாறு (Periyar) என்று குறிப்பிடப் படுகிறது. பேரியாற்றங்கரையில் வஞ்சிமாநகரம் (Vanji) இருந்தது. அது சேரநாட்டுத் தலைநகரமாக விளங்கிற்று. பேரியாறு என்பதே நவீன பெரியாறு ஆகும்.

பேரியாறு பள்ளிவாசல் என்னுமிடத்தில் திருப்பமடைகிறது.

பள்ளி வாசலின் இருப்பிடம் : 9°·55′ வ × 77°·0′ கி.

பேரியாறு, பெரியாறு ஏரியில் உற்பத்தியாகி, மேற்கு முக மாகச் சென்று அராபியன் கடலில் விழுகிறது. பெரியாறு ஏரி ஏலக்காய் மலையில் உள்ளது. மற்றும் பேரிஸ் நதியின் கழிமுகம் அதிகாரம் 8, குறிப்பு 11-ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

பேரியாற்றின் இருப்பிடம்: 10°·0′வ×77°·0′கி.

**3. பேரியாற்றின் இருப்பிடம்** (The location of River Beris)

பெரியாறு ஏலக்காய் மலையில் உற்பத்தியாகி (Cardamon Hills) அராபியன் கடலில் விழுகிறது. அதன் கழிமுகத்தில் முன்பு முசிறி (Muziris) இருந்தது. அது அழிந்த பிறகு, கொடுங்கலூர் துறை முகமாக ஆயிற்று. கொடுங்கலூர் என்பதே நவீன கிரேங்கனூர் (Cranganore). ஆற்றின் உள்பகுதியில் வஞ்சிமாநகர் இருந்தது. அவ் வஞ்சியே முன்னர் சேரர்களின் தலைநகரமாயிருந்தது. வஞ்சிமா நகர்க்கருகில் கரூர் இருந்தது. அது கரூர்-வஞ்சி என்றும் வழங்கப் பட்டது. (**சேரன்வஞ்சி:** டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங் கார், M.A.)

பேரியாற்றின் இருப்பிடம்: 10°·0′வ×77°·0′கி.

பேரியாற்றின் கழிமுக இருப்பிடம்: 10°·7′வ×76°·15′கி.

# 34. பேரிஸ், சோலன்

*பேரிஸ் நதி பெடிகோ மலையில் உற்பத்தியாகும் இடம்[1].* ... 127°·0′கி×26°·30′வ.

*பெடிகோ மலைத்தொடரில் புறப்படும் சோலன் நதியின் உற்பத்தியிடம்[2]* ... 127°·0′கி×20°·30′வ.

*சோலன் நதி திருப்பமுறும் இடம்[3]* ... 124°·0′கி×18°· 0′வ.

**விளக்கவுரை**

**1. பேரிஸ் நதி பெடிகோ மலையில் உற்பத்தியாகும் இடம்** (Source of the River Beris in the Betigo Mountains)

பேரிஸ் (Beris) பேரியாற்றைக் குறிப்பிடும். அக்காலத்தில் பொதியில் மலை மிகவும் புகழ் பெற்றிருந்ததால், அம் மலையிலே பல

ஆறுகள் உற்பத்தியாயின என்று கொள்ளப்பட்டது. ஆனை மலை, பழனி மலை, ஏலக்காய் மலை, குடகு மலை, நீலமலை எனப் பல மலைகள் இருந்தும், அகஸ்தியர் வாழ்ந்த மலையே பெரும் புகழ் பெற்றிருந்தது. இதுவே பல நதிகளுக்கு உற்பத்தியிடமாக அக்கால மக்களால் கொள்ளப்பட்டது. அதுவும் கிரேக்கர்கள் மிகவும் புகழ் பெற்ற மலையையோ அல்லது ஆற்றையோதான் குறித்து வைத்திருந்தனர்.

பேரியாறு ஏலக்காய் மலையில் (Cardamon Hills) உற்பத்தியாகிறது.

பேரியாறு உற்பத்தியாகும் இடத்தின் இருப்பிடம்:
9°·27′வ×76°·52′கி.

மற்றும் அதிகாரம் 33, குறிப்புகள்—1, 2, 3 பார்க்கவும்.

அகஸ்தியர் மலை அடைசத்ரோ (Adaisatro) என்று தாலமியால் வழங்கப்பட்டது. அம்மலை குடகு மலையைக் குறிப்பிடுவதாகக் கொள்ளப்படுகிறது (அதிகாரம் 23, குறிப்பு-1 பார்க்கவும்.

## 2. சோலன் நதியின் உற்பத்தியிடம் (The Source of the River Solon)

சோலன் என்பது தாமிரபருணி நதியைக் குறிப்பிடுகிறது. (அதிகாரம் 10, குறிப்பு-6). தாமிரபருணி, பொருநை என்றும் வழங்கப்பட்டது.

தாமிரபருணியின் உற்பத்தியிடம் குற்றால மலை மீது நெடுந் தொலைவு சென்றால், அகஸ்திய தீர்த்தம் என்று ஏரி ஒன்று வரும். அங்கிருந்துதான் தாமிரபருணி உற்பத்தியாகிறது. குற்றாலமலை, பொதியில் என்றும், அகத்தியர் மலை என்றும் பல பெயரால் வழங்கப்பட்டது.

தாமிரபருணியின் உற்பத்தியிடம்: 8°·58′ வ × 77°·21′ கி.

## 3. சோலன் நதி திருப்பமுறும் இடம் (The bending place of the River Solon)

சோலன் நதி என்பது தாமிரபருணி நதி எனக் குறிப்பு-2-ல் கண்டோம். தாமிரபருணி இரு கிளைகளாகப் பிரிந்து, ஒன்று மணியாச்சி அருகிலும், மற்றொன்று பாளையங்கோட்டை அருகிலும் திருப்பமுற்று, பிறகு ஒன்றாக இணைந்து காயல்பட்டினத்தருகில் கடலில் கலக்கிறது. இதன் கழிமுகத்தில் முன்னர் கொற்

கைத் துறைமுகம் இருந்தது. அதுவே கபாடபுரம் என வழங்கப் பெற்றது.

(தமிழர் வரலாறு : பி. டி. ஸ்ரீனிவாஸ ஐயங்கார், பக்கம் 242)

இன்று கொற்கைத் துறைமுகம் கிடையாது. கடல் கோள் காரணமாக மறைந்துவிட்டது.

தாமிரபருணி திருப்பமுறும்
இடத்தின் இருப்பிடம்: 8°·44′வ×77°·44′ கி.

---

# 35. காபேரிஸ்

*காபேரிஸ் எனும் நதி[1] அடைசத்ரோ
மலையிலிருந்து உற்பத்தியாகும்
இடம்.[2]* ... 132°·0′கி × 22°·0′வ.

### விளக்கவுரை

**1. காபேரிஸ்** (Caberis)

காபேரிஸ் (Caberis) என்ற சொல், காவேரி என்ற பெயரின் கிரேக்க உச்சரிப்பாகும். இறுதியில் உள்ள S உச்சரிப்பில் எடுத்துக்கொள்ளப்படுவதில்லை. அப்பொழுது, அது காபேரி என்றே உச்சரிக்கப்பட்டதாகும். எழுதும்போது இறுதியில் - S சேர்த்துக்கொள்வர்.

காபேரிஸ் முன்னர் அதிகாரம் 13, குறிப்பு-3-ல் குறிப்பிடப் பட்டுள்ளது. இதன் கழிமுகத்தில்தான் அன்று காவிரிப்பூம் பட்டி னம் (Kaveripoompattinam) இருந்தது. அது புகார் என்றும், பூம்புகார் என்றும் வழங்கப்பட்டது.

காவேரி உற்பத்தியாகும் இடம் : 12°·18′வ×76°·0′கி.

**2. அடைசத்ரோ மலையில் காபேரிஸ் உற்பத்தி** (Source of the River Caberis in Adaisathro Range)

அடைசத்ரோ (Adaisathro) மலை என்பது அகஸ்தியர் மலை யின் கிரேக்க உச்சரிப்பாகும். இம் மலை குடகுமலையைக் குறிப் பிடும். இதுவே அடைசத்ரான் என்றும் குறிப்பிடப்பட்டது. (அதிகாரம் 23, குறிப்பு-1).

குடகு மலையின் இருப்பிடம்: 12°·18′வ×76°·0′கி.

---

# 36. தினு

*உரோடியன் மலையினின்று[1] வெளிவரும்*
*தினு[2] ஆற்றின் உற்பத்தியிடம்.* ... 133°·0′கி × 17°·0′வ.

## விளக்கவுரை

**1. உரோடியன் மலை** (Ourodian Mountain)

இது வைடூரியம் என்பதன் திரிபாகக் கொள்ளப்பட்டது. (அதிகாரம் 25, குறிப்பு-1). இது பார்சநாத் (Parsanath) மலையைக் குறிப்பிடுகிறது. இங்கு ரிஷிகள் (நிக்ரோதர் - குரோதத்தை அடக்கினவர்) தங்கித் தவம் செய்ததால், அம்மலை 'நிக்ரோத மலை' என்று வழங்கப்பட்டது. நிக்ரோதம் என்பதே கிரேக்க உச்சரிப்பில் உரோதியன் என்று வழங்கப்பட்டிருத்தல் வேண்டும்.

பார்ஸ்வநாத் மலையின் இருப்பிடம் : 24°·0′வ × 86°·11′கி.

**2. தினு ஆற்றின் உற்பத்தியிடம்** (Source of the River Thina)

தினு என்பது ஸ்வர்ணரேகா (Subarnareka) நதியைக் குறிப்பிடக் கூடும். இந் நதி பார்சநாத் மலையில் உற்பத்தியாகி, வங்காள விரிகுடாவில் கலக்கிறது.

'தினுரிஸ்' என்பது ஒரு பொன் நாணயம். பொன்னைச் சுருக்கமாக 'தினு' (Thina) என்று கிரேக்கர் வழங்கினர் போலும். ஆக தினு ஆறு, பொன் ஆறு ஆகும். அந் நதியே ஸ்வர்ண ரேகாவைக் குறிப்பிடும். ஸ்வர்ணம் என்ற வடமொழிச் சொல்லுக்குப் பொன் என்பது பொருள். பொன் ஆறு, ஸ்வர்ணரேகா நதி என வழங்கப்பட்டது.

ஸ்வர்ணரேகாவின் இருப்பிடம் : 22°·0′வ × 87°·0′கி.

ஸ்வர்ணரேகாவின் உற்பத்தியிடம் : 24°·0′வ × 86°·11′கி.

———

# 37. மைசோலஸ்

*மைசோலஸ், அடைசத்ரோ மலையில்*
*உற்பத்தியாதலும்,*[1] *அதன்*
*உற்பத்தியிடமும்*[2]. ... 134°·30′கி × 17°·30′வ.

## விளக்கவுரை

**1. மைசோலஸ், அடைசத்ரோ மலையில் உற்பத்தியாதல்** (River Maisolas starting form Adaisathro Mountain)

மைசோலஸ் (Maisolas) எனும் சொல் மசூலிப்பட்டினம் (Masulipatam) என்பதைக் குறிப்பிடுகிறது. அதிகாரம் 15, குறிப்பு—2-ல் இதே பெயர் மசோலிஸ் (Masolis) என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இவ்விரு பெயரும் கிருஷ்ணு நதியையே குறிப்பிடு கிறது. கிருஷ்ணு நதிக் கழிமுகத்தில் மசூலிப்பட்டினம் துறைமுகம் உள்ளது. மசூலிப்பட்டினம் என்ற ஊரின் பெயரைக் கருதி, அக் கழிமுகமும், அவ் ஆறும் மசோலிஸ் என்று வழங்கப்பட்டது போலும். இந் நதியின் உள் பகுதியில் விஜயவாடா (Bezwada) உள்ளது. அவ்விடம் யுவான் சுவாங் எனும் சீனப்பயணியால் (கி.பி. 629-645) தானிய கடகம் என்று வழங்கப்பட்டது.

இக் கிருஷ்ணுநதி அடைசத்ரோ மலையில் (Adaisathro Mountain) உற்பத்தியாகிறது என்று தாலமி கூறுகிருர். அடைசத்ரோ மலை என்பது அகஸ்தியர் மலை என்பதன் கிரேக்க உச்சரிப்பே. அம் மலை இன்று குடகு மலை (Coorg Mountains) என்று குறிப்பிடப் படுகிறது. குடகு மலையிலிருந்துதான் காவிரி நதியும் (River Cavery) உற்பதியாகிறது (அதிகாரம் 23, குறிப்பு-1 பார்க்கவும்).

ஆக, குடகு மலையில் உற்பத்தியாகும் இரு நதிகளாவன: (i) காவேரி நதி, (ii) கிருஷ்ணு நதி.

குடகு மலையின் இருப்பிடம்: 12°·18′வ×76°·0′கி.

கிருஷ்ணுநதிக் கழிமுகத்தின் இருப்பிடம்: 17°·55′வ×81°·12′கி.

**2. மைசோலஸ் உற்பத்தியிடம்** (The Source of River Maisolas)

மைசோலஸ் (Maisolas) என்பது கிருஷ்ணு நதியைக் குறிப்பிடு கிறது. கிருஷ்ணு நதியின் கிளைநதி துங்கபத்திரா (Tungabadra) ஆகும். இந் நதிதான் குடகுமலையில் உற்பத்தியாகிறது. இந் நதி கிருஷ்ணு நதியுடன் கலக்கிறது. ஆனுல், கிருஷ்ணுநதி மகாபலேஸ்

வரர் (Mahabaleshwar) எனும் மலையில் உற்பத்தியாகிறது. அதற்கும் சற்று வடக்கில் உள்ள கல்சுபாய் மலையில் (Calsobai Hills), பீமாநதி (Bhima River), சினு (River Sina) இரு நதிகள் உற்பத்தியாகி, ஒன்றாக இணைந்து, கிருஷ்ணா நதியுடன் ராய்ச்சூர் அருகில் (Near Raichur) இணைகிறது.

ஆக கிருஷ்ணாநதி உற்பத்தியிடம் மகாபலேஸ்வர் மலை. துங்கபத்திரையின் உற்பத்தியிடம் குடகுமலை. பீமா, சினு ஆறுகளின் உற்பத்தியிடம் கலசுபாய் மலை.

கிருஷ்ணாநதி உற்பத்தியிடம் : 17°·58′வ × 73°·43′கி.

துங்கபத்திரை நதி உற்பத்தியிடம் : 12°·18′வ × 76°·0′கி.

பீமா, சினு ஆறுகள் உற்பத்தியிடம் : 18°·55′வ × 72°·54′கி.

# 38. மனடா

*அதே மலையிலிருந்து (அடைசத்ரோ)*[1]
*புறப்படும் மனடா நதியின்*[2]
*உற்பத்தியிடம்.* 136°·30′கி × 16°·30′வ.

## விளக்கவுரை

**2. அடைசத்ரோ** (Adaisathro)

இது அகஸ்திய மலை என்பதன் கிரேக்க உச்சரிப்பே. அதிகாரம் 23, குறிப்பு-1). அகஸ்திய மலையே குடகுமலை ஆகும்.

குடகுமலையின் இருப்பிடம் : 12°·18′வ × 76°·0′கி.

2. **மனடா நதியின் உற்பத்தியிடம்** (The Source of the River Manada)

மனடா (Manada) எனும் நதி மஹாநதி (Mahanadhi)யைக் குறிப்பிடுகிறது. மஹா என்பது மனடா (Manada) என்று குறிப்பிடப்பட்டது போலும்.

மனடா எனும் சொல் அதிகாரம் 16, குறிப்பு-6-ல் விவரிக்கப்பட்டுள்ளது. இது ஒரிஸா நாட்டில் ஓடும் மிகப் பெரிய நதியாகும்.

இந் நதி, தாலமி கூறுவது போன்று, அடைசந்ரோ மலையில் (குடகுமலையில்) உற்பத்தியாகவில்லை. பாஸ்டர் (Bastar) எனும் பகுதிக்கு வடக்கில் உற்பத்தியாகிறது. காங்கர் (Kanker) இடத்தி னருகில் உற்பத்தியாகிறது.

மகாநதியின் உற்பத்தியிடம் : 20°·0′வ × 81°·46′கி.

---

# 39. திண்டிஸ்

*ஆக்ஸென்டான் மலைத் தொடரிலிருந்து*[1]
*புறப்படும் திண்டிஸ் ஆற்றின்*[2]
*உற்பத்தியிடம்.* ... 137°·0′கி × 22°·30′வ.

## விளக்கவுரை

1. **ஆக்ஸென்டான் மலைத் தொடரிலிருந்து** (From Occentan Mountain or Range)

ஆக்ஸென்டான் என்பது ஆக்சிடென்டல் (Occidental) என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது. அதாவது மேற்குப் பகுதி என்பது அதற்குப் பொருள். ஆக இங்கு ஆக்ஸென்டான் என்பது மேற்கு மலைத் தொடரைக் குறிப்பிடுகிறது (அதிகாரம் 24, குறிப்பு-1 பார்க்கவும்).

இம் மலைத் தொடர் தப்தி நதிக்குத் தெற்கே தொடங்கி, கன்னியாகுமரி வரையில் செல்கிறது.

மேற்கு மலைத் தொடர் தொடக்கம் : 21°·62′வ × 74°·19′ கி.

2. **திண்டிஸ் ஆற்றின் உற்பத்தியிடம்** (The source of the River Tindis)

திண்டிஸ் (Tindis) எனும் பெயர் ஹூக்ளி நதியைக் (River Hoogly) குறிப்பிடுகிறது. (அதிகாரம் 16, குறிப்பு-9 பார்க்கவும்). ஹூக்ளி நதிக் கழிமுகத்தில் தாமிரலிப்தி (Tamiralipti) எனும் துறைமுகம் மிகவும் புகழ் பெற்று விளங்கிற்று. அத் துறைமுகமே இன்று தாம்லுக் (Tamluk) என்று வழங்கப்படுகிறது. இத் துறை

முகம் பிளினி, பெரிப்ளூஸின் நூலாசிரியர், யுவான் சுவாங் ஆகிய வரலாற்றுசிரியர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

—(**பிளினி :** புத்தகம் VI, அதிகாரம் 24, பக்கம் 81)

&

(**பெரிப்ளூஸ் :** அதிகாரம் 63, குறிப்பு-5, பக்கம் 23)

&

(**யுவான் சுவாங் :** அதிகாரம் 13, பக்கம் 150)

யுவான் சுவாங் (கி. பி. 629-645) இத் துறைமுகத்தைத் தான்-மோ-லிப்தி (Tan-Mo-Lipti) என்று வழங்குகிறார். தான்-மோ-லிப்தி என்ற சொல் தாமிரலிப்தி என்ற பெயரின் சீன உச்சரிப்பாகும். ஆக தாமிரலிப்தி, யுவான் சுவாங் காலவரையிலுங் கூட ஒரு சிறந்த துறைமுகமாக விளங்கிற்று என்றும், அது தாமிர லிப்தி என்ற பெயராலேயே ஏதும் மாற்றமின்றி வழங்கப்பட்ட தென்றும் இதனால் தெரியவருகிறது.

"இது சீனாவுக்கும் இந்தியாவுக்கும் இடையே பண்டமாற்று இடமாகும். இருநாடுகளின் கப்பல்களும் இங்குத் தங்கித்தான் போகவேண்டும். இங்குச் சீனப் பண்பாடும், இந்தியப் பண்பாடும் கலந்தே காணப்படுகின்றன."

—(**யுவான் சுவாங் :** பக்கம் 151)

ஹூக்ளி நதி (திண்டிஸ்) ராஜ்மஹால் ஹில்ஸ் (Raj Mahal Hills) என்பதில் உற்பத்தியாகிறது. வங்காள விரிகுடாவில் கலக்கிறது.

| | |
|---|---|
| ஹூக்ளி நதியின் உற்பத்தியிடம் : | 25°· 3′வ × 87°·53′கி. |
| ஹூக்ளி நதியின் இருப்பிடம் : | 22°·25′வ × 88°·26′கி. |
| தாமிரலிப்தியின் (தாம்லுக்) இருப்பிடம் : | 22°·18′வ × 87°·58′கி. |

திண்டிஸ் (ஹூக்ளி நதி) மேற்கு மலைத் தொடரில் உற்பத்தியாகவில்லை. ஒயிந்தியான் (விந்தியமலை) எனும் மலையின் ஒரு பகுதியில் உற்பத்தியாகிறது. இங்கு ஏடெழுதுபவரால் சில பகுதிகள் விடப்பட்டிருத்தல் வேண்டும். இல்லாவிடில், மேற்கு மலைத் தொடருக்கும், விந்தியமலைத் தொடருக்கும் ஒருவித மயக்கம் ஏற்பட்டிருக்காது.

---

# 40. தோசரீன் நதி

*அதே மலையில் புறப்படும் தோசரீன் நதியின்[1] உற்பத்தியிடம்.* ... 140°'0'கி × 24°·0'வ.

## விளக்கவுரை

**1. தோசரீன் நதியின் உற்பத்தியிடம்** (The source of the River Dosarene)

தோசரீன் (Dosarene) என்பது ஒரிஸா (Orissa) நாட்டின் கிரேக்க உச்சரிப்பாகும். பெரிப்ளூஸின் ஆசிரியரும் (கி.பி. 50-80) இதே சொல்லைப் பயன்படுத்துகிறார்.

இங்குத் தோசரீன் என்பது ஒரிஸாவின் வடபகுதியில் ஓடும் வைதரணி நதியைக் (Vaitarni River) குறிப்பிடுகிறது. இந் நதியின் நவீன பெயர் பிராமணி (Brahmani) ஆகும். இந் நதி மகா நதிக்கு வடக்கில் ஓடிக் கடலில் கலக்கிறது. இந் நதி பார்சநாத் (Parsanath) எனும் மலையில் உற்பத்தியாகிறது (அதிகாரம் 17, குறிப்பு-3 பார்க்கவும்).

*வைதரணி நதியின் இருப்பிடம்:* 22°·0'வ × 85°·0'கி.

*பார்சநாத் மலை (வைதர்ணியின் உற்பத்தியின்) இருப்பிடம்:* 24°·0'வ × 86°·11'கி.

வைதரணி (Vaitarani) புராணங்களில் குறிப்பிடப்படுகிறது "இயமலோகத்துக்குச் செல்லுமுன் கடக்கவேண்டிய ஆறு."

—(**காசிகண்டம்:** *அதிவீரராம பாண்டியர்*)

இயமன் என்பான் வைதரணி நதியோன் எனக் குறிப்பிடப் படுகிறான்—**(பிங்கல நிகண்டு)**

பார்சநாத் என்பது பார்சுவதாத் அல்லது பரமசிவநாதர் என்பதன் திரிபே. சிவபெருமான் சங்காரக் கடவுளாகக் கருதப்படுவதால், சிவபெருமான் இயமனாகக் கருதப்பட்டு, அவன் இருக்கும் மலைக்குப் போகும் ஆறு வைதரணி ஆறு என்று பெயரிடப்பட்டது போலும்.

# 41. அடமஸ்

*அதே மலைத் தொடரில் புறப்படும்*[1]
*அடமஸ் நதியின் உற்பத்தியிடம்*[2]. ... 142°·0′கி × 24°·0′வ·

## விளக்கவுரை

**1. அதே மலைத்தொடரில் புறப்படும்** (Starting form the same Range)

அதே மலை என்பது ஒயிந்தியான் (விந்தியமலை) மலையின் ஒரு பகுதியாகும் (அதிகாரம் 39, குறிப்பு-2 பார்க்கவும்).

விந்திய மலையில் ஒரு பகுதியாகிய பார்சநாத் மலையில் அடுத்துக் குறிப்பிடப்படும் அடமஸ் நதி (ஸ்வர்ணரேகா நதி) உற்பத்தியாகிறது.

பார்சநாத் மலையின் இருப்பிடம்: 24°·0′வ × 86°·11′கி.

**2. அடமஸ் நதியின் உற்பத்தியிடம்** (The Source of the River Adamus)

'அடமஸ் (Adamus) என்ற சொல்லுக்கு 'வைடூரியம்' என்பது பொருள். இங்குக் குறிப்பிடப்படும் நதி ஸ்வர்ணரேகா நதி (Subarna-reka) ஆகும். ஸ்வர்ணம் எனும் சொல் பொன் என்பதைக் குறிப்பிடுகிறது—(அதிகாரம் 17, குறிப்பு·5 பார்க்கவும்). பொன் பஞ்சலோகங்களில் முக்கியமானது. பொன்னின் பிரகாசத்தை மனத்தில் உட்கொண்டு, அந் நதியைத் தாலமி, 'அடமஸ்' என்று பெயரிட்டார் போலும்.

ஸ்வர்ணரேகா நதி பார்சநாத் மலையில் உற்பத்தியாகிறது. வங்காள விரிகுடாவில் கலக்கிறது.

ஸ்வர்ணரேகா நதியின் இருப்பிடம்: 23°·23′வ × 85°·23′கி.

---

# 42. சிந்து-கங்கே நாடுகள்

சிந்து முதல் கங்கே வரையில் உள்ள நாடுகளும்[1] அவற்றின் நகரங்களும் கிராமங்களும் பின்வருமாறு காணப்படுகின்றன :

கோவா நதியின் உற்பத்தியிடத்துக்குக் கீழே[2] இலம்பாடிப் பிரதேசமும்[3] அதன் மலைகளும் காணப்படுகின்றன. அவை கோமேடாய்வரைத்[4] தொடர்ந்து செல்கின்றன.

சுவாஸ்டஸ் நதியின்[5] உற்பத்தியிடத்துக்குக் கீழே சுவஸ்டீன்[6] நாடு உள்ளது.

சிந்து நதிக்குக் கீழ் தாரத்ராய்[7] எனும் நாடும் மக்களும் உள்ளனர். அம் மக்கள் உள்ள நாட்டின் மலைகள் மிக உயரமாகவுள்ளன.

பிடாஸ்பஸ் உற்பத்தியிடத்துக்குக் கீழும்,[8] சண்டபல் நதிக்குக் கீழும்,[9] ஆட்ரிஸ் நதிக்குக் கீழும் காஸ்பீரியா நாடு உள்ளது.[10]

பிபாஸிஸ் உற்பத்தியாகும் இடத்துக்குக் கீழும்,[11] ஜாரோட்ராஸ்[12] டையமௌனு[13] கங்கே[14] ஆகிய நதிகள் உற்பத்தியாகும் இடங்களுக்குக் கீழும் கிலின்டிரைன் நாடு[15] உள்ளது.

இலம்படாய் நாட்டுக்கு கீழும் சுவஸ்டீன் நாட்டுக்குக் கீழும் கோரையா நாடு[16] உள்ளது.

## விளக்கவுரை

1. **சிந்து முதல் கங்கேவரையுள்ள நாடுகள்** (Countries between Sindu and Gangae)

இப்பகுதியில் அக்காலத்தில் விளங்கிய நாடுகளின் பெயர்களையும் அமைப்பையும் கொடுத்துள்ளார். இவ்வதிகாரத்தில் சிந்துநதி பாயும் நாடு முதல், கங்கைநதி கடலில் கலக்கும் இடம் வரையுள்ள நாடுகளைக் குறிப்பிடுகிறார். அந் நாடுகள் இருந்தமைக்கு இதுவே ஆதாரச் செய்திகளாகும்.

**2. கோவாநதி உற்பத்தி இடத்துக்குக் கீழே** (Below the source of the River Coa)

கோவா (Coa) எனுஞ் சொல் காபூல் நதியைக் (River Kabul) குறிப்பிடுகிறது (அதிகாரம் 26, குறிப்பு-3). காபூல் நதி ஹிந்து குஷ் மலையில் (Hindukush Mountain) உற்பத்தியாகிச் சிந்து நதியுடன் அட்டாக் (Attock) எனுமிடத்தில் இணைகிறது. காபூல் நதியின் வேறு பெயர்கள் : கோபஸ், கோபன், கூபா.

காபூல் நதியின் இருப்பிடம் : 34°'30'வ×69°·18'கி.

காபூல் நதி உற்பத்தியிடம் : 36°'10'வ×71°·30'கி.

**3. இலம்படாய் பிரதேசம்** (The country of Lambadai)

இலம்படாய் (Lambadai) என்பது நவீன இலமுகான் (Lamu-ghan) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இங்கு வசிக்கும் மக்கள் இலம்பகா (Lambaka) என்று வழங்கப்பட்டனர். இவ்விடம் காபூல் நதிக்கு வட பகுதியிலும், அலிங்கார் (Alingar) குணர் (Gunar) நதிகளுக்குக் கிழக்குப் பகுதியிலும் உள்ளது. வடக்கில் ஹிந்துகுஷ் மலை உள்ளது. இவ்விடம் சீனப் பயணி யுவான் சுவாங்கினால் (கி.பி. 629-645) லான்-போ (Lan-Po) என்று வழங்கப்பட்டது. இவ்விடத்தில் புஷ்டு (Pushtu) எனப்படும் மொழி பேசப்பட்டு வந்ததாக வரலாறு கூறுகிறது.

இலமுகான் இப்பொழுது பதாக்ஷான் (Badakshan) என்று வழங்கப்படுகிறது. இது ஆப்கன்-துருக்கிஸ்தானத்துக்குக் கிழக்கில் உள்ளது.

இலமுகானின் இருப்பிடம் . ... 35°·0'வ×70°·0'கி.

இலமுகான், இலக்மான் (Laghman) என்றும் குறிப்பிடப்படுகிறது. இதன் தலைநகரம் ஜலாலாபாது (Jalalabad). ஜலாலாபாது, காபூல் நதிக்கரையில் உள்ளது.

ஜலாலாபாதின் இருப்பிடம் : 34°·24'வ×70°·26'கி.

—(Vide **The Early History of India** By Vincent A. Smith, M. A., Page 353).

இலம்கான் என்ற பெயர் கி.பி. 991 வரையிலும் கூட வழங்கப்பட்டது என்று வரலாறு கூறுகிறது. ஜலாலாபாத் நகரகாரா (Nagarakara) என்றும் வழங்கப்பட்டது. கி.பி. 1290-க்குப் பிறகே,

இலம்கானின் தலைநகரம் ஜலாலாபாது என்று வழங்கப்பட்டது. இப் பெயர் ஜலாலுடின் பிரோஷ் ஷா என்பவராட்சியில் வழங்கப் படுவதாயிற்று.

—(Vide **An Advanced History of India** By R. K. Mookerji M.A., Page 294)

## 4. கோமேடாய் வரை (Upto Komedai)

கோமேடாய் எனுஞ் சொல் காகசஸ் (Caucausus) மலையைக் குறிப்பிடுகிறது. காகசஸ் மலையில் இருந்தவர்கள் மலைச்சாதியினர்; அங்கங்கு உணவை நோக்கித் திரிபவர். நாடோடிகள். இந் நாடோடிகளே நோமேட்ஸ் (Nomades) என்று வழங்கப்பட்டனர். நோமேடம் (Nomadum) என்றால் திரிபவர் - நாடோடி என்பது பொருள். ஆக நோமேட்ஸ் உள்ள நாடு கோமேடாய் (Komedai) என்று வழங்கப்பட்டது. அவர்கள் இருந்த நாடுகள் காகசஸ் மலையைக்கொண்ட ஆர்மீனியன் (Armenian) நாடும், குர்திஸ்தான் (Kurdistan) நாடும் ஆகும்.

காகசஸ் மலை யிருப்பிடம் : ... 43°·0′வ × 44°·0′கி.

## 5. சுவாஸ்டஸ் நதி (River Suvastos)

இது ஸ்வாத் (Swat) நதியையும். அந் நதியின் பெயர் கொண்ட பிரதேசத்தையும் குறிப்பிடுகிறது. ஸ்வாத் என்பது, பண்டைய இலக்கியப் பெயரான சுபவஸ்து என்றதன் திரிபே. சுபவஸ்துவே, சுவஸ்து ஆகி, சுவஸ்து என்பதே ஆங்கிலத்தில் ஸ்வாத் (Swat) என்று வழங்கப்படுகிறது. இப் பகுதியை யுவான் சுவாங் சீனப் பயணி ஊ-சாங்-நா (Wu-Chang-Na) என்று குறிப்பிட்டுள்ளார். பாஹியான் என்ற சீனப் பயணி (கி.பி. 399-414) இதைச் சூ-ஹோ-டோ (Su-Ho-To) என்று வழங்கினர்—(**பாஹியான் :** பக்கம் ; 48-49.)

இங்குச் சிபிச் சக்கரவர்த்தி வாழ்ந்து வந்ததாகவும். புறுவுக்கு ஈடாகத் தம் தசையை அரிந்து கொடுத்ததாகவும் புத்த சாதகக் கதைகளுள் (Jataka Stories) ஒன்று கூறுகிறது. இப் பகுதி சிபிச் சாதகம் (Sipi Jataka) என்னும் பகுதியில் கூறப்பட்டுள்ளது. இக் குறிப்புகளை யுவான் சுவாங்கும் (கி.பி. 629 – 645) கொடுத்துள்ளார்.

—(**யுவான் சுவாங் :** பக்கம் 65-66)

ஸ்வாத் நதியின் இருப்பிடம் : ... 35°·0′வ × 72°·35′கி.

**6. ஸ்வாஸ்டீன் நாடு (The country of Suvastene)**

சுவஸ்து நதி (Swat River) பாய்கின்ற நாடு சுவாஸ்டீன் (Suvastene) என்று வழங்கப்பட்டது. இந் நதி ஸ்வேதி (Sveti) என்று ரிக் வேதத்தில் (Rig Veda) குறிப்பிடப்பட்டுள்ளது (**ரிக் வேதம்: X-5**). மற்றும் அதிகாரம் 26, குறிப்புகள் 2, 4 பார்க்கவும்.

ஸ்வாத் நாட்டின் இருப்பிடம் : ... 35°·0′வ×72°·35′கி.

**7. சிந்து நதிக்குக் கீழ் தாரத்ராய் எனும் நாடும் மக்களும்** (Below the River Sindus, the country of Dardrai and its people)

இப் பகுதி இலம்படாய் பிரதேசத்துக்குக் கிழக்கிலும், சிந்து நதியின் வடகோடிப் பகுதியிலும் விளங்கிற்று. பிளினி, திராவிட நாட்டை தாரத்ரே என்று வழங்கி, அங்குப் பொன் மிகுதியாகக் கிடைத்ததாகக் கூறியுள்ளார். காவிரியின் மறு பெயர் பொன்னி அல்லவா ? ஆக காவிரி பாயும் நாட்டைப் 'பொன் கொழிக்கும் நாடு' என்று கூறினர். திராவிட நாட்டை யுவான்சுவாங் என்பார் திலோ-பி-டோ என்று வழங்கினர்.—(**யுவான் சுவாங் : பக்கம்** 174-178).

பிளினி (கி.பி. 23-79), யுவான் சுவாங் குறிப்பிட்டது தென் நாட்டையே தவிர வடகோடியை யன்று. ஆனல் தாலமி இங்குக் குறிப்பிடுவது, சுவாத் நாட்டுக்கு (Swat) அண்மையில் விளங்கிய பகுதியையே யாகும்.

இப்பகுதியில் பொன்துகள் மிகுதியாகக் கிடைத்ததாயும், அப் பொன்னைப் பொன் அகழும் எறும்புகள் எடுத்துச் சென்றதாகவும், அவ் வெறும்பின் அளவு ஒரு குள்ளநரியின் அளவு இருந்ததாகவும், அவ்வெறும்பினின்று பாதுகாத்துக்கொண்டு பொன்னை எடுத்து வந்தனர் என்றும் வரலாற்றின் ஆதித் தந்தையாகக் கருதப்படும் ஹிராடடஸ் (கி.மு. 484-கி.மு.425) தாம் எழுதிய வரலாற்றில் குறிப் பிட்டுள்ளார்.

(**ஹிராடடஸ் :** புத்தகம்-III, பக்கம் 216-217)

மெகஸ்தனிஸ், பெரிப்ளூஸ் நூலாசிரியர், ஸ்டிராபோ, அரியன் ஆகியவர்கள் இப் பகுதியைத் தார்தோனி (Dardoni) என்று குறிப் பிட்டுள்ளனர்.

இவ்விடம் இப்பொழுது தார்டிஸ்தான் (Dardistan) என்று வழங்கப்படுகிறது. சிந்து நதியும், கில்கிட் நதியும் கூடுமிடத்தில் இப் பகுதி உள்ளது. இது காஷ்மீரத்தின் வட பகுதியாகும்.

தார்டிஸ்தானின் இருப்பிடம் : 36°·10′வ×74°·0′கி.

**8. பிடாஸ்பஸ் உற்பத்தியிடத்துக்குக் கீழ்** (Below the Source of the River Bidaspus)

இச்சொல் ஹிடாஸ்பஸ் (Hydaspus) என்றதன் திரிபே. ஹிடாஸ்பஸ், நவீன ஜீலம் (Jhelum) நதியைக் குறிப்பிடுகிறது—(அதிகாரம் 26, குறிப்பு-6).

அலெக்சாந்தர் (கி.மு. 356-323) புருஷோத்தமரை (Poros) ஹைடாஸ்பஸ் போரில் (ஜூலை மாதம், கி.மு. 326) வென்றார். மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) என்பவராலும் இந் நதி ஹிடாஸ்பஸ் என்றே வழங்கப்பட்டது.

ஜீலம் நதி முன்னர் பிஹாத் (Bihat) என்று வழங்கப்பட்டது.

ஜீலம் நதியின் இருப்பிடம்: 32°·35′வ × 73°·47′கி.

**9. சண்டபல் நதிக்குக் கீழே** (Below the River Santapal)

சண்டபல் (Santapal) எனுஞ் சொல் சந்திரபாகா (Chandrabagha) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. சந்திரபாகா என்பதே நவீன செனுப் (Chenab) நதி (அதிகாரம் 26, குறிப்பு-7).

செனுப் நதியின் இருப்பிடம்: 32°·0′வ × 73°·14′கி.

**10. ஆட்ரிஸ் நதிக்குக் கீழே காஸ்பீரியா நாடு உள்ளது** (The Country of Kasperia below the River Adris)

ஆட்ரிஸ் (Adris) என்பது ஐராவதி (Irrawady or Iravathi) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. ஐராவதி நதியே நவீன ராவி (Ravi) நதியாகும் (அதிகாரம் 26, குறிப்பு-8).

ராவி நதியின் இருப்பிடம்: 31°·0′வ × 73°·30′கி.

காஸ்பீரியா (Kasperia) எனும் சொல் காஷ்மீர நாட்டைக் (Kashmere) குறிப்பிடுகிறது. காஸ்யபபுரம் (Kasyapapuram) என்ற சொல்லே பின்னர் காஷ்மீர் எனத் திரிந்தது. இந்நாடு காஸ்யப மகரிஷியால் நிர்மாணிக்கப்பட்டது அல்லது அவர் பெயரால் நிர்மாணிக்கப்பட்டது. அதன் காரணமாகத்தான், அந்நாடு காஸ்யபபுரம் என வழங்கப்படுவதாயிற்று.

இவ்விடத்தில் குசுமமலர் மிகுதியாக மலர்கின்றன. அதன் காரணமாக இது குசுமபுரம் (Kusumapura) என்றும், அதுவே காஷ்மீரம் ஆயிற்று என்றும் கூறப்படுகிறது.

இக்காசியபபுரத்தைப் பற்றி யுவான் சுவாங் என்னும் சீனப் பயணி தம் குறிப்புகளில் கொடுத்துள்ளார். காஷ்மீரை அவர் கி-ய-ஷி-மி-லோ (Kiashimilo) என்று வழங்கினர்.

“ கியஷி-மி-லோ எனப்படும் நாடு 7000 லிச் சுற்றளவு கொண்டது. அதைச் சுற்றிலும் மலைகள் உள்ளன. அம்மலைகள் வெகு உயரமாயும், மிகுந்த கணவாய்களை உடையதாயும் காணப்படுகிறது. அங்கே 500 சங்கிராமங்கள் உள்ளன. 5000 பௌத்த பிக்ஷுக்கள் இருக்கின்றார்கள். நான்கு தூபிகள் அசோகரால் கட்டப்பட்டன.”

— (யுவான் சுவாங் : பக்கம் 200.)

காஷ்மீரம் ஹிராடடஸ், பாணினி, வியாசர் ஆகியோர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

தாலமியின் காலத்தின் முற்பகுதியில் காஷ்மீரை ஆண்டுவந்த அரசர் கனிஷ்கர் (Kanishkar) ஆவார். அவர் கி.பி. 78ஆம் ஆண்டுப் பட்டம் எய்தியவுடன், சாகா (Saka) என்னும் புதிய சகாப்தத்தை ஏற்படுத்தினார். கி.பி. 111-ல் சீனரைப் போரில் வென்றார். தம்மைத் தேவபுத்திரர் (Devaputra) என்று வழங்கிக் கொண்டார். பல தூபிகளைக் கட்டினார். புத்தபிரானுருடைய கோட்பாடுகளைச் செப்பேடுகளில் பொறித்து. அவற்றைக் கற்றூண்களில் இட்டு, அதன்மீது தூபிகளை எழுப்பினார். கி.பி. 119ஆம் ஆண்டு அவர் கொல்லப்பட்டார்.

காஷ்மீரத்தை ஆண்ட பேரரசர் கனிஷ்கர் ஒருவரே ஆவார். புத்தமதத்தைப் பரவச் செய்தவர்களுள் அசோகப் பேரரசருக்கு அடுத்தவர் கனிஷ்கரே ஆவார்.

காஷ்மீரத்தின் இருப்பிடம் : 34°·6′வ×74°·51′கி.

### 11. பிபாஸிஸ் உற்பத்தியாகும் இடத்துக்குக் கீழ் (Below the source of the River Bibasis)

பிபாஸிஸ் (Bibasis) என்னும் சொல் விபாஸா (Vibasa) எனும் பெயரின் கிரேக்க உச்சரிப்பே. இதன் நவீன பெயர் பியாஸ் (Beas) (அதிகாரம் 26, குறிப்பு-9).

பியாஸ் நதியின் இருப்பிடம் : 32°·0′வ×76°·0′கி.

### 12. ஜாரோட்ராஸுக்குக் கீழும் (Below the River Zaroadras)

ஜாரோட்ராஸ் (Zaroadras) என்ற சொல் சதத்ரு (Sadatru) என்ற பெயரின் கிரேக்க உச்சரிப்பே. சதத்ருவின் நவீன பெயர் சட்லெஜ் (Sutlej) என்பதே—(அதிகாரம் 27, குறிப்பு-1). சதத்ரு, ஹெஸிட்ர்ஸ் (Hesidrus) என்று வழங்கப்பட்டு, அதுவே கிரேக்கர்களால் ஜாரோட்ராஸ் என்று குறிப்பிடப்பட்டது.

சட்லெஜ் நதியின் இருப்பிடம் : 28°·25′வ×72°·0′கி.

**13.** டையமௌனு (Diamouna)

டையமௌனு (Diamouna) எனுஞ் சொல் யமுனை (Jamuna) என்ற பெயரின் கிரேக்க உச்சரிப்பே. இந் நதி காமெட் (Gamet) மலையில் உற்பத்தியாகி, கங்கையுடன் அலகாபாது எனும் இடத்தில் சேருகிறது. அவ்விடம் திரிவேணி சங்கமம் என்று வழங்கப்படு கிறது (அதிகாரம் 29, குறிப்பு-2).

யமுனை நதியைப் பிளினி (கி.பி. 23-79) ஜொமேனஸ் (Jomnnes) என்று வழங்கினர்.

—(பிளினி : புத்தகம் VI, அதிகாரம் 22, பக்கம் 34, குறிப்பு-47)

புராண வரலாற்றில் குறிப்பிடப்படும் கிருஷ்ணனுக்கும் யமுனை நதிக்கும் தொடர்பு உண்டு.

யமுனை நதியின் இருப்பிடம் : 24°·25′வ × 89°·50′கி.

மேற்கூறப்பட்ட ஆறுகளுக்கு இடையே வசித்தவர் குலிந்தர் (Kulindas) எனப்பட்டனர்.

**14.** கங்கேயின் உற்பத்தியிடம் (The source of the River Gange-s)

கங்கே என்பது கங்கை, கங்கா என்பதன் கிரேக்க உச்சரிப்பே. எழுதும்பொழுது S-சேர்த்து எழுதுவர் (Gange-s). ஆங்கிலே யர்களால் இது காஞ்சஸ் (Ganges) என உச்சரிக்கப்பட்டது.

கங்கை நந்தா தேவி மலையில் உற்பத்தியாகிறது.

கங்கையின் இருப்பிடம் : 21°·30′வ × 89°·30′கி.

கங்கை நதியின் உற்பத்தியிடம் : 30°·23′வ × 80°·1′கி.

கைலாஸ மலையும், கங்கை நதியும் புண்ணியம் தருகின்றன என்று புராணங்கள் கூறுகின்றன.

கங்கை தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது:

“கங்கை வாரியும் காவிரிப்பயனும்
ஈழத்துணவும் காழகத் தாக்கமும்.”

—(பட்டினப்பாலை : 190-191)

மற்றும் அதிகாரம் 18, குறிப்பு-1 பார்க்கவும்.

## 15. கிலின்டிரைன் நாடு (The country of Cylindrine)

கிலின்டிரைன் (Clyndrine) என்ற சொல் குலிந்தா (Kulinda) என்ற பெயரின் திரிபே. இந் நாட்டு மக்கள்—குலிந்தர் எனப்படுபவர்—மானசரோவர் ஏரிக்கும், கைலாச மலைத் தொடருக்கும் இடையே வசித்து வந்தனர்.

இப்பொழுது இப் பகுதி குமாயுன் (Kumaun) என்று வழங்கப் படுகிறது. இங்குக் குமாயுன் காடுகள் புகழ் பெற்றவை. இக் காடுகளில் புலிகள் நிறைய உள்ளன. இவை புலி வேட்டைக்குப் புகழ் பெற்றனவாகும்.

குமாயுனின் இருப்பிடம்: 30°·0′வ×79°·0′கி.

## 16. கோரையா நாடு (Coraiya Country)

இலம்படாய் நாட்டுக்குக் (Lambadai) கீழும், சுவஸ்டீன் (Suvastene) நாட்டுக்குக் கீழும் கோரையா (Coraiya) நாடு உள்ளது என்று கூறுகிறார் தாலமி. இலம்படாய் நாடு, நவீன இலமுகான் அல்லது பதாக்ஷான் என்பதைக் குறிப்பிடுகிறது (குறிப்பு-3). சுவஸ்டீன் என்பது ஸ்வாத் (Swat) நாட்டைக் குறிப்பிடுகிறது (குறிப்பு-6). கோரையா (Coraiya) என்பது பஞ்ச்கோரா (Panchcora) என்பதைக் குறிப்பிடுகிறது. இந் நதி ஹிந்துகுஷ் மலையில் உற்பத்தியாகிக் காபூல் நதியுடன் இணைகிறது. இவ்விடத்தில் வசித்தவர் கௌரியாஸ் (Kaurias) என்று வழங்கப்பட்டனர். மாவீரர் அலெக்சாந்தர் (கி.மு. 356-323) கோரையா நதியைக் கடந்து, அசிகினஸ் (Asikines) நதியை அடைந்தார் என்று அர்ரியன் (கி.பி. 90-180) கூறுகிறார்.

—(அர்ரியன் இண்டிகா: புத்தகம்-IV, அதிகாரம் 25)

கோர் என்ற சொல் கிரி (Gira) என்ற சொல்லின் திரிபே. ஹிந்துகுஷ் மலையிலிருந்து வருவதால், அது கோரா (Gora) என்று வழங்கப்பட்டது போலும்.

கோரையன், கோரிஸ் எனும் ஊர்கள் இப் பகுதியில் உள்ளன. பஞ்ச்கோரா, பஞ்சிஷிர் (Panchshir) என்று வழங்கப்படுகிறது.

பஞ்ச்கோராவின் இருப்பிடம்: 35°·0′வ×70°·0′கி.

# 43. சிந்து-கங்கே அப்பால்

சிந்து, கங்கே நாடுகளுக்கு அப்பால் உள்ள நகரங்கள் பின் வருமாறு :

| | | |
|---|---|---|
| *கைசாணு*[1] | ... | 120°· 0′கி × 34°·20′வ. |
| *பர்பரோணு*[2] | ... | 120°·15′கி × 33°·40′வ. |
| *கோர்யா*[3] | ... | 122°· 0′கி × 34°·45′வ. |
| *நகரா (டையோனிஸ்பாலிஸ்*[4]*)* | ... | 121°·45′கி × 33°· 0′வ. |
| *டிரஸ்டோகா*[5] | ... | 120°·30′கி × 32°·30′வ. |

## விளக்கவுரை

**1. கைசாணு** (Kaisana)

இது காகேசிய மலைத்தொடரின் (Caucausus Range) அடிவாரத்தில் இருந்த கார்டாணு (Cartana) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. இது பிளினியால் (கி.பி. 23-79) கார்டாணு எனக் குறிப்பிடப் பட்டுள்ளது—(**பிளினி :** புத்தகம் VI, அதிகாரம் 23).

கார்டாணு என்ற சொல்லின் பொருள் சதுர வடிவம் கொண்டது என்பது ஆகும். யூக்ராடிடஸ் பேரரசர் (Eucratides) வழங்கிய ஒரு நாணயத்தில் கரிஸிநகரா (Karsinagara) என்ற சொற்கள் பொறிக்கப்பட்டுள்ளதாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். —(Geography of Ancient India, By A. C. Cunningham, pp. 27-29).

இப்பொழுது கூரசான் என்ற பகுதி ஆப்கானிஸ்தானத்துக்கு வட மேற்கிலும், காஸ்பியன் கடலுக்குத் தென் கிழக்கிலும் உள்ளது. காஸான் என்ற பகுதிக்குத் தலைநகரம் காஸான் என்ற ஊரேயாகும். ஆக, கைசாணு என்பது கூரசான், காஸான் ஆகிய இரு பகுதிகளையும் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

கூரஸானின் இருப்பிடம் : 40°·0′வ × 25°·55′கி.

காஸானின் இருப்பிடம் : 33°·50′வ × 51°·47′கி.

காஸான் என்பது நவீன பாரசீகத்தின் வடபகுதியாகும்.

**2. பர்பரோணு** (Barbarona)

இது பர்வான் (Parwan) எனும் இடத்தைக் குறிப்பிடுவதாகக் கூறப்படுகிறது. இது அலெக்சாந்திரியா-அரியன் (Alexandria

Arion) அருகில் இருந்தது. இது ஹீராட் (Herat) பகுதியில் இருந்தது. அலெக்சாந்திரியா-அரியன் என்றதன் நவீன பெயர் ஜிந்தஜான் (Zindajan).

ஜிந்தஜானின் இருப்பிடம்: 34°·28′வ×62°·9′கி.

### 3. கோர்யா (Ghorya)

கோர்யா (Ghorya) என்பது ஜிந்தஜான் மேற்கில் உள்ள கோரியான் (Ghoriyan) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. இது ஹீராட் (Herat) பகுதியில் உள்ளது.

கோரியான் இருப்பிடம்: 34°·28′வ×61°·0′கி.

### 4. நகரா அல்லது டையோனிஸ்பாலிஸ் (Nagara or Dionyspolis)

நகரா (Nagara) என்பது நகரகாரா (Nagarakara) என்பதன் சுருக்கமே. இதை நாகி-லோ-கோ (Na-Ki-Lo-Ko) என்று யுவான் சுவாங் (கி.பி. 629-645) குறிப்பிட்டார்—(**யுவான் சுவாங்:** பக்கம் 59). மற்றும் பாஹியானும் (கி.பி. 399-414) இதைக் குறிப்பிட்டுள்ளார்—(**பாஹியான்:** பக்கம் 62).

இந்த இடம் பண்டைக் காலத்தில் உத்யானபுரம் (Udyanapura) என்று வழங்கப்பட்டது. கிரேக்க மக்களால் டையோனிஸ்பாலிஸ் (Dionyspolis) என்று வழங்கப்பட்டது. உத்யானபுரம் என்பதன் பொருள் பூந்தோட்டம் நிரம்பிய இடம் என்பதாகும். இவ் உத்யானபுரம் நவீன ஜலாலாபாத் (Jalalabad) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது காபூல் நதிக்கரையில் (River Kabul) பெஷாவருக்கு மேற்கே உள்ளது. பெஷாவரின் பழைய பெயர் புருஷபுரம் (Purusha pura). குனர் நதியும் (River Gunar), காபூல் நதியும் கூடுமிடத்தில் ஜலாலாபாத் உள்ளது.

உத்யானபுரம் என்ற பெயர் பண்டைக் கிரேக்க நாணயங்களில் காணப்படுவதாக ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

டையோனிஸ்பாலிஸ் என்ற ஊர் கிரேக்கக் கடவுள் டையானிஸஸ் (Dionysus) என்பவரால் ஏற்படுத்தப்பட்டதாக மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) கூறுகிறார். டையானிஸஸ் திராட்சைப் பானப்பிரியர். திராட்சை பயிர் செய்வதை இந்தியருக்குக் கற்றுக் கொடுத்தவர்.

—(**மெகஸ்தனிஸ்:** அதிகாரம் 4, குறிப்பு-4, பக்கம் 27)

ஜலாலாபாத் அஜுனா (Ajuna) என்று வழங்கப்பட்டதாகவும், இதனருகில் நகராத் (Nagarath) எனும் நகரம் இருந்ததாகவும் கூறப்படுகிறது.

ஜலாலாபாத் நிகையா (Nikaia) என்றும் வழங்கப்பட்டது. அதன் மற்றொரு பெயர் இலம்கான் (Lamghan).

—(Vide The Early History of India By Vincent A. Smith, M.A., p. 46).

ஜலாலாபாத்தின் இருப்பிடம்: 34°·24′வ × 70°·26′கி.

**5. டிரஸ்டோகா** (Drastoca)

இது நவீன டஷ்டி-கா-விர் (Dashti-Ka-Vir) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது கூரசான் (Khurasan) பகுதிக்கு மேற்கில் உள்ளது. டம்கான் பாலைவனம் (Damghan Desert) என்று இப்பொழுது வழங்கப்படுகிறது. காஸ்பியன் கடலுக்குத் தென் கிழக்கில் உள்ளது.

டஷ்டி காவிர் இருப்பிடம்: 35°·0′வ × 55°·0′கி.

---

# 44. காந்தாரிடிஸ்

*சுவாஸ்டஸ் நதிக்கும் சிந்து நதிக்கும் இடையேயுள்ள காந்தாரிடிஸ் நாடும்,[1] அதன் நகரங்களும் :*

| | | |
|---|---|---|
| *புரோகாலிஸ்*[2] | .... | 128°· 0′கி × 32°· 0′வ. |
| *நௌலிபி*[3] | ... | 124°·20′கி × 33°·20′வ. |

### விளக்கவுரை

**1. சுவாஸ்டஸ் நதிக்கும் சிந்து நதிக்கும் இடையே காந்தாரிடிஸ்** (Gantharitis between Suvastos and Sindu-s)

சுவாஸ்டஸ் என்பது ஸ்வாத் நாடு (Swat) (அதிகாரம் 42, குறிப்புகள் 5, 6). அங்கு ஓடும் நதி ஸ்வஸ்து நதி (Suvastu) என்றும், அந்நதி ஓடிய நாடு ஸ்வேதி (Sveti) என்றும் வழங்கப்பட்டது (ரிக் வேதம்: X-5). ஆக ஸ்வேதி என்ற சொல்லின் திரிபே ஸ்வாத் (Swat) நாடு.

ஸ்வாத் நாட்டின் இருப்பிடம்: 35°·0′வ × 72°·35′கி.

காந்தாரிடிஸ் (Gandharitis) என்பது காந்தார நாட்டைக் குறிப்பிடுகிறது (The Country of Gandhara). பழங்காலம் முதல் இந் நாடு புகழ் பெற்றிருந்தது. இராமாயணத்திலும் மகாபாரதத் திலும் விதந்தோதப்பட்டுள்ளது.

இப் பகுதியில் இரு பண்டை நகரங்கள் இருந்தன. ஒன்று தக்ஷசீலம் (Taxila). இந் நகரம் சிந்து நதிக்குக் கிழக்கில் இருந்தது. மற்றொன்று புஷ்கலபுரம் (Peucolatis). இந் நகரம் சிந்து நதிக்குக் மேற்கில் நிர்மாணிக்கப்பட்டு விளங்கிற்று. தக்ஷசீலம் என்பது டாக்சீலா (Taxila) என்றும், புஷ்கலபுரம் என்பது பியூகலாடிஸ் (Peucolatis) என்றும் கிரேக்க மக்களால் வழங்கப்பட்டதாக வரலாறுகள் கூறுகின்றன. இவ்விரண்டு நகரங்களும் ஸ்ரீ ராமபிரானுடைய தம்பியான பரதனுடைய (Bharatha) இரு புதல்வர்கள் தக்ஷன், புஷ்கலன் என்பவர்கள் பெயரால் நிர்மாணிக்கப்பட்டதாகும். இதனால் இந் நகரங்கள் மிகப் பழங்காலத்திலேயே நிர்மாணிக்கப்பட்டதென்பது தெரிகிறது.

காந்தார நாடு சிந்துவின் இரு பக்கங்களிலும் பரவியிருந்தது. ஆயினும், பிற்காலத்தில் இந் நாடு சிந்து நதியின் மேற்குப் பகுதியை மட்டும் குறிப்பிடுவதாயிற்று.

பிளினி, பெரிப்ளூஸ், மெகஸ்தனிஸ், ஸ்டிராபோ, அர்ரியன் ஆகிய வரலாற்றாசிரியர்கள் பலராலும் இந் நாடு குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றும் இந் நாட்டின் எல்லை சிந்து நதியின் மேற்குப்பகுதி வரைப் பரவியிருந்ததாக அவர்கள் கூறியுள்ளனர். இந் நாட்டை அவர்கள் காந்தாரிடிஸ் (Gandharitis) என்ற பெயராலே வழங்கினர். காந்தாரிடிஸ் என்பது காந்தார நாடு (Gandhara) என்பதன் கிரேக்க உச்சரிப்பே.

ஹிராடடஸ் (கி.மு. 484—கி.மு. 425) என்பார் காஸ்யபபுரம் என்பது காந்தார நாட்டின் ஒரு நகரம் என்று குறிப்பிட்டுள்ளார். காஸ்யபபுரம் பின்னர் காஷ்மீர் ஆயிற்று.

—(*Histories* By Herodotus, Book III, p. 217).

காஸ்யபபுரமே பின்னர் காஷ்மீர் ஆயிற்று என்பதை முன்னர் கண்டோம் (அதிகாரம் 42, குறிப்பு-10).

அசோகப் பேரரசர் காலத்தில் (கி.மு. 263—கி.மு. 234) இப் பகுதியில் புத்தமதம் வெகுவாகப் பரவியிருந்தது.

பின்னர் வந்த சீனப் பயணிகளான பாஹியான் (கி.பி. 399-414), யுவான் சுவாங் (கி.பி. 629-645) ஆகிய இருவரும் இவ்விடங்களைப் பற்றிப் பல குறிப்புகளைக் கொடுத்துள்ளனர்.

—(**யுவான் சுவாங் :** பக்கம் 200)

## 2. புரோகாலிஸ் (Procalis)

தக்ஷசீலமும், புஷ்கலபுரமும் பண்டைப் பல்கலைக் கழகங்களாகத் திகழ்ந்தன. புஷ்கலபுரம் என்பது புஷ்கலவதி (Pushkalavathi) என்றும் வழங்கப்பட்டது. புரோகாலிஸ் என்பது புஷ்கலபுரம் என்பதன் கிரேக்க உச்சரிப்பே.

இரகுவம்சம் என்னும் நூல் பின்வருமாறு கூறுகிறது:
"பரதன் தன் இரு குமாரர்களாகிய புஷ்கலன், தட்சன் என்பவர், அவர்கள் பெயர்களால் நிர்மாணிக்கப்பட்ட புஷ்கலவதி, தட்சசீலம் என்னும் நகரங்களுக்குத் தனித்தனியே ஆளுனர்களாக அனுப்பிவைத்தான்."

—(**இரகுவம்சம் :** அதிகாரம் 15, சுலோகம் 81)

இராமாயணம் பின்வருமாறு கூறுகிறது : கைகேயியின் மைந்தனை பரதன், தன் இரு மைந்தர்களான தக்ஷன், புஷ்கலன் ஆகிய இருவரையும் கந்தர்வ நாட்டிற்கும் காந்தார நாட்டிற்கும் முறையே ஆளுனர்களாக அனுப்பிவைத்தான். அவர்கள் அங்கு ஐந்தாண்டுகள் தங்கியிருந்தனர் (**இராமாயணம் :** உத்தரகாண்டம்: அதிகாரம்-14).

வாயு புராணம் கூறுகிறது : "தக்கனுடைய நகரமே தக்ஷசீலம் ஆகும்" (**வாயு புராணம் :** அதிகாரம் 88).

அர்ரியன் என்பார் கூறுகிறார்: "புஷ்கலபுரம் அஸ்டஸ் என்னும் அரசரின் தலைநகரமாகும்."

—(**அரியன் இண்டிகா :** அதிகாரம் 3)

பெரிப்ளூஸ் நூல் கூறுகிறது : "பொகாலிஸ் என்னுமிடத்தில் சடாமாஞ்சி, கரியபோளம் முதலியன விற்கப்பட்டன. மற்றும் பல நாடுகளுக்கும் அனுப்பப்பட்டன."

—(**பெரிப்ளூஸ் :** அதிகாரம்-47)

புஷ்கலவதி அல்லது புஷ்கலபுரம் என்னும் இப் பண்டை நகரம் பெஷாவருக்கு 30 கிமீ. (18 மைல்), வட கிழக்கில் ஸ்வாத் நதியும் காபூல் நதியும் கூடும் இடத்தில் அமைந்திருந்தது. இன்று அப் பகுதி கார்ஷட்டா (Charshadda) என்று வழங்கப்படுகிறது.

புஷ்கலபுரத்தின் இருப்பிடம் : 34°·8′வ×71°·46′கி.

**3. நௌலிபி (Naulibi)**

இது நவீன நௌஷீரா (Nausheera) என்று வழங்கப்படுகிறது. நௌலாப் (Naulab) என்ருல் புதிய நதி என்பது பொருள். அதே பொருள்பட, நவீன நௌஷீரா என்ற இடமும் விளங்குகிறது. இது சிந்து நதியின் வட கிழக்கில் பெஷாவருக்கு வடக்கில் 48 கிமீ. (30 மைல்) தொலேவில் உள்ளது. பெஷாவர் (Peshawar) என்னும் சொல் புருஷபுரம் என்ற சொல்லின் நவீன உருமாற்றம் ஆகும். மற்றும் அதிகாரம் 27, குறிப்பு-3 பார்க்கவும்.

நௌஷீராவின் இருப்பிடம்: 34°·0'வ × 72°·0'கி.

---

# 45. டாக்சீலா

*சிந்து நதிக்கும் பிடாஸ்பஸ் நதிக்கும் இடையேயும், சிந்து நதிக்கும் ஆர்சா[1] பிரதேசத்துக்கு அருகிலும் உள்ள நகரங்கள் :*

| | | |
|---|---|---|
| *இதகௌராஸ்[2]* | .... | 125°·40'கி × 33°·20'வ. |
| *டாக்சிலா[3]* | ... | 125°· 0'கி × 32°.15'வ. |

## விளக்கவுரை

**1. ஆர்சா (Arsa)**

ஆர்சா (Arsa) எனுஞ் சொல் உர்சா (Ursa) எனும் சொல்லின் திரிபே. இவ்விடம் காஷ்மீர் (Kashmere) நாட்டிற்கு மேற்கெல்லே யில் உள்ள முஸாபர்பாத் (Muzafarbad) எனும் இடத்தைக் குறிப் பிடுகிறது. யுவான் சுவாங் (கி.பி. 629-645) என்பார் இதை உலா-ஷி (U-La-She) என்று வழங்கினுர். அவர் இவ்விடம் காஷ் மீருக்கும் தக்ஷசீலத்திற்கும் இடையே இருந்ததாகக் கூறினுர். பிளினி (கி.பி. 23-79), மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) இருவரும் இவ்விடத்தை ஆர்ஸ கலிதா (Arsa Galitha) என்று குறிப்பிட்டனர். இதன் பொருள் ககாலிதா நதிக் கரைமீது (Kakalitha) விளங்கும் ஆர்சே நகரம் (Arsae) என்பதாகும். ககாலிதா என்ற சொல் நவீன கில்கிட் (Gilgit) நதியையும் மலேயையும் குறிப்பிடுகிறது. கில்கிட் மலே காஷ்மீர் வடபகுதியில் உள்ளது.

முசாபர்பாத்தின் இருப்பிடம்: 34°·24'வ × 73°·22'கி.

பிடாஸ்பஸ் (Bidaspes) என்னும் சொல் ஹிடாஸ்பஸ் (Hydas-pes) என்பதன் திரிபே. ஹிடாஸ்பஸ் நவீன ஜீலம் நதியைக் (Jhelum) குறிப்பிடுகிறது (அதிகாரம் 26, குறிப்பு-6 பார்க்கவும்).

மாவீரர் அலெக்சாந்தர் (கி.மு. 356-323) புருஷோத்தமரை (Poros) ஹைடாஸ்பஸ் போரில் (கி.மு. 326, ஜுலை மாதம்) வென்றார் (அதிகாரம் 42, குறிப்பு-8). மெகஸ்தனிஸ் என்பாரால் இந் நதி குறிப்பிடப்படுகிறது.

இதகௌராஸ் (Ithagouras) என்னும் இடம், சிந்து நதிக்கும் (Sindu-s), பிடாஸ்பஸ் நதிக்கும் இடையே இருந்தது என்கிறார். அடுத்த குறிப்புப் பார்க்கவும்.

## 2. இதகௌராஸ் (Ithagouras)

இவ்விடம் சிந்து நதிக்கும், ஜீலம் நதிக்கும் இடையே இருந்தது என்று கூறுகிறார். இது மலைநாட்டில் உள்ள நகரம். இந் நகரம் காஷ்மீரின் வடபகுதியில் கில்கிட் (Gilgit) மலைப்பிரதேசத்தில், கிருஷ்ணகங்கா நதிக்கரையில் (Krishnaganga) கௌராயிஸ் (Gourais) என்ற பெயருடன் இன்று விளங்குகிறது.

கௌராயிஸின் இருப்பிடம்: 34°·38′வ×74°·56′கி.

## 3. டாக்ஸிலா (Taxila)

இந்நகரம் அர்சா பிரதேசத்துக்கும் (Arsa), சிந்து நதிக்கும் (Sindu-s) இடையே இருந்ததாகக் கூறுகிறார்.

ஆர்சா என்பது உர்சா (Ursa) எனும் சொல்லின் திரிபே. இது இன்று முசாபர்பாத் என்று வழங்கப்படுகிறது. (மேலே குறிப்பு-1)

டாக்சீலா (Taxila) என்பது தக்ஷசீலம் என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. இது மிகவும் புகழ் பெற்ற பல்கலைக் கழக மாகத் திகழ்ந்தது. இப்பொழுது இவ்விடம் ஷாதேரி (Shaderi) இடத்துக்கருகில் 2 கிமீ. தொலைவில் உள்ளது.

இப் புகழ் பெற்ற நகரம் இராமருடைய தம்பியான பரதனின் இரு புதல்வர்களான தக்ஷன், புஷ்கலன் ஆகியவர்களின் பெயர் களுள் ஒன்றான தக்ஷன் பெயரால் நிர்மாணிக்கப்பட்டதாகும்.

பல பயணிகள் இந்நகரத்தைப்பற்றி எழுதியுள்ளனர்.

அலெக்சாந்தர் (கி.மு. 356—கி.மு. 323) தம் படையெடுப்பில் இந் நகரத்தில் வந்திறங்கினார் என்று வரலாறு சான்று பகர் கின்றது.

யுவான் சுவாங் (கி.பி. 629-645) இதை த-ச-சீ-லோ (Ta-Cha-Si-Lo) என்று குறிப்பிட்டார். “இங்குப் பௌத்த மடாலயங்கள்

பல இருந்தனவாயினும், அவை யாவும் போற்றுவாரற்றுக் கிடந்தன.''

—(யுவான் சுவாங்: பக்கம் 70)

பாஹியான் (கி.பி. 399-414) இதை சு-சா-சீ-லோ (Su-Cha-Si-Lo) என்று வழங்கினுர். இது வெட்டப்பட்ட தலையுள்ள இடம் என்றும், தக்ஷன் என்னும் அரக்கன் தன் தலையைக் கொடுத்து போதி சத்துவரானதாகவும் கூறுகிறுர். தக்ஷன் தலையீந்த தலமே தக்ஷசீலம் என்று வந்ததாகவும் விவரிக்கிறுர்.

—(பாஹியான்: பக்கம் 53–54)

வாயு புராணம் கூறுகிறது: ''தக்கனுடைய நகரமே தட்ச சீலம் ஆகும்.'' —(வாயு புராணம்: அதிகாரம்-88)

மகாபாரதம் கூறுகிறது: ''தக்ஷசீலத்தை ஜனமேசயன் அரசன் வென்று, அவ்விடத்தில் சர்ப்பயாகம் நடத்தினுன்.''

—(மகாபாரதம்: ஆதிபர்வம்-III-20)

புத்தபிரானுர் காலத்தில் (கி.மு. 563—கி.மு. 483) தக்ஷசீலம் புகழ்பெற்றிலங்கிற்று. பிம்பிசாரன் செய்த யாகத்துக்கு தக்ஷசீல மன்னன் வந்தான் என்றும், அவ்வரசன் புத்தபிரானுர் வீற்றிருந்த ராஜகிருஹத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டான் என்றும், அவ்வரசன் புத்த பிக்ஷுவாக மாற்றப்பட்டான் என்றும் பௌத்த சமய வரலாறு கூறுகிறது.

புத்த சாதகக் கதைகளும் (Jataka Stories), ஜைனமத நூல்களும் தக்ஷசீலத்தைப் பற்றிக் குறிப்புகள் கொடுத்துள்ளன.

கொண்டாபோரஸ் (Condaphores) ஆட்சியில் கி.பி. 44-ல் ஏற்பட்ட நிலநடுக்கம் காரணமாக, தக்ஷசீலம் நிலை குலைந்தது. வெள்ளை ஹூணர்கள் (கி.பி. 460-470) தக்ஷசீலத்தை வென்று, அதைத் தரைமட்டமாக்கினர். பௌத்த பிக்ஷுக்கள் யாவரும் கொல்லப்பட்டனர்.

தக்ஷசீலத்தைப் பற்றி மிகவும் சுவையான செய்திகள் பல சர் ஜான் மார்ஷல் (Sir John Marshall) என்பார் எழுதிய டாக்ஸிலா (Taxila) என்னும் புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

கி.பி. 11ஆம் நூற்றுண்டில் விளங்கிய ஆல்பெரூனி (Alberuni) (கி.பி. 1030) தக்ஷசீலத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்:

''தக்ஷசீல மக்கள் நேர்மையும், நியாயமும், சீலமும் வாய்ந்தவர்கள் ஆவர். அவர்கள் நல்லனவற்றைச் செய்ய எப்பொழுதும் தயங்கார்கள்.''—(Alberuni's India by Sachau)

கி.பி. 1013-ல் மகமது கஜினி என்பார் தட்சசீலத்தைத் தமதாக்கிக் கொண்டார்.

தக்ஷசீலத்தில் இருந்த பல்கலைக் கழகத்தில் எல்லாக் கலைகளும் கற்பிக்கப்பட்டன. கணக்கியல், வேதபாடம் முதற்கொண்டு மருத்துவம் வரையில் யாவும் கற்பிக்கப்பட்டன. வில்வித்தையிலும், சோதிடத்துறையிலும் பயிற்சியளிக்கப்பட்டது. அவ்வளவு சிறப்புக்குக் காரணம், அந் நகரம் இந்தியாவின் வடமேற்கு எல்லையில் இருந்ததாலன்றோ? இந்தியாவுக்குள் நுழையும் வெளிநாட்டினர் பலர் தம் நாட்டுப் பண்பாடுகள் பலவற்றையும் அங்கே பயிலுமாறு விட்டுவிட்டு, இந்தியப் பண்பாட்டைத் தமதாக்கிக்கொண்டு சென்றனர். அப் பண்பாடுகளில் ஊறிய மக்கள் மனம் வளம் பெற்று, அந் நாடும் புகழ் மிக்க நாடாக விளங்கிற்று.

தக்ஷசீலத்தில் பயிற்சி பெற்ற ஆசிரியர் என்றால் அக்காலத்தில் அவர்களுக்குத் தனிப்பட்ட பெருமதிப்பு இருந்தது. எந்த அரசாங்கமும் அவர்களுக்குத் தகுந்த மரியாதைகள் செய்து, அவர்களைத் தங்கள் பேரவைகளிலேயே புலவர்களாக வீற்றிருக்கச் செய்தனர்.

தக்ஷசீலம் சிறந்த பல்கலைக் கழகமாக ஆனதற்குக் கருவியாயும், காரணராயும் இருந்தவர்கள் பௌத்த பிக்ஷுக்களே என்பதை எவரும் மறுக்க முடியாது; இது வரலாற்றாசிரியர்கள் யாவரும் ஒருங்கே ஒப்புக்கொண்ட கருத்தேயாகும்.

"குணாள சாதகம்" (Gunala Jataka)) என்னும் சாதகக் கதையில் பின்வரும் நிகழ்ச்சி குறிப்பிடப்பட்டுள்ளது:

இந்த இடத்தில் (தக்ஷசீலத்தில்) சந்திரப்பிரபா என்ற உருவில் பிறந்த சாக்கிய முனிவர் பௌத்த தர்மத்துக்காகத் தம்முடைய தலையை ஆயிரம் முறை துணித்துக்கொண்டார். தக்ஷன் பாறையில் தன் தலையைத் துணித்துக்கொண்ட காரணத்தால், இவ்விடம் தக்ஷசிலா என்று வழங்கப்பட்டது.

தசசீலோ நகருக்குத் தென்கிழக்குப் பகுதியில் தூபி ஒன்று உள்ளது. அது, தன் இளைய மனைவி ஒருத்தியால் தன் மகன் கு-ணா-ளா என்பவனுடைய கண்கள் குருடாக்கப்பட்டதை நினைவூட்ட, அசோகரால் கட்டப்பட்ட தூபியாகும். கண்ணிழந்த குணாளன் அந்த இடத்துக்குவந்து, பிரார்த்தனை புரிந்ததால், தான் இழந்த இரு கண்களையும் மீண்டும் பெற்றான்.

"அசோகப் பேரரசர் தம் இளைய மனைவியான திரிஷ்யரக்ஷகா என்பாளின் பேச்சைக் கேட்டுத் தம் மூத்த மனைவியின் பிள்ளை

யாகிய குணாளனைத் தக்ஷசீலத்துக்கு ஆளுநராக அனுப்பிவைத்தார். அவனைத் தன் தீய காம இச்சைக்குப் பயன்படுத்த எவ்வளவு முயன்றும், பலனில்லை. அவன் மனம் சிறிதேனும் இடந்தராமல், ஒழுக்கத்தையும், சீலத்தையுமே பெரிதாக மதித்து, தன் சிற்றன்னையின் தீய வற்புறுத்தலுக்கு இணங்க மறுத்துவிட்டான்.

இதனால் சீற்றமடைந்த அம்மாற்றுந்தாய் ஓர் ஏட்டில் எதையோ எழுதி, அதற்கு ஆணையாக அரசின் முத்திரையைக் களவாடி எடுத்து, அதை அச்சுவடியில் இட்டு, குணாளனை அந் நகரத்து அதிகாரிகளிடம் கொடுக்குமாறு அனுப்பிவிட்டாள். குணாளனும் அவ்வோலையைத் தக்ஷசீல அதிகாரிகளிடம் கொடுத்துவிட்டான். அவ்வோலையில் உள்ள முத்திரையைக்கண்டு அதையே ஆணையாக ஏற்று, குணாளனின் இருகண்களையும் சூட்டுக்கோல்கொண்டு போக்கிவிட்டனர். அக் குணாளன் தன் மனைவியுடன் துறவுக் கோலம் பூண்டு அரசர் அசோகர் இருந்த இடத்துக்கே பிச்சை எடுக்க வந்து விட்டான். தான் வந்த இடம் அசோகருடைய அரண்மனை என்று அவனுக்குத் தெரியவில்லை. அவன் பாட்டிசைக்க, அவனுடைய பழகின குரலையும், இனிமையையும் கேட்ட அரசர் வெளியே வந்து தன் மைந்தனை அடையாளங் கண்டு, அவனை உள் அழைத்துச் சென்று நிகழ்ந்த செய்திகளையறிந்து, அங்கிருந்த தூபியொன்றைத் துதி செய்யுமாறு வேண்டினார். குணாளாவும் அவ்வாறே அன்புருக வேண்டித் தான் இழந்த கண்களைத் திரும்பப் பெற்றான். குணாளனின் சிற்றன்னையின் வஞ்சகம் வெளிப்பட்டவுடன், அசோகர் அவளைக் கொலை செய்துவிடுமாறு பணித்தார். குணாளனின் ஒழுக்கந்தவறாத நிலையைக் கண்டு அசோகர் தம் உள்ளம் உவந்தார்.”

—(**யுவான் சுவாங்**: பக்கம்: 79-80)

குணாளப்பறவை ஹிமவத் என்றும் வழங்கப்படும். அதற்கு மிக அழகிய கண்கள் உண்டு. அதேபோன்ற கண்களை உடைய அசோகர் மைந்தர் குணாளன் என்று வழங்கப்பட்டான். குணா—ளா என்பது குணாளனின் சுருக்கமே.

அக் குணாளனின் உண்மைப் பெயர் தர்மவிவர்தன. அழகிய கண்கள் காரணமாகக் குணாளன் என்று காரணப்பெயரால் வழங்கப்பட்டான்.

தக்ஷசீலத்தின் இருப்பிடம்: 33°·40′வ × 72°·50′கி.

---

# 46. பாண்டவா

ஹிடாஸ்பஸ் நதிக்கரையைச் சுற்றிலும் பாண்டவ பிர தேசமும்[1], அதில் உள்ள நகரங்களும் பின்வருமாறு:

| | |
|---|---|
| இலபாகா[2] | ... 127°·30′கி × 34°·15′வ. |
| ஸகாலா (யூதிமீடியா)[3] | ... 126°·20′கி × 32°· 0′வ. |
| பூசிபாலா[4] | ... 125°·30′கி × 30°·20′வ. |
| இமௌஸா[5] | ... 124°·15′கி × 30°· 0′வ. |

## விளக்கவுரை

**1. ஹிடாஸ்பஸ் நதிக்கரையைச் சுற்றிலும் பாண்டவ பிரதேசம்** (Pandava Country around Hydaspes)

ஹிடாஸ்பஸ் என்பது விதஸ்தா (Vitasta) என்று வேதத்தில் கூறப்படும் நதியைக் குறிப்பிடுகிறது. விதஸ்தாவே, பிடாஸ்பஸ் என்றும் வழங்கப்பட்டது. பிடாஸ்பஸ் என்பதை ஹிடாஸ்பஸ் என்று கிரேக்கர்களால் மாற்றி வழங்கப்பட்டது. ஹிடாஸ்பஸ், நவீன ஜீலம் நதியைக் குறிப்பிடுகிறது.

ஜீலம் நதியின் இருப்பிடம்: 32°·35′வ × 73°47′கி.

பாண்டவா என்பது பாண்டவநாடு என்பதன் குறுக்கமே; பாண்டவர்கள் சந்திரவமிசத்தைச் சார்ந்தவர்கள். கௌரவர்கள் சூரியவமிசத்தைச் சார்ந்தவர்கள். பாண்டவர்களுக்கும் கௌர வர்களுக்கும் நடந்த போரே மகாபாரத யுத்தம். புத்தர் பிறப்பின் போது (கி.மு. 563) பாண்டவர் ஹஸ்திணபுரத்தில் ஆண்டுவந்த தாகக் கூறப்படுகிறது. ஹஸ்திணபுரம் என்பது நவீன டெல்லிக்குக் கிழக்கில் 96 கி.மீ. (60 மைல்) தொலைவில் இருந்தது. நவீன ஹஸன் பூரே (Hasanpur) பண்டைய ஹஸ்திணபுரம் ஆகும்.

மகாபாரதம் நடந்த இடம் குருக்ஷேத்திரம். இவ்விடம் நவீன டெல்லிக்கு 5 மைல் (8 கி.மீ.) தொலைவில் இருந்தது.

பாண்டு வமிசப் பாண்டவர் வேறு; தென்னிந்தியப் பாண்டியர் வேறு. இரண்டையும் ஒன்று படுத்திக் குழப்பமடையக் கூடாது.

பாண்டவர் வடநாட்டவர்; பாண்டியர் (Pandyas) தென் தமிழ் நாட்டினர். பாண்டவர் பாண்டு வமிசத்தினர்; பாண்டியர் தமிழ் நாட்டுப் பாண்டி நாட்டு அரசர்கள்.

ஹஸ்திணபுரத்தின் இருப்பிடம்: 28°·43′வ × 78°·27′கி.

## 2. இலபாகா (Labaka)

இலபாகா என்பது இலவகோடா (Lavakota) என்ற சொல்லின் திரிபே. இது முன்னர் பஞ்சாப் பிரதேசத்தில் இருந்தது. இது நவீன நாபா பிரதேசத்தில் (Naba) உள்ள நாபா நகரத்தைக் குறிப்பிடுகிறது. இலபா-காவில் உள்ள 'கா' எனுஞ் சொல் நாடு என்பதை குறிப்பிடுகிறது. இண்டி-கா, டிமிரி-கா, ஆப்பிரி-கா என்பனவற்றில் உள்ள 'கா'வைப்போல. நாபா நாடு என்ற இடம் முன்னர் கிரேக்கர்களால் இலபாகா என்று வழங்கப் பட்டது. இவ்விடம் பஞ்சாபில், பாடியாலா சமஸ்தானத்தில் உள்ளது.

நாபாவின் இருப்பிடம் : 30°.25'வ×76°.9'கி.

## 3. ஸகாலா (யூதிமீடியா) [Sakala (Euthymedia)]

ஸகாலா (Sakala) எனப்படும் இடம் ராவி நதிக்கு (River Ravi) மேற்கில் இருந்த நாடாகும். இதைச் சங்-கா-லா-என்று யுவான் சுவாங் (கி. பி. 629—645) குறிப்பிட்டார். இங்கு அலெக்ஸாந்தர் பேரரசர் படையெடுத்து வந்தபொழுது, உள்நாட்டுச் சேனையின் தாக்குதலை எதிர்த்து நிற்க மாட்டாமல், தாம் வந்த வழியே பின் சென்றார். பின்னர் ஸகாலாவை அழித்து, அதைத் தரைமட்டமாக்கி விட்டனர். அவர்க்குப் பிறகு, டெமெட்ரியஸ் (Demetrius) என்னும் கிரேக்கோ பாக்டிரீய அரசரால் மீண்டும் அந் நகரம் புதுப் பிக்கப்பட்டது. அவ்வரசருடைய தந்தையின் பெயர் யூதிடெமோ (Euthydamo) என்பது. அதன் காரணமாக, தான் புதியதாக நிர்மாணித்த இடத்துக்கு டெமெட்ரியஸ் தம் தந்தையின் பெயரான யூதிடெமோ என்ற பெயரையிட்டு வழங்கினர்.

தாலமி இச்சொல்லை யூதிமீடியா என்று வழங்கினர். யூதிமீடியா (Euthymedia) என்பது தவறான சொல்லாகும். இது ஒருகால் ஏடெழுதுபவரின் கைத்திறனால் விளைந்ததாகவும் இருக்கும். யூதிடேமியா (Euthydamea) என்பதே சரியான சொல்லாகும்.

டெமெட்ரியஸ் கி.மு. 334 முதல் கி.மு. 283 வரை வாழ்ந்து வந்தார். அவருடைய வரலாறு பின்வருமாறு கூறப்படுகிறது :

டெமெட்ரியஸ் (Demetrius) என்பவரின் மாற்றுப் பெயர் பாலிக்ரடீஸ் என்பது. இவர் ஆசியாவின் அக் காலத்திய பேரரசர் ஆவார். பாலிக்ரடீஸ் என்பதன் பொருள் முற்றுகையிடுபவர் என்பதே. இவர் கி.மு. 334ஆம் ஆண்டில் பிறந்தார். சிறந்த வீரராக விளங்கினர். கி. மு. 305-ல் ரோட்ஸ் என்னும் நகரத்தை முற்றுகையிட்டார். அதில் பெரும் வெற்றி பெற்றார். அதன்

காரணமாக அவருக்குப் பாலிக்ரடீஸ் என்ற விருதுப் பெயர் ஏற்பட்டது. அவருடைய தந்தையார் யூதிடெமோ, இப்ஸஸ் (Ipsus) என்னுமிடத்தில் நடந்த போரில் கி. மு. 301ஆம் ஆண்டு இறந்து விட்டார். அதன் பிறகு அவர் மைந்தர் டெமெட்ரியஸ் இந்தியா மீது படையெடுத்துவந்தார். சங்காலா என்னும் இடத்தைப் புதுப் பித்தார். அவ்விடத்திற்குத் தம் தந்தையாரின் பெயரை இட்டு வழங்கினர். அதன் காரணமாக அந் நகரம் யூதிடேமியா (Euthydamea) என்று வழங்கப்பட்டது. பின்னர் அவர் செல்யூகஸ் நிகேடார் (Seleucos Nikator) என்பவரால் தோற்கடிக்கப்பட்டு, கி.மு. 286-ல் சிறைபிடிக்கப்பட்டார். சிறையில் மூன்று ஆண்டுகள் இருந்து, கி. மு. 283-ல் இறந்து விட்டார்.

—(Vide Greek Mythology-By Edith Hamilton, p. 187)

ஸகாலா (Sakala) என்ற இடமே இப்போழுது ஸேகுபுரம் என்று வழங்கப்படுகிறது. ஸேகுபுரம் பஞ்சாபில் லாகூருக்கு வடக்கே 5 மைல் (8 கி.மீ.) தொலேவில் உள்ளது. இவ்விடம் ராவி நதிக் கரையின் (River Ravi) மேற்குப் பகுதியில் உள்ளது.

ஸேகுபுரத்தின் இருப்பிடம்: 31°·37வ × 74°·26 கி.

இதன் அருகில் சங்கலாமலே உள்ளது. இம் மலேயின் பெயரைக் கருதி, அவ்விடத்தை சங்-காலா என்று யுவான் சுவாங் வழங்கினர். சங்-காலா என்பது சங்கிராமம் என்பதன் சீன உச்சரிப்பே. சங்கிராமம் என்ருல் பௌத்த மடாலயம் என்பது பொருள். ஆக அவ்விடத்தில் பல சங்கிராமங்கள் இருந்ததன் காரணமாக, அவ்விடம் சங்காலா என்று வழங்கப்பட்டது.

**4. பூசிபாலா (Bucephala)**

ஜீலம் (Jhelum) நதியின் பழைய பெயர் ஹிடாஸ்பஸ் (Hydaspes). அலெக்சாந்தர் பேரரசர் ஜீலம் நதிக் கரையில் புருஷோத்தமர் என்று வழங்கப்பட்ட போரசுடன் (Poros) போரிட்டு அவரைத் தோற்கடித்தார் (கி.மு. 326). அதன் பிறகு இரண்டு நகரங்களேக் கட்டத் தொடங்கினர். அவற்றுள் ஒன்று நிகையா (Nikaya); மற்றென்று பூசிபாலா (Bucephala). நிகையா என்பது நிசியா (Nicea) என்ற பெயரால் வழங்கப்பட்டது.

பூசிபாலா (Bucephala) எனப் பெயரிடப்பட்ட நகரம் அலெக் சாந்தர் பேரரசரால் தம் குதிரை பூசிபாலஸ் என்பதன் நினேவுச் சின்னமாக நிர்மாணிக்கப்பட்டது. தாம் ஏறி வந்த பூசிபாலஸ் (Bucephalus) என்னும் குதிரை மிகுந்த வேகம் வாய்ந்தது. வேறு ஏவரையும் தன்மீது ஏறவிடாது. ஜீலம் நதிக்கரைப் போரில்

(கி.மு. 326) அக் குதிரைக்குப் போரினால் ஊறு ஏற்பட்டது. உடன் அது இறந்து விட்டது. அக் குதிரையை அதே இடத்தில் புதைத்து, அதன்மீது ஒரு நினைவுச் சின்னத்தை எழுப்பினர். அக் குதிரை புதையுண்ட இடத்தை பூசிபாலா என்று வழங்கினர். பூசிபாலா நிர்மாணிக்கப்பட்ட ஆண்டு கி.மு. 326 ஆகும்.

இவ்விடம் ஜீலம் நதிக்கு மேற்கில் உள்ளது. இப்பொழுது அக் குதிரையின் புதையுண்ட நகரம் ரசூல் (Rasul) என்று வழங்கப் படுகிறது.

பூசிபாலாவின் இருப்பிடம் : 32°·45′வ × 73°·50′கி.

இந் நகரம் பிளினி (கி.பி. 23—79)யாலும் குறிப்பிடப்பட் டுள்ளது—(பிளினி : புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் 29). மற்றும் பெரிப்ளூஸின் ஆசிரியரும் (கி.பி. 50—80) இவ்விடத்தையும், நிகழ்ச்சியையும் குறிப்பிட்டுள்ளார்—(பெரிப்ளூஸ் அதிகாரம் : 47 குறிப்பு—8, பக்கம் 177). ஸ்டிராபோ (கி.மு. 64-கி.பி.24) என்பாரும் இந் நிகழ்ச்சியையும் பூசிபாலா நகரத்தையும் விவரித்துள்ளார்.

பூசிபாலா என்று வழங்கப்பட்ட இந் நகரம் முதல் முதல் அலெக்சாந்தர் பூசிபாலா என்று வழங்கப்பட்டது. அலெக்சாந் தரின் குதிரையான பூசிபாலஸ் என்பதின் முகம் கொடுமைவாய்ந்த எருதின் முகத்தைப் போன்று படர்ந்திருந்தது என்று வரலாறு கூறுகிறது.

### 5. இமௌஸா (Imausa)

இமம்-ஹிமம்—இவ்விரு சொற்களும் பனியைக் குறிப்பிடும். இமயமலை என்பது பனிமலை. பனி மூடிய மலை பூசிபாலா (Bucephala) நகரத்துக்கருகில் எதுவும் கிடையாது. ஆகையால் இச் சொல் அன்று விளங்கிய ஒரு நகரத்தைக் குறிப்பிடவேண்டும்.

இது யமுனை, பாடலிபுத்திரம் முதலியவற்றைக் குறிப்பிடும் என்று சிலர் கருதினாலும், அவை இருக்கும் நீண்ட தொலைவு காரண மாக இமௌஸா என்பது அவற்றைக் குறிப்பிட முடியாது.

இப் பகுதி இன்று லாலா மூஸா (Lala Musa) என்று வழங்கப் படுகிறது. இமௌஸா என்றதன் அடிப்படைச் சொல் லாலா மூஸாவில் இரண்டாவது சொல்லாக அமைந்துவிட்டதைக் காண லாம். லாலா மூஸா என்னும் நகரம் காஷ்மீரில் உள்ள ஜம்மு (Jammu) பகுதிக்கு மேற்கே உள்ளது.

லாலா மூஸாவின் இருப்பிடம் : 32°·40′வ × 74°·1′கி.

# 47. காஸ்யபியர்

இதற்கப்பால், கிழக்குப் பகுதியில் காணப்படும் பிரதேசங்கள் யாவும் காஸ்யபியர் எனும் அரசர்க்கு உரியனவாகும்.

**1. காஸ்யபியர் அரசர்க்கு உரியனவாகும்** (Belonging to the King Casyapeare)

குசும மலர் நிரம்பிய இடமே குசுமபுரம் (Kusumapura) என்றும், அந் நகரமே பின்னர் காஷ்மீரம் (Kashmere) ஆயிற்று என்றும் ஒரு சிலர் கூறுவர்.

காசியப மகரிஷி (Kasyapa Maharishi)யின் பெயரால் நிர்மாணிக்கப்பட்ட இடமே காஷ்மீரம் எனப்படும் என்று கூறப்படுகிறது. காஸ்யபபுரம் என்பதே காஷ்மீரம் என்ருயிற்று என்பதே அவர்களுடைய வாதம்.

காஷ்மீர் பகுதியைப் பற்றி அதிகாரம் 42-ல், குறிப்பு—10 பார்க்கவும். சீனப்பயணி யுவான் சுவாங் (கி.பி. 629—645) இவ்விடத்தை கிய-ஷி-மி-லோ (Kia-She-Mi-Lo) என்று வழங்கினுர்.

காஷ்மீரத்தின் இருப்பிடம்; 34°·6′வ × 74°·5′கி.

காஷ்மீர் எனும் நாடு, ஹிராடடஸ், பாணினி, வியாஸர் ஆகியவர்களாலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

காஷ்மீரத்தை ஆண்ட பேரரசர் கனிஷ்கர் (Kanishka) ஆவார். அவர் ஆண்ட காலம் கி.பி. 78—119. அதாவது கனிஷ்கர் ஆண்டு வந்தது 41 ஆண்டுகள் ஆகும்.

# 48. காஸ்யபியர் நகரங்கள்

*காஸ்யபியர் பிரதேசத்தில்[1] உள்ள நகரங்கள் :*

| | | |
|---|---|---|
| *சாலாகிஸ்ஸா*[2] | ... | 129°·30′கி × 34°·30′வ. |
| *அஸ்ட்ரசாஸ்*[3] | ... | 131°·15′கி × 34°·15′வ. |
| *லபோக்லா*[4] | ... | 128°· 0′கி × 33°·20′வ. |
| *பட்நகரா*[5] | ... | 130°· 0′கி × 33°·20′வ. |
| *அரிஸ்பரா*[6] | ... | 130°· 0′கி. × 32°·50′வ. |
| *அமகாடிஸ்*[7] | ... | 128°′15′கி × 32°·20′வ. |
| *அஸ்டபலசரா*[8] | .... | 129°· 0′கி × 32°· 0′வ. |

## விளக்கவுரை

**1. காஸ்யபியர் பிரதேசம்** (The Country of Casyapeare)

காஸ்யபியர் என்ற சொல் காஸ்யப மகரிஷியைக் (Kasyapa) குறிப்பிடுகிறது. அவராலோ அல்லது அவர் பெயராலோ நிர்மாணிக்கப்பட்ட நாடு காஸ்யபநாடு. அதுவே நாளடைவில் காஷ்மீர் (Kasmere) என்றாயிற்று. குசுமபுரம் (குசுமமலர் நிறைந்த இடம்) என்பதே காஷ்மீர் ஆயிற்று என்றும் கூறப்படுகிறது.

இதைப் போன்று ரிஷிகள் பெயரால் நிர்மாணிக்கப்பட்ட நாடுகள் :

(I) **பாரிகாஸா** (Barygaza) : இது பிருகு, கச்சா என்ற சொற்களின் இணைப்பே. பிருகு மகரிஷியால் (Brighu)—அவர்பெயரால்—நிர்மாணிக்கப்பட்ட நாடு. இன்று அவ்விடம் புரோச் (Broach) என்று வழங்கப்படுகிறது.

புரோச்சின் இருப்பிடம் : 21°·41′வ × 73°·1′கி.

இவ்விடம் பிளினியால் பிரன்காசி (Brencosi) என்று வழங்கப்பட்டது.

"இந்த முந்நூறு நகரங்களையும் கடந்து சென்றால், தரங்கி... பிரன்காசி...ஆலஸ்திரி முதலிய நாடுகள் காணப்படும்."

—(**பிளினி:** புத்தம் VI, அதிகாரம் 23, பக்கம் 39)

(II) **ரான் ஆப் கட்ச்** (Rann of Cutch): ரான் (Rann) என்பது இருணம் என்பதன் திரிபே. இருணம் என்றால் உவர் நிலம் என்பது பொருள். கட்ச் என்பது காசியப மகரிஷியின் குறுக்கமே. ஆக, ரான் ஆப் கட்ச் என்ற இடம் காசிய மகரிஷியால் ஏற்படுத்தபட்டதே—(**பெரிப்ளூஸ்** : அதிகாரம் 40, குறிப்பு-2, பக்கம் 154)

ரான் ஆப் கட்ச் இருப்பிடம் : 24°·0′வ × 70°·0′கி.

(III) **அகஸ்தியர் மலை** : இது அடைசத்திரான் (Adaisatran) என்று வழங்கப்பட்டு, குடகுமலையைக் குறிப்பிடுவதாயிற்று. ஆக, குடகுமலை அகஸ்தியர் வாழ்ந்துவந்த இடம் என்றும், அவர் பெயரால் நிர்மாணிக்கப்பட்டதென்றும் தெரியவருகிறது. (அதிகாரம் 23, குறிப்பு-1)

மற்றும் பொதியில் (Podiyil) என்னும் மலை அகஸ்தியர் பெயரால் குறிப்பிடப்படுகிறது. குற்றாலமலைமீது 5 மைல்கள் (8 கிமீ.) சென்றால் அகஸ்திய ஆச்ரமம், அகஸ்திய ஏரி, அகஸ்திய தீர்த்தம் முதலியவை காணப்படுகின்றன. அகஸ்தியர் ஏரியி

லிருந்து தாமிரபருணியின் ஒரு கிளை நதி புறப்படுவதாகக் கூறப் படுகிறது. மலைமீது அவ் ஏரி மிகப் பெரியதாகும்.

குடகுமலையின் இருப்பிடம்: 12°·20′வ×76°·10′கி.

பொதியில் மலையின் இருப்பிடம்: 8°·58′வ×77°·21′கி.

(IV) **பாணினி மகரிஷி** (Panini): பாணினி மகரிஷி இருந்த இடம் போலோ-டூ-லோ (Po-To-Lo) என்று யுவான் சுவாங்கினுல் விவரிக்கப்பட்டுள்ளது. பாணினி, சாலத்துறையர் என்றும் குறிப் பிடப்படுகிருர்—(**யுவான் சுவாங்**: பக்கம் 60)

(V) **பரசுராம க்ஷேத்திரம்** (Parasuramar): இவர் மலையாள நாட்டில் இருந்ததாகவும், அவர் பெயரால் பரசுராம மலை என்று மலையாள மலையில் ஒரு பகுதி குறிப்பிடப்படுகிறது என்றும் கூறப்படு கிறது. பரசுராம க்ஷேத்திரம் என்ற ஊர் மங்களூர் (Mangalore) அருகில்உள்ளது.

மற்றும் பாரத்வாஜ ஆஸ்ரமம், சபரி ஆஸ்ரமம், அகஸ்திய ஆஸ்ரமம், கௌதமரிஷி ஆஸ்ரமம், முனிபுங்கவர் ஆஸ்ரமம், ஆகியவையும் அவற்றைச் சார்ந்த இடங்களும் இராமாயண காவி யத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

(VI) **கயா**: கய மகரிஷியின் பெயரால் நிர்மாணிக்கப் பட்டது. 'கயாசிரார்த்தம்' செய்வதற்குப் புகழ் பெற்ற இடம்.

(VII) **ஒரிஸா**: இது தூர்வாஸ மகரிஷியால் உண்டாக்கப் பட்டது அல்லது சபிக்கப்பட்டது.

**2. சாலகிஸ்ஸா** (Salagissa)

இச் சொல் சிலா—காஸ்யபா என்பதன் திரிபே. சிலா என்ருல் மலை. ஆக, சாலாகிஸ்ஸா என்பது காஷ்மீர் மலை என்பதைக் குறிப்பிடும் சொல்லாகும்.

காஷ்மீரின் இன்றைய தலைநகரம் ஸ்ரீநகர் (Srinagar) ஆகும்.

காஷ்மீர்மலை (ஸ்ரீநகர்) இருப்பிடம்: 34°·6′வ×74°·51′கி.

இது நவீன சியால்காட் என்பதைக் குறிக்கும் எனவும் கூறப் படுகிறது. சியால்காட் (Sialkot) என்பதன் முந்தைய பழைய பெயர் சாகலா (Sakala). இச்சொல் சாகா கிளையைச் சார்ந்த வரும், சாகா ஆண்டாகிய கி.பி. 78ஐத் தொடங்கியவருமான கனிஷ்கர் II என்பவர் நிர்மாணித்த ஊர் என்று பொருள் தரும்.

சியால்காட் பஞ்சாப் பகுதியைச் சார்ந்ததாகும்.

சியால்காட்டின் இருப்பிடம்: 32°·31′வ×74°·36′கி.

**3. அஸ்ட்ரசாஸ் (Astrasos)**

இச் சொல் அஷ்டசம்பா (Ashtachampa) எனப்படும் சாம்பா (Champa) நாட்டைக் குறிப்பிடுகிறது. இது ராவி நதிக்கரையில், பஞ்சாபைச் சார்ந்த பகுதியில் உள்ளது. காஷ்மீரின் தென்பகுதி யான இப் பகுதியும் மலைப்பிரதேசமே. சண்பகமலர் நிறைய இருந்ததன் காரணமாகச் சண்பகா என்று வழங்கப்பட்ட தென்றும், அதுவே நாளடைவில் சாம்பா என்று வழங்கப்பட்ட தாகவும் கூறப்படுகிறது—காஷ்மீர் என்பது முன்னர் குசுமபுரம் என்று வழங்கப்பட்டதுபோல குசும புரம் என்பது குசுமமலர்கள் நிறைந்த புரம் என்று அதற்குப் பொருள்.

சாம்பாவின் இருப்பிடம்: 32°·29′வ × 76°·10′கி.

**4. லபோக்லா (Labokla)**

லபோக்லா (Labokla) எனும் இடம் நவீன லாகூர் (Lahore) என்ற நகரத்தைக் குறிப்பிடுவதாகத் திரு. லாஸன் (Lassen) என்பார் குறிப்பிட்டுள்ளார். லாகூர், பஞ்சாபில் உள்ள பண்டைக் கால நகரம். பஞ்சாப் என்பது ஐந்து நதிகள் ஓடும் பிரதேசம் பஞ்ச்-ஐந்து; ஆப்-நதி) என்று பொருள்படும். பஞ்சாபின் முந்தைய வேதகாலப் பெயர் சப்த சிந்து (சிந்துவின் சப்த-ஏழு-கிளைகளைக் கொண்டது) என்பதாகும்.

லபோக்லா எனும் நகரம் இராமாயண கதாநாயகனை இராமனுடைய மகன் லவன் (Lava) என்பவன் பெயரால் நிர்மா ணிக்கப்பட்டது. முதலில் இலவ-நகர் என்று இருந்த பெயர், லவ-கா, என்றாகி, அதுவே லாகூர் (Lohore) என்றாயிற்று.

இராமன் பெயராலும், இராமனுடைய மற்றொரு மகன் குசன் பெயராலும், அவர் மனைவி சீதையின் பெயராலும், தம்பிகள் பரதன், இலட்சுமணன் பெயர்களாலும் பல ஊர்கள் வடநாட்டில் நிர்மாணிக்கப்பட்டிருந்தன. இன்றும் அவை பெயர் மாற்றம் அடையாமலே வழங்கப்பட்டு வருகின்றன. இராம் நகர், இலட்சு மணபுரி (Lucknow), சீதாப்பூர் குசரன்வாலா, பரத்பூர், அனுமான் நகர் மற்றும் பல.

லாகூரின் இருப்பிடம்; 31°·37′வ × 74°·26′கி.

**5. பட்நகரா (Bhatnagara)**

பட்நகரா (Bhatnagara) என்னும் ஊர் அம்ருதசரஸ் (Amritsar) பகுதியில், படாளா (Batala) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது குர்டாஸ்பூருக்குத்

(Gurdaspur) தெற்கேயுள்ளது. குர்டாஸ்பூர் எனும் இடம் கருடபுரம் (Garudapura) என்பதன் திரிபே. அதற்கருகில் கருட வாலா, கோவிந்தபுரம் முதலிய ஊர்களும் காணப்படுகின்றன.

படாளாவின் இருப்பிடம்: 31°·49′வ×79°·14′கி.

**6. அரிஸ்பரா (Arispara)**

அரிஸ்பரா என்பது ஹஸ்தினாபுரம் (Hasthinapuram) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. பாண்டவர்கள்—மகாபாரத காவியத்தில் கூறப்படுபவர்கள்—ஹஸ்தினாபுரத்துடன் தொடர் கொண்டு இருந்தனர் என்று மகாபாரதம் கூறுகிறது. இராமாயணம் (Ramayana), மகாபாரதம் (Maharbharata) மிகப் பழைய காவியங்கள். கிறித்து பிறப்பதற்கு 3000 ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டவையாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். (அதிகாரம் 50, குறிப்பு–1 பார்க்கவும்).

ஹஸ்தினாபுரம், நவீன டெல்லிக்கு 96 கிமீ. (60 மைல்கள்) கிழக்கில் உள்ளது. ஹஸ்தினாபுரம் என்ற பெயரே இன்று ஹசன்பூர் (Hassanpur) என்று வழங்கப்படுகிறது. இது ரோஹில் கண்டு (Rohilkhand) மாவட்டத்தில் கங்கை நதிக்கரைமீது மொரதாபாது—(Moradabad) தாலூகாவில் உள்ளது.

ஹசன்பூர் இருப்பிடம்: 28°·38′வ×78°·13′கி.

**7. அமகாடிஸ் (Amacatis)**

அமகாடிஸ் எனுஞ் சொல் அம்பா (Amba), கபி (Kapi) என்ற இரு சொற்களின் இணைப்பே என்று கூறப்படுகிறது. இவ்விடம் இன்று ஷேகுபூர் (Shekupur) (லாகூருக்கு வெகு அண்மையில் உள்ளது) என்று வழங்கப்படுகிறது. அங்குத் தோண்டப்பட்ட அழிபாடுகள் இவற்றைத் தெரிவிக்கின்றன என்று ஆராய்ச்சியாளர் சிலர் கூறுகின்றனர். அம்பா என்ற பெண் தெய்வத்தின் சகோதரனே கபி எனப்படுபவன் என்றும், அம்பா-கபியின் இணைப்பே கிரேக்க உச்சரிப்பில் அமகாடிஸ் என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் கூறப்படுகிறது.

ஆனால், இவ்வூர் அம்ருதசரஸ் பகுதியில் (Amritsar), தாரு-தாரான் (Taru Taran) என்னுமிடத்தை வழங்குவதாக இருக்க வேண்டும். அம்ருதசரஸ் என்பதையே அமகாடிஸ் என்று தாலமி கூறியிருக்கவேண்டும். தாரு-தாரான் என்பது சகோதரி-சகோதரன் ஆகிய இருவர்களின் பெயர்களே. அம்ருதசரஸ் ராவி நதிக்குக் கிழக்கே உள்ளது. அம்ருதசரஸ் சீக்கியர்களால்தான் முதன் முதல் நிர்மாணிக்கப்பட்டதாகக் கூறப்படுவதற்கு எவ்வித ஆதார

மும் கிடையாது. அவ்விடம் பண்டைக் காலத்திலிருந்தே பெருமை பெற்றது. அவ்வாறு ஏற்கெனவே புகழடைந்த இடத்தில் சீக்கியர்கள் பொற்கோயில் என்று ஒரு கோயிலை எழுப்பினார்கள். லாகூர் (Lahore), அம்ருதசரஸ் (Amritsar), தாரு-தாரான் (Taru Taran) ஆகிய இம்மூவிடங்களும் இன்று இருப்புப்பாதையால் இணைக்கப் பட்டுள்ளன.

தாரு-தாரானின் இருப்பிடம்: 31°·27′வ×75°·7′கி.

**8. அஸ்டபலசரா** (Asta Balasara)

அம்ருதசரஸ் (Amritsar) என்ற சொல்லே கிரேக்க உச்சரிப் பில் அஸ்ட பலசரா (Asta Balasra) என்று வழங்கியிருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. இது ராவி நதிக்கும் (Ravi), சட்லெஜ் (Sutlej) நதிக்கும் இடையில் உள்ளது. லாகூருக்கும் கிழக்கே உள்ளது.

அம்ருதசரஸ் என்ற சொல் அம்ருத-சிரஸ், அம்ருத-சிலா எனும் சொற்களின் திரிபே என்று கருதப்படுகிறது. அதாவது அம்ருதம்-நீரை-சிரஸ்-தலையில்-கொண்ட சிவபெருமான் உள்ள இடம் என்று பொருள்கொள்ளப்படுகிறது. இவ்விடம் பண்டைக் காலத்திலிருந்தே புகழ் பெற்றதாகும்.

அம்ருதசரஸின் இருப்பிடம்: 31°·37′வ×74°·48′கி.

சிலர் இவ்விடம் தானேஸ்வரம் எனப்படும் தானேஸ்வர் (Tanes-war) என்பதைக் குறிப்பிடுவதாகக் கொள்கின்றனர். தானேஸ் வரத்தின் முந்திய பெயர் ஸ்தாணேஸ்வரம்; அதாவது ஸ்தாணு-ஈஸ்வரர் என்பது. ஸ்தாணு கம்பம் அல்லது தூண் என்றும், ஈஸ் வரர் என்பது சிவன் என்றும் பொருள்படும். ஆக, தூண் வடிவ வாக நின்ற ஈஸ்வரர் என்ற பொருள் கொண்ட இவ்வூரே தானேஸ் வரம் என்று வழங்கப்பட்டது. ஸ்தாணு என்ற சொல்லே தாணு என்று குறுகிற்று.

"உயர்ந்தோர்க்குத் தாணுமன்"

—(**புறப்பொருள் வெண்பாமாலை**: 4 : 20)

"தரும நீடுருவத் தாணு தாணுவே யெனவிருந்தான்."

—(**திருவாலவாய்ப் புராணம்**: 28 : 43)

தானேஸ்வரம் மொகலாயர் காலத்தில் வரலாற்றில் இடம் பெற்றது. தானேஸ்வரத்தில் உள்ள ஆலயம் கி.பி. 1014-ல் கஜனி முகமதுவினால் தரைமட்டமாக்கப்பட்டு, அக் கோயிலுள் உள்ள பொருள்கள் யாவும் கொள்ளையடிக்கப்பட்டன.

தானேஸ்வரம் கர்னுல் பகுதியில் உள்ளது. பானிப்பட் (Panipat) என்னும் இடத்துக்கு வடக்கில் உள்ளது. பானிப்பட் வரலாற்றில் புகழ் பெற்ற இடமாகும். மொகலாயர் காலத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

தானேஸ்வரம் பாண்டவர்கள் இருந்த இடமாகக் கருதப் படுகிறது. இது மகாபாரதத்தில் குறிப்பிடப்படுவதாக வரலாற்ருசிரியர்கள் கூறுகின்றனர்.

யுவான் சுவாங் என்னும் சீனப் பயணி (கி.பி. 629—645) இதைச் ச-தா-னி-ஷி-போ-லோ (Sata-Nishi-Polo) என்று வழங்கினர். தானேஸ்வரத்தில் பிரபாகவர்த்தனர் ஆண்டார் என்றும், அவருக்கு ராஜ்யவர்த்தனர், ஹர்ஷவர்த்தனர் என்னும் இரு பிள்ளைகளும், ராஜ்யஸ்ரீ என்ற ஒரு பெண்ணும் பிறந்தார்கள் என்றும் வரலாறு கூறுகிறது. ஹர்ஷவர்த்தனர் கி.பி. 605 முதல் கி.பி. 647 வரை அரசாண்டார்.

—(**யுவான் சுவாங்:** பக்கம் 214)

தானேஸ்வரத்தின் இருப்பிடம்: 29°·58′வ × 76°·56′கி.

---

# 49. இந்தபரா

*இந்தபராவைச் சுற்றிலுமுள்ள நகரங்கள்*[1] :

| | |
|---|---|
| *காஸ்பியரா*[2] | ... 127°· 0′கி × 31°·15′வ. |
| *பஸிகஞு*[3] | ... 128°·30′கி × 31°·15′வ. |
| *டைடலா*[4] | ... 128°· 0′கி × 30°·30′வ· |
| *அர்டோனி*[5] | ... 126°·15′கி × 30°·10′வ. |
| *இந்தபரா*[6] | ... 128°· 0′கி × 30°·30′வ. |
| *லிங்கநேரா*[7] | ... 125°·30′கி × 29°· 0′வ. |
| *கோன்னமகரா*[8] | ... 128°·00′கி × 29°·30′வ. |

### விளக்கவுரை

1. **இந்தபராவைச் சுற்றிலுமுள்ள நகரங்கள்** (Places and towns around Indapara)

இந்தபரா (Indapara) எனும் சொல் இந்திரப் பிரஸ்தம் (Indraprasta) எனும் இடத்தைக் குறிக்கிறது. இந் நகரம் நவீன

டெல்லிக்கு (Delhi) மிக அண்மையில் இருந்தது. இந்திரப்பிரஸ்தம் மகாபாரதத்தில் குறிப்பிடப்படுகிறது. இங்கு வாணிகம் பெரும் அளவில் நடந்தேறியது.

இன்று டெல்லி இருக்கும் இடமே முன்னர் இந்திரப்பிரஸ்தம் இருந்த இடமாகும். டெல்லியின் 10 கிமீ. (6¼ மைல்)சுற்றளவுக்குள் இருந்தது.

"டெல்லி இருக்கும் இடத்துக்கருகில் இந் நகரம் விளங்கிற்று. இது மகாபாரதம் காலத்திலேயே புகழ்பெற்றிருந்தது. பாண்டவர் நாட்டின் தலைநகரமாக விளங்கிற்று. டெல்லி நகரம் [டெல்லி (Delhi)] என்ற பெயருடன் கி.பி. 11ஆம் நூற்றாண்டில்தான் உருவாயிற்று. அதற்குமுன் அதன் பெயர் இந்திரப் பிரஸ்தம். புராணங்கள் பலவற்றிலும், இந்திரப்பிரஸ்தம், ஹஸ்தினாபுரம் முதலிய இடங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன."

—(Vide The Early History of India By Vincent A. Smith, M.A. p. 354)

இந்திரப் பிரஸ்தத்தின் இருப்பிடம்: 28°·38′வ×77°·12′கி.

**2. காஸ்பியரா (Caspiarah)**

காஸ்பியரா (Caspiarah) எனும் சொல் காஷ்மீரைக் (Kahmere) குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இந் நாடு காசியப மகரிஷியாலோ அல்லது அவர் பெயராலோ நிர்மாணிக்கப்பட்டது (அதிகாரம் 42, குறிப்பு 10). காஷ்மீரத்தின் தலைநகர் ஸ்ரீநகர் (Srinagar).

கனிஷ்கர் கி.பி. 75-ல் பட்டமெய்தினார். கி.பி. 78-ல் சாகா (Saka) ஆண்டை-சகாப்தத்தைத்-தோற்றுவித்தார். கி.பி. 111-ல் சீனரைப் போரில் வென்றார். புத்தமதத்தைப் பரவச் செய்வதில் முனைந்து மகாயானக் கிளையைச் சார்ந்தவர்களை ஒன்று கூட்டினார் (Council). கி.பி. 119ஆம் ஆண்டு, தம் அமைச்சர் செய்த சதித் திட்டத்தினால் கொல்லப்பட்டார். ஆக, கனிஷ்கர் காலத்தில் (கி.பி. 78—119) காஷ்மீர் புகழ்மிக்கு விளங்கிற்று.

காஷ்மீரத்தின் இருப்பிடம்: 34°·6′வ×74°·51′கி.

**3. பஸிகனா (Basicana)**

பஸிகனா (Basicana) எனும் இடம் லூதியானா (Ludhiana) பகுதியில் உள்ள பஸி (Basi) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது.

பஸியின் இருப்பிடம்: 30°·40′வ×76°·25′கி.

**4. டைடலா (Taitala)**

டைடலா (Taitala) என்னும் இடம் நவீன டன்ட்லா (Tantla) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. இது ஆக்ராவிற்கு (Agra) வடகிழக்கில் யமுனை நதிக்கரைமீது உள்ளது.

டன்ட்லாவின் இருப்பிடம்: 27°·10′வ×78°·14′கி.

**5. அர்டோனி (Ardoni)**

இது நவீன மீரட்டில் (Meerut) உள்ள சர்தானு (Sardhana) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. மீரட் என்பது நவீன பெயரே. அக்பர் அரசாட்சி காலத்தில் (கி.பி. 1560—1605) பக்த மீராவின் பெயரால் நிர்மாணிக்கப்பட்ட நகரமே மீரட் ஆகும்.

சர்தானுவின் இருப்பிடம்: 29°·1′கி×75°·47′கி.

**6. இந்தபரா (Indapara)**

இச் சொல் இந்திரப் பிரஸ்தம் (Indraprasta) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. மற்ற விவரங்களுக்கு மேலே குறிப்பு-1 பார்க்கவும்.

இந்திரப் பிரஸ்தத்தின் இருப்பிடம்: 28°·38′வ×77°·12′கி.

**7. லிங்கநேரா (Linganera)**

லிங்கநேரா எனுஞ்சொல் ஜலீசர் (Jaleesar) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. ஜலீசர் என்பது ஜலகண்டேஸ்வரர் என்பதன் குறுக்கமே. அங்க லிங்க வடிவமாக கோயில் ஒன்று இருந்தது. லிங்க நௌரா என்பது லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்ட புதிய இடம் உள்ளது. மத்ரா என்பது வடநாட்டு மதுரை; மதுராபுரி என்றும் வழங்கப்படும்.

ஜலீசரின் இருப்பிடம்: 27°·28′வ×78°·14′கி.

தென்னாட்டில் திருவானைக்காவல் என்பது ஜலகண்டேஸ் வரபுரம் என்ற பெயர் பெறும். அங்கு லிங்கமானது, காவிரி நதிச் சுனை வழியாக வழிந்தோடும் பகுதியில் அமைக்கப்பட்டுள்ளது. அக்காவிரி நீர் லிங்கத்தைச் சுற்றிச் செல்கிறது. எப்பொழுதும் லிங்கத்தினருகில் நீர் சுரந்து கொண்டேயிருக்கும்.

ஹிந்து மதத்தின் மணிகள் கோக்கப்பட்ட நூலிழை, தென்னிந்தியாவைப் போல, வடஇந்தியாவிலும் ஊடுருவிப் பாய்ந்து நின்றதல்லவா? மக்களின் பண்பாடும் உள்ளுணர்ச்சியும் எக்காலத்திலும் ஒன்றே என்பதையே இவ்வொற்றுமைச் செய்திகள் எடுத்துக் காட்டுகின்றனவன்றோ?

**8. கோன்னமகாரா (Connamagara)**

இது கோவிந்தகிரி (Govindagiri) எனும் ஊரைக் குறிப்பிடு கிறது. கோவிந்தகிரி என்பது கோவர்த்தனகிரி என்பதன் மரூஉ. கோவர்த்தனகிரி என்பதன் கிரேக்க உச்சரிப்பே கோன்னமகாரா.

கோவர்த்தனம் என்னுமிடம் கிருஷ்ணன் மலையைக் குடையாகப் பிடித்த இடமாகும். பாகவதத்திலும், மகாபாரதத்திலும் குறிப்பிடப்பட்ட மிகவும் புகழ்பெற்ற இடமாகும். இது வட மதுரைக்கு—நவீன—மத்ராவுக்கு—வெகு அண்மையில் உள்ளது.

கோவர்த்தனம் அருகிலேயே கிருஷ்ணன் கோபிகளுடன் ராசக்கிரீடை செய்த பிருந்தாவனம் என்னும் ஊரும் உள்ளது. இதுவும் மகாபாரதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விரண்டு இடங்களின் விளக்கங்களை அடுத்த 50 ஆம் அதிகாரத்தில் காணலாம்.

கோவர்த்தனத்தின் இருப்பிடம்: 27°·28′வ × 77°·41′கி.
பிருந்தாவனத்தின் இருப்பிடம்: 27°·33′வ × 77°·44′கி.

கோவர்த்தனகிரி, பிருந்தாவனம், வடமதுரை, இந்திரப் பிரஸ்தம், குருக்ஷேத்திரம், ஆகிய பண்டை நகரங்கள் இன்றும், புகழ்பெற்று விளங்குகின்றன. அவை பலவகை மக்களுக்குப் புண்ணியப் பயண இடங்களாகப் பயன்பட்டு வருகின்றன.

---

# 50. மதுரா

*மதுராவைச் சுற்றிலுமுள்ள நகரங்கள் :*

| | |
|---|---|
| *மதுரா (தேவரின் நகரம்)*[1] | ... 125°· 0′கி × 27°·30′வ. |
| *ககாஸ்மிரா*[2] | ... 126°·40′கி × 27°·30′வ. |
| *ராராஜா (வெளிப்புற நகரம்)*[3] | ... 123°· 0′கி × 26°· 0′வ. |
| *கோகநந்தா*[4] | ... 124°· 0′கி × 26°· 0′வ. |

## விளக்கவுரை

**1. மதுரா** (Modeira); **தேவரின் நகரம்** (The City of God)

மதுரா என்னும் இடம் நவீன மத்ரா (Muttra)வைக் குறிப்பிடு கிறது. இது புண்ணியத்தலமும், புராணத்தலமும் ஆகும். இங்குத்தான், மகாபாரதத்திலும், ஸ்ரீமத்பாகவதத்திலும் விதந்தோதப்படும் ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்து, லீலைகள் புரிந்த இடமாகும்.

மகாபாரதம் நடந்த ஆண்டு; வெள்ளிக் கிழமை, 22-11-3067 கி.மு. என்றும், கிருஷ்ணபரமாத்மாவின் பிறப்பு வெள்ளிக்கிழமை, 27—7—3112 கி.மு. என்றும், கிருஷ்ணர் முக்தியடைந்தது 13—4—3031 கி.மு. வெள்ளிக்கிழமை என்றும், அதுவும் சித்திரைமாதம், சுக்ல பட்சம், பிரதமை திதி என்றும், கலியுகம் தொடங்கிய ஆண்டு ஞாயிறு 11—1—3014 கி.மு. என்றும், கிருஷ்ணர் இப்பூவுலகில் 80 ஆண்டுகள் 9 மாதங்கள் இருந்த தாகவும், தகுந்த ஆதாரங்களுடன் பேராசிரியர் திரு. K. ஸ்ரீநிவாச ராகவன், அரவிந்தர் ஆராய்ச்சி நிலையத்தார் வெகு ஆணித்தரமாக எடுத்துக் காட்டியுள்ளார். (**மகாபாரத யுத்தகாலமும் கலியுகத் தோற்றமும்**: பேராசிரியர் K. ஸ்ரீநிவாச ராகவன் B.A. (Hons) Maths; Dip. in Geog; Dip in. P.Ed.) ஸ்ரீநிவாசநகர், தாம்பரம், சென்னை-பக்கம் : 31)

இயேசுநாதரும் சிலுவையில் வெள்ளிக்கிழமையன்றே அறையப் பட்டார் என்பதற்கும், கிருஷ்ணு என்ற பெயரே கிறைஸ்ட் என்று குறுக்கமடைந்து நிற்பதற்கும் மேற்கூறப்பட்ட செய்திகளுக்கும் எத்துணை ஒற்றுமை காணப்படுகின்றன.

ஸ்ரீ கிருஷ்ணர் தோன்றியது மதுராபுரி என்றால், அவர் தோன் றிய ஆண்டுக்குப் பல நூற்றாண்டுகள் முன்னரே அந் நகரம் புகழ் பெற்றிருக்கவேண்டும் அல்லவா? ஆகையால், மதுரா எனப்படும் வட மதுரை தோன்றி ஏறக்குறைய 5000 ஆண்டுகளுக்கும் மேலா கிறது என்பது தெரியவருகிறது.

ஸ்ரீ இராமாயணத்தில் தென்னாடும், தென்னாட்டு மதுரையும், கபாடபுரமும் குறிக்கப்படுவதால், தமிழ்நாட்டு மதுரையும் தோற்ற மெடுத்து 2000 ஆண்டுகளுக்கும் மேலாக இருக்கவேண்டும் என்று அறிகிறோம்.

மதுரா என்னும் நகரம் ஸ்ரீ இராமருடைய தம்பியாகிய சத்ருக் னன் என்பவரால் நிர்மாணிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

இந் நகரைப் பாண்டவர்கள் தங்கள் இருப்பிடமாகக் கொண் டிருந்தனர்.

இந் நகர் யமுனை நதிக்கரையில், ஆக்ராவுக்கு 56 கிமீ. (35 மைல்) தொலைவில் வடமேற்கில் உள்ளது.

பிருந்தாவனம் எனப்படும் இடமும் மதுராவிற்கருகில் உள்ளது. இங்குத்தான் கிருஷ்ணன் கோபிமார்களுடன் இன்பப் பொழுது

போக்கியதாகவும், ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்ருக ஐக்கிய மானதாகவும் கூறப்படுகிறது. மற்றும் கோவர்த்தனம் என்னும் குன்றைக் குடைபிடித்த இடமும் இதன் அருகில் உள்ளது.

இப் பகுதியில் தாலமி வட மதுரையையும் (Muttra) அதைச் சுற்றிலுமுள்ள பகுதியையும் குறிப்பிட்டுள்ளார்.

இந் நகரத்தைக் கிரேக்கர்கள் பல விதமாக உச்சரித்துள்ளனர்: மடுரா (Madura), மடௌரா (Madoura), மதோரா (Mathora), மடீரா (Madeira).

இதைப் பிளினி, பெரிப்ளுஸ் ஆசிரியர், ஸ்டிராபோ, அர்ரியன் ஆகிய யாவரும் குறிப்பிட்டுள்ளனர்.

"கங்கை நதிக்கும் அப்பால் மதூரியே, மோலிண்டே, ........ தாலூடே எனும் நகரங்கள் புகழ் பெற்று விளங்கின.

—(**பிளினி** : புத்தகம் VI, அதிகாரம் 22, குறிப்பு-20, பக்கம் 28)

"பாண்டியா-துறைமுகம் கொற்கை. தலைநகரம் மடுரா."

—(**பெரிப்ளுஸ்** : அதிகாரம் 60, பக்கம் 268)

மற்றும் ஸ்ரீ கிருஷ்ண மதுராஷ்டகத்தில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

"அதரம் மதுரம் வதனம் மதுரம்
நயனம் மதுரம் ஹஸிதம் மதுரம்
ஹ்ருதயம் மதுரம் கடினம் மதுரம்
மதுராதிபதே ரகிலம் மதுரம்.

கரணம் மதுரம் தரணம் மதுரம்
ஹரணம் மதுரம் ரமணம் மதுரம்
வமிதம் மதுரம் ஸமிதம் மதுரம்
மதுராதிபதே ரகிலம் மதுரம்.

—(**ஸ்ரீ கிருஷ்ண மதுராஷ்டகம்** : 1-5)

இதனால் மதுரமான வாக்கும், மக்களுடைய மதுரமான போக்கும், மதுரமான கானமும், மதுரமான கண்களும், கைகளும், இதயமும் ஆகிய யாவும் அந் நகரில் உள்ள காரணத்தால், அந்நகரம் மதுரா என்று பெயர் பெற்றதென்றும், ஸ்ரீ கிருஷ்ணன் மதுராதிபதி என்னும் பெயரால் புகழ்ந்தோதப்பட்டார் என்றும் தெரிகிறது.

இம் மதுராபுரியைத் தேவரின் நகரம் என்று தாலமி கூறியுள்ளார்.

**தேவரின் நகரம்:** தேவர் என்ற சொல்லால்கிருஷ்ணபரமாத்மாவைக் குறிப்பிட்டார் போலும். அல்லது வசுதேவர் என்பவர் கிருஷ்ணரின் தந்தையார் ஆதலால், அன்னுருடைய பெயரால் இதை தேவரின் நகரம் என்றும் வழங்கியிருக்கக்கூடும். கீதாசாரியன் என்ற முறையில் பகவத் கீதையை வெளியிட்ட கடவுளின் இருப்பிடம் என்றும் கருதியிருக்கலாம்.

கஜனி முகமது இந்தியாமீது படையெடுத்தபோது மதுராவிலிருந்த கோயில்களின் கோபுரங்களின் அழகைக்கண்டு வியந்து, அவற்றைப் போன்ற உறுதியான அமைப்பைத் தம் நாட்டில் ஏற்படுத்த வேண்டுமென நினைத்து அவ்வாறே தம் நாட்டில் மசூதிகளைக் கட்டுவித்தார் என்றும் வரலாறு கூறுகிறது. இருப்பினும், மதுராவிலிருந்த கோயில்களைத் தீக்கிரையாக்கியதாக வரலாறு கூறுகிறது. கி.பி. 1014-ல் தானேஸ்வரம் என்பபடும் ஸ்தானேஸ்வரத்தை வென்று, கி.பி. 1015—1016-ல் மதுராவில் உள்ள கோயில்களை அழித்தார். சோமநாதபுர ஆலயம் கி.பி. 1026-ல் அவரால் தரைமட்டமாக்கப்பட்டது.
—(Vide **An Advanced History of India**: By Mukerjee R. K. p. 183)

மத்ராவின் இருப்பிடம்: 27°·28′வ × 77°·41′கி.

**2. ககாஸ்மிரா** (Cagasmira)

இவ்விடம் ஆஜ்மீர் (Ajmere) எனும் நகரத்தைக் குறிப்பிடுவதாகச் சில வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். ஆனுல், தாலமி, மதுராவையும், அதைச் சுற்றிலுமுள்ள அருகில் உள்ள இடத்தையே இப்பகுதியில் கூறியுள்ளார். ஆஜ்மீர் எனப்படும் இடம் ராஜபுதனம் சமஸ்தானத்தில் உள்ளது. இது ஆஜ்-மீரா என்னும் சொல்லின் அடியாகப்பிறந்த இடமேயாகும். பக்த மீராவின் பெயரால் நிர்மாணிக்கப்பட்டதாகும். இப்பிற்கால இடத்தைப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரிருந்த தாலமி கூறியிருக்க முடியாது. பக்த மீரா அக்பர் பேரரசரின் (Akbar) அரசாட்சிக் காலத்தில் (கி.பி. 1560—1605) வாழ்ந்தவள். ஆக தாலமி ஆஜ்மீர் என்பதைக் குறிப்பிட்டிருக்க முடியாது.

ஆஜ்மீரின் இருப்பிடம்: 26°·27′வ × 74°·4′கி.

மதுராவிற்கருகில் கோஸி என்ற ஊர் இன்றும் உள்ளது. அங்கே பசுமாடுகள் வளர்க்கப்பட்டன. கோ-சம்ரட்சணம் என்ற சொல்லினடியாகப் பிறந்ததே கோசி எனும் இவ்வூர். கிருஷ்ணனுக்குக் கோபாலன் (பசுவைக் காப்பாற்றுபவன்) என்ற பெயருண்டு. ஆகையால் மதுராவிற்கு 16 கிமீ. (10 மைல்)

வடக்கேயிருக்கும் ஊரே பசுக்கள் நிறைந்த—கோக்கள் நிறைந்த ஊரே—அன்று ககாஸ்மிரா அன்று கிரேக்கர்களால் உச்சரிக்கப் பட்டது.

கோஸியின் இருப்பிடம்: 27°·30′வ×77°·30′கி.

**3. ரா ராஜா (வெளிப்புற நகரம்)** (Ra Raja, Suburban City)

இது மதுராவின் எல்லேயில் இருந்த கிரிராஜ (Giriraja) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இதுதான் கோவர்த்தனகிரி இருந்த இடமாகும். இங்குத்தான் கிருஷ்ணபரமாத்மா கோவர்த் தனம் என்னும் குன்றைக் குடையாகப் பிடித்ததாகக் கூறப்படு கிறது.

"குன்று குடையாயெடுத்தாய்! குணம்போற்றி."
—[**திருப்பாவை:** 24-(4)]

"வானவர்கோன்விட வந்த மழை தடுத்து."
—[**பெரியாழ்வார் திருமொழி:** 2-10-(4)]

"கொற்றக் குடையாக ஏந்தி நின்ற
கோவர்த்தனத்து என்னே உய்த்திடுமின்."
—[**நாச்சியார் திருமொழி:** 12-(8)]

இந்திரன் மழையையும் இடியையும் வரவழைத்ததாகவும், கிருஷ்ணன் அங்கிருந்த மக்களே அப்பேராபத்தினின்றும் காத்த தாகவும், அதற்காக அங்கிருந்த குன்றையே குடையாகப் பிடித்துக் காப்பாற்றியதாகவும் புராண வரலாறுகள் கூறுகின்றன.

மதுராவிற்கு வடக்கே 7 கிமீ. (4 மைல்) தொலேவில் கோவர்த்தன் (Govardhan) என்ற ஊர் உள்ளது. (அதிகாரம் 49-குறிப்பு-8).

கோவர்த்தனத்தின் இருப்பிடம்: 27°·28′வ×77°·41′கி.

**4. கோகநந்தன** (Gocanandana)

கோகநந்தன எனும்சொல் கோகுல நந்தனம் (Gokula Nandana) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. இது இன்று பிருந் தாவனம் (Brindavanam) என்று வழங்கப்படுகிறது. நந்தனம் என்ற சொல் நந்தவனம் (மலர்ச் சோலே) என்பதன் குறுக்கமே. இங்குக் கிருஷ்ணபிரான் கோபிகளுடன் இன்பப்பொழுது போக்கின தாகவும், அதுவே இவ்வுலக மக்களின் ஜீவாத்மாவும், ஆதிபரம் பொருளான பரமாத்மாவும் இவ்வுலக பாசபந்தங்களினின்று விடுபட்டு, ஒன்றுக ஐக்யமான தத்துவத்தைக் குறிப்பிடும்

இடமாகவும் கருதப்படுகிறது. மற்றும் அதிகாரம் 49, குறிப்பு-8 பார்க்கவும்.

"விட்டுக் கொண்டு விளையாட விருந்தாவனத்தே
கண்டோமே."

—[நாச்சியார் திருமொழி : 14-1-(4) ]

"வேட்டையாடி வருவானை விருந்தாவனத்தே
கண்டோமே."

—[நாச்சியார் திருமொழி : 14-9-(4) ]

பிருந்தாவனத்தின் இருப்பிடம் : 27°·33′வ × 77°·44′கி.

---

# 51. ஜிம்ஞோஸோபிஸ்டாய்

*காஸ்யபியர் நாட்டிற்குத் தொலைகிழக்கில்[1], ஜிம்ஞோஸோபிஸ்டாய் நாடும்[2], இவற்றிற்கும் அப்பால் தொலைவடக்கில், ஜைடிகாய் நாடும்[3] உள்ளன.*

*இந்நாடுகளில் பின்வரும் நகரங்கள் உள்ளன :*

| | |
|---|---|
| *கோண்டா*[4] | ... 133°·30′கி × 34°·30′வ. |
| *மார்கரா*[5] | ... 135°· 0′கி × 34°· 0′வ. |
| *படங்கைசாரா*[6] | ... 132°·40′கி × 33°·20′வ. |
| *மற்றும் கங்கே ஆற்றின் கிழக்குப் பகுதியில்*[7] *:* | |
| *பஸ்ஸலா*[8] | ... 137°·0′கி × 34°·15′வ. |
| *ஓர்ஸா*[9] | ... 136°·0′கி × 33°·20′வ. |

### விளக்கவுரை

**1. காஸ்யபியர் நாட்டிற்குத் தொலைகிழக்கில்** (To the Far-east of the Country of Casyapeare)

காஸ்யபியர் (Casyapeare) எனுஞ்சொல் காஸ்யப ரிஷி என்றதன் கிரேக்க உச்சரிப்பே. காசியப ரிஷியின் பெயரால் நிர்மாணிக்கப்பட்ட நாடு நவீன காஷ்மீர் ஆகும். (அதிகரரம் 42, குறிப்பு-10; அதிகாரம் 49, குறிப்பு-2 பார்க்கவும்). இவ்வதிகாரத்தில் காஷ்மீர் நாட்டிற்குத் தொலைகிழக்கிலும், கங்கை நதிக்குக் கிழக்குப் பகுதிகளிலும் உள்ள நாடுகள் குறிப்பிடப்படுகின்றன.

காஷ்மீரின் இருப்பிடம் : 34°·6′வ × 74°·51′கி.

**2. ஜிம்னோஸோ பிஸ்டாய் (Gymnoso Phistai)**

ஜிம்னோ (Gymno) என்றால் ஹடயோகம் (Hatayoga) என்றும், ஸோபிஸ்டாய் (Sophistai) என்ற சொல் வாதப் புரட்டர் (Sophists) என்றும் பொருள்படும். ஆக, இச் சொல் குதர்க்கவாதம் செய்யும் ஹடயோகிகள் என்ற பொருளையே தரும். இவர்கள் ஜைனர் பிரிவில் திகம்பரர் (Digambarar) வகுப்பைச் சார்ந்தவர். திகம்பரர் நிர்வாண நிலையிலேயே நின்றனர். இவ்வுலக இச்சையை அறவே விட்டொழித்தவர். ஜைனரில் மற்றொரு பிரிவினர் ஸ்வேதாம்பரர் (Svetambarar) என்றும் வழங்கப்படுகின்றனர்.

(திகம்பரர்—ஆடையின்றி வெற்றுடலுடன் நிர்வாண நிலையில் இருத்தல்; ஸ்வேதாம்பரர்—ஸ்வேதம்—வெண்மை; அம்பரம்—துணி; ஆடை; வெண்மை ஆடை தரிப்போர்)

இவ்விருவர்களைப் பற்றியும் மார்க்கோபோலோ (கி.பி. 1254—1324) பின்வருமாறு எழுதியுள்ளார்:

“இந்நாட்டு ஆதிவாசிகளிடையே ஆசாரமும், அனுட்டானமும் மிக்க திங்குவி என்ற ஒரு சாரார்—தங்கள் தெய்வத்தின் மீது அதிதீவிர பக்திகொண்டு, சட்டதிட்டங்களுக்கு உட்பட்ட வாழ்க்கையை நடத்துகின்றனர். இவர்கள் தங்கள் உடலில் உள்ள யாதோர் உறுப்புகளையும் மூடாமல் நிர்வாண நிலையிலேயே ஊரெங்கும் திரிவார்கள். அதற்கு அவர்கள் கூறும் காரணம்: “நாம் பிறக்கும்போது நிர்வாண நிலையில்தானே பிறந்தோம்? அதற்கு ஏன் அவமானப்படவேண்டும்?,,

(மார்க்கோ போலோ: பக்கம் 70—71)

இவ்வாறு ஹடயோகிகள் விளங்கும் நாடு ரிஷிகேசம் (Rishikesh) எனப்படும் இமாலயப்பகுதி ஆகும். ஹரித்வாரம் (Haridwar) எனப்படும் பகுதியும் இதில் அடங்கும். இன்றைக்கும் ரிஷிகேசத்தில் சுவாமி சிவானந்தரின் ஆசிரமும், அங்கே யோகியர் பலர் உள்ள குகைகளும் காணப்படுகின்றன. கங்கை நதி இவ்விடத்தில் வளைந்து செல்கிறது.

ரிஷிகேசத்தின் இருப்பிடம்: 29°·58′வ × 78°·13′கி.

**3. ஜைடிகாய் நாடு (The Country of Jaitikai)**

ஜைடிகாய் என்ற சொல் ஜைடிநாட்டு மக்கள் என்று பொருள் படும். ஜைடி என்ற சொல் சேடி (Chedi) நாட்டைக் குறிப்பிடும். சேடி நாடு (Chedi) கங்கைக்குத் தெற்கிலும், சாம்பல் நதிக்குக் கிழக்கிலும், மாளவ நாட்டிற்கு வடக்கிலும், அலகாபாதுக்கு மேற்கிலும் இருந்த நாடாகும்.

மற்றும் சேடி நாடு கந்தர்வ நாட்டைக் குறிப்பிடும் என்றும் கூறுவர். கந்தர்வ நாட்டில்தான் பரதன் மகன் பெயரால் நிர்மாணிக்கப்பட்ட புஷ்கலபுரம் இருந்தது. இந் நகரம் கிரேக்க மக்களால் பியூகலேடிஸ் (Peucolatis) என்று வழங்கப்பட்டது.

பியூகலேடிஸ் இருந்த இடம்: 34°·8′வ×71°·46′கி.

சேடியைப் பிளினி (கி.பி. 23—79) பிரேடி (Preti) என்று வழங்கினர்—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 22, குறிப்பு-24, பக்கம் 29)

மற்றும் ஜைடிகாய் என்ற சொல் ஜடாதாரி என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பாகவும் இருக்கக் கூடும் என்று நம்பப்படுகிறது. ரிஷிகேசம், மற்றும் மலைச் சாரலில் தவஞ்செய்யும் ரிஷிகள் நீண்ட சடைகளை வளர்த்துக் கொண்டிருந்தனர். அது காரணமாக அவர்கள் சடாதாரிகள் என்று வழங்கப்பட்டனர். தவம் செய்பவர்கள் தங்கள் சடைகளைத் திரித்துக் கொண்டு, தனிமையில் தவஞ்செய்வர்.

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்."
—(திருக்குறள்: 280)

என்று திருவள்ளுவப் பெருந்தகையார் கூறியது ரிஷிகளைச் சுட்டிக் காட்டுவதுபோல் வெளிப்படையாகத் தோன்றுகிறது. ஆனால், அவர் சுட்டுவது தவஞ்செய்யும் ரிஷிகளை அல்ல. மனத்துள் வஞ்சனை வைத்துக் கொண்டு, வெளிவேடத்துக்காகச் சடையும் தாடியும் வளர்த்து வருபவரையே குறிப்பிடுகின்றார். மழித்தல் என்ற சொல்லால், ஜைனப் போலிச் சாமியார்களையும், நீட்டல் என்ற சொல்லால் ஹிந்துப் போலி சடாதாரிகளையுமே இங்குக் குறிப்பிடுகிறார்.

**4. கோண்டா** (Conda)

இப்பொழுதும் கோண்டா என்ற பெயராலேயே ஒரு பகுதி வழங்கப்படுகிறது. கோண்டா (Konda) உத்தரப் பிரதேசத்தில் உள்ளது. கோக்ரா நதிக்குச் (River Gogra) கிழக்கே உள்ளது. இப் பகுதியின் தலைநகரமும் கோண்டா என்பதே.

கோண்டாவின் இருப்பிடம்: 27°·28′வ×82°·1′கி.

**5. மார்கரா** (Margara)

இச் சொல் நவீன மாகர் (Magar) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. மாகர் என்ற இடம் கோரக்பூருக்கு (Gorakpur) 16 கிமீ.

10 மைல்) மேற்கில் உள்ளது. இது கோண்டாவிற்குக் கிழக்கேயும், அதை அடுத்தும் உள்ளது.

மாகரின் இருப்பிடம்: 26°·45′வ × 83°·13′கி.

**6. படங்கைசாரா** (Batangai Sarah)

இது கங்கைக்குக் கிழக்கேயுள்ளதும், ஷாஜகான்பூருக்கு (Shajahanpur) மேற்கே உள்ளதுமான இடம் ஆகும். மற்றும் இது உத்தரப்பிரதேசத்தைச் சார்ந்த படன் (Batan) என்னும் இடத்திலுள்ள சாரான் (Saran) என்னும் ஊரைக் குறிப்பிடுகிறது. படன்—காஞ்சஸ்—சாரான் என்ற இடமே படங்கை சாரா என்று கிரேக்க உச்சரிப்பில் காணப்படுகிறது. இது மத்ராவுக்கு (Muttra) வடகிழக்கில் உள்ளது.

படனின் இருப்பிடம்: 28°·2′வ × 79°·10′கி.

சாரானின் இருப்பிடம்: 27°·5′வ × 78°·48′கி.

படன் கங்கைக்கு கிழக்கேயுள்ளதாகக் குறிப்பிடுகிறார். சிலர் இவ்விடம் ஷஹ்ரான்பூரைச் சேர்ந்தது என்றும் கூறியுள்ளனர். ஷஹ்ரான்பூர் டெல்லிக்கு வடக்கேயுள்ளது. அட்சாம்சமும் பொருந்தக் கூடியதாக இல்லை. ஆக, படன் எனும் இப்பிரதேசம் முற்காலத்துப் பெயரையே கொண்டுள்ளமை நன்கு தெளியப்படும். இதுவே பொருந்தக் கூடியதும் ஆகும்.

**7. கங்கே ஆற்றின் கிழக்குப் பகுதி** (Places East of the River Gange-s)

இனி வரும் இடங்களும் கங்கை நதியின் கிழக்கில் உள்ள நாடுகளைக் குறிப்பிடுவதாகக் கூறப்பட்டுள்ளது. கங்கைக் கழிமுகத்தில், ஹூக்ளி நதியின் முகத்துவாரத்தில் அன்று தாமிரலிப்தி (Tamiralipti) எனும் துறைமுகம் பண்டைக் காலம் முதல் புகழ் பெற்றிருந்தது. தாமிரலிப்தி என்பதே நவீன தாம்லுக் (Tamluk) ஆகும்.

தாம்லுக்கின் இருப்பிடம்: 22°·18′வ × 87°·58′கி.

**8. பஸ்ஸலா** (Bassaula)

இது ரோகில்கண்டில் உள்ளதும், கங்கைக்குக் கிழக்கேயுள்ளதுமான பிஸ்ஸௌலி என்னும் ஊரைக் குறிப்பிடுகிறது. இவ்வூர் சந்தன்ஸியிலிருந்து 32 கிமீ. (20 மைல்) தென்கிழக்காக உள்ளது. முற்காலத்தில் இஃது ஒரு முக்கிய வணிக நகரமாக விளங்கிற்று. வாணிகச் சந்தையாகவும் திகழ்ந்தது.

**பிளினி** (கி.பி. 23—79) இப் பகுதியை பஸ்ஸாலி என்று குறிப்பிட்டுள்ளார். அவர் குறிப்பிடுவது கோசல நாடு ஆகும்.

பிஸ்ஸௌலியின் இருப்பிடம்: 28°·22′வ × 79°·10′கி.

தாலமி கங்கை உற்பத்தியிடத்தைக் கொண்டு இதைக் கங்கையின் கிழக்குப் பகுதி என்றூர் போலும்.

**9. ஓர்ஸா** (Orchha)

யமுனை நதிக்குத் தெற்கிலும், கங்கைக் கழிமுகத்துக்கு மேற்கிலும் உள்ள ஓர்சா (Orza) எனும் பகுதியைக் குறிப்பிடுகிறது. பண்டைநாளில் இடப்பட்ட பெயரே இன்றும் இங்கு வழங்கப்பட்டு வருவது வியப்பூட்டுகிறதல்லவா?

ஓர்ஸாவின் இருப்பிடம்: 25°·21′வ × 78°·38′கி.

சிலர் சிர்ஸி (Sirsi) எனும் இடத்தில் ஓர்ஸா இருந்ததாகக் கூறுகின்றனர். இது ராம் கங்கா (Ram Ganga) நதிக்கரையில் உள்ளது. மொரதாபாது பகுதியில் உள்ளது.

சிர்சியின் இருப்பிடம்: 28°·38′வ × 78°·49′கி.

---

# 52. அனிகாய்

*இவற்றிற்கும் கீழே அனிகாய் பிரதேசமும்*[1], *அதைச் சார்ந்த பின்வரும் நகரங்களும் காணப்படுகின்றன:*

| | | |
|---|---|---|
| *பெர்ஸக்ரா*[2] | ... | 134°· 0′கி × 32°·40′வ. |
| *சன்னபா*[3] | ... | 135°· 0′கி × 32°·30′வ. |
| *டோளு (நதிக்குக் கிழக்கில்)*[4] | ... | 136°·30′கி × 32°· 0′வ. |

### விளக்கவுரை

அனிகாய் எனுஞ்சொல் நவீன அலிகார் எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. அலிகார் (Aligar) என்ற இடத்தின் பண்டைப் பெயர் காயிர்கோயில் (Khairkoil). காயிர்கோயில் என்பதே பின்னர் அலி-காயிர் என்று வழங்கி, அதுவே அலிகார் என்று மருவி வரலாயிற்று.

இவ்விடத்தில் முற்காலத்தில் வாழ்ந்த மக்கள் அனிகார் (Anicar) என்று வழங்கப்பட்டனர். இது டெல்லிக்குத் தென் கிழக்காகவும், மத்ராவுக்கு (Muttra) வடகிழக்காகவும் உள்ளது.

அலிகாரின் இருப்பிடம் : 27°·54′வ×78°·6′கி.

சிலர் இவ்விடம் மெயின்புரி (Mainpuri) அல்லது மணிக்பூர் (Manickpur) என்பதைக் குறிப்பிடுவதாகக் கொண்டுள்ளனர். மெயின்புரி, ஆக்ராவுக்கு (Agra) வடகிழக்கில் உள்ளது.

மெயின்புரியின் இருப்பிடம் : 27°·14′வ×79°·3′கி.

**2. பெர்ஸக்ர (Persecra)**

இது பிராசின நாடு என்ற சொல்லின் சிதைவாக இருக்கக் கூடும். பிராசினம் என்பது கிழக்கு எனப்பொருள்படும் சொல் லாகும். ஆக, இச் சொல் பாடலிபுத்திரத்தைத் தலைநகராகக் கொண்ட கீழை நாடுகளைக் குறிப்பிடும்.

பாடலிபுரம், பாடலிபுத்திரம் இருபெயர்களும் ஒன்றே. இவ் விடம் அசோகப் பேரரசர் ஆட்சிக்காலம்வரை (கி.மு. 224). மௌரிய சாம்ராச்சியத்தின் தலைநகரமாயிருந்தது. இப்பொழுது பாடலிபுரம், பாட்னு (Patna) என்று வழங்கப்படுகிறது.

பாடலிமரத்திற்கும், ஒரு மகனுக்கும் திருமணம் (பொம்மைக் கல்யாணம்) நடத்தியதாகவும், அவர்கள் அம் மரத்தடியிலேயே குடியிருந்ததன் காரணமாகவும், அவ்வூர் பாடலிபுத்திரம் என்று வழங்கப்பட்டதாகவும் பௌத்தமத நூல்கள் கூறுகின்றன.

யுவான் சுவாங் (கி.பி. 629—645) இவ்விடத்தைப் போடாலி-சு-சிங் (Po-Tali-Chu-Ching) என்று வழங்கினர்.

—(**யுவான் சுவாங்** : பக்கம் 100—102)

பாஹியானும் (கி.பி. 399—414) இந் நகரத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்—(**பாஹியான்** பக்கம் 143—154)

மேற்கூறிய இருவர்களும் மிக விரிவாகவே பாடலிபுத்திரத்தை விவரித்துள்ளனர்.

சீனமொழியில் இம் மரம் மாப்பிள்ளை மரம் என்று வழங்கப் படுகிறது. வி-மு-ஹிஸு-ஷுயி என்ருல் மாப்பிள்ளைமரம் என்பது பொருள். அந் நகரத்தின் முதல் கல் தொடக்கம் அம் மரம் இருந்த இடமேயாகும். அசோகருடைய முன்னேரான அஜாதசத்ரு (Ajathasatru) எனும்அரசரால் (கி.மு. 500—கி.மு. 475) அந் நகரம் நிர்மாணிக்கப்பட்டது. அங்கு ஒரு பல்கலைக் கழகம்இருந்தது,

இவ்விடம் மெகஸ்தனிஸாலும் (கி.மு. 302-296) மிகவும் புகழ்ந்துரைக்கப்பட்டது.

—(**மெகஸ்தனிஸ் இண்டிகா**: அதிகாரம் 18, குறிப்பு-5, பக்கம் 110)

பாடலிபுத்திரம் (பாட்னு) இருப்பிடம்: 25°·37′வ × 85°·13′கி.

**3. சன்னபா** (Sannaba)

சன்னபா என்பது ஸ்வர்ணபுரி (Swarnapuri) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. ஸவர்ணவதி நதி இன்று சோன் (Son) என்று வழங்கப்படுகிறது. கங்கை நதியும், சோன் நதியும் கூடுமிடத்தில் பாடலிபுத்திரம் (Pataliputra) இருந்தது. இதுவே நவீன பாட்னு (Patna)வாகும்.

இந் நகரத்தைச் சுற்றிப் பொன் மதில்கள் இருந்தனவாகப் பௌத்த நூல்கள் தெரிவிக்கின்றன. பிம்பிசாரன் காலத்தில் (கி.மு. 600—550), இவ்விடம் ராஜகிருஹம் (Rajagriha) என்று வழங்கப்பட்டது. ஆக, ஸ்வர்ணபுரி என்பது பொன்மதிலால் சூழப்பட்ட பாடலிபுத்திரத்தையே குறிப்பிடும்.

சுவர்ணபுரியின் (பாட்னு) இருப்பிடம்: 25°·37′வ × 85°·13′கி.

**4. டோனு, கங்கே நதிக்குக் கிழக்கில்** (Dona, to the East of the River Gange-s)

டோனு என்ற சொல் இன்று டினுஜ்பூர் (Dinajpur) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. இவ்வூர் கங்கைக்கும், பிரம்மபுத்திராவுக்கும் இடையே உள்ளது.

டினுஜ்பூரின் இருப்பிடம்: 25°·37′வ × 88°40′கி.

---

# 53. பிராசியகா

*பிராசியகா நாட்டின்*[1] *கீழ்ப்பகுதியில் பின்வரும் நகரங்கள் காணப்படுகின்றன:*

| | |
|---|---|
| *சாம்பலகா*[2] | ... 132°·15′கி × 31°·50′வ. |
| *அடிசட்ரா*[3] | ... 136°· 0′கி × 31°·30′வ. |
| *கனகோரா*[4] | ... 135°· 0′கி × 30°·40′வ. |
| *கிண்டியா*[5] | ... 137°· 0′கி × 30°·20′வ. |
| *சாகலா (நதிக்குக் கிழக்கில்)*[6] | ... 139°· 0′கி × 30°·20′வ. |
| *அனிநாகா*[7] | ... 137°·20′கி × 31°·40′வ. |
| *கோன்கா*[8] | ... 138°·20′கி × 31°·30′வ. |

## விளக்கவுரை

### 1. பிராசியகா நாடு (The Country of Prasiaca)

பிராசிய-கா என்ற சொல் பிராசின நாடு அதாவது கிழக்கு நாடு எனப் பொருள்படும். 'கா' என்ற சொல் கிரேக்க மொழியில் நாடு என்ற பொருளைத்தரும்—டிமிரி-கா, ஆப்பிரி-கா, இண்டி-கா போன்ற சொற்களில் உள்ள 'கா'போல. பிராசின நாடு என்பது கங்கை வடிநிலத்தின் கிழக்குப் பகுதியைக் குறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டும். மற்றும் அதிகாரம் 52, குறிப்பு-2 பார்க்கவும்.

### 2. சாம்பலகா (Sambalaka)

இது சாம்பல்பூர் (Sambalpur) எனும் இடத்தைக் குறிப்பிடுவதாகச் சிலர் கொண்டுள்ளனர். ஆனால், சாம்பல்பூர் கங்கை நதிக்குத் தெற்கில் உள்ள ஒரிஸ்ஸாப் (Orissa) பிரதேசத்தில் உள்ளது. இங்கே குறிப்பிடுவது கிழக்குப் பிரதேசமாகையால், இவர்கள் கூற்றுப் பொருந்தாமை உய்துணரப்படும்.

சாம்பல்பூரின் இருப்பிடம்: 21°·28வ′ × 84°·1′கி.

ஆனால், இது டெல்லிக்குக் கிழக்கில் உள்ளதும், ரோகில் கண்டுப் பகுதியில் உள்ளதுமான சாம்பல் (Sambal) என்னும் இடத்தையே குறிப்பிடுகிறது. மத்ராவுக்கு (Muttra) வடகிழக்கில் உள்ளது. மத்ரா என்பது வடமதுரையைக் குறிப்பிடும்.

சாம்பல் என்னும் இடம் பழங்காலத்தில் ஒரு வாணிக நகரமாக விளங்கிற்று.

சாம்பலின் இருப்பிடம்: 28°·35′வ × 78°·37′கி.

### 3. அடிசட்ரா (Adisatra)

இது வட பாஞ்சால நாட்டின் நலைநகரமாயிருந்த ஆதிசத்ரா (Adisathra) எனப்படும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. ஆதிசத்ரா என்பதன் கிரேக்க உச்சரிப்பே அடிசட்ரா. சிலர் இதையே அடிஸ்தாரா (Adisthara) என்றும் வழங்கினர். ஆதிசத்ரா என்பது கி.மு. 1500-ல் சிறந்த நகரமாக விளங்கிற்று. பாண்டவர் காலத்தில் புகழ் பெற்றிலங்கிற்று, இப்பொழுது இவ்விடம் வடமதுரையாகிய மத்ராவின் கிழக்கில் உள்ள ஹத்ராஸ் (Hathras) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது ரோகில் கண்டுப் பகுதியில் உள்ளது.

ஹத்ராஸின் இருப்பிடம்: 27°·36′வ × 78°·6′கி.

இங்கு ஆதிசேஷன் என்னும் ஆயிரந்தலைநாகம் தன் இருப்பிடத்தைக் கொண்டிருந்ததாகக் கூறப்படுகிறது. கிருஷ்ண பரமாத்மாவுடன் தொடர்பு கொண்டிருந்ததாக வரலாறு கூறுகிறது.

**4. கனகோரா** (Canagora)

கனகோரா (Canagora) எனுஞ்சொல் கன்யா குப்ஜம் (Kanyakubjam) என்று வழங்கப்படும் கனோஜ் (kanauj) நகரத்தைக் குறிப்பிடுகிறது. இந் நகரம் காளி நதிக்கரைமீது அமைக்கப்பட்டிருந்தது.

கன்யா குப்ஜத்தின் பழைய பெயர் குசுமபுரம் அதாவது நறுமணம் பொருந்திய குசுமமலர் நிறைந்துள்ள இடம் என்பதே இதன் பொருள். காஷ்மீரம் என்பதும் முன்னர் குசுமபுரம் என்று வழங்கப்பட்டு வந்ததாகக் கூறப்படுகிறது. (மேலே அதிகாரம் 42 காண்க). இந்நகரம் ஹர்ஷப் பேரரசர் (Harsha) காலத்தில் (கி.பி. 606—647) மிகவும் புகழ் பெற்றிருந்தது. யுவான் சுவாங் என்ற சீனப் பயணி (கி.பி. 629—645) ஹர்ஷருடைய ஆட்சியின் பெருமையை விதந்தோதியுள்ளார். யுவான் சுவாங், கனோஜைக் கன-குஷி என்று குறிப்பிட்டுள்ளார்.

—(**யுவான் சுவாங்**: பக்கம் 212—224)

கனோஜின் இருப்பிடம்: 27°·3′வ×79°·58′கி.

கன்யாகுப்ஜம் என்ற பெயர் வந்ததற்குக் காரணம் பின்வருமாறு கூறப்படுகிறது:

கௌஸநாபன் என்னும் அந்நகரத்தின் அரசனுக்கு நூறு பெண்கள் இருந்தனர். வாயுபகவானாகிய கடவுள் அப் பெண்களை மணக்க விரும்பினார். ஆனால், அவர்களுடைய தந்தை அத் திருமணத்துக்கு ஒப்பவில்லை. அதன் காரணமாக வாயு கோபங் கொண்டு, அக் கன்னிப் பெண்களின் தோள்கள் அழகிழந்து, உருண்டை வடிமாக ஆகக்கடவது என்று சாபமிட்டு, தன் காற்றின் வேகத்தால் அவ்வாறே ஆகுமாறு செய்துவிட்டார். அதன் காரணமாக அவ்வூர் கன்னியா-குப்ஜம் என்று வழங்கப்பட்டது. இப் பெயரே நாளடைவில் கனோஜ் என்று மாறிவிட்டது.

இவ்வூர் பாஹியான் (கி.பி. 399—414) என்ற சீனப் பயணியாலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வூரை அவர் கனோ-கு-ஷி (Ka-no-kushi) என்று வழங்கியுள்ளார்.—(**பாஹியான்**: பக்கம் 94)

**5. ஸிண்டியா (Cyndia)**

இச்சொல் ரோஹில்கண்டு (Rohilkhand) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது.

ரோஹில் கண்டின் இருப்பிடம்: 28°·30′வ×79°·0′கி.

**6. சாகலா (Sacala)**

சாகர் எனுஞ்சொல் இந்திரனைக் குறிப்பிடும். ஆக, சாகலா என்பது இந்திரனுடன் தொடர்பு கொண்ட இடத்தைக் குறிப்பிடு கிறது. யமுனைக்குத் தெற்கில் உள்ள இந்தகர் (Indagar) எனப் படும் இந்திரபுரி இவ்விடத்தைக் குறிப்பிடுகிறது.

இந்தகர் ராஜஸ்தானைச் சார்ந்தது. இது குவாலியர் சமஸ் தானத்தில் உள்ளது.

இந்தகரின் இருப்பிடம்: 25°·40′வ×76°·15′கி.

இந்திரன் சாகரதேவன் என்ற பெயரால் வழங்கப்பட்டதாகப் பாஹியான் கூறுகிறார் — (**பாஹியான்:** பக்கம் 155).

இவ்விடம் குசி நகரம் (Kusinagara) எனப்படும் புத்தபிரானார் நிருவாணமடைந்த இடத்தைக் குறிப்பிடுவதாகச் சிலர் கொள்கின் றனர். புத்தபிரானாருக்கும் இந்திரனுக்கும் தொடர்பு கொண்ட பல புத்த சாதகக் கதைகள் உள்ள காரணத்தால், இவ்விடம் குசி நகரத்தைக் குறிப்பிடுகிறதென்று கொண்டனர் போலும்.

குசி நகரம் இப்பொழுது காசியா (Kasia) என்று வழங்கப்படு கிறது. காசியா என்னும் ஊர் கோரக்பூருக்கு 56 கிமீ. (35 மைல்) தொலைவில் கிழக்கில் உள்ளது. இங்குத்தான் புத்தபிரானார் நிர்வாணமடைந்ததாகப் பௌத்த நூல்கள் கூறுகின்றன.

காசியாவின் இருப்பிடம்: 26°·45′வ×84°·12′கி.

இது கண்டகி நதியில் மேற்குப் பகுதியில் உள்ளது. புத்த பிரானார் காலத்தில் (கி.மு. 563—கி.மு. 483) இந் நகரம் மிகவும் புகழ் பெற்றிருந்தது.

**7. அனி நாகா (Ani Naga)**

இது அனிகாய் (Anikai) பிரதேசத்தைக் குறிப்பிடுகிறது. (அதிகாரம் 51, குறிப்பு-1 பார்க்கவும்). இவ்விடம் பண்டைய நாளில் காயிர்-கோயில் (Kair Koil) என்று வழங்கப்பட்டது. இங்கு வசித் தவர் அனிகாய் மக்கள் என்று வழங்கப்பட்டனர்.

அனிகாய் பிரதேசம் இருப்பிடம்: 27°·54′வ×78°·6′கி.

**8. கோன்கா (Konka)**

கோன்கா (Konka) என்ற சொல் கனகம் என்ற சொல்லின் திரிபே. கனகம் என்பது பொன்னைக் (Kanakam) குறிப்பிடும்.

இவ்விடம் காசிக்கு அண்மையில் உள்ள சாரநாத் (Saranath) என்னும் ஊரைக் குறிப்பிடுகிறது. சாரநாத்தில் அசோகர் நாட்டிய சிங்கத்தூண் உள்ளது. மற்றும், பல கற்றூண்களும் உள்ளன. சுவர்ணத்தூபி என்பதன் சிதைவே சாரநாத் என்பதாகும். சுவர்ணம் என்பதற்குப் பொன் என்று பொருள். ஆக, சாரநாத் பொன் தூபியாகத் திகழ்ந்தது. ஆகவே. கோன்கா என்ற சொல் சாரநாத் என்னுமிடத்தைக் குறிப்பிடுகிறது. சாரநாத்தை யுவான் சுவாங், பாஹியான் ஆகிய இரு சீனப் பயணிகளும் குறிப்பிட்டுள்ளனர்.

சாரநாத்தின் இருப்பிடம்: 25°·20′வ × 86°·0′கி.

"அசோகர் நி-லி என்னுமிடத்தை நிர்மாணித்து, அதன் நடுவே ஒரு கற்றூணை நிறுவினார். அத் தூணின் உயரம் சுமார் 35 அடிகள் ஆகும். அத் தூணின் உச்சியில் ஒரு சிங்கத்தின் உருவத்தை அமைத்தார்."

—(**பாஹியான் :** பக்கம் 153)

சாஞ்சி, சாரநாத், பாடலிபுத்திரம், காசி ஆகிய நகரங்கள் அசோகர் காலத்தில் (கி.மு. 263—கி.மு. 224) மிகுந்த புகழ்பெற்றிலங்கின. இவை யாவும் புத்தபிரானுருடைய வாழ்க்கை வரலாற்றுடன் தொடர்பு கொண்டவை. இவ்விடங்களில் அசோகர் பல தூபிகளையும், விஹாரங்களையும் கட்டுவித்தார் என்று வரலாறுகள் கூறுகின்றன. அவற்றில் செதுக்கப்பட்ட சாசனங்கள் (Edicts) அசோகரின் கட்டளைகள் என்ற பெயரால் வழங்கப்படும்.

---

# 54. சௌரபாடிஸ்

*சௌரபாடிஸ்*[1] *தெற்கில் பின்வரும் நகரங்கள் காணப்படுகின்றன ;*

| | |
|---|---|
| *எம்பலாத்ரா*[2] | ... 130°· 0′கி × 30°·0′வ. |
| *நபௌதபந்த்கர்*[3] | ... 133°·40′கி × 29°·0′வ. |
| *தமஸிஸ்*[4] | ... 133°· 0′கி × 29°·0′வ. |
| *கௌராபுரீஞு*[5] | ... 130°· 0′கி × 29°·0′வ. |

## விளக்கவுரை

**1. சௌரபாடிஸ்** (Sourapatis)

சௌரபாடிஸ் எனுஞ் சொல் சூரியகதி மலைகளைக் (Churiaghati Hills) குறிப்பிடுகிறது. இம் மலைத்தொடர் இமயமலை அடிவாரத்தில் உள்ள ஒரு தொடராகும்; நேபாளத்தில் (Nepal) உள்ளது. சன்கோஸி (Sunkosi), தமார் (Tamar), கோஸிநதி (Kosi) ஆகியவை இங்கு உற்பத்தியாகின்றன. இவ்வாறுகளுக்குத் தெற்குப் பகுதியில் கௌராபுரிஞ எனப்படும் கோராக்பூர் குறிக்கப் படுகிறது. (குறிப்பு-5).

சூரிய கதிமலைகள் இருப்பிடம்: 26°·55′வ × 86°·0′கி.

சிலர், இது சுந்தரபாண்டிஸ் (Sundarapandis) என்பதைக் குறிப்பிடுகிறதென்றும், சுந்தரபாண்டிஸ் எனும் சொல் சந்திரபாகா என்ற நதியின் வேறு பெயர் என்றும், அச் சந்திரபாகா சந்திராவதி என்று வழங்கப்படுகிறது என்றும் கூறுகின்றனர். ஆனால், சந்திராவதி கங்கைக் கிளையா அல்லது சிந்துவின் கிளையா என்பதைக் குறிப்பிடவில்லை. சிந்துநதியின் கிளையான செனுப் (Chenab) நதியின் வேதகாலப் பெயர் சந்திரபாகா (Chandra Baha)·

கங்கைக் கரையைக் கூறிவிட்டு, அதிலேயே சிந்துநதிக்குப் பாயமாட்டார். ஆகையால் சந்திரபாகா என்று கூறுவது பொருத்த மன்று என்பதைக் காணலாம்.

**2. எம்பலாத்ரா** (Empelathra)

இது ரோகில் கண்டு வட்டத்திலுள்ள சம்பல் (Chambal or Sambhal) என்ற இடத்தைக் குறிப்பிடக்கூடும். கால அடைவில் பல பெயர்கள் மாறியிருக்கக் கூடும். அவ்வப்பொழுது அரசாகளும் அரசர் தம் பெயரைச் சில புகழ்பெற்ற நகரங்களுக்கு வைத்து, பழைய பெயரை மறந்தே—மறைந்தே—விடுமாறும் செய்துவிடுவர். அத்தகைய ஊர்களில் இதுவும் ஒன்ருகும்.

சாம்பல் இருப்பிடம்: 28°·35′வ × 78°·37′கி.

**3. நதௌபந்த்கர்** (Nathau Bandghar)

கர் அல்லது கிரி என்பதன் அடிப்படையில் தோன்றிய இடமாக இருக்கக் கூடும். சிலர் இது நங்காபர்பத் (Nanghaparbhat) என்ற தைக் குறிப்பிடுகிறதென்று கூறுவர்.

இது நவீன பந்தல் கண்ட் (Bandlekhand) என்பதைக் குறிப் பிடுவதாகக் கொள்ளலாம். பந்தல்கண்ட் என்பதே கிரேக்க உச்சரிப்பில் பந்த்கர் (Baudghar) என்று வழங்கப்பட்டதுபோலும்.

கங்கையின் கிளைநதியாகிய கென் நதி (Ken River), பந்தல்கண்ட் வழியாகப்பாய்கிறது. அதன் அருகில் அஜைகர் (Ajaigarh) என்று இருப்பதும் இதை உறுதிப் படுத்துகிறது.

பந்தல்கண்ட் இருப்பிடம்: 24°·0′வ × 80°·0′கி.

**4. தமஸிஸ்** (Tamasis)

முன்னர் தமாலமரங்கள் உற்பத்தி செய்யப்பட்ட இடத்தைக் குறிப்பிடுகிறது. தமாலமரங்கள் (Tamala Tress), தாலமரங்கள் (Tala Trees) இமயமலை அடிவாரத்தில் முன்னர் பயிராக்கப்பட்டு, அவற்றின் இலைகளும் பட்டைகளும் எகிப்துக்கு (Egypt) ஏற்றுமதி செய்யப்பட்டன. அவை இறந்துபோன உடல்களைப் (சடலங்களை) பல ஆண்டுகளுக்குக் காப்பாற்றிவைக்கப் பயன்படுத்தப்பட்டன. இம்முறை எம்பாம் (Embalm) என்று வழங்கப்படும். சடலப் பாதுகாப்பு முறை ஹிராடடஸ் (கி.மு. 484—425) என்பவரால் மிக விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது.—(Vide Histories by Herodotus, Book II, pp. 133—134)

சடலப் பாதுகாப்பின் விரிவைப் பெரிப்ளூஸில் காண்க.

—(**பெரிப்ளூஸ்:** அதிகாரம் 19, குறிப்பு-24, பக்கம் 194)

தமலாமரம் நிரம்பிய இடம் இமயமலை அடிவாரத்தில் தம்லாங் எனப்படுகிறது.

தம்லாங் இருப்பிடம்: 27°·28′வ × 88°·40′கி.

**5. கௌராபுரினு** (Gaurapurina)

இச்சொல் கோரக்பூர் (Gorakbur) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. கோரக்பூரின் முந்தின பெயர் கௌரிபுரம் (Gouripuram). இதுவே கிரேக்க உச்சரிப்பில் கௌராபுரினு என்று வழங்கப்பட்டது. இது இமயமலை அடிவாரத்தில் உள்ளது.

கைலாஸ மலைக்கு அருகில் இருப்பதாலும், கௌரி எனும் பெயர் பார்வதியின் மறுபெயராயிருப்பதாலும், கௌரிபுரம் எனும் ஊர் கைலாசமலை அருகில் உண்டானது வியப்பல்லவே?

கோரக்பூரின் இருப்பிடம்: 26°·45′வ × 83°·24′கி.

சிலர் இதை, கங்கை நதிக்குக் கிழக்கில் உள்ள குல்னு (Khulna) பகுதியில் உள்ள கௌரநதி (Gaurnadi) எனும் ஊரைக் குறிப்பிடுவதாகவும், மற்றொருவர், இது யமுனை நதிக்குத் தெற்கில் பண்டா மாவட்டத்தில் உள்ள கௌரிஹர் (Gaurihar) எனும் ஊரைக் குறிப்பதாகவும் கொண்டுள்ளனர்.

கௌரநதி இருப்பிடம்: 22°·54′வ×90°·24′கி.

கௌரிஹர் இருப்பிடம்: 25°′16′வ×80°·12′கி.

இப்பகுதிக்குக் கோரக்பூரே பொருத்தமானதாகச் சொல்லலாம்.

---

# 55. இண்டோ-சித்தியா

*சிந்து நதிக்கரைமீதுள்ள[1] நாடுகள் யாவும் இண்டோ-சித்தியா[2] என்றே வழங்கப்படுகின்றன. சிந்து நதியின் கழிமுகத்தில் பாதலினே நகரம்[3] உள்ளது இதற்கும் அப்பால் உள்ள பகுதி அபிரியா[4] என்று வழங்கப்படுகிறது. சிந்தஸ் நதியின் கழிமுகத்திலும், காந்தி வளைகுடாவிற்கு அருகிலும்[5] உள்ள பகுதி சைரஸ்டிரீன்[6] என்று வழங்கப்படுகிறது.*

## விளக்கவுரை

**1. சிந்துநதிக்கரை மீதுள்ள நாடுகள்** (Countries on the Banks of the River Sindu-s)

இதுகாறும் கங்கை நதிப் பிரதேசத்தில் உள்ள நாடுகளையும் நகரங்களையும் குறிப்பிட்டார். இனி சிந்து நதிக்கரைமீதுள்ள நாடுகளையும் நகரங்களையும் குறிப்பிடுவார். சிந்து என்பதைக் கிரேக்க வரலாற்றுசிரியர்கள் சிந்தஸ் (Sindu-s) என்று வழங்கினர். சிந்தஸ் எனும் ஆங்கில எழுத்துகளில், இறுதி S உச்சரிக்கப் படுவதில்லை. ஆக சிந்தஸ் என்று எழுதினலும் கூட, அது உச்சரிக்கப்படும்போது சிந்து (Sindu) என்றே ஆகிறது. சிந்து, இந்து ஆகி, அதுவே இந்தியாவென வழங்கப்பட்டது.

**2. இண்டோ–சித்தியா** (Indo-Scythia)

சித்தியர்கள் (Scythians) ஹிந்துகுஷ் மலைக்கு (Hindukush) அப்பால் இருந்த ஒரு பிரிவினர். நாளடைவில் அவர்கள் இந்திய எல்லைகளில் உள்ள நாடுகளைக் கைப்பற்றி, சிந்து நதிப் பகுதிக்குப்பரவி, அதன் பின்னர் சௌராஷ்டிரம் வரையிலும் படையெடுத்துத் தங்கிவிட்டனர். அவர் இந்தியர்களுடன் கலந்து உறவு கொண்டதால், சித்தியர்கள், இண்டோ சித்தியர்கள் என வழங்கப்பட்டனர். அவர்கள் முக்கியமாக, காஷ்மீரம் முதல் சிந்து நதிக்கழிமுகம்வரை ஆட்சி செய்தார்கள். சித்தியர்களின் சந்ததியில் வந்தவர்களே குஷானர் (Kushans) எனப்பட்டனர்.

அக்குஷானர்களுள் கனிஷ்கர் பேரரசர் மிகவும் புகழுடன் விளங்கினர். கனிஷ்கர் கி.பி. 75ஆம் ஆண்டு அரசப்பதவி ஏற்ருர். கனிஷ்கர் சாகா (Saka) என்னும் ஆண்டு மானத்தைக் கி.பி. 78-ல் தோற்றுவித்தார். கனிஷ்கர் புத்த மதத்தில் சேர்ந்து, பற்பல தூபிகளையும், விஹாரங்களையும் கட்டுவித்தார். அவருக்கு 'வான் மகன்' என்பது விருதுப் பெயராகும். புத்தபிரானுருடைய கோட்பாடுகளைச் செப்பேடுகளில் பொறித்துவைத்து, தூபிகளில் இட்டுப் பாதுகாத்தார்.கனிஷ்கர் கி.பி. 119ஆம் ஆண்டுக் கொல்லப்பட்டார்.

யுவான் சுவாங் (கி.பி. 629-645) கனிஷ்கரை கனி-ஸி-கி-யா (Kanisikia) என்று வழங்கினர்.

—(**யுவான் சுவாங்:** பக்கம் 200-212)

பாஹியானும் (கி.பி. 399–414) கனிஷ்கரைப்பற்றிப் பல குறிப்புகள் தந்துள்ளார்.

—(**பாஹியான்:** பக்கம் 56–60)

சித்தியர்கள், யூ-சி (Yuehchi) வகுப்பைச் சார்ந்தவர்கள் என்றும், கனிஷ்கர் (Kanishka) அவர்கள் மரபில் வந்தவர் என்றும் பாஹியான் கூறுகிருர்.

### 3. பாதலினே (Patalinae)

பாதலினே (Patalinae) ஒரு நகரமாக வர்ணிக்கப்பட்டுள்ளது. இது பழைய வாணிக நகர்ச்சந்தை கூடும் இடமாகும். ஒரு சிறந்த ஆற்றுத் துறைமுகமாக விளங்கிற்று. பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80), மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) ஸ்டிராபோ (கி.மு. 64—கி.பி. 24), அர்ரியன் (கி.பி. 90-180) ஆகிய யாவரும் இவ்விடத்தைப் பாதலே (Patalae) என்று வழங்கினர். இது சிந்துநதிக் கழிமுகத்துக்குச் சற்று வடக்கில் ஒரு சிறந்த வாணிக நகரமாகவும், ஏற்றுமதி, இறக்குமதித் துறைமுகமாகவும் விளங்கிற்று.

"இந்நதி பாயும் வழியில் இரண்டு தீவுகளை உண்டாக்கிச் செல்கின்றது. அவற்றுள் ஒன்று பிராசினே என்று வழங்கப்படுகிறது. இந் நகரம் மிகவும் பெரிய நகரமாகும். விரிந்த பரப்பளவைக் கொண்டுள்ளது.

மற்ருென்று இதைவிடச் சிறியது. இது பாதலே (Patalae) என்று வழங்கப்படுகிறது."

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-113, பக்கம் 64)

பாதலம் என்பது பாதலே என்று குறுகி வழங்கப்பட்டது. இது சிந்துநதிக் கழிமுகத்துக்குச் சற்று வடக்கே இருந்தது. இப்பொழுது இந் நகரம் ஹைதராபாத்-சிந்து (Hyderabad-Sind) என்று வழங்கப் படுகிறது.

பாதலத்தின் இருப்பிடம்: 25°·25′வ×68°·38′கி.

**4. அபிரியா (Abiria)**

அபிரியா (Abiria) சிந்து நதியின் கிழக்குப் பகுதியில் விளங்கிற்று. சிந்து நதியின் கழிமுகத்தைச் சார்ந்திருந்தது. தெற்கு வடக்காகப் பரந்த நாடு சௌவீரா (Sovira) என்று வழங்கப் பட்டது.

இந்த அபிரியா நாட்டையே பைபிள் எனப்படும் கிறித்தவ வேதப் புத்தகத்துள் ஓபிர் நாடு (Ophir) என்று குறிப்பிட்டனர். ஓபிர் என்ற சொல்லுக்குப் பல வண்ணங்கொண்ட நவரத்தினக் கற்கள் என்பது பொருள். இங்குள்ள பழைய ஆற்றுத் துறைமுகம் பாதலம் ஆகும். இவ்வாற்றுத் துறைமுகம் வழியாகப் பல பண்டங்கள் ஏற்றுமதியாயின என்று பெரிப்ளூஸ் ஆசிரியர், பிளினி முதலியவர்கள் கூறியுள்ளனர்.

ஓபிர் என்ற சொல் பைபிளில் (Bible) குறிப்பிட்டுள்ள இடம்:

"And they come to Ophir and fetched from thence Gold, four and twenty talents and brought it to King Solomon"

—(**Kings**-I—9-28)

"And the Navy also of Hiram, that brought Gold from Ophir, brought in from Ophir great plenty of Almug trees, and precious stones."—(**Kings**-1-I0-11)

இந்த அபிரியா நாட்டிலிருந்து பற்பல பொருள்கள் மேலை நாடுகளுக்கு ஏற்றுமதியாயின. அவை: பொன், சந்தனம், நவரத்தினம், தந்தம், வெள்ளி, கருங்குரங்கு முதலியன.

சிலர் இந்த ஓபிர் நாடு, அராபியன் கடலைச் சார்ந்த பாரசீக வளைகுடாவில் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளனர். அவ்வாறிருப்பினும், அங்கு இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் யாவும் இந்தியப்பெயர்களாலேயே குறிப்பிடப்பட்டன.

நவீன கைர்பூர், தார், பார்கார், ஹைதராபாது (சிந்து) ஆகிய சிந்துவின் கிழக்குப் பகுதிகளும், குசரத்தின் கடற்கரைப் பகுதியும், அராபியன் கடற்கரையிலிருந்த சுபாரகா என்ற துறைமுகப் பகுதியும் முன்னர் ஓபிர் நாடு (Ophir) என்று வழங்கப்பட்டது.

மற்றும், இது சுபாரகா (Suparaka) என்ற பெயரின் சுருக்கமே எனவும் கருதப்படுகிறது. (அதிகாரம்-6, சௌபாரா குறிப்பு-2, பக்கம் 31) காண்க. இது சௌவீரா என்றும் வழங்கப்பட்டது.

பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80) அபிரியா (Abiria) என்ற நாட்டைக் குறிப்பிட்டுள்ளார்:

"அகண்ட இந்தியாவின் தொடக்கமும் அதுவே. இதில் உள்ளுக்குள்ளே ஆழ்ந்தும், சித்திய நாட்டிற்கு அண்டியும் நிற்கும் நாடு அபிரியா என்று வழங்கப்படும். ஆனால் அதன் கடற்கரை ஸைரஸ்டிரீன் என்ற பெயரால் வழங்கப்படுகிறது."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 41, குறிப்பு-5 பக்கம் 157)

### 5. காந்தி வளைகுடாவிற்கருகில் (Near the Gulf of Canthi)

இது கச்வளைகுடா (Gulf of Cutch) என்பதையும், அதற்குத் தெற்கில் உள்ள காம்பே வளைகுடாவையும் குறிப்பிடும். குசரத்து மாகாணத்தில் இன்று காந்தா (Kantha) என்ற ஒரு பகுதி உள்ளது. அது ரீவா காந்தா (Rewa Kantha) என்றும் வழங்கப்படுகிறது. அப்பகுதி முழுவதும் முன்பு காந்தா என்று வழங்கப்பட்டது. காந்தாவே, காந்தி எனக் கிரேக்க மொழியில் உச்சரிக்கப்பட்டது.

கட்ச் வளைகுடா இருப்பிடம்: 22°·35′வ × 69°·40′கி.

### 6. சைரஸ்டிரீன் (Syrasterene)

சைரஸ்டிரீன் என்பது சௌராஷ்டிரம் (Sourashtra) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. சௌராஷ்டிரம் பண்டைய இந்து இராச்சியங்களுள் ஒன்று.

நர்மதைப் பிரதேசம் முன்பு ராஷ்ட்ரிகம் (Rashtrika) என்று வழங்கப்பட்டது. நர்மதையின் வடபகுதி சௌராஷ்டிரம் என்றும், தென்பகுதி மகாராஷ்டிரம் (Maharatta) என்றும் வழங்கப்பட்டது. பெரிப்ளூஸ் ஆசிரியரும் (கி. பி. 50—80), பிளினியும் (கி.பி. 23—79) சௌராஷ்டிரத்தைக் குறிப்பிட்டுள்ளனர். பிளினி சௌராஷ்டிர நாட்டு மக்களை ஒலெஸ்ட்ரே (Olostrae) என்று குறிப்பிட்டுள்ளார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 20, குறிப்பு 59, பக்கம் 56)

சௌராஷ்டிரத்தின் இருப்பிடம்: 22°·18′வ × 70°·56′கி.

# 56. இண்டோ-சித்தியா நகரங்கள்

*இண்டோ-சித்தியாவில்*[1] உள்ள நகரங்கள் பின்வருமாறு இவை ஆற்றுக்குச் சற்று மேற்கிலும் தெற்கிலும் உள்ளன.

| | |
|---|---|
| *ஆர்டோர்டா*[2] | ... 121°·30′கி × 31°·15′வ. |
| *ஆண்டிரோபனு*[3] | ... 121°·15′கி × 30°·40′வ. |
| *சபானு*[4] | ... 122°·20′கி × 32°· 0′வ. |
| *கங்கானா*[5] | ... 122°·15′கி × 30°·40′வ. |
| *கோட்ரானு*[6] | ... 121°·15′கி × 29°·20′வ. |

## விளக்கவுரை

**1. இண்டோ-சித்தியா** (Indo Scythia)

இந் நாடு ஹிந்துகுஷ் மலைக்கு (Hindukush) அப்பால் இருந்த பகுதியைக் குறிப்பிடுகிறது. அதிகாரம் 55, குறிப்பு-2 பார்க்கவும்.

**2. ஆர்டோர்டா** (Artorta)

இங்கு ஆற்றுக்குச் சற்று மேற்கிலும் தெற்கிலும் என்று குறிப்பிடுவது சிந்து நதியை (River Indus) ஆகும்.

ஆர்டோர்டா என்று இங்குக் குறிப்பிடுவது அரக்கோசியா (Arachosia) நாடாகும். அரக்கோசியா பிளினியாலும், பெரிப்ளூஸின் ஆசிரியராலும் குறிப்பிடப்பட்டுள்ளது. அரக்கோசியா, நவீன ஆப்கானிஸ்தானத்தைக் குறிப்பிடும். மெகஸ்தனிஸ் (Megasthanes) (கி.மு. 302-296) என்பாராலும் குறிப்பிடப் பட்டுள்ளது. பிளினி (கி.பி. 23—79) கூறுகிறார் :

"இந்த இடத்திலிருந்து அரக்கோஸி (Arachosi) எனும் நகரத் துக்கு உள்ள தொலைவு 565 மைல்களாகும்."

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-42, பக்கம் 15)

அரகோசியா நாட்டில், அரகோடஸ் (Archotus) எனும் நதி ஓடிற்று. அதன் தலைநகரமும் அரகோடஸ் என்று வழங்கப் பட்டது. மாவீரர் அலெக்சாந்தர் ஆசியாமீதும், இந்தியாமீதும் படையெடுத்துவந்து, அரகோடஸ் நகரத்தை வென்று (கி.மு. 326) அந் நகரத்துக்கு அலெக்சாந்திரியா (Alexandria) எனத் தம் பெய ரிட்டு வழங்கினுர். இது அலெக்சாந்தர் நிர்மாணித்த பல நகரங் களுள் ஒன்று. இன்று அந் நகரம் காண்டகார் (Kandahar) என்று வழங்கப்படுகிறது.

காண்டகார் இருப்பிடம்: 31°·37′வ×65°·30′கி.

பெரிப்ளூஸ் நூலாசிரியர் (கி.பி. 50–80) கூறுகிருர்:

"பார்பிகம் எனும் இடத்திற்கு அப்பால் பலர் வசித்து வருகின் றனர். அவர்கள் வசிக்கும் பகுதிகளுள் அரட்டி, அரக்கோசியா, காந்தாரை, பொக்காலிஸ் முதலியன முக்கியமானவை."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 47, குறிப்பு-4, பக்கம் 175)

மேக்ரிண்டில் (Mc Crindle) கூறுகிருர்:

"அரக்கோசியா மேற்குப் பக்கமாகத் தொடர்ந்து சென்றது; காண்டகார் நகரம் மேற்கு எல்லையாகவும், சிந்துநதி கிழக்கெல்லை யாகவும் விளங்கின; வடக்கே ஹிந்துகுஷ் மலையும், தெற்கே கெட்ரோசியாவும் எல்லைகளாக அமைந்தன."

மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) கூறுகிருர்:

"சந்திரகுப்த மௌரியர், செல்யூகஸிடமிருந்து பின்வரும் நான்கு நாடுகளைப் பெற்றுக்கொண்டார்; அவற்றைத் தம் இராச்சி யத்தில் இணைத்துக்கொண்டார். (i) காபூல் எனப்படும் பரப்பனி சதே, (ii) அரியாஞ நாடு, (iii) அரகோசியா நாடு, (iv) கெட்ரோ சியா."

—(மெகஸ்தனிஸ்: தோற்றுவாய். பக்கம் 2)

பாரசீகம் (Persia) இந்தியாவுடன் தொடர்பு கொண்டபொழுது, அரக்கோசியாவின் முக்கியத்துவம் பன்மடங்கு பெருகிற்று. அது ஓர் இணைப்பு நாடாக விளங்கிற்று.

**3. ஆண்டிரோபஞ (Andropana)**

இச்சொல் டராபன் கலான் (Daraban Kalan) எனும் இடத் குறிப்பிடுகிறது. இவ்விடம் டேரா இஸ்மாயில்கான் பகுதியில், சிந்துநதிப் பிரதேசத்தில் உள்ளது. இது பண்டைக்கால வாணிகச்

சந்தை நகரமாக விளங்கிற்று. இதைப் பாஞ (Bana) என்றும் குறிப்பிடுவர்.

டராபன் கலான் இருப்பிடம்: 31°·43′வ×70°·22′கி.

## 4. சபாஞ (Sabana)

சபாஞ எனும் இடம் பாஹியான் எனும் சீனப்பயணியால் (கி.பி. 399-414) போ-ஞ (Bo-Na) என்று வழங்கப்பட்டது.

பாஹியான் கூறுகிருர்:

"அவர்கள் மழைக்காலம் கழிந்ததும், தெற்கு நோக்கி இறங்கி, பத்து நாள்கள் பயணம் செய்து போ-ஞ எனும் நாட்டையடைந் தனர். அங்கு 3000 பௌத்த பிக்ஷுக்கள் இருந்தனர்."

—(பாஹியான்: பக்கம் 70)

போ-ஞ என்பது இன்று பன்னு (Bannu) என்று வழங்கப்படு கிறது. பன்னு, டேரா இஸ்மாயில்கானுக்கு (Dehra Ismail Khan) வடக்கிலும், கோஹாட்டிற்குத் (Kohat) தெற்கிலும் உள்ளது.

பன்னுவின் இருப்பிடம்: 33°·0′வ×70°·39′கி.

பன்னுவின் மறு பெயர் எட்வர்ட் டி சாபாத் (Edward de Sabad).

யுவான் சுவாங் (கி.பி. 629-645) எனும் சீனப்பயணி, இவ் விடத்தை ஃபோ-லா-ஞ (Fo-La-Na) என்று வழங்கினுர். இங்குப் பௌத்த மடாலயங்கள் பல இருந்தன என்றும் கூறுகிருர்.

சோபட்ஞ எனும் சொல் (So-Patna) அழகிய நகரத்தைக் குறிப்பிடுவது போல (திருவல்லிக்கேணி), சோ-பாஞ (So-Bana) என்ற சொல் அழகிய பாஞ நகரத்தைக் குறிப்பிடுகிறது. சோ-பாஞ என்பதே சபாஞ என்று திரிந்து வழக்காற்றில் நிலைபெற்றது போலும்.

ஆக சோ-பாஞ எனும் நகரம், சபாஞ என்று வழங்கப்பட்டு, அதுவே நாளடைவில் பன்னு (Bannu) என்று குறுக்கமடைந்து விட்டது.

## 5. கங்காரா (Cangara)

கங்காரா எனுஞ்சொல் காந்தாரா (Gandhara) என்றும், கந்தர்வா (Gandarva) என்றும், கக்காரா (Kakkara) என்றும் பலவிதமாக விளக்கப்படுகிறது.

காந்தாரம் என்பது டாக்சீலா (Taxila) எனப்படும் தக்ஷசீலப் பகுதியைக் கொண்டிருந்தது. கந்தர்வம் என்பது புஷ்கலபுரம் (Peucolatis) என்ற இடத்தைக் கொண்ட பகுதியாய் விளங்கிற்று.

கக்காரா எனும் இடம், சட்லெஜ் நதியும், செனுப் நதியும் கூடும் இடத்துக்கருகில் உள்ளது.

காந்தாரம், கந்தர்வம் இவ்விரு நாடுகளையும் பற்றிப் பிளினி, பெரிப்ளூஸ், ஸ்டிராபோ முதலானவர்கள் குறிப்பிட்டுள்ளனர். யுவான் சுவாங்கும், பாஹியானும் குறிப்பிட்டுள்ளனர் (அதிகாரம் 44, 45 பார்க்கவும்.

தக்ஷசீலம் இருப்பிடம் : 33°·40′வ×72°·50′கி.

புஷ்கலபுரம் இருப்பிடம் : 34°·8′வ×71°·46′கி.

கக்காரா இருப்பிடம் : 28°·24′வ×75°·4′கி.

**6. கோட்ராறு** (Cotrana)

ராறு (Rana) என்ற சொல் ரான் ஆப் கட்ச் (Rann of Cutch) பகுதியைக் குறிப்பிடுகிறது. ரான் (Rann) என்பது இருணம் என்ற சொல்லினடியாகப் பிறந்ததே. இருணம் என்றால் உவர் நிலம், சகதி நிலம் எனப் பொருள்படும். கட்ச் என்பது காசியப மகரிஷி என்பதன் குறுக்கமே. ஆக, இங்குக் குறிப்பிடப்படும் கோட் ராறு என்ற இடம் தார் (Thar) எனும் பகுதியில் இருந்தது. அவ்விடத்தில் இன்று நவ்கோட், உமர்கோட் (Umarkot) என ஊர்கள் உள்ளன.

உமர்கோட்டின் இருப்பிடம் : 25°·22′வ×69°·47′கி.

---

# 57. சிந்துநதி நகரங்கள்

*சிந்து நதியின் வழியினூடே காணப்படும் நகரங்கள் :*

| | |
|---|---|
| *எம்போலிறு*[1] | ... 124°· 0′கி×31°· 0′வ. |
| *பெண்டகிராமா*[2] | ... 124°· 0′கி×30°·20′வ. |
| *அஸிக்கிராமா*[3] | ... 123°· 0′கி×29°·30′வ. |
| *தியௌஸா*[4] | ... 121°·30′கி×28°·50′வ. |
| *அரிஸ்டோபாத்ரா*[5] | ... 120°· 0′கி×27°·30′வ. |
| *அஜிகா*[6] | ... 119°·20′கி×27°· 0′வ. |

## விளக்கவுரை

**1. எம்போலினு** (Empolina)

இந் நகரம் அட்டாக் (Attock) பிரதேசத்துக்கு வடக்கில், 96 கிமீ. (60 மைல்) தொலைவில் சிந்து நதிக்கரைமீது விளங்கிற்று. இன்று அவ்விடம் அம்ப் (Amb) என்று வழங்கப்படுகிறது. அம்ப் என்னும் நகரத்துக்கு வடமேற்கில் 32 கிமீ. (20 மைல்) தொலைவில் அம்பேலா (Ambela) என்றொரு நகரமும் இன்று காணப்படுகிறது. எம்போலினு என்பது அம்பேலாவைக் குறிப்பிடுவதாகவும் கொள்ள லாம்.

சௌராஷ்டிரம் சைரஸ்டிரீன் என்று வழங்கப்பட்டது போல, அம்பேலா என்னும் நகரம் முன்னர் அம்போலின் (Ampolin) என்று வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். அதுவே எம்போலினு (Empolina) என்று சிலரால் எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

அம்பேலாவின் இருப்பிடம்: 34°·30′வ×72°·32′கி.

இதைச் சிலர் வேறுவிதமாகவும் கூறுகின்றனர். அம்ப் என்ற இடத்தினருகில் பாலிமா (Balima) என்னும் இனத்தினர் வாழ்ந்து வந்ததாகவும், அவ்வினத்தவர் அம்ப் என்னும் இடத்தில் குடியேறிய போது, அம்பாலிமா (Ambalima) என்று வழங்கப்பட்டனர் என்றும், அச் சொல்லே எம்போலினுவாக மருவிற்று என்றும் கூறுவர்.

எம்போலினு (Empolina) என்னும் இடத்தை அர்ரியன் (கி.பி. 90-180) தாம் எழுதிய இண்டிகாவில் (Indica) குறிப்பிட்டுள் ளார் (**Arrian-Indica:** Ch. 27)

எம்போலிமா (Empolima) என்ற சொல் கிரேக்க மொழியில் ஆற்றின் கழிமுகம் (Estuary) என்று பொருள்படும்.

**2. பெண்டகிராமா** (Pentagrama)

பெண்டா என்றால் ஐந்து என்பது பொருள். அதுவே பஞ்ச் (பாஞ்ச்) என்றும் வழங்கப்பட்டது. காஷ்மீரின் தென்பகுதியில் உள்ள பிர்பஞ்சால் தொடர் (Pir Panjal Range) என்பதையும், அதை உட்கொண்ட பஞ்ச் (Punch) என்ற நாட்டையும் குறிப்பிடும். இது ஊலார் ஏரிக்குத் (Wular Lake) தெற்கில் உள்ளது. ஜீலம் நதிக்கரையை (Jhelum) ஒட்டியுள்ளது.

பஞ்ச் இருப்பிடம்: 33°·51′வ×74°·8′கி.

**3. அஸிக்கிராமா** (Asicgrama)

இவ்விடம் இன்று ஹஸ்ரோ (Hazro) என்று வழங்கப்படுகிறது. இது அட்டாக் (Attock) மாவட்டத்தில் உள்ளது. இப் பகுதியில் பண்டைய பல்கலைக் கழகமாகிய தக்ஷசீலம் (Taxila) இருந்தது. தக்ஷசீலத்தைச் சுற்றிப் பல ஊர்கள் இருந்தன. அவற்றுள் இதுவும் ஒன்றாகும். தக்ஷசீலம் நிலநடுக்கம் காரணமாகக் கி.பி. 44-ல் அழிந்துவிட்டது. அதன்பிறகு அங்கங்கே சிற்சில கிராமங்கள் தோன்றின. தக்ஷசீலத்தைப்பற்றி மிக அரிய ஆராய்ச்சி ஒன்றை சர் ஜான் மார்ஷல் (Sir John Marshall) என்பார் டாக்சீலா (Taxila) என்ற தலைப்பில் வெளியிட்டுள்ளார். இவ்விடம் சிந்து நதியை ஒட்டி உள்ளது.

அசிக்கிராமா (ஹஸ்ரோ) இருப்பிடம்: 33°·35′வ×72°·32′கி.

தக்ஷசீலத்தைப்பற்றி பாஹியான், யுவான் சுவாங் ஆகியவர்கள் குறிப்பிட்டுள்ளனர்—(**யுவான் சுவாங்:** பக்கங்கள் 70-78)

**4. தியௌஸா** (Tiausha)

இவ்விடம் குனார் நதியின் (River Kunar) மேற்கில் உள்ள ஆஷ்கன் (Ashkun) பகுதியிலுள்ள தியௌலத்ஷா (Diaualatsha) எனும் நகரத்தை குறிப்பிடுகிறது. ஹிந்துகுஷ் மலைப்பகுதியில் அலிங்கார் நதிக்கும் (River Alingar), குனார் நதிக்கும் (River Gunar) இடையில் உள்ளது.

தியௌலத்ஷாவின் இருப்பிடம்: 35°·3′வ×70°·0′கி.

**5. அரிஸ்டோபாத்ரா** (Aristobadra)

இவ்விடம் செனுப் (Chenab) நதிக்கரைமீதுள்ள பாதர்வா (Bhadarwah) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. செனுப் நதியின் வேதகாலப் பெயர் சந்திரபாகா (Chandra Baga). ஆக, செல்வந்தர்கள் (Aristo) வசிக்கும் பாத்ரா (Badra) என்று பொருள்படும் சொல், நவீன பாதர்வாவைக் குறிப்பிடுகிறது. கால அடைவினுல் சொல் சிறிது பிறழ்ந்துள்ளது.

பாதர்வா இருப்பிடம்: 33°·4′வ×73°·50′கி.

**6. அஜிகா** (Ajica)

இவ்விடம் இப்பொழுது மஜிதா (Majitha) என்று வழங்கப்படுகிறது. மஜிதா, ராவி நதிக்குக் (River Ravi) கிழக்கே உள்ளது. இது அம்ருதசரஸ் (Amritsar) பகுதியைச் சார்ந்தது. இதற்கருகில் ஸ்ரீ கோவிந்தபூர் (Sri Govindpur) எனும் ஊர் இருக்கிறது. அஜிகா என்பது அஜின நாடு என்பதன் குறுக்கமே. அதன் பொருள்

மான் தங்குமிடம் என்பதே. (அஜினம்-மான்). அஜினவனம் என்பதே கிரேக்க உச்சரிப்பில் அஜிகா (Ajica) என்று வழங்கப் பட்டது. இவ்விடம் பஞ்சாபைச் சார்ந்ததாகும்.

மஜிதாவின் இருப்பிடம்: 31°·46′வ×75°·1′கி.

"காசி என்று வழங்கப்படும் கங்கை நதிக்கரை நகருக்கருகில் அஜினவனம் என்று காடு ஒன்று இருந்தது. அதன் பொருள் மான் வனம் என்பதே. அங்குப் புத்தபிரானுர் ஞானம் பெறுவதற்குச் சற்று முன்னர்த் தங்கியிருந்ததாக வரலாறுகள் கூறுகின்றன.

இந்த நகரத்துக்கு வடகிழக்கில் 10 லித் தொலேவில், ரிஷிகள் கூட்டமாய் வசிக்கும் மான் தோப்பு (Deer Park) ஒன்று உள்ளது. அதில் ஒரு விஹாரம் கட்டப்பட்டுள்ளதைக் காணலாம். அங்கு எப்பொழுதும் மான் கூட்டங்கள் மர நிழலிலே தங்கியிருக்கும். உலகம் போற்றும் இரட்சகரான புத்தபிரானுர் இதே இடத்தில் உட்கார்ந்து, உன்னதமான போதி என்னும் பிரம ஞானத்தை அடைந்ததனுல், பிற்காலத்து மக்கள் இவ்விடத்தில் அந்நிகழ்ச் சியை நினைவுபடுத்த ஒரு விஹாரத்தை எழுப்பியுள்ளார்கள்."

—(**பாஹியான்:** பக்கம் 191-192)

இங்கு அஜின நாடு, அஜின வனம் இரண்டும் மான் சம்பந்த மாகவே குறிப்பிடப்பட்டுள்ளன. பண்டைக்காலத்தில் ரிஷிகள் ஆசிரமத்தைச்சுற்றி மான் கூட்டங்கள் இருக்கும் என உபநிஷத் துகள் கூறுகின்றன. மான்தோலே (அஜினம்) ரிஷிகள் ஆசனமா கவும், ஆடையாகவும் பயன்படுத்தினர் என வரலாறுகள் கூறு கின்றன.

"இந்தியத் தத்துவ ஞானியர்கள் மான் தோலின்மீதோ அல்லது தருப்பைப் புல்லினுல் ஆகிய படுக்கைகளின்மீதோ படுத்துறங் குவர்."

—(**மெகஸ்தனிஸ்:** அதிகாரம் 30, பக்கம் 195)

"ஹான்போலோ ஆடையாக உடுக்கப்படுகின்றது."

—(**யுவான் சுவாங்:** பக்கம் 24-25)

இங்கு ஹான் போ லோ (Han-Po-Lo) என்பது மான் தோலேக் குறிப்பிடும் சொல்லாகும்.

---

# 58. சிந்துநதிச் சுற்றுப்புறம்

| | |
|---|---|
| *பர்தபாத்ரா*[1] | ... 117°· 0′கி × 23°·50′வ. |
| *பிஸ்கா*[2] | ... 116°·30′கி × 25°· 0′வ. |
| *பஸிபிடா*[3] | ... 114°·30′கி × 24°· 0′வ. |
| *சூஸிகாஞ*[4] | ... 112°· 0′கி × 22°·20′வ. |
| *போணிஸ்*[5] | ... 111°· 0′கி × 21°·30′வ. |
| *கோலகா*[6] | ... 110°·30′கி × 20°·40′வ. |

## விளக்கவுரை

**1. பர்தபாத்ரா** (Pardabadra)

இது சந்திரபாஹா (Chandra Baga) எனப்படும் செனுப் நதிப் (Chenab) பிரதேசத்தில் உள்ள பாதர்வா (Bhadarwah) என்னும் இடத்தையும், அதனருகில் உள்ள ராம்நகர் (Ramnagar) என்பதையும் குறிப்பிடுகிறது. அதிகாரம் 57, குறிப்பு-5-ல் அரிஸ்டோபாத்ரா என்று குறிப்பிட்டதும் இப்பகுதியையே. அக் காலத்தில் பரதன் பெயரால் (இராமரின் இளையவர்) நிர்மாணிக்கப் பட்ட நகரம் பாத்ரா என்றும், அவருடைய சகோதரர் [பர்த-பிரதர்-ஃபிரேடர் (Frater) என்பதன் திரிபு]. ஸ்ரீ ராமரின் பெயரால் நிர்மா ணிக்கப்பட்ட நகரம் ராம்நகர் என்றும் வழங்கப்பட்டது பொருத் தமே. இது காஷ்மீர் பகுதியில் உள்ளது.

பாதர்வாவின் இருப்பிடம்: 33°·4′வ × 75°·50′கி.

ராம்நகரின் இருப்பிடம்: 32°·52′வ × 75°·22′கி.

**2. பிஸ்கா** (Pisca)

இது நவீன பெஷாவர் (Peshawar) எனும் இடத்தைக் குறிப் பிடும் சொல்லாகும். பெஷாவர் என்ற சொல் புருஷபுரம் (Purusha pura) என்ற சொல்லின் ஆங்கில உச்சரிப்பே. இதை அன்று உச்சரிப்பில் பிஸ்கா (Pisca) என்று வழங்கினர் போலும். வேத காலத்திலிருந்து புருஷபுரம் ஒரு வாணிகத்தலமாக விளங்கிற்று. இது கைபர் கணவாய் (Khyber Pass) அருகில் உள்ளது.

பெஷாவரின் இருப்பிடம்: 34°·2′வ × 71°·37′கி.

**3. பஸிபீடா (Basipeeda)**

இது இன்று அபோடாபாத் (Abbotabad) இருக்கும் இடத்தைக் குறிப்பிடுவதாகக் கூறப்படுகிறது. இவ்விடம் பெஷாவருக்குக் கிழக்கே உள்ளது. பெஷாவர் சிந்துநதிக்கு மேற்கே உள்ளது. பிராசின (Prachina) என்ற சொல் கிழக்கு எனும் பொருள்தரும் வடமொழிச் சொல் ஆகும். பிராசின என்பதே பஸி என்று கிரேக்க மொழியில் உச்சரிக்கப்பட்டிருக்கவேண்டும்.

அபோடாபாத் இருப்பிடம்: 34°·9′வ × 73°·15′கி.

**4. சூஸிகாஞ (Sousikana)**

மாவீரர் அலெக்சாந்தரால் (கி.மு. 356-323) இவ்விடம் மூஸி கானஸ் (Musikanos) அல்லது மூஸிகாஞ என்று வழங்கப்பட்டது. இந்தியாவில் செல்வம் படைத்த நகரங்களுள் இதுவும் ஒன்றாக இருந்தது. சிறந்த வாணிக நகரமாக விளங்கிற்று.

அர்ரியன் (கி.பி. 90-180) என்பார் இதை ஓஸிகாஞ (Osikanos) என்று வழங்கினர். ஓஸிகாஞ, மூஸிகாஞ என்ற சொற்களையே பின்னர் வந்த தாலமி, சூஸிகாஞ (Sousikanos) என்று வழங்கினர்.

குர்டியஸ் (Curtius) என்ற வரலாற்றாசிரியரும் (கி.பி. 40-70) இவ்விடத்தை சூஸிகாஞ (Sousikanos) என்றே வழங்கியுள்ளார். இவர் மாவீரர் அலெக்சாந்தரின் வாழ்க்கை வரலாற்றை 10 புத்தகங்களாக எழுதியுள்ளார்.

—(Vide *A Smaller Classical Dictionary*, p. 174)

மேற்கூறப்பட்ட சூஸிகாஞ, மூஸிகாஞ, ஓஸிகாஞ ஆகிய ஒரே இடத்தைக் குறிக்கும் பல பெயர்கள், நவீன ஜங்மஹியாஞ (Jhang Maghiana) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இவ்விடம் ஜீலம் நதியும் (River Jhelum), செனுப் நதியும் (River Chenab) கூடும் இடத்துக்கருகில் உள்ளது. மிகச் சிறந்த வாணிக நகரமாக விளங்கிற்று.

ஜங்மஹியாஞ இருப்பிடம்: 31°·16′வ × 72°·22′கி.

புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் இவ்விடத்தைப் பக்கார் (Bakkar) என்று வழங்குகின்றனர். இவ்விடம் சிந்துநதியின் கிழக்குக் கரையில் உள்ளது. பக்கார் நகருக்கு 32 கிமீ. (20 மைல்) தொலைவில் வடக்கே அழிபாடுகள் காணப்படுகின்றன. அவ் அழிபாடுகள் உள்ள இடம் அலார் (Alor) என்று புதைபொருள் ஆராய்ச்

சியாளர் கூறுகின்றனர். இதுவே சிந்துநதியின் நடுப்பகுதியில் புகழ் பெற்று விளங்கிய மின்னகரம் (Minnagar) என்று கூறுகின் றனர். இது மின் (Min) என்று வழங்கப்பட்ட பார்த்திப அரசர் களால் (Parthians) நிர்மாணிக்கப்பட்டதாகும்.

பார்த்திப அரசர்களுள் முக்கியமானவர் கொண்டாபர்னஸ் (Gondophernes) என்பவர் ஆவார் என்றும், அவர் கி.பி. 21-ல் அரச பதவி ஏற்றார் என்றும் புனிதர் தாமஸ் கொண்டாபர்னஸ் என்பாரைக் கிறித்தவராக்கினர் (கி.பி. 48) என்றும், அவர் கி.பி. 60 வரை வாழ்ந்துவந்தார் என்றும், ஆனால் கி.பி. 50 அளவில் குஷானர்கள் (Kushans) அவரை வென்றுவிட்டனர் என்றும் வரலாறு கூறுகிறது.

—(Vide *The Early History of India* By Vincent Smith, M.A., p. 231)

மற்றும் கொண்டாபர்னஸ் ஆட்சிக்காலத்தில் (கி.பி. 21-50) தக்ஷசீலப்பகுதியில் ஒரு நிலநடுக்கம் ஏற்பட்டதென்றும் (கி.பி. 44), அதனால் தக்ஷசீலம் உருத்தெரியாமல் மண் மூடப்பட்டது என்றும் வரலாறுகள் கூறுகின்றன.

—(**யுவான் சுவாங்:** பக்கம் 76)

பக்கார் (அலார்) இருப்பிடம்: 31°·16′கி × 71°·6′கி.

" புனிதர் தாமஸ் (Saint Thomas) இயேசுநாதரின் பன்னிரு சீடர்களுள் ஒருவராவார். அவர் மலபார் நாட்டில், கொடுங்களூர் துறைமுகத்தில் கி.பி. 52ஆம் ஆண்டு இறங்கினர். வடநாட்டில் 4 ஆண்டுகளும், மலையாளத்தில் 6 ஆண்டுகளும், 7 ஆண்டுகள் சென்னை மயிலாப்பூரிலும் தங்கியிருந்தார். அவர் இந்தியாவில் இருந்த மொத்த ஆண்டுகள் 17 ஆக, அவர் சாந்தோமில் கொல்லப் பட்டது கி.பி. 69 ஆகலாம்."

—(Vide *In the Steps of St. Thomas* By Rev. Herman D'Souza, Mylapore, p. 22)

நிலவழியாகப் புனிதர் தாமஸ் கொண்டாபர்னஸ் அரசாங்கத் திற்கு வந்திருக்கவேண்டும் என்றும், அங்கு அவரைக் கிறித்தவ ராக்கி (கி.பி. 48), சிந்து கழிமுகத்துக்கு வந்து, அங்கிருந்து கப்பலில் பாரிகாஸா வந்து, பாரிகாஸாவிலிருந்து கொடுங்களூர் (பண்டைய முசிறி) கடலூர்ந்து வந்திருக்கவேண்டும் என்றும், ஆங்காங்கு வழியில் தங்கிவந்த காரணத்தால், அவர் கொடுங்க ளூருக்கு வர நான்கு ஆண்டுகள் ஆகலாமென்றும், ஆக புனிதர் தாமஸ் கி.பி. 52-ல் கொடுங்களூரில் வந்திறங்கியிருக்கவேண்டும்

என்றும் ஏற்படுகிறது. இதை ஏற்றுக்கொண்டால், புனிதர் தாமஸ் கொல்லப்பட்ட ஆண்டு கி.பி. 65 என்று கொள்ளப்படுகிறது.

**5. போனிஸ் (Bonis)**

இது பொகாலிஸ் (Pocalis) எனப்படும் புஷ்கலபுரத்தைக் குறிப்பிடும். மற்றும் கிரேக்கர்கள் இவ்விடத்தைப் பியூகலாடிஸ் (Peucolatis) என்று வழங்கினர். பரதன் (இராமனின் இளையவர்) மகன்களான தக்ஷன், புஷ்கலன் எனும் இருவர் பெயரால் இரு நகரங்களை நிர்மாணித்து, முறையே அவற்றிற்குத் தக்ஷசீலம் (Taxila) என்றும், புஷ்கலபுரம் (Peucolatis) என்றும் பெயரிட்டார். இச் செய்தி இராமாயணத்தில் கூறப்படுகிறது—(**இராமாயணம்:** உத்தர காண்டம் அதிகாரம் 114); மற்றும் இரகுவம்சம் இச் செய்தியைக் குறிப்பிடுகிறது.—(**இரகுவம்சம்:** அதிகாரம் 15, சுலோகம் 81)

பிளினி இந் நகரத்தைக் குறிப்பிட்டுள்ளார் :

"இந்த நதி (கோபிஸ்)க்கும், இந்திய நகரமான பியூகலாடிஸ் என்பதற்கும் உள்ள தொலைவு 240 மைல்கள்."

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-47, பக்கம் 15)

புஷ்கலபுரம் (Pushkalapura), பெஷாவருக்கு (Peshawar) 18 மைல் (25 கிமீ.) வடகிழக்கில், ஸ்வாத் நதியும் (River Swat), காபூல் நதியும் (River Kabul) கூடும் இடத்தில் உள்ளது. இன்று அவ்விடம் கார்ஷட்டா (Charshadda) என்று வழங்கப்படுகிறது

புஷ்கலபுரத்தின் (கார்ஷட்டா) இருப்பிடம் : 34°·8'வ × 71°·46'கி.

பியூகலாடிஸ் எனும் புஷ்கலபுரத்தை யுவான் சுவாங் (கி.பி. 629-645) என்பாரும், பாஹியான் (கி.பி. 399-414) என்பாரும் குறிப்பிட்டுள்ளனர்.

—(**யுவான் சுவாங்:** பக்கம் 70-78; **பாஹியான்:** பக்கம் 53-55)

**6. கோலகா (Colaca)**

இவ்விடம் இன்று கோஹாட் (Kohat) என்று வழங்கப்படுகிறது. சிந்து நதிக்கு மேற்கிலும், பெஷாவருக்குத் தெற்கிலும் உள்ளது. இது முன்னர் சிறந்த வாணிகத்தலமாக விளங்கிற்று.

கோஹாட்டின் இருப்பிடம்: 33°·36'வ × 71°·29'கி.

சிலர் இதைக் கராச்சியின் (Karachi) அருகில் உள்ள கர்கல்லா (Karkalla) என்பதைக் குறிப்பிடுவதாகவும், கர்கல்லாவே அர்ரியன் வரலாற்றாசிரியரால் (கி.பி. 90-180) குரோகலா (Crocala) என்று

வழங்கப்பட்டதாகவும் கூறுகின்றனர். மற்றும் மாவீரர் அலெக்சாந்தரின் (கி.மு. 356-323) கப்பற்படைத் தளபதி (Naval Captain) நியார்க்கஸ் (Nearchos) என்பவர் தம் படையுடன் ஒருநாள் இங்குத் தங்கியதாகவும் அர்ரியன் கூறுகிறுர். இவ்விடம் கராச்சி வளைகுடாவில் உள்ளது.

கர்கல்லாவின் இருப்பிடம்: 24°·51′வ × 67°·4′கி

ஆனுல், தாலமி இப்பகுதியில் சிந்து நதியின் வடபகுதி, வடகிழக்கு, வடமேற்குப்பகுதி, நடுப்பகுதி ஆகியவற்றையே குறிப்பிடுவதால், கர்கல்லாவைவிட கோஹாட் என்பதே பொருத்தமானது என்பது தெளியப்படும்.

---

# 59. சிந்துநதித் தீவுகள்

*சிந்துநதியால் உண்டாக்கப்பட்ட தீவுகளில்[1] கீழ்க்குறிப்பிடப்பட்ட நகரங்கள் உள்ளன:*

| | |
|---|---|
| *பாதலினே*[2] | ... 112°·30′கி × 21°· 0′வ. |
| *பார்பரிகா*[3] | ... 113°·15′கி × 22°·30′வ. |

### விளக்கவுரை

**1. சிந்து நதியால் உண்டாக்கப்பட்ட தீவுகள்** (Islands formed by Sindu-s River)

சிந்து என்பதைச் சிந்தஸ் (Sindu-s) என்று கூறுகிறுர். அச்சொல்லின் இறுதியில் உள்ள S உச்சரிப்பில் எடுத்துக்கொள்வதில்லை. அதை விட்டுவிட்டால், சிந்து என்பதே மிஞ்சியுள்ளது. இதை இண்டஸ் (Indus) என்று மற்ற கிரேக்க ஆசிரியர்களும் பிளினி, பெரிப்ளூஸ் நூலின் ஆசிரியர்களும் குறிப்பிட்டுள்ளனர்.

"இந் நதி போகும் பாதையில் இரண்டு தீவுகளை உண்டாக்கிச் செல்கிறது. அவற்றுள் ஒன்று பாதலே."

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் 64)

**2. பாதலினே** (Patalinae)

இது பண்டைக்காலம் முதல் புகழ் பெற்ற ஆற்றுத் துறைமுகமாகும். பிளினி, பெரிப்ளூஸ் நூலாசிரியர், அர்ரியன், ஸ்டிராபோ ஆகியவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

இப்பாதலம் இருந்த இடமே இன்று ஹைதராபாத் (சிந்த்) (Hyderabad-Sind) என்று வழங்கப்படுகிறது. இதில் ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்கள் பெரிப்ளூஸ் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன—(**பெரிப்ளூஸ் : அதிகாரம் 38-39, பக்கம் 135-152)**

ஆற்றுப்படுகை என்பதில் உள்ள படுகை என்ற பொருளிலேயே பாதலம் எனும் சொல் உருவாகியுள்ளது. சிந்துநதிக் கழிமுகத்தில், ஆறு கடலுடன் கலக்கும் இடத்துக்குச் சற்று முன் இருந்த இடமே பாதலம் (Patala). மற்றும், அதிகாரம் 55, குறிப்பு-3 பார்க்கவும்.

பாதலத்தின் இருப்பிடம் : 25°·25′வ × 68°·38′கி.

**3. பார்பரிகா** (Barbarica)

இவ்விடத்தைப் பார்பரிகம் (Barbaricum) என்று பெரிப்ளூஸ் நூலாசிரியர் கூறுகிறார்.

—(**பெரிப்ளூஸ் :** அதிகாரம் 39, குறிப்பு-1, பக்கம் 143)

இது சிந்துநதிக் கழிமுகத்தில் இருந்தது. இன்று இவ்விடம் டட்டா (Tatta) என்று வழங்கப்படுகிறது.

பெரிப்ளூஸ் நூல் கூறுகிறது :

" இவ்விடம் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் : மெல்லிய ஆடை வகைகள், சித்திரங்கள் அடிக்கப்பட்ட துணிகள், சிலாசத்து, சாம்பிராணி, அகில், கண்ணாடிப் பொருள்கள், உண்கலங்கள் முதலியன.

ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்கள் : கிழங்கு, பிடெல்லியம். வைடூரியம், சேரே நாட்டுத் தோல்கள், கடுக்காய், சடாமாஞ்சி, நவரத்தினக் கற்கள், பஞ்சு ஆடைகள், பட்டு ஆடைகள், அவுரி முதலியன."

—(**பெரிப்ளூஸ் :** அதிகாரம் 39, பக்கம் 142)

டட்டாவின் இருப்பிடம் : 24°·44′வ × 67°·58′கி.

பார்பரிகம் (Barbaricum) என்ற சொல்லே பார்பரிகான் (Barbaricon) என்று வழங்கப்பட்டது. பெர்பெர் (Berber) என்றால் அயல் நாட்டு மக்களின் கூட்டம் என்றும், சுதேச நாட்டு மக்களின் கலாசாரத்தையும் பண்பாட்டையும் கடைப்பிடிக்காமல் அநாகரிகமாக இருப்பவர் என்றும் பொருள்படும் சொல்லாகும். மற்றும், பேபல் (Babel) என்பதிலிருந்து பெர்பெர் உண்டாயிற்று என்றும், பேபல் என்றால் புரியாது பிதற்றுதல் என்றும் கூறப்படுகிறது. அயல் நாடுகளிலிருந்து பலர் அங்குக் கூடிப் பல மொழிகளைப் பேசுவதால்,

அம்மொழிகள் புரியாது பிதற்றல் போலவே பலருக்குக் காணப்படும். ஆகையால் பார்பரிகம் என்பது, அயல் நாட்டார் பலர் ஒன்று கூடும் நகரம் அல்லது துறைமுகம் என்று பொருள்படும் சொல் லாகும்.

ஆப்பிரிக்காவில் இதே பொருளைக்கொண்ட பெர்பர் நாடு (Berber) ஒன்றும், பெர்பெரா (Berbera) என்ற துறைமுகமும் உள்ளன.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 2, குறிப்பு-2, பக்கம் 5)

---

# 60. சிந்து நதிக் கிழக்குப்பகுதி

*சிந்து நதிக்குக் கிழக்கில் சிறிது தொலைவில் கீழ்க் குறிப் பிடப்பட்ட ஊர்கள் காணப்படுகின்றன:*

| | |
|---|---|
| *ஸோட்ரகே*[1] | ... 116°· 0′கி×24°· 0′வ. |
| *சர்பனு*[2] | .... 116°· 0′கி×22°·50′வ. |
| *ஆக்ஸோமிஸ்*[3] | ... 115°·30′கி×22°·20′வ. |
| *அஸிண்டா*[4] | ... 114°·15′கி×22°· 0′வ. |
| *அர்பதரௌ (அர்டபாரி)*[5] | ... 115°· 0′கி×22°· 0′வ. |
| *தியோபிலா*[6] | ... 114°′15′கி×21°·10′வ. |
| *அஷ்டகப்ரா*[7] | .... 114°·40′கி×20°·15′வ. |

## விளக்கவுரை

**1. ஸோட்ரகே (Sodrakae)**

சூட்ரகா (Sudraka) எனும் வகுப்பினர் சிந்து நதியும், சரஸ்வதி நதியும் (River Sarasvathi) கூடுமிடத்தில் வசித்துவந்தனர். சரஸ்வதி இன்று பஞ்சநாட் நதி (Panchanad River) என்று வழங் கப்படுகிறது. பஞ்சநாட் என்ற சொல் பஞ்சநாத் (Panchanath) என்பதன் சிதைவே. சூட்ரகா என்பவர் இருந்த இடம் மிதன்கோட் (Mithankot) என்று வழங்கப்படுகிறது. மிதன்கோட், சிந்து நதியும் பஞ்சநாட் நதியும் கூடும் இடத்திற்குச் சற்றுத் தெற்கே, ஆற்றுத் துறைமுகமாக உள்ளது. மிதன்கோட் ஒரு வாணிகத்தலமாக இருந்தது. இன்றும் அவ்விடம் முக்கியத்துவம் வாய்ந்ததாகக்

காணப்படுகிறது. மிதன்கோட் என்பதன் முந்தைய பெயர் மிதுனபுரி.

—(Vide *An Advanced History of India* By R. K. Mookerji, M.A., p. 49)

மிதன்கோட் இருப்பிடம்: 28°·55′வ × 70°·25′கி.

**2. சர்பன (Sarpana)**

இவ்விடம் இப்பொழுது சட்லெஜ் (Sutlej) நதிக்கரை மீதுள்ள சோப்ரான் (Sopran) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. இவ்வூர் அமிரதசரசுக்குத் (Amritsar) தெற்கில் லாகூர் (Lahore) மாவட்டத்தில் உள்ளது.

சோப்ரானின் இருப்பிடம்: 31°·17′வ × 74°·54′கி.

**3. ஆக்ஸோமிஸ் (Auxomis)**

ஆக்ஸிட்ரகாய் (Oxydrakai) என்னும் இனத்தவர் பியாஸ் நதி என்று இன்று வழங்கப்படுவதும், முன்னர் ஹைபாஸிஸ் (Hyphasis) என்று வழங்கியதுமான நதியின் உற்பத்தியாகும் இடத்தினருகே இருந்தனர் என்று வின்செண்ட் ஏ. ஸ்மித் கூறுகிறார்.—(Vide *The Early History of India*, p. 92). ஆக, ஆக்ஸிட்ரகாய் எனும் இனத்தவர் பியாஸ் நதிக்கரையில் இருந்தவராகத் தெரியவருகிறது. ஆனால், முகர்ஜி ஆர். கே. என்பார், சூட்ரகா (Sudraka) என்பவர் மிதன்கோட் அருகில் இருந்து வந்ததாகக் கூறுகிறார் (முன் குறிப்பு-1 பார்க்கவும்). இங்குச் சிந்து நதிக்குக் கிழக்கில் உள்ள பகுதியைத் தாலமி இவ்வதிகாரத்தில் குறிப்பிடுவதால், பியாஸ் நதிக்கரை வாசிகளே ஆக்ஸிட்ரகாய் என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும். இவர்களே தாலமியால் ஆக்ஸோமிஸ் (Auxomis) என்று வழங்கப்பட்டவராகலாம். இவர்கள் சட்லெஜ் நதிக்கும், பியாஸ் (Beas) நதிக்கும் இடையே வாழ்ந்தவர் ஆவர். இவர்கள் மலைவாசிகள் ஆவர். இவ்விடத்தில் உள்ள ஜ்வாலா முஹி (Jawala Muhi) பழங்காலத்திலிருந்தே புகழ்பெற்ற நகரம். இதையே ஆக்ஸிட்ரகாய் மக்கள் வசித்த நகரமாகக் கொள்ளலாம். அதன் அருகில் யோகேந்திர நகர் (Jogendra Nagar) என்று வழங்கும் ஒரு நகரம் இன்றும் காணப்படுகிறது. ஆக்ஸிட்ரகாய் என்பது ஹடயோகிகள் (Hatayogis) என்ற சொல்லின் திரிபாகவும் இருக்கக் கூடும். அதையொட்டியே அருகில் யோகேந்திர நகர் ஒன்று இருப்பதும், அதை உறுதிப்படுத்துகிறது. இமயமலை அடிவாரத்தில் முன்காலங்களில் யோகிகளும், ரிஷிகளும், ஹடயோகிகளும், ஜைனர்களின் குருமார்களான தீர்த்தங்கரர்களும் இருந்தனர் என வரலாறு விளக்கம் அளிக்கிறது.

ஆக ஹடயோகி என்பதே கிரேக்க மொழியில் ஆக்ஸிட்ர காய் என உச்சரிக்கப்பட்டுள்ளது என்று இதனுல் தெரியவருகிறது.

ஜ்வாலாமுகியின் இருப்பிடம்: 31°·53′வ × 76°·22′கி.

யோகேந்திர நகர் இருப்பிடம்: 31°·53′வ × 76°·50′கி.

**4. அஸிண்டா** (Asinda)

இவ்விடம் ஹர-சிந்து எனப்படும் ஹரப்பா (Harappa) எனும் இடத்தைக் குறிப்பிடும். இங்கே புதைபொருள் ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. ஹரியுபியா (Hariyupiya) எனும் நதி அங்கே ஓடியதன் காரணமாக, அவ்விடம் ஹரப்பா என்று வழங்கப்பட்டது என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இங்கு இருந்த மக்கள் விருச்சீவதர்கள் (Vrichivats) என்று வழங்கப்பட்டனர்.

இவர்கள் பின்னர் இரு பிரிவினராகப் பிரிந்தனர். ஒருவர் பரதர்கள் என்றும், அவர்கள் சந்ததியார்கள் பாரத்வாஜர்கள் என்றும் வழங்கப்பட்டனர். அவர்கள் வைணவர்கள்; விஷ்ணுவை வழிபட்டவர்கள். இரண்டாமவர் யதுக்கள், துருயுக்கள், பூருக்கள் எனப் பிரிந்து, முழுவதுமாக தாஸ்யுக்கள் அல்லது தாஸர்கள் (Dasyus or Dasas) என வழங்கப்பட்டனர். தாஸ்யுக்கள் இலிங்கத்தை (Linga) வழிபட்டனர். இருவரும் பின்னர் பகைவராகி விட்டனர்.

—(Vide An Advanced History of India By R.K. Mookerji, p. 27)

ஹரப்பாவின் இருப்பிடம்: 30°·35′வ × 72°·58′கி.

மோகன்சதாரோ (Mohenjodaro), ஹரப்பா (Harappa) இரு நகரங்களின் அழிபாடுகளும் பல உண்மைகளையும் நமக்கு எடுத்துக்காட்டியுள்ளன.

மோகன்சதாரோ, சிந்து பாலைவனத்தில் (Sind Desert) உள்ளது. டோக்ரி (Dokri Railway Station) இரயில் நிலையத்திலிருந்து 8 மைல்கள் (13 கிமீ.) டோங்காவில் செல்லவேண்டும். அது சிந்து நதிக்கு மேற்கில் உள்ளது.

—(Some Ancient Cities of India By Stuart Piggot, F.S.A., p. 18)

மோஹன்சதரோவின் இருப்பிடம்: 27°·17′வ × 68°·8′கி.

**5. அர்பதரௌ (அர்டபாரி)** [Arbadarau (Artabari)]

அர்பதரௌ (Arbadarau) என்ற சொல் அபிரர் (Abiras) வாழ்ந்த நாடு என்று பொருள்படும். அர்டபாரி (Artabari) என்பது

அர்ட்டகனு என்ற சொல்லின் சிதைவே. அர்ட்டகனு நகரத்தைப் பிளினி (கி.பி. 23-79) குறிப்பிட்டுள்ளார்.—(பிளினி, புத்தகம் VI, அதிகாரம் 25, குறிப்பு-30, பக்கம் 97). இது ஹரி-ருத் நதிக்கரை மீது உள்ள நகரம். ஹரி-ருத் (Hari Rud) என்ற சொல்லே கிரேக்க உச்சரிப்பில் அர்பதரௌ என்று வழங்கப்பட்டிருக்கவேண்டும். இந் நகரத்தின் பெயர் ஹீராட் (Herat). ஹீராட் என்ற நகரம் முன்னர் ஹீராட்கானு என்று வழங்கப்பட்டது. அதுவே பிளினியால் அர்ட்டகனு என வழங்கப்பட்டது. அர்ட்டகனு என்பதைத் தாலமி அர்ட்டபாரி (Artabari) என்று வழங்கினுர். இந் நகரம் சிந்து நதிக்கு வடமேற்கே உள்ளது.

ஹீராட் நகரின் இருப்பிடம்: 34°·28′வ×62°·9′கி.

இது நவீன அட்டாக் (Attock) என்ற இடத்தைக் குறிப்பிடு கிறது என்றும் கூறப்படுகிறது. அட்டாக் சிந்துநதியின் வடக்கே, பெஷாவருக்குத் தெற்கே உள்ளது. அட்டபுரி என்பதே அர்டபாரி எனப்பட்டது போலும். அட்டபுரியே ஆங்கிலத்தில் அட்டாக் (Attock) ஆயிற்று.

அட்டாக்கின் இருப்பிடம்: 33°·53′வ×72°·17′கி.

**6. தியோபிலா (Theophila)**

இதுவும், அடுத்ததும் சிந்துநதிக்கு அப்பால் தொலேவில் உள்ள நகரங்களாகும். கத்தியவார் பகுதியில் உள்ள நகரங்களாகும்.

தியோபிலஸ் (Theophilus) என்ற கிரேக்கச் சொல்லின் பொருள் "கடவுளுக்கு உகந்தது" என்பதாகும். இச் சொல் துவாரகை (Dwaraka) எனப்படும் புண்ணியத்தலத்தைக் குறிப்பிடு கிறது. இது முக்திதரும் நகர் ஏழனுள் ஒன்ருகும்.

முக்திதரும் நகர்கள் ஏழாவன:

1. அயோத்தி, 2, மதுரா, 3. மாயா (ஹரித்வார்), 4. காசி, 5. காஞ்சி, 6. அவந்தி (உஜ்ஜயினி), 7. துவாரகை (சௌராஷ்டிரம்).

கத்தியவார் வடமேற்கில் துவாரகா (Dwaraka) என்ற ஒரு துறைமுகம் விளங்குகிறது. இது போர்பந்தருக்கு (Porbandar) வடமேற்கில் உள்ளது. இத் துறைமுகம் பழங்காலம் முதற்கொண்டு புகழ்பெற்று விளங்குகிறது. இத் துறைமுகம் கிருஷ்ணபரமாத்மா விளுல் நிர்மாணிக்கப்பட்டது என்று வரலாறு கூறுகிறது.

துவாரகாவின் இருப்பிடம்: 22°·14′வ×69°·1′கி.

துவாரகையைப்பற்றி பின்வரும் வரலாறுகள் காணப்படு கின்றன :

காலயவனன் பெருஞ் சேனையுடன் வட மதுரையை முற்றுகை யிட்டபொழுது, அதனால் யாதவருக்கு எத்தீங்கும் நேரிடக்கூடாது என்ற கருத்தினால், ஸ்ரீ கிருஷ்ணர் அவ் யாதவரைக் காக்கும் பொருட்டு, கடலினிடையே ஒரு துறைமுகத்தை ஏற்படுத்தி, அர சாண்ட துறைமுகமே துவாரகையாகும் என்பது புராண வரலாறு.

மற்றும் ஆதிசங்கரர் சநாதன தர்மத்தைப் பரப்பத் தாபித்த நான்கு மடங்களுள் துவாரகாபீடமும் ஒன்றாகும். இதன் பெயர் துவராபதி என்றிருந்தது. கிருஷ்ணர் துவாரகையின் அரசன் (அதிபதி) என்னும் பொருளிலும் துவாரபதி என்ற சொல் வழங்கப் பட்டது.

ஸ்ரீமத் பாகவதம், விஷ்ணு புராணம், மகாபாரதம், ஹரி வம்சம், ஸ்கந்த புராணம் ஆகியவற்றில் துவாரகை குறிப்பிடப்பட் டுள்ளது. துவாரகை என்ற சொல் ‘ நுழைவாயில் ’ என்று பொருள் படும். மேற்குக் கடற்கரை வழியாக வரும் கப்பல்களுக்கு இந்தி யாவில் நுழைவிடமாகத் துவாரகை அமைந்திருந்ததும் ஒரு காரண மாகும். மற்றும், அயல் நாடுகளுடன் வாணிகத் தொடர்பும், கலாச் சாரத் தொடர்பும் கொண்டிருந்தது. இத் துறைமுகம் ‘ தங்கத் துவாரகை ’ என்றும் விதந்தோதப்பட்டது-அங்குத் தங்கம் குவிந் திருந்த காரணத்தால்.

முதலில் இருந்த துவாரகையில் கோயில் அழிந்துவிட்டதாகவும், பின்னர் கோமதி நதிக்கரைமீது ஒரு கோயில் கட்டப்பட்டதாகவும் கூறப்படுகிறது. இதைக் கிரேக்கர் ‘பராகே’ (Baracae) என்றும் வழங்கினர். துவாரகை என்பதையே அவர்கள் பராகே என்று கிரேக்க உச்சரிப்பில் கூறினர் போலும்.

குப்தர்கள் காலத்தில் கி.பி. 5ஆம் நூற்றுண்டில் அக்கோயில் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது என்றும், ஒரே இடத்தில் கடல்கோள் காரணமாக ஆறு கோயில்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கட்டப்பட்ட தென்றும் தொல்பொருள் ஆராய்ச்சியாளரான டாக்டர் எச். டி. சங்காலியா (Dr. H. D. Sankalia) தமது ஆராய்ச்சியில் குறிப்பிட் டுள்ளார்.

இங்குக் கி.பி. 8ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் ஆதிசங்கரர் சாரதா பீடத்தைத் தாபித்ததாக வரலாறு கூறுகிறது.

துவாரகைக் கோயிலின் பிரதான நுழைவாயில் ‘சுவர்க்கத் துவார்’ எனப்படுகிறது. இவ் வாயில் கோமதி நதியைப் (River

Gomathi) பார்த்தவாறு ஏற்படுத்தப்பட்டுள்ளது. அக்கோயில் சுவர்களில் கிரேக்க, க்ஷத்ரபா, குப்தா, குருண்லக, பல்லவ, மைதர்க, சாளுக்கியக் கலாச்சாரங்களை உணர்த்தும் சிற்பங்களும், கல்வெட்டு களும் உள்ளன. மற்றும் இதனுள் மத்சய, வராஹ, நரசிம்ம, பரசு ராம, புத்த விக்கிரகங்கள் பிற்காலத்தவரால் பிரதிஷ்டை செய்யப்பட் டுள்ளன. இக்கோயிலினின்று வெளியே செல்லும் வழி 'மோக்ஷத் துவார்' (Moksha Dwar) என்று வழங்கப்படுகிறது.

இத்துவாரகையில் உள்ள கிருஷ்ண பரமாத்மா கோயிலின் நவீன பெயர் 'ஜகத் மந்திர்' (Jahat Mandir) என்பதாகும்.

இக்கோயிலைப்பற்றி பக்தி இலக்கியங்கள் பின்வருமாறு கூறு கின்றன :

"பதினாறுமாயிரவர் தேவிமார்
பணி செய்யத் துவரையென்னும்
அதில் நாயகராகி வீற்றிருந்த
மணவாளர் மன்னுகோயில்."

—(பெரியாழ்வார் திருமொழி : 4—9—3)

"நாட்டில் தலைப்பழியெய்தி உங்கள்
நன்மை யிழந்து தலையிடாதே ;
சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும்
துவராபதிக்கு என்னை உய்த்திடுமின்."

—(நாச்சியார் திருமொழி : 12—9)

(துவரை-துவாரகை ; துவராபதி-துவாரகாதிபதி, ஸ்ரீ கிருஷ்ணர்)

துவாரபதி, துவாரகாபதி இவ்விரண்டு சொற்களும் துவார கையை யாண்ட ஸ்ரீ கிருஷ்ணனையே குறிப்பிடும்.

**7. அஷ்டகப்ரா** (Ashta Gabra)

இவ்விடம் காம்பே வளைகுடாவில் (Gulf of Cambay) பவ நகருக்கு அருகில் இருந்தது. இங்கு எட்டு ஊர்களுக்கு ஒரு தலை நகரம் விளங்கிற்று. அந் நகரம் அஷ்ட சம்பரா (Ashta Champara) என்று பெயர் பெற்று விளங்கிற்று. அதையே தாலமி கிரேக்க உச்சரிப்பில் அஷ்டகப்ரா என்று கூறுகிறார்.

வலபி, சௌராஷ்டிர நாட்டின் தலைநகரம். வலபி செப்பேட்டில் (Valabi Inscriptions) துருவசேனன் I என்பவர் பெயரில் 'அஷ்ட கப்ரா' என்ற சொல் இணைக்கப்பட்டு விளங்குகிறது. அப் பகுதிக் கருகில்பஞ்ச்மஹால் (Panchmahals) என்று ஐந்து பெருங் கட்ட

டங்களைக் (கோயில்களை) கொண்ட ஊரும், நவபந்தர் (Navbandar) என்பது ஒன்பது வாணிகத்தலங்கள் கொண்ட ஊரும் காணப்படு கின்றன. இதேபோல் அஷ்டகப்ரா என்னும் இடமும் எட்டு என்ற எண் தொடர்பு கொண்டு விளங்கிற்று.

பெரிப்ளூஸ் நூல் ஆசிரியர் (கி.பி. 50-80) இதை அஷ்டசம்பரா என்று குறிப்பிடுகிறார்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 41, குறிப்பு-14, பக்கம் 162
& அதிகாரம் 43, குறிப்பு-5, பக்கம் 166)

இப்பொழுது அஷ்டகப்ரா என்ற இடம் ஹஷாப் (Hashab) என்ற பெயரால் விளங்குகிறது. ஹஷாப், பவநகருக்கு (Bavanagar) வெகு அண்மையிலேயே உள்ளது.

அஷ்டகப்ரா (ஹஷாப்) இருப்பிடம்: 21°·46′வ × 72°·11′கி.

இதுபோன்ற எண்களை முன்னிட்டு ஊர்கள் தமிழ்நாட்டில் பல உள்ளன: ஒற்றைக்கல் மந்து, முக்கூடல், நான்மாடக்கூடல், சதுர்வேதபுரம், ஐந்தருவி, ஆறுமுகனேரி, ஏழுமலை, எண்ணாயிரம், அஷ்டபுரம், நவபாஷாணம், தசகண்டபுரம் மற்றும் பல.

# 61. ஆற்றங்கரை நகரங்கள்

*ஆற்றங்கரை வழியினூடே பின்வரும் நகரங்கள் காணப் படுகின்றன:*

| | |
|---|---|
| *பனஸா*[1] | ... 122°·30′கி × 29°· 0′வ. |
| *பௌடையா*[2] | ... 121°·15′கி × 28°·15′வ. |
| *நாக்ராமா*[3] | ... 120°· 0′கி × 27°· 0′வ. |
| *காமிகாரா*[4] | ... 119°· 0′கி × 26°·20′வ. |
| *பின்னகரா*[5] | ... 118°· 0′கி × 25°·20′வ. |
| *பராபலி*[6] | ... 116°·30′கி × 24°·30′வ. |
| *ஸைடிராஸ்*[7] | ... 114°·00′கி × 21°·20′வ. |
| *எபிடௌஸா*[8] | ... 113°·45′கி × 22°·30′வ. |
| *ஸோணு*[9] | ... 113°·30′கி × 21°·30′வ. |

## விளக்கவுரை

### 1. பனஸா (Panasa)

இப்பகுதியில் ஆற்றங்கரை நகரங்கள் எனத் தாலமி பொது வாகவே கூறியுள்ளார். ஆக சிந்துநதி ஆற்றங்கரை மட்டுமின்றி, மற்ற ஆற்றங்கரை நகரங்களும் இதில் காணப்படுகின்றன.

பனஸா (Panasa) என்ற இடம் இன்று பன்ஸ்வாரா (Banswara) என்று வழங்கப்படுகிறது. இந்நகரம் மாஹி நதிக்கரைமீது (River Mahe) உள்ளது. இந்நதி மாயிஸ் (Mais) என்று குறிப் பிடப்பட்டுள்ளது. மாஹி நதி, காம்பே வளைகுடாவில் (Gulf of Cambay) கலக்கிறது. இந்நதி ரீவா காந்தா (Rewa Kantha) பகுதியில் வடகிழக்காக ஓடுகிறது. பன்ஸ்வாரா, ராஜபுதனப் பகுதியைச் சார்ந்தது.

பன்ஸ்வாராவின் இருப்பிடம்: 23°·30′வ×74°·24′கி.

### 2. பௌடையா (Boudaiya)

இச்சொல் புத்தகயா (Budhgaya) எனப்படும் இடத்தைக் குறிக்கிறது. இவ்விடத்தை யுவான் சுவாங் (கி.பி. 629-645), பாஹியான் (கி.பி. 399-414) ஆகிய இருவரும் குறிப்பிட்டுள்ளனர். இவ்விடம் புத்தபிரானுருடன் தொடர்பு கொண்டது. புத்தகயா என்பது மகாபோதி ஆலயம் என்றும் வழங்கப்படுகிறது.

"போதி மரத்துக்குக் கிழக்கில் 160 அடி உயரமுள்ளதும், முன்வாயில் இருபதடிக்குமேல் அகலமானதுமான ஆலயம் ஒன்று காணப்படுகிறது." —(**யுவான் சுவாங்**: பக்கம் 127)

"புத்தபிரானுர் போதி மரத்தடியில் 49 நாள்கள் சமாதி நிலையில் இருந்தார்." —(**யுவான் சுவாங்**: பக்கம் 127

புத்தகயா என்பதில் உள்ள கயா என்னுஞ் சொல் கய மகரிஷி யின் பெயரைத் தொடர்பு கொண்டுள்ளது. கயா எனும் இடம் கய மகரிஷியால் நிர்மாணிக்கப்பட்டதென்று ஹிந்து புராணங்களும், அது கஜ-சிரஸ் (யானைத்தலை) என்ற பெயருள்ள போதிசத்துவரால் உண்டாக்கப்பட்டது என்று புத்த மத நூல்களும் கூறுகின்றன. புத்தருடன் தொடர்புபடுத்திக் கூறப்படுவதால், இவ்விடம் புத்த பிரானுர் காலத்திலும், அவருக்குப் பிறகுமே புகழடைந்தது என்று தெரிகிறது. புத்தபிரானுர் கஜ-சிரஸ் மலைமீது ஏறி இரத்னுகரச் சூத்திரத்தைப் போதித்ததாகப் பௌத்த வரலாறுகள் கூறுகின்றன. இரத்னுகரச் சூத்திரம் என்பது பா-வோ-யுன்-சிங்(Pa-O-Yun-Ching) என்று வழங்கப்படுகிறது. அம்மலை பிரக்போதி (Prag Bodhi

Mountain) என்றும் வழங்கப்படுகிறது. பிற்காலத்தில் அசோகப் பேரரசர் (கி.மு. 263-224) இங்குப் பல தூபிகளையும் கற்றூண் களையும் எழுப்பினர். புத்தகயா பீகார் பகுதியில் உள்ளது.

"ஒவ்வோர் ஆண்டும் புத்தபிரானுர் போதி அடைந்தநாளில், வானத்திலிருந்து அவ்விடத்தில் மலர்களும் அமுதத்துளிகளும் விழுகின்றன. தூய ஒளிப்பிழம்பு அங்குக் காணப்படுகிறது. மக்கள் திருவிழாக் கொண்டாடுவார்கள். புதிதாகச் சேர்க்கப்பட்ட பௌத்த பிக்ஷுக்கள் அன்று அம் மலைமீது ஏறிச்செல்வர். ஏறி அங்குத் தொழுகை புரிவார்கள்."

—(யுவான் சுவாங்: பக்கம் 125)

புத்தகயாவின் இருப்பிடம்: 24°·41′வ × 85°·2′கி.

புத்தகயா, பாட்ணு (Patna) எனப்படும் பாடலிபுத்திரத்திற்குத் தெற்கே நிர்மாணிக்கப்பட்டது. அங்குப் புத்தர் கோயில் கட்டப் பட்டது. புத்தகயா கங்கையில் இணையும் ஒரு சிற்ருற்றங்கரையில் உள்ளது. தாலமி காலத்தில், அவ்விடம் கங்கைக் கரையிலேயே இருந்ததாகக் கூறப்படுகிறது. நதிகள் கால அடைவில் எவ்வளவோ மாற்றம் அடைந்து தாம் போகும் பாதையை மாற்றிக்கொள் கின்றன அல்லவா?

"பெய்டோ மரத்தின் அடியில்தான் எல்லாப் புத்தர்களும்— இனி வரப்போகும் புத்தர்களும்—தங்கள் ஞான முத்திரையை அடையப் பெறுவார்கள். புத்தபிரானுர் பூரண ஞானம் பெற்ற இடத்தில் மூன்று சங்கிராமங்கள் கட்டப்பட்டுள்ளன."

—(பாஹியான்: பக்கம் 175-176)

போதிமரம் என்பதைப் பெய்டோ (Pe-I-To) மரம் என்று பாஹியான் குறிப்பிட்டார்.

### 3. நாக்ராமா (Nagrama)

நாக்ராமா (Nagrama) என்ற சொல் நவகிராமா (Navagrama) என்றதன் திரிபே. கிராமம் என்பது நாளடைவில் பெருக்க மடைந்து நகரமாகிறது. ஆக, நவகிராமம் என்றிருந்த ஊர் இன்று நவ் நகராக ஆகிவிட்டது. இந்த நவ்நகர் (Navnagar) சௌராஷ் டிரத்தில், கத்தியவார் பிரதேசத்தின் வட பகுதியில் உள்ளது. நவ்நகர், ஸஸாய் நதி (Sasoi River) பாயும் பிரதேசத்தில் உள்ளது. இந் நகரம் பண்டைக் காலத்திலிருந்து வாணிகத்தலமாக விளங்கு கிறது. இங்கு ஒன்பது கிராமங்கள் ஒன்ருகக் கூடி நகராகி, அதுவே நவநகர் ஆயிற்று (நவம்-ஒன்பது).

புதுபட்டு (Pudupatna) என்பது புதுகே (Pudukae) என்பதைக் குறித்து, அதுவே பாண்டிச்சேரி, மாமல்லபுரம், வளவன்துறை (வளவனூர்) முதலிய ஊர்களைக் குறிப்பிடும். புதுபட்டு என்ற பொருளிலேயே, நவநகர் (நவ்நகர்) உண்டாயிற்று என்றும் கூறப் படுகிறது (நவம்-புதுமை).

நவநகரின் இருப்பிடம்: 22°·27′வ×70°·7′கி.

**4. காமிகாரா (Kamigara)**

காமிகாரா (Kamigara) இப்பொழுது காண்டகார் (Kandahar) என்று வழங்கப்படுகிறது. இந்நகரம் ஆர்கண்டாப் (Argandab) என்ற நதிக்கரையில் உள்ளது. ஆப்கானிஸ்தானப் பகுதியின் தலைநகரம். ஆப்கானிஸ்தானம் முன்னர் அரக்கோசியா (Archosia) என்று வழங்கப்பட்டது. அரக்கோடஸ் (Archotos) எனும் நதி அங்கே பாய்ந்தது. மாவீரர் அலெக்சாந்தர் (கி.மு. 356-323) அலெக்சாந்திரியா என்ற நகரை, முன்பு அரக்கோடஸ் இருந்த இடத்தில் நிர்மாணித்தார். அந்த அலெக்சாந்திரியா (Alexandria) என்பதே பின்னர் காண்டகார் (Kandahar) என்று வழங்கப் பட்டது. இதைப் பிளினி (கி.பி. 23-79) குறிப்பிட்டுள்ளார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-42, பக்கம் 15)

காண்டகாரின் இருப்பிடம்: 31°·37′வ×65°·30′கி.

இதைச் சிலர் காங்க்ரா (Kangra) என்றும் குறிப்பிடுகின்றனர். காங்க்ரா, ராவி நதிக்கரைக்கருகிலும், பியாஸ் நதிக்கு வடக்கிலும் உள்ளது. இது கண்வர் மகரிஷியால் உண்டாக்கப்பட்டதால் கண்வர் கிராமம் என்று ஏற்பட்டு, அதுவே காங்க்ரா என்று திரிந்தது என்றும் கூறுவர். காங்க்ரா இடம் சித்திரங்களுக்குப் புகழ் பெற்றது.

காங்க்ராவின் இருப்பிடம்: 32°·5′கி×76°·18′கி.

செனுப் (Chenab) நதிக்கரை மீதுள்ள கங்கார் (Khangarh) என்பதைக் குறிப்பிடவும் கூடும்.

கங்காரின் இருப்பிடம்: 29°·55′வ×71°·12′கி.

**5. பின்னகரா (Binnagara)**

பின்னகரா (Binnagara) எனுஞ்சொல், மின்னகரம் (Minnagar) என்பதன் மரூஉச் சொல்லே. மின்னகரம் எனும் நகரங்கள், பார்த்திய அரசர்களால் (Parthian Kings) ஆங்காங்கே அவர்கள் ஆட்சியில் நிர்மாணிக்கப்பட்டன.

இவ்விடம் பக்கார் (Bakkar) என்று வழங்கப்படுகிறது என்று புதைபொருள் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். பக்கார் நகருக்கு 32 கிமீ. வடக்கே அழிபாடுகள் காணப்படுகின்றன. அவ் அழிபாடுகள் உள்ள இடம் அலார் (Alor) என்று வழங்கப்படுகிறது: இதுவே சிந்து நதியின் நடுப்பகுதியில் விளங்கும் மின்னகரம் ஆகும். மின் (Mins) எனும் பார்த்திய அரசர்களால் (Parthians) நிர்மாணிக்கப்பட்டது. மற்றும் அதிகாரம் 58, குறிப்பு-4 பார்க்கவும்.

பக்கார் இருப்பிடம்: 31°·16′வ×71°·6′கி.

இம் மின்னகரம் முன்னர் சிறந்த வாணிகச்சந்தை நகரமாக இருந்தது. இது பார்த்திய மன்னர்களால் (Parthian Kings) நிர்மாணிக்கப்பட்டது.

—(Vide An Advanced History of India, By Mukerjee; R. K. p. 119)

பார்த்திய அரசர்களுடைய வரலாறு பின்வருமாறு கூறப்படுகிறது:

இந்தியாவின் வடமேற்கில் மாசிடோனியரின் (Macedoneans) படையெடுப்பிற்குப் பிறகு, பல அந்நிய அரசர்கள் ஆட்சி புரிந்தனர். அவர்கள் மூன்று பிரிவுகளாக எண்ணப்படுவர்: 1. சாகா, 2. பஹ்லவர் அல்லது பார்த்தியர், 3. யூசி அல்லது குஷானர். இவர்களுள் சாகா எனப்பட்டவர் யூசி வகுப்பினரால், தென் பகுதிக்குத் துரத்தப்பட்டனர். சாகா அதன் காரணமாகப் பலுசிஸ்தானம், சிந்துவின் கழிமுகம் ஆகிய பகுதிகளை அடைந்து அங்கே வாழ்ந்துவந்தனர். முதன் முதல் ஆப்கானிஸ்தானத்தில் இருந்த பொழுது அவர்கள், சாகாஸ்தானம் (Sakasthan) என்னும் இடத்தை ஏற்படுத்திக்கொண்டனர். அதுவே பின்னர் ஸிஸ்டான் (Sistan) என்று வழங்கப்பட்டது. அவர்கள் மேற்கு இந்தியாவில் பரவிய பொழுது, சித்தியர் என்ற பெயரால் வழங்கப்பட்டனர். கி.பி. முதல் நூற்றாண்டில், பார்த்தியர் சாகா இனத்தை வென்றனர். பார்த்திய அரசர்களுள் முக்கியமானவர் கொண்டாபர்னஸ் (Kondapharnes) (கி.பி. 21-50) என்பவர் ஆவார். இவர் காலத்திலேதான் செயின்ட் தாமஸ் (St. Thomas) ரோம் நகரிலிருந்து இந்தியா வந்ததாகக் கூறப்படுகிறது. அவ்வாறு அவர் இந்தியா வந்த ஆண்டு கி.பி. 48 ஆகும்.

கி.பி. 44-ல் தக்ஷசீலத்தில் (Taxila) கொண்டாபர்னஸ் அரசராக இருந்தபொழுது, பெரும் நிலநடுக்கம் ஒன்று ஏற்பட்டது. தக்ஷசீலம் நிலைகுலைந்தது. தாமஸ் முனிவர் அங்கிருந்து கொடுங்

க்ளூரில் கப்பலில் இறங்கி, தரை வழியாகச் சென்னை நகரம் வந்து, சாந்தோம் பகுதியில் இடம் அமைத்துக்கொண்டார். தாமஸ் முனிவரின் பெயரால் அமைந்ததே சாந்தோம் (Santhome). இது செயின்ட் தாமஸ் என்பதன் குறுக்கமே. பரங்கிமலை எனப் படும் செயின்ட் தாமஸ் மௌண்டும் (St. Thomas Mount) அவருடன் தொடர்புபடுத்தியே பேசப்படுகிறது. (அதிகாரம் 58, குறிப்பு-4 பார்க்கவும்.)

சாகா-பார்த்திய அரசர்கள் சத்ராபிகள் என்று வழங்கப்பட் டனர். இச் சொல் க்ஷேத்திரபதி என்பதன் மரூஉவாகும்.

உஜ்ஜயினியில் ஆண்ட க்ஷேத்திரபதிகளுள் புகழ் பெற்றவர் ருத்ரராமன் (Rudraraman) ஆவார். அவர் சாஸ்தானு (Chastana) என்பவரின் பெயரர். சாஸ்தானு என்பவர் மிகுந்த புகழ் பெற் றிருந்தார். சாஸ்தானு என்பதைத் தாலமி, தியஸ்தினர் (அதி காரம் 63, குறிப்பு-7 காண்க) என்று வழங்கினுர், ருத்ரராமன் கி.பி. 130 முதல் கி.பி. 150 வரை ஆண்டார். தாலமி காலத்தில் ஆண்ட இந்திய அரசர் இவரே.

காட்பிசஸ் (Kadphisus) என்பார் குஷான் அல்லது யூசி வகுப் பைச் சார்ந்தவர். அவர் பார்த்திய அரசர்களுடன் போரிட்டு, காபூல் முதலிய பகுதிகளைக் கைப்பற்றினுர்.

காட்பிசஸுக்குப் பிறகு கனிஷ்கர் (Kanishka) அரசர் ஆனுர். அவர் சாகா ஆண்டைக் (சகாப்தம்) கி.பி. 78-ல் தோற்றுவித் தார்.

—(Vide An Advanced History of India, By Mukerjee R.K. pp. 118-122)

கனிஷ்கர் பார்த்திய அரசரை வென்று, அவர்களுடைய நாடு களைத் தமதாக்கிக் கொண்டார். கனிஷ்கர் கி.பி. 75 முதல் கி.பி. 119 வரை அரசாண்டார்.

பார்த்திய அரசர்கள் ஆங்காங்குப் பெரிய நகரங்களை ஏற்படுத் தினர். அந் நகரம் மின்-நகரம் (Minnagar) எனப்பட்டன. மின் என்ற சொல் பார்த்தியரைக் குறிப்பிடும் ஒரு விருதுப் பெயரும், அடைமொழியுமாகும்.

பெரிப்ளூஸ் ஆசிரியர் மின்னகரத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 38, குறிப்பு-10, பக்கம் 140)

சிந்துவின் கழிமுகத்துக்கு வடக்கே இருந்த பார்பிகான் (Barbecon) என்னும் இடத்துக்கு அருகில் வடபகுதியில் மின்னகரம் இருந்ததாகக் கூறினர்.

பார்பரிகான் என்பது பார்பரிகம் என்று பின்னர் வழங்கப்பட்டது. அதிகாரம் 59, குறிப்பு-3, விளக்கவுரை காண்க.

பார்த்திய அரசர்கள் நிர்மாணித்த நகரங்கள் பல. இவற்றின் அரசர்கள் க்ஷத்ரபர் (Kshatrapa) என்று வழங்கப்பட்டனர். க்ஷத்ரபர் என்ற சொல் க்ஷேத்திரபதி என்றதன் திரிபே. க்ஷேத்ரபதி பின்னர் சத்திரபதி என்று வழங்கப்பட்டது.

பார்த்திய அரசர் நிர்மாணித்த நகரங்களுள் சில:

(i) காபிஸா (Kapisa)—ஆப்கானிஸ்தானத்தில் கோர்பந்த், பஞ்ச்கூஷீர் இரு நதிகளும் இணையும் இடத்தில்.

(ii) தக்ஷசீலம் அருகில் (Near Taxila)

(iii) யமுனைச் சமவெளியில் மதுரை எனப்படும் வடமதுரை (Muttra)

(iv) வட தக்காணத்தில் (Upper Deccan)

(v) உஜ்ஜயினி (Ujjain)—மாளவ நாட்டின் தலைநகரம்.

(vi) நகரி (சித்தூர் மாவட்டம்) (Nagari)

(vii) இந்தூர் (Indore)—மத்திய இந்தியாவில் நர்மதை நதிக்கு வடக்கில்.

**6. பராபலி (Parapali)**

இது பார்பரிகம் (Barbaricum) என்றதன் குறுக்கமே என்று கூறப்படுகிறது. பார்பரிகம், சிந்து நதியின் கழிமுகத்தில் இருந்த ஒரு துறைமுகம். இத் துறைமுகம் பிளினி (கி.பி. 23-79)யாலும், பெரிப்ளூஸ் நூலாசிரியராலும் (கி.பி. 50-80) குறிப்பிடப்பட்டுள்ளது. இன்று இது டட்டா (Tatta) என்று வழங்கப்படுகிறது.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 39, குறிப்பு-1, பக்கம் 123)

பார்பரிகம் இருப்பிடம்: 24°·44′வ×67°·58′கி.

மற்றும் இப்புத்தகத்தில் அதிகாரம் 52, குறிப்பு-3 பார்க்கவும்.

சிலர் இதைச் சிந்துநதிக் கழிமுகத்தில் பாரான் (Paran) என்னும் இடத்தில் இருந்த காரணத்தால் பராபலி (Parapali) என்று வழங்கப்பட்டதாகக் கூறுவர்.

பாரானின் இருப்பிடம்: 25°·22′வ×67°·58′கி.

**7. ஸைடிராஸ்** (Sydras)

இது ஸாகேட்ராஸ் என்பதன் குறுக்கமே. ஸாகேட்ராஸ் என்ற பெயர் இப்பொழுது ஸாகேஸார் (Sakesar) என்று வழங்கப் படுகிறது. இது மியன்வாலிக்குத் தென்கிழக்கிலும், சிந்து நதிக்கும் ஜீலம் நதிக்கும் இடையிலும், அட்டாக்கிற்குத் தெற்கிலும் உள்ளது.

ஸாகேஸாரின் இருப்பிடம்: 32°·33'வ×72°·2'கி.

ஸைடிராஸ் என்ற பெயர் பிளினியால் குறிப்பிடப்பட்டுள்ளது. ஹெஸிட்ரஸ் என்பதன் குறுக்கமே சைடிராஸ் என்று குறிப்பிட்டுள் ளார். ஹெஸிட்ரஸ் என்பது நவீன சட்லெஜ் நதியைக் குறிப்பிடு கிறது.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-31, பக்கம் 17)

**8. எபிடௌஸா** (Epidausa)

இவ்விடம் இன்று தாசூயா (Dasuya) என்று வழங்கப்படுகிறது. எபி-தாசூயா என்றால் தாசூயா எனும் நகரத்தைச்சுற்றி என்பது பொருள். அல்லது தாசூயா இடத்தை மையமாகக் கொண்டு என் பதும் ஆகும். இந் நகரம் சட்லெஜ் நதிக்கும் (River Sutlej), பியாஸ் நதிக்கும் (River Beas) இடையில் உள்ளது. இது பஞ்சாப் பிரதேசத்தில் ஹோஷியார்பூர் (Hoshiarpur) பகுதியைச் சார்ந்தது.

தாசூயாவின் இருப்பிடம்: 31°·49'வ×75°·42'கி.

**9. ஸோனு** (Sona)

இந் நகரம் ஸோன் (Son) நதிக்கரைமீது உள்ள பாடலிபுத்தி ரத்தைக் குறிப்பிடும். சோன் என்பது ஸ்வர்ண (Swarna) என் பதன் குறுக்கமே. ஸ்வர்ண என்பதன் பொருள் பொன். ஆக, பொன் நதி மீதுள்ள நகரம், பொன் நகரம் என்றும் வழங்கப் பட்டது. பாடலிபுத்திரத்தின் மதில்கள் பொன்னால் ஆனவை என்று வரலாற்றாசிரியர்கள் விவரித்துள்ளனர். பாடலிபுத்திரத்தின் (Pataliputra) நவீன பெயர் பாட்னு (Patna). இந் நகரம் சந்திரகுப்த மௌரியர், அசோகர், பிந்துசாரர் முதலான பேரரசர்களின் தலை நகரமாகும்.

பாடலிபுத்திரத்தின் (பாட்னு) இருப்பிடம்:
25°·37'வ×85°·13'கி.

# 62. லாரிகே, நம்மதூஸ்

*இண்டோ-சித்தியாவின்[1] கிழக்குப் பகுதியில் உள்ள கடற்கரைப் பிரதேசங்கள் லாரிகே[2] எனப்படும்.*

*நம்மதூஸ் ஆற்றின்[3] மேற்குப் பகுதியில் உள்ளடங்கிய* **வாணிகச்** *சந்தை பாரிகாஸா.*

*பாரிகாஸா[4]* ... 113°·15′கி × 17°·20′வ.

**விளக்கவுரை**

**1. இண்டோ–சித்தியா** (Indo-Scythia)

இண்டோ-சித்தியா (Indo-Scythia) என்பது ஹிந்துகுஷ் மலைப்பகுதியையும், அதன் தென்பகுதியையும் குறிப்பிடும். அங்கு வாழ்ந்த சித்தியர்கள் தெற்குப் பக்கமாக வந்து ஆப்கானிஸ்தானம், காபூல், சிந்துநதி, கத்தியவார், நர்மதை நதிப்பகுதி வரை மக்களுடன் கலந்து பழகினர். அவர்கள் இந்தோ–சித்தியர்கள் எனப்பட்டனர். சித்தியர்களின் வழி வழி வந்தவர்களே குஷானர்கள் ஆவர். மற்றும் அதிகாரம் 55, குறிப்பு-2 பார்க்கவும்.

இண்டோ-சித்தியர்களுள் முக்கிய அரசர்கள் கொண்டாபர்னஸ், ருத்ரராமன் முதலியவர்கள் ஆவர்.

**2. லாரிகே** (Laricae)

குசராத்துக்கும், வடகொங்கணப் பகுதிக்கும் அராபிய மக்கள் இட்ட பெயரே, லாரிகே (Laricae) என்பதாகும். அப்பகுதியின் கடற்கரை லார் நாடு (Lar) என்றும், அங்குப் பேசப்படும் மொழி லாரி (Lari) மொழி என்றும் கூறப்படுகிறது.

மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) லார் நாடு என்பது சோழ மண்டலக் கரையைக் குறிப்பிடுவதாகக் கூறியுள்ளார். அங்கு வாழும் மக்களின் நேர்மைக் குணத்தையும். உண்மை பேசும் இயல்பையும் குறிப்பிட்டுள்ளார்.

—(**மார்க்கோபோலோ :** பக்கம் 65-73)

தாலமி கூறும் லார் நாடு இந்தியாவின் மேற்குப் பகுதியைச் சார்ந்தது. லார் நாடு என்ற அராபியச் சொல்லே கிரேக்க மக்களால் லாரி-கே (Laricae) என்று வழங்கப்பட்டது. லாரி-கேயில் உள்ள 'கா' நாட்டைக் குறிப்பிடும் - இண்டி-கா, ஆப்பிரி-கா,

டிமிரி-கா முதலிய சொற்களில் உள்ள 'கா' அந்தந்த நாட்டைக் குறிப்பிடுவது போல.

இருணம், இலவணம் இரு சொற்களும் உவர் நிலத்தைக் குறிப் பிடும் வடமொழிச் சொல்லாகும். ரான் ஆப் கட்ச் என்பதில் உள்ள ரான் (Rann) என்ற சொல்லும் இருணம் என்ற சொல்லி னடியாகப் பிறந்ததே. ஆக, லாரிகே என்ற சொல்லும் இருணம், இலவணம் என்ற சொற்களின் அடியாகப் பிறந்ததேயாகும். லாரிகே எனும் பகுதி உவர் நிலப் பகுதியைக் குறிப்பிடுகிறது.

பெரிப்ளூஸின் நூலாசிரியர் (கி.பி. 50-80) இந் நாட்டை லாரிகா (Larika) என்று குறிப்பிட்டு, இதைக் காம்பே வளைகுடாவைச் சார்ந்த (Gulf of Cambay) பகுதியாக வர்ணித்துள்ளார்.

"பராகா வளைகுடாவுக்கு அப்பால் பாரிகாஸா வளைகுடா காணப்படுகிறது. அங்கிருந்து லாரிகா நாட்டின் கடற்கரை தொடங்குகிறது."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 41, குறிப்பு-3, பக்கம் 157)

இந்த லாரிகே எனும் நாடே, அதன் வடபகுதி சௌராஷ்டிரம் (Sourashtra) என்றும், தென்பகுதி மகாராஷ்டிரம் (Maharashtra) என்றும் பிரிந்து விளங்கிற்று.

மற்றும் ராஷ்டிரம், ராஷ்டிரிகம் (Rashtrika) என்னும் சொல்லே அராபியர்களால் லாரிகே என்று வழங்கப்பட்டதென்றும் பின்னர் அச் சொல்லே கிரேக்க மக்களால் லாரி-கா என்று வழங்கப்பட்டதென்றும் கூறப்படுவது பொருத்தமாகவே தோன்று கிறது. இங்குக் குறிக்கப்படும் ராஷ்ட்ரிகா எனும் சொல் வட மொழிச் சொல்லே.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 41, குறிப்பு-3, பக்கம் 157)

லாரிகேயின் இருப்பிடம்: 21°·41′வ × 73°·1′கி.

### 3. நம்மதூஸ் ஆறு (River Nammadus)

நம்மதூஸ் (Nammadus) என்ற சொல் நர்மதை நதியைக் (River Narmada) குறிப்பிடுகிறது. இவ் ஆற்றின் உள்ளடங்கிய பகுதியிலேதான் பாரிகாஸா எனப்படும் ஆற்றுத் துறைமுகம் உள்ளது.

நர்மதை ஆற்றின் இருப்பிடம்: 21°·38′வ × 74°·0′கி.

**4. பாரிகாசா (Barygaza)**

பிருகு—க்ஷேத்திரா (Brighu Kshetra) எனப்படும் சொல்லே பிருகு-கச்சா என்ருகி, பிருகு-கச்சாவே பின்னர் பாரிகாஸா என வழங்கப்பட்டது. பாரிகாஸாவே ஆங்கிலேயர்களால் புரோச் (Broach) என்று வழங்கப்பட்டது. மற்றும் அதிகாரம் 5, குறிப்பு-1 பார்க்கவும்.

பாரிகாஸா எனும் துறைமுகம் பெரிப்ளூஸ் ஆசிரியர், பிளினி, அர்ரியன், ஸ்டிராபோ ஆகியவர்களால் புகழ்ந்துரைக்கப்பட்டது.

பிருகு மகரிஷியின் சந்ததியினர் பார்க்கவர் (Bargavar) என்று குறிப்பிடப்படுகின்றனர்.

பாரிகாஸா துறைமுகம் நர்மதை ஆற்றுக் கழிமுகத்துக்குச் சற்று உள்ளடங்கியே உள்ளது.

பிளினி (கி.பி. 23-79) பாரிகாஸாவைப் பிரென்கோசி (Brencosi) என்று வழங்கிஞர்.

பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80) பாரிகாஸாவைப் பற்றி விரிவாகவே கொடுத்துள்ளார். அங்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் பெயர்களேயும் கொடுத்துள்ளார்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 41, குறிப்பு-2, பக்கம் 157)

பாரிகாஸாவின் (புரோச்) இருப்பிடம்: 21°·41′வ × 73°·1′கி.

---

# 63. நம்மதூஸ் கிழக்குப் பகுதி

நம்மதூஸ் ஆற்றுக்குக் கிழக்குப் பகுதியில்[1] பின்வரும் ஊர்கள் காணப்படுகின்றன:

| | |
|---|---|
| அக்ரிநகரா[2] | ... 118°·15′கி × 22°·30′வ. |
| சிரிபாலா[3] | ... 118°·30′கி × 21°·30′வ. |
| பம்மகூரா[4] | ... 116°·00′கி × 20°·45′வ. |
| சசாண்டியான்[5] | ... 115°·30′கி × 20°·30′வ. |
| ஜிரோகிரா[6] | ... 116°·20′கி × 19°·50′வ |

| | |
|---|---|
| *ஓஜீனி (தியஸ்தினரின் தலைநகரம்)*[7] | ... 117°·00′கி × 20°·00′வ. |
| *மின்னகரா*[8] | .... 115°·10′கி × 19°·30′வ. |
| *தியஸ்தௌரா*[9] | ... 115°·50′கி × 18°·50′வ. |
| *நாஸிகா*[10] | ... 114°·00′கி × 17°·00′வ. |

## விளக்கவுரை

**1. நம்மதூஸ் ஆற்றுக்குக் கிழக்குப்பகுதி** (Towns to the East of River Nammadus)

நம்மதூஸ் (Nammadus) என்ற சொல் நர்மதை (Narmada) என்ற நதியைக் குறிப்பிடுகிறது. இந் நதிக்குக் கிழக்கில் உள்ள நகரங்களை இப் பகுதியில் குறிப்பிடுகிறார் தாலமி.

நர்மதை, தப்தி (Tapti) ஆக இரு நதிகளும் வேதங்களில் குறிப்பிடப்பட்ட நதிகளாகும்.

தப்தி எனும் நதி விந்திய மலைக்கருகில் தபஸ்விகள் ரிஷிகள் (Rishis) வசித்து வந்து, அந் நதியில் ஸ்நானம் செய்து வந்தமையால் அந்நதி முதலில் தபஸ்வி (Tapasvi) என்று ஏற்பட்டு, பின்னர் ஆங்கிலேயரால் தபதி அல்லது தப்தி (Tapti) என்று வழங்கப் பட்டது.

நர்மதை ஆற்றின் இருப்பிடம்: 21°·38′வ × 74°·0′கி.

**2. அக்ரிநகரா** (Agri Nahara)

அக்ரி நகரா (Agrinagara) என்பது உதயகிரி (Udayagiri) என்னும் இடத்தின் கிரேக்க உச்சரிப்பே. இவ்விடம் நர்மதை நகருக்கு அருகில், வடக்கே, குவாலியர் சமஸ்தானத்தில் (Gwalior) உள்ளது. மற்றும் நரசிங்கர் (Narasing Garh), மகமத்கர் (Muhammad Garh) என்னும் இடங்களையும் குறிப்பிடக்கூடும். இங்கே தாலமி காலத்தில் பார்த்திய அரசர்களால் பல சிறிய மின்னகரங்கள் ஏற்படுத்தப்பட்டன.

மின்னகரம் (Minnagara) என்பதன் சுருக்கமே நகரா (Nagara). இந்தூர் (Indore) நர்மதை நதிக்கு வடக்கில் உள்ளது. அதன் பழைய பெயர் இந்திர நகர். இது மின்களால் நிர்மாணிக்கப் பட்ட புகழ் வாய்ந்த நகரமாகும். இவை யாவும் அடுத்தடுத்துக் காணப்படுகின்றன,

இந்தூரைச் சுற்றிப் பல நகர்கள் (மின்களின் நகரங்கள்) ஏற்பட்டன. பார்த்திய அரசர் காலத்தில் புகழ் அடைந்திருந்தன. ஆக, இங்குக் குறிப்பிடப்படுவது இந்தூர் (இந்திரநகர்) என்னும் மின்னகரம் ஆகும்.

இந்தூரின் இருப்பிடம்: 22°·44′வ×75°·50′கி.

உதயகிரியின் இருப்பிடம்: 23°·32′வ×77°·51′கி.

நரசிங்கர் இருப்பிடம்: 23°·44′வ×77°·8′கி.

திரு. யூல் (Yule) எனும் பேராசிரியர் இவ்விடம் அகர் (Agar) என்ற ஊரைக் குறிப்பிடுவதாகக் குறிப்பிட்டுள்ளார். அகர் என்பது உஜ்ஜயினிக்கு (Ujjain) 48 கி.மீ. (30 மைல்கள்) வடகிழக்கில் உள்ளது. ஆகையால், இவ்விடம் நர்மதைக்கு வெகு தொலைவில் உள்ளது. இது பொருந்துமா என்பது ஐயப்பாடே. அக்ரி, அகர் இரு சொற்களும் உச்சரிப்பில் பொருந்துகின்றன.

அகர் இருப்பிடம்: 23°·44′வ×76°·4′கி.

**3. சிரிபாலா** (Siripala)

இச் சொல் ஜைன மக்களின் சைத்தியங்களைக் குறிப்பிட வேண்டும். புத்த மதமும், ஜைன மதமும் இணைந்து வெவ்வேறு இடங்களில் தங்கள் இருப்பிடங்களைத் தாபித்துக் கொண்டன. அவற்றுள் மஹேஸ்வர், மண்டலேஸ்வர் (Maheswar and Mandaleswar) இரு இடங்களும் குறிப்பிடத்தக்கனவாகும். ஸ்ரீபாலா அல்லது பாலநகரம் என்று முன்பிருந்தது, அவற்றின் பெயர் கண்டு கொள்ள முடியாமல் இப்பொழுது முஸ்லிம் அரசர்கள் பெயர்களையோ, அல்லது அவ்வந்நாட்டின் சிற்றரசர்களின் பெயரையோ பெற்று மாறி யிருக்க வேண்டும்.

இவ்விடம் ஜப்பல்பூருக்கு அருகில் உள்ள பேரகாட் (Berghat) நகரத்தைக் குறிப்பிடுவதாகச் சிலர் கூறுவர்.

மகேஸ்வரின் இருப்பிடம்: 22°·11′வ×75°·37′கி.

பேரகாட் இருப்பிடம்: 23°·10′வ×77°·59′கி.

**4. பம்மகூரா** (Bammagoora)

இச்சொல் பிரமகிரி (Bramagiri) என்பதன் திரிபே. இப் பிரம கிரியே இன்று பமோரி (Bamori) என்று வழங்கப்படுகிறது. பமோரி எனும் இடம் சாஞ்சிக்குத் (Sanchi) தென் கிழக்கில் 72 கி.மீ. (45 மைல்கள்) தொலைவில் உள்ளது.

இவ்வூர் நர்மதை ஆற்று வடக்கிலும், போபால் சமஸ்தானத்தைச் (Bhopal State) சார்ந்ததும் ஆகும்.

பமோரியின் இருப்பிடம்: 23°·16′வ × 78°·17′கி.

## 5. சசாண்டியான் (Sazantion)

இச் சொல் பைசாண்டியம் (Byzantium) என்ற சொல்லின் சிதைவே. பைசாண்டியம் என்பதன் பொருள் புதுநகரம் அல்லது வெற்றிச்சின்னம் என்பதே. இவ்விடம் உஜ்ஜயினிக்கு (Ujjain) 32 கிமீ. (20 மைல்கள்) தென்மேற்கில் உள்ள பார்நகர் என்பதைக் (Barnagar) குறிப்பிடுகிறது. பார்நகர் என்பது பார்தியநகர் (Parthianagar) என்பதன் குறுக்கமே. உஜ்ஜயினி பழம் பெருமை வாய்ந்த நகரம் ஆகும். உஜ்ஜயினி என்றாலே வெற்றிச்சின்னம் என்பது பொருள். ஆனால், உஜ்ஜயினி என்ற பெயர் பார்த்திய அரசர்களுக்கு முன்னம் இருந்தது. ஆக, அதன் அருகில் ஏற்படுத்தப்பட்ட பார்நகர் என்பதே மின்னகரம் அதாவது பார்த்தியர்களால் ஏற்படுத்தப்பட்ட புதிய நகரமாகும்.

மற்றொரு பைசாண்டியம் அதிகாரம் 7, குறிப்பு-3-ல் குறிப்பிடப்பட்டுள்ளது. அச் சொல் விஜயதுர்க்கம் (Vijayadurg) என்ற துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது.

பைசாண்டியத்தின் சரியான பெயர்ப்பு வைஜயந்தி. வைஜயந்தியே, விஜயதுர்க்கம் முதலிய பல பெயர்களால் வழங்கப்படுகிறது.

பார் நகரத்தின் இருப்பிடம்: 22°·58′வ × 75°·20′கி.

## 6. ஜிரோகிரா (Zerogera)

இது இன்று அம்ஜிகிரா (Amjhera) என்று வழங்கப்படுகிறது. அம்ஜிகிரா, தார் (Dhar) பகுதியில் உள்ளது. உஜ்ஜயினிக்கு 90 கிமீ. (50 மைல்கள்) தென்மேற்கில் உள்ளது. நர்மதை நதிக்கு வடக்கில் உள்ளது.

அம்ஜிகிராவின் இருப்பிடம்: 22°·32′வ × 75°·10′கி.

## 7. ஓஜினி (தியஸ்தினாரின் தலைநகரம் (Ozene, the Capital of Tiastenes)

உஜ்ஜயினி (Ujjain) என்ற நகரத்தின் கிரேக்க உச்சரிப்பே ஓஜினி (Ozene). முற்காலத்தில் இந் நகரம் அவந்தி என்று வழங்கப்பட்டது. சாஸ்தானுவின் தலைநகரம் உஜ்ஜயினி. ருத்ரராமன் காலத்தில் (கி.பி. 130-150) உஜ்ஜயினி புகழடையத் தொடங்கிற்று. அடுத்துவந்த சந்திரகுப்த விக்கிரமாதித்யன் (கி.பி. 380-413) உஜ்ஜயினியை வெற்றிநகரம் எனப் பொருள்படும்படி அதை அமைத்தார். சந்திரகுப்த விக்கிரமாதித்யன் அவையில்தான் நவரத்தி

ணங்கள் எனப்படும் ஒன்பது பெரும் புலவர்கள் இருந்தனர். அவர்களுள் காளிதாசர், வராஹமிகீரர், ஆரியபட்டர் முதலானவர் முக்கியமானவர்கள்.

—(Vide An Advanced History of India By R.K. Mookerjee M.A., p. 149)

விக்கிரமாதித்யர் சாகர்களை (Sakas) வென்று, விக்ரம சகாப்தம் (Vikrama Era) என்று வழங்கப்படும் ஆண்டுமானத்தை நிர்மாணித்தார். இவருக்குச் சாகாரி (Sakari) என்ற விருதுப் பெயர் உண்டு.

சந்திரகுப்த விக்கிரமாதித்யன் காலத்தில்தான் (கி.பி. 380-413) பாஹியான் (Fa-Hien) (கி.பி. 399-414) எனும் சீனப்பயணி இந்தியா வந்து, தம் பயணக்குறிப்புகள் கொடுத்துள்ளார்.

அவந்தி என்பது உஜ்ஜயினி நகரத்தின் முந்தைய பெயர். அவந்தி முக்திதரும் தலங்கள் ஏழனுள் ஒன்ருகும். அவையாவன :

1. அயோத்தி, 2. மதுரா, 3. மாயா (ஹரித்வார்), 4. காசி, 5. காஞ்சி, 6. அவந்தி (உஜ்ஜயினி), 7. துவாரகை (சௌராஷ்டிரம்).

முத்திதரும் நகரேழும் முக்கியமாங்கச்சிதனில்
அத்திகிரி அருளாளர்க்கு அடைக்கலம் நான் புகுந்தேனே."

—(தேசிகப் பிரபந்தம் : அடைக்கலப்பத்து 1)

மற்றும் அதிகாரம் 60, குறிப்பு-6 பார்க்கவும்.

பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80), அர்ரியன் (கி.பி. 90-180) ஆகியவர்கள் உஜ்ஜயினியைச் சிறப்பித்துள்ளனர். உஜ்ஜயினி முதல் நூற்றுண்டின் பிற்பகுதியில் நிர்மாணிக்கப்பட்ட நகரமாகும். அதன் முந்தைய பெயர் அவந்தி (Avanthi).

"கங்கை நதிக்கு அப்பால்... அபலி, தாலூடே நகரங்கள் புகழ்பெற்று விளங்கின."

—(பிளினி : புத்தகம் VI, அதிகாரம் 22, குறிப்பு-53, பக்கம் 24)

இங்கு 'அபலி' என்று குறிப்பிடப்படுவது அவந்தி நாடே.

"பாரிகாஸாவின் கிழக்குப்பகுதியில் ஓஜினி நகரம் உள்ளது."

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 48, குறிப்பு-8, பக்கம் 184)

உஜ்ஜயினியின் இருப்பிடம் : 23°·9′வ × 79°·43′கி.

உஜ்ஜயினி, சிப்ரா (River Sipra) நதிக்கரைமீது நிர்மாணிக்கப் பட்டு, அஃது ஓர் ஆற்றுத்துறைமுகமாக விளங்கிற்று. பெரிப்ளூஸ் நூலாசிரியர் உஜ்ஜயினியில், ஆற்றுத் துறைமுகத்தின் ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களைக் குறிப்பிடுகிறார்.

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 49, குறிப்புகள் 4-31, பக்கம் 187)

**தியஸ்தினரின் தலைநகரம்**

உஜ்ஜயினியில் (Ujjain) சத்ராபிகள் (Chatraps) ஆட்சி செய்து வந்தனர். சத்ராபி என்ற சொல் க்ஷேத்ரபதி (Kshetra-pathi) என்ற சொல்லின் திரிபே. இவர்கள் தங்களைச் சுவாமி சாஸ்தானு (Swamin Chastana) என்பவரின் சந்ததியார்கள் என்றே கூறிக்கொண்டு விளங்கினர். அவ்வாறு அவர்களால் கூறப்பட்ட முதல் தலைவரே சாஸ்தானு (Chastana) என்றவர் ஆவார். சாஸ்தானு என்பதே தியஸ்தின் (Tiastenes) என்று தாலமியால் வழங்கப்பட்டது.

—(Vide An Advanced History of India By Dr. R. K. Mookerjee, p. 119)

சாஸ்தானுவின் பெயரரான ருத்ரராமன் (Rudraraman) உஜ்ஜயினியில் கி.பி. 130 முதல் 150 வரை ஆண்டு வந்தார். அவர் சாகா வமிசத்து அரசர்களுள் மிகவும் புகழ் பெற்றவர். சாதவாகன சந்ததியாரிடம் திருமண உறவு கொண்டார். அரசர்களுள் மிகவும் புகழ் பெற்ற அரசர் ஸ்ரீயக்ஞ சாதகர்ணி (Sri Yajna Satakarni) (கி. பி. 170-199). இவர் சாகர்களுடன் மீண்டும் போரிட்டு, இழந்த இராச்சியங்களைத் திரும்பப் பெற்றார்.

—(Vide An History of South India By K.A. Nilakanta Sastri M.A., p. 92)

ருத்ரராமனுக்குப் பிறகு சாகா வமிசத்தினரின் புகழ் குன்றத் தொடங்கிற்று. இவர்கள் அருகில் வாழ்ந்த அபிரநாட்டு அரசர் (Abira) அவ்வரசாட்சியைக் கைப்பற்றினார்.

ஆனால், கி.பி. நான்காம் நூற்றாண்டில் வீரத்துடன் அரசாண்ட சமுத்திரகுப்தரும் (Samudra Gupta) சந்திரகுப்த விக்கிரமாதித்யரும் (Chandra Gupta Vikramaditya) மாளவத்தை (Malwa) வென்று சாகர்களையும், அபிர நாட்டினரையும் கொன்றொழித்தார். அத்துடன் சாகா வமிசமும், அபிர வமிசமும் அழிந்துவிட்டன. மற்றும், அதிகாரம் 55, குறிப்பு-4 பார்க்கவும்; அதிகாரம் 61, குறிப்பு-5 பார்க்கவும்.

தியஸ்தினரின் அதாவது சாஸ்தானவின் தலைநகரம் உஜ்ஜயினி ஆகும். இதன் பண்டைய பெயர் அவந்தி. இந் நகரம் கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் நிர்மாணிக்கப்பட்டது. உஜ்ஜயினி என்ற சொல்லுக்கு வெற்றிநகரம் என்பது பொருள்.

**8. மின்னகரா (Minnagara)**

மின்னகரம் பார்த்திய அரசர்களால் (Parthians) ஏற்படுத்தப் பட்டது. மற்றும் அதிகாரம் 61, குறிப்பு-5 பார்க்கவும்.

நாசிக் (Nasik) வட பகுதியில் உள்ள பிம்பல்நர் (Pimplenar), அமல்நர் (Amalnar) ஆக இவ்விரு நகரங்களும் நகரம், நகரி என்பதன் மரூஉ ஆகும். இவை பிம்பல்நகர், அமல்நகர் என்பதன் திரிபே. ஆக இவ்விரு நகரங்களும் பார்த்திய அரசர்களால் ஏற்படுத்தப்பட்ட மின்னகரங்கள் ஆகும். இவ்விடங்களுக்கு அடுத்துத் தாலமி நாசிக் (Nasik) எனும் இடத்தைக் குறிப்பு 10-ல் விவரிக்கிறார்.

அமல்நர் இருப்பிடம்: 21°·5′வ×75°·10′கி.

பிம்பல்நர் இருப்பிடம்: 21°·5′வ×74°·19′கி.

**9. தியஸ்தௌரா (Tiestaura)**

தியஸ்தினரின் இருப்பிடம் என்பதே இதன் பொருள். தியஸ்தினர் (Tiastenes) என்ற சொல் சாஸ்தான (Chasthana) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. உஜ்ஜயினிக்கு (Ujjain) அருகில் உள்ள ஊர் இங்குக் குறிப்பிடப்படுகிறது.

இங்குக் குறிப்பிடப்பட்ட ஊர் பார்நகர் (Barnagar) என்று வழங்கப்படுகிறது. இவ்விடம் உஜ்ஜயினிக்குத் தெற்கில் உள்ளது. பார்த்தியநகர் (Parthianagar) என்ற சொல், பின்னர் பார்நகர் என்றாயிற்று போலும்.

மற்றும் மேலே குறிப்பு-6 பார்க்கவும்.

பார்நகரின் இருப்பிடம்: 22°·58′வ×75°·20′கி.

**10. நாஸிகா (Nasika)**

நாஸிகா (Nasika) எனும் இடம் இன்று உள்ள நாசிக் நகரத்தைக் (Nasik) குறிப்பிடுகிறது. இது பம்பாய்க்கு வடக்கில் 184 கிமீ. (115 மைல்கள்) தொலைவில் உள்ளது. நாசிகா என்ற வடசொல்லின் பொருள் மூக்கு. இராவணன் தங்கை சூர்ப்பணகையின் மூக்கு இலட்சுமணனால் அரிந்து எறியப்பட்டபொழுது, அம்மூக்கு விழுந்த இடமே நாசிக் (Nasik) என்று வழங்கப்பட்டது என்று வேடிக்கையாகச் சொல்வதுண்டு.

இவ்விடத்தில் பண்டைக் காலத்திலிருந்தே வேதமோதும் அந்தணர்களும், ரிஷிகளும் வாழ்ந்துவந்தனர். தாலமியின் காலத்திலிருந்தே (கி.பி. 119-161) இவ்விடத்தின் பெயர் மாற்றமடையாமல் அப்படியே வழங்கப்பட்டுவருவது வியப்பளிக்கின்றதன்றோ? இங்குப் புத்தபிரானுருக்குக் கட்டப்பட்ட தூபிகளும், சைத்தியங்களும் (Stupas and Chaityas) உள்ளன.

நாசிக் நகரம் இராமாயணத்துடன் தொடர்பு கொண்டுள்ளது. இராமர், இலக்குமணர், சீதை மூவரும் வனவாசத்தில் கோதாவரி நதி தீரத்தில் பஞ்சவடியில் தங்கினதாக இராமாயணம் கூறுகிறது. அப் பஞ்சவடியே (Panchavadi) நாசிக் என்று இன்று வழங்கப்படுகிறது. இங்குத்தான் அரக்கர்கள் தொந்தரவு கொடுத்ததாகவும், இராவணன் சீதையை எடுத்துச் சென்றதாகவும் கூறப்படுகிறது.

—(Vide An Advanced History of India By R.K. Mookerji, M.A. p. 93)

நாஸிக்கின் இருப்பிடம் : 20°·2′வ × 73°·50′கி.

---

# 64. புலிந்த அக்ரியோபாகி

இன்னும் சற்று உட்பகுதியில் சென்றால் புலிந்த அக்ரியோபாகி[1] என்பவரின் ஆட்சி காணப்படும். அதற்கும் அப்பால் காத்திரியோ[2] என்பார் உள்ளனர்.

அவர்களைச் சார்ந்த நகரங்கள் பின்வருமாறு காணப்படுகின்றன :

| | |
|---|---|
| நிக்ரானிக்கிராமா[3] | ... 124°· 0′கி × 28°·15′வ. |
| அந்தகரா[4] | ... 122°· 0′கி × 27°·20′வ. |
| சௌதஸஞு[5] | ... 123°· 0′கி × 26°·50′வ. |
| சைரினிஸ்கா[6] | ... 121°· 0′கி × 26°·30′வ. |
| பதிஸ்தமா[7] | ... 121°· 0′கி × 25°· 0′வ. |
| திஸபதிங்கா[8] | ... 123°· 0′கி × 24°·20′வ. |

## விளக்கவுரை

**1. புலிந்த அக்ரியோபாகி** (Pulinda Agriophagi)

புலிந்தர் (Pulindar) என்பவர் விந்தியமலைக் காடுகளில் (Vindhya Mountain Forests) வாழ்ந்து வந்தனர். ஸவரர்கள் (Savaras) தபதி நதிக்கரையில் (River Tapti) வாழ்ந்து வந்தனர்.

—(Vide An Advanced History of India By R. K. Mookerji, M A. p. 42)

அக்ரியோபாகி (Agriophagi) என்ற சொல் மரத்தின் இலைகளையும், பழங்களையும், கிழங்குகளையும் உண்டு வாழ்பவர் என்னும் பொருள் கொண்ட கிரேக்கச் சொல்லாகும்.

முற்காலங்களில் முனிவர்களும், ரிஷிகளும் பழங்களையும், கிழங்குகளையும், இலைகளையும் உண்டு தம் வாழ்நாள்களைக் கழித்தனர் என்று வரலாறும், புராணங்களும் கூறுகின்றன. தமிழ் இலக்கியங்களிலும் இச் செய்தியைக் காணலாம்.

இங்குப் புலிந்தர் (Pulindar) எனப்படுபவர் இலைகளையும், கிழங்குகளையும், கனிகளையும் உண்டு வாழ்ந்தனர் என்று பொருள் படும்.

"காயோடு நீடு கனியுண்டு, வீசு
கடுங்கால் நுகர்ந்து, நெடுங்காலம், ஐந்து
தீயோடுநின்று தவம் செய்யவேண்டா"

—(பெரிய திருமொழி : 3-2-2)

**2. காத்திரியோ வகுப்பினர்** (The Clan of Khatriaioi)

காத்திரியோ (Khatriaioi) என்பவர் சிந்துநதிப் பகுதியில் ராவி நதிக்கும் (River Ravi), பியாஸ் (River Beas) நதிக்கும் இடையே வாழ்ந்து வந்தனர் என்று கிரேக்க வரலாற்றாசிரியர்கள் கூறியுள்ளனர். அவர்கள் தலைநகரம் சாங்கலா (Sangala) என்பதாகும். இப்பொழுது அவ்விடம் காங்க்ரா (Kangra) என்று வழங்கப்படுகிறது. கண்வர் மகரிஷியால் (Kanvar) ஏற்படுத்தப்பட்ட கண்வர் கிராமம் என்பதே காங்க்ரா என்று மருவிற்று.

காங்க்ரா இடம் சித்திரங்களுக்குப் புகழ்பெற்றது. மற்றும், அதிகாரம் 61, குறிப்பு-4 பார்க்கவும்.

காங்க்ராவின் இருப்பிடம்: 32°·5′வ × 76°·18′கி.

மேற்கூறப்பட்ட காத்திரியோ என்பவர் முதன் முதல் காஷ்மீரில் இருந்தனர் என்றும், காசியப மகரிஷியால் (Kasyapa) ஏற்படுத்தப்பட்ட காஷ்மீரிலிருந்து அவர்கள் தெற்கே துரத்தப்பட்டனர் என்றும், அவர்கள் காசியப கோத்திரத்தினர் என்றும் கூறப்படுகிறது. அதன் பின்னர் அவர்கள் சித்தியர்களால் (Scythians) சிந்துநதிக் கழிமுகத்துக்குத் துரத்தப்பட்டு, அங்கிருந்து அவர்கள் கத்தியவார் என வழங்கப்படும் பிரதேசத்தில் நிரந்தரமாகக் குடியேறினர். காத்திரியோ (காசியப கோத்திரத்தினர்) ஏற்படுத்திய நாடே கத்தியவார் (Kathiawar) ஆகும். கத்தியவாரின் ஒருபகுதி சௌராஷ்டிரம் (Saurashtra) என்று வழங்கப்படுகிறது.

கத்தியவாரின் தலைநகரம் ராஜ்கோட் (Rajkot) ஆகும்.

கத்தியவாரின் இருப்பிடம்: 22°· 0′வ × 71°· 0′கி.

ராஜ்கோட்டின் இருப்பிடம்: 22°·18′வ × 70°·56′கி.

கத்தியவார், காசியப கோத்திர மக்களால் ஏற்பட்டதேபோல், அதன் தெற்கே உள்ள பாரிகாஸா (Barygaza) என்பது பிருகு (Brighu) மகரிஷியால் ஏற்படுத்தப்பட்டது. ரான் ஆப் கட்ச் (Rann of Cutch) என்ற பிரதேசமும், காசியப முனிவரால் ஏற்படுத்தப்பட்ட இருண நாடு அதாவது உவர்நிலம் என்றும் கூறப்படுகிறது. தூர்வாச முனிவரால் ஏற்படுத்தப்பட்ட அல்லது சபிக்கப்பட்ட நாடே ஒரிஸா பிரதேசம். ஆக, பழங்காலத்தில் புகழ்மிக்க முனிவர் அல்லது ரிஷிகள் பெயர்களால் பல இடங்கள் வழங்கப்பட்டன என்பது இதனுல் தெரிய வருகிறது.

### 3. நிக்ரானிக்கிராமா (Nigranigrama)

நிக்ரானிக்கிராமா (Nigranigrama) என்பது நிக்ரந்தர் கிராமம் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. நிக்ரந்தர் என்பவர் ஜைன மக்களைக் குறிப்பிடும் சொல்லாகும். ஜைனர்களின் குரு பீடாதிபதிகள் தீர்த்தங்கரர் எனப்படுவர். அவர்களுள் மகாவீரர் (Mahavira) தலைமையானவர்; ஜைன மதத்தை நிலைநாட்டினவர். ந-குரோதம் என்றுல் குரோதம் இல்லாதவர், ஆசையை ஒழித்தவர் என்பதாகும். ந-குரோதம் என்பதே நிக்ரந்தம் என்றுயிற்று. நிக்ரகம் என்றுல் ஒழித்தல் என்பது பொருள். இங்கு அந்தத்தில்-மனத்தில்-ஆசையை நிக்ரகம் செய்தவர் அதாவது ஆசையை ஒழித்தவர் என்று பொருள்படும்.

மகாவீரர் பெயரால் இன்று மோர்வி (Morvi) என்ற இடம் விளங்குகின்றது. இந்த இடமே நிக்ரானிக்கிராமத்தைக் குறிப்பிடுகிறது.

மோர்வி, ராஜ்கோட்டிற்கு 64 கிமீ. (40 மைல்) தொலைவில் வடக்கேயுள்ளது.

மோர்வியின் இருப்பிடம்: 22°·49′வ×70°·54′கி.

**4. அந்தகரா** (Antacara)

இவ்விடம் இன்று கத்தியவாரின் (Kathiawar) வடகிழக்குப் பகுதியில், சபர்மதி ஆற்றுக்கு (River Sabarmathi) மேற்கில், லக்தார் (Lakhtar) என்ற பெயரால் வழங்கப்படுகிறது.

லக்தார் இருப்பிடம்: 82°′56′வ×71°·54′கி.

**5. சௌதஸனு** (Soudasana)

சௌதஸனு (Soudasana) என்ற இடம் இன்று சுதார்-ஜாஸ்டான் (Sudar-Jasdan) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. இவ்விடம் சுதார், ஜாஸ்டான் என இரு நகரங்கள் இணைந்த பகுதியாகும். இது மச்சு ஆற்றங்கரையில் (River Machchu), கத்தியவாரின் நடுப் பகுதியில் உள்ளது.

சுதார்-ஜாஸ்டானின் இருப்பிடம்: 22°·11′வ×71°·6′கி.

**6. சைரினிஸ்கா** (Syrinisca)

சைரினிஸ்கா (Syrinisca) என்பது நவீன சாய்லா (Saila) நகரத்தைக் குறிப்பிடுகிறது. சாய்லா, கத்தியவாரின் வடபகுதியில் உள்ளது.

சாய்லாவின் இருப்பிடம்: 23°·33′வ×71°·6′கி.

**7. பதிஸ்தமா** (Pathisthama)

பதிஸ்தமா (Pathisthama) எனும் இடம் நவீன பலிதானு (Palithana) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இவ்விடம் கத்தியவாரின் (Kathiawar) தென்கிழக்குப் பகுதியில் உள்ளது. பவநகருக்குத் தென்மேற்கில் உள்ளது.

பதிஸ்தமாவின் இயற்பெயர் பிரதிஷ்டானம் என்பதே. பிரதிஷ்டானம் என்பதே பலிதானு என்று மருவிற்று. அதுவே பதிஸ்தமா என்று கிரேக்கர்களால் உச்சரிக்கப்பட்டது.

கோதாவரி நதிக்கரைமீது மற்றொரு பிரதிஷ்டானபுரம் (Prathishtanapura) இருந்தது. அதுவே இன்றைக்குப் பைதான் (Paithan) என்று வழங்கப்படுகிறது. இப் பைதான் பண்டைய வாணிகச் சந்தை நகரங்களுள் ஒன்று. இது தாமிரலிப்தியிலிருந்து வரும் பாதையும், மைசாலா எனப்படும் மசூலிப்பட்டினத்திலிருந்து

வரும் பாதையும், தெற்கே தமிழகத்திலிருந்து (டிமிரிகா) வரும் பாதையும் ஒன்ருகக் கூடும் இடமாகும். இது மிகச் சிறந்த வாணிகத்தலமாகும்.

பலிதாஞவின் இருப்பிடம்: 21°·31′வ × 71°·53′கி.

பைதானின் (பிரதிஷ்டான
புரம்) இருப்பிடம்: 19°·29′வ × 75°·26′கி.

**8. திஸபதிங்கா (Tisa–Pathinga)**

திஸபதிங்கா என்ற இடம் தேஷ்படாங்கர் என்ற நகரத்தின் கிரேக்க உச்சரிப்பாகும். தேஷ்படாங்கர் (Deshpatangar) என்ற இடமே இன்று படான் (Patan) என்று வழங்கப்படுகிறது. இது குஜராத்தின் வடபகுதியில் உள்ளது. சரஸ்வதி நதிக்கரைமீது இந் நகரம் உள்ளது.

படானின் இருப்பிடம்; 23°·52′வ × 72°·10′கி.

ராஜபுதனத்தைச் சார்ந்த வேருெரு படான் என்ற இடமும் உண்டு. அது இங்குக் குறிப்பிடப்படவில்லை. தாலமி இங்குக் கத்தியவார் பகுதியைக் குறிப்பிடுவதால், குஜராத்தின் வடபகுதியி லுள்ள படானையே இது குறிப்பிடுவதாகும்.

---

# 65. தபசாய்

சார்டானிக்ஸ் மலைக்கும்[1] பெடிகோ மலைக்கும்[2] இடையில் உள்ள பிரதேசம் தபசாய்[3] எனப்படும் மக்களைச் சார்ந்த தாகும். அவர்கள் புகழ்மிக்க இனத்தவர். அதற்கும் அப் பால் உள்ள பிரதேசங்கள் யாவும், விந்திய மலைவரையிலும், நர்மதை நதியின் கிழக்குக் கரையின் ஊடே உள்ள நகரங்கள் யாவும் பிரபியோடாய்[4] என்பவர்களைச் சார்ந்ததாகும். அவர் களுள் பிரமஞய்[5] என்பவர்களும் உள்ளனர். அவர்களுடைய நகரங்கள் பின்வருமாறு:

| | |
|---|---|
| கோகனபந்தா[6] | ... 120°·15′கி × 23°·40′வ. |
| ஓசோபிஸ்[7] | ... 120°·30′கி × 23°·40′வ. |
| ஓஸ்தா[8] | ... 122°·30′கி × 23°·30′வ. |
| கோஸா (வைரம் உள்ள நாடு)[9] | ... 121°·20′கி × 22°·30′வ. |

## விளக்கவுரை

### 1. சார்டானிக்ஸ் மலை (Sardonyx Mountain)

சார்டானிக்ஸ் எனுஞ் சொல் கோமேதகம் என்பதைக் குறிப்பிடும். கோமேதகம், மரகதம் யாவும் இரத்தினக்கற்கள் வகையைச் சார்ந்தவை. இரத்தினகிரி (Ratnagiri) மலையொன்று பம்பாய்க்குத் (Bombay) தெற்கில் உள்ளது.

ஆனல், சார்டானிக்ஸ் மலையென்பது சாத்பூரா மலைத் தொகுதியைக் குறிப்பிடும் என்று ஏற்கெனவே கண்டோம். (அதிகாரம் 20, குறிப்பு-1). சார்டானிக்ஸ் மலை என்பதை டேசியஸ் (Ctesias) என்பார் (கி.மு. 401-383) சார்டௌஸ் (Sardous) என்று வழங்கினர்.

—(Vide Ctesias, Part IV)

சாத்பூரா-ஆனிக்ஸ் (Satpura-Onyx) என்ற சொல்லின் இணைப்பிலிருந்தே, சார்டானிக்ஸ் (Sardonyx) என்ற சொல் ஏற்பட்டது. ஆனிக்ஸ் கற்கள் (Onyx Stones) பாரிகாஸா துறைமுகம் (Barygaza) மூலம் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதியாயின. இவ் வாணிக வரலாற்றைப் பெரிப்ளூசின் நூலாசிரியர் விவரித்துள்ளார்.

—(**பெரிப்ளூஸ்** : அதிகாரம் 49, குறிப்பு-27, பக்கம் 196)

பாரிகாஸாவைப்பற்றி அதிகாரம் 62, குறிப்பு-4 பார்க்கவும்.

சாத்பூரா மலையின் இருப்பிடம் : 21°·40′வ × 75°· 0′கி.

இரத்தினகிரி இருப்பிடம் : 17°· 8′வ × 73°·19′கி.

### 2. பெடிகோ மலை (Betico Mountain Range)

பெடிகோ என்ற சொல் பொதியில் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. பொதியில் என்பது அகஸ்திய மகரிஷி வாழ்ந்து வந்த குடகு மலையைக் குறிப்பிடுகிறது.

பொதியில் மலை விவரம் அதிகாரம் 22, குறிப்பு-1-ல் தரப்பட்டுள்ளது.

“புகலரும் பொதியில் போல”

—(**அகநானூறு** : 322-14)

பொதியில் மலையில் அகஸ்தியர் வாழ்ந்து வந்ததால், அம்மலை அடைசத்ரோ என்று வழங்கப்பட்டது. அடைசத்ரோ (Adaisatro) என்பது அகத்தியர் என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. மற்றும், அதிகாரம் 23, குறிப்பு-1 பார்க்கவும்.

பொதியில் (குடகு) மலையின் இருப்பிடம் : 12°·18′வ × 76°′·0′கி.

**3. தபசாய்** (Thabasai)

மகாதேவ மலைக்கும் (Mahadeva Hills), சாத்பூரா தொகுதிக்கும் (Satpura Range) இடையேயுள்ள பகுதியில், விந்தியமலைக் காடுகளில், தபசாய் என்ற மக்கள் வாழ்ந்து வந்தனர். தபசாய் என்ற சொல் (Thabasai), தபஸ்வி (Thabasvi) என்ற சொல்லின் திரிபே. ஆக, விந்திய மலைக் காடுகளில் தவஞ்செய்யும் தபஸ்விகள், தாலமியால் தபஸாய் என்று குறிப்பிடப்பட்டனர். அவர்கள் ரிஷிகள் ஆவர்.

**4. பிரபியோடாய்** (Prapiotai)

பிரபியோடாய் என்பது ஆந்திர நாட்டு அரசர் புலுமாயி (Pulumayi) என்பவரைக் குறிப்பிடும் கிரேக்கச் சொல்லாகும். புலுமாயி II என்ற அரசர் கி.பி. 78 முதல் கி.பி. 104 வரை அரசாண்டார். இவருடைய மறு பெயர் கௌதமிபுத்ர சாதகர்ணி (Gautamiputra Satakarni).

சித்தியர்களை (சாகர்களை) வென்ற அரசர் சாதவாகனர் என்று தம்மை வழங்கிக்கொண்டார். அவர்களுள் சிமுகன் முதல் அரசராகவும், இடையில் கௌதமிபுத்ர சாதகர்ணி சாதவாகனரிலேயே மிகுந்த புகழ்படைத்த அரசராகவும், இறுதியில் யக்ஞ சாதகர்ணி (Yagnya Satakarni) அரசராக ஆண்டுவந்ததாகவும் வரலாறு கூறுகிறது.

ஆக, இங்குப் பிரபியோடாய் என்ற சொல் புலுமாயி என்ற அரசரைக் குறிப்பிடுகிறது என்று கொள்வதே பொருத்தமானது.

**5. பிரமனுய்** (Brahmana Aioi)

பிரமனுய் (Brahmana Aioi) என்ற சொல் பிராமணர் (Brahmins) என்ற சொல்லின் திரிபே. பிராமணர் நாடுகள் (Brahmin Kingdoms) எனப்பட்ட நாடுகள் விந்திய மலைக்கு வடக்கே கங்கை நதிப் பகுதியில் இருந்தன. மகதம், வங்கம், அங்கம், விதேகம், காசி முதலியவை பிராமண நாடுகளாகக் கருதப்பட்டன. (அதிகாரம் 74, குறிப்பு-2 பார்க்கவும்.)

மற்றும் சாதவாகனர்கள் முதலில் பிராமணர்களாகவும், அவர்கள் சந்ததியில் வந்தவராகவும் கூறப்படுகிறது.

—(Vide History of India, Part I By R. Sathianathier, M.A.L.T p, 184)

இதை மனத்தில் வைத்துக்கொண்டே, பிரபியோடாய் அதாவது புலுமாயி என்ற அரசர் வம்சத்தில் பிராமணர்களாவர் என்று தாலமி கூறுகிருர்.

சதம் என்ருல் நூறு. ஆக, சாதவாகனர்களின் மூதாதையர்கள் நூற்றுவர் கன்னர் எனப்படும் துரியோதனுதியர்களின் பரம்பரையில் வந்திருக்கக்கூடும். பாண்டவர்களின் பங்காளிகள் அல்லவா துரியோதனுதியர்கள். அவர்கள் நூறு பேர்கள் அல்லவா? ஆக, பாண்டவர்கள் வமிசம் பிராமண வமிசம் எனக் கூறப்படுவதால், அவர்கள் பங்காளிகளின் வமிசத்தில் வந்த புலுமாயி, மற்றும் பல சாதவாகன அரசர்கள் பிராமண வமிசத்தினராக இருந்திருக்க வேண்டும். இதன் காரணமாகத் தாலமி அவர்களைப் பிரமனுய் என்று வழங்கினுர் போலும்,

திரு யூல் கூறுகிருர்: "ராம்பெய்காவில் வசித்தவர்கள் பிரமனுய் ஆவர்." இக்கூற்று பொருந்தாது.

## 6. கோகனபந்தா (Cocanabanda)

கோகனபந்தா இப்பொழுது கோகான் (Gogaon) என்று வழங்கப்படுகிறது. கோகான்பந்தர் என்ருல் கோகான் எனும் வாணிகத்தலம் என்பதே பொருள். கோகான், நர்மதை ஆற்றுக்குத் தெற்கில் இந்தூர் (Indore) சமஸ்தானத்தில் உள்ளது.

கோகானின் இருப்பிடம்: 21°·54′வ × 75°·43′கி.

## 7. ஓசோபிஸ் (Osobis)

ஓசோபிஸ், இன்று ஒசங்காபாத் (Hosangabad) என்று வழங்கப்படுகிறது. இது வைரம் எடுக்கும் இடம் ஆகும். குறிப்பு-9 பார்க்கவும்.

ஓசங்காபாத் இருப்பிடம்: 28°·40′வ × 77°·45′கி.

## 8. ஓஸ்தா (Ostha)

இது இன்று அஷ்டா (Ashta) என்று வழங்கப்படுகிறது. அஷ்டா எனும் இடம் நர்மதை நதிக்கு வடக்கே போபால் (Bhopal) சமஸ்தானத்தில் உள்ளது.

அஷ்டா என்பது எட்டு என்று பொருள்படும். அஷ்டா என்ற இடம் முன்னர் அஷ்டக்கிராமம் (Ashtagrama) என்று இருந்திருக்க வேண்டும். எட்டுக் கிராமங்களும் ஒன்று சேர்ந்து விரிவடைந்த பிறகு, அது அஷ்டா (Ashta) என்றே குறிப்பிடப்பட்டது.

அஷ்டாவின் இருப்பிடம்: 23°·1′வ × 76°·38′கி.

**9. கோஸா (வைரம் உள்ள நாடு)** (Chosa, the Diamond producing country)

கோஸா என்பது வைரம் எடுக்கப்படும் பிரதேசம் ஆகும். மகாதேவ மலை முன்னர் மரகதமலை என்றும், அதற்கடுத்துள்ள பச்மரி (Pachmari) மலை முன்னர் பச்சைநிற மலை என்றும் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். மரகதமலை வைடூரியமலை எனவும், பச்சைமலை கோமேதகமலை எனவும் வழங்கப்பட்டன. இங்கு முற்காலத்தில் வைரங்களும் நவரத்தினங்களும் எடுக்கப்பட்டன.

நவரத்தினம் கொடுக்கும் மலைகள் இன்று ஒஸங்காபாத் எனுமிடத்தில் உள்ளன. கோஸா என்ற சொல்லே, ஒஸங்கா என்று மருவியிருக்கவேண்டும்.

ஒஸங்காபாதின் இருப்பிடம்: 22°·40′வ×77°·45′கி.

மற்றும் சிந்துபாது எனும் நூலில் வைரம் எடுக்கும் முறை குறிப்பிடப்பட்டுள்ளது. —(சிந்துபாது: பக்கங்கள் 27–34)

மார்க்கோ போலோவும் (கி.பி. 1254-1324) வைரம் எடுப்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

—(மார்க்கோ போலோ: பக்கங்கள் 62–64)

# 66. பிலிடாய்

*நாஞகௌஞ நதியின்[1] கரையினூடே பிலிடாய்[2] எனும் மக்களும், பெடிகோ[3] எனும் மக்களும் வசிக்கின்றனர். அவர்களுள் கண்டலா[4] என்ற இனமும் அடங்கும்.*

**1. நாஞகௌஞ நதி** (Nanagouna River)

நாஞ கௌஞ (Nana Gouna), கோதாவரி நதியின் கிளை நதியான வெயின் கங்கா (Wain Ganga) என்ற ஆற்றைக் குறிப்பிடுவதாக முன்னர் கண்டோம் (அதிகாரம் 7, குறிப்பு-6, மற்றும் அதிகாரம் 32, குறிப்பு-2). இந் நதி விந்திய மலையின் ஒரு பகுதியான மகாதேவ மலையில் உற்பத்தியாகிறது.

இந் நதி கங்கவல்லி நதியைக் குறிப்பிடுகிறது என்றும் சிலர் கூறுகின்றனர்.

வெயின் கங்காவின் இருப்பிடம்: 22°·24′வ×78°·0′கி.

கங்கவல்லியின் இருப்பிடம்: 15°·20′வ×72°·12′கி.

**2. பிலிடாய் மக்கள்** (People named Philitai)

பிலிடாய் (Phlitai) எனப்படுபவர், முன்னர் பில்ஸ் (Bhills) என்று வழங்கப்பட்டனர். கிரேக்க உச்சரிப்பில் பில்ஸ் என்பவரை பிலிடாய் என்று குறிப்பிடுகின்றார். இவர்கள் நர்மதை, தபதி நதிக் கரைகளிலும், விந்தியமலை, சாத்பூராமலை ஆகிய மலைக் காடு களிலும் வசித்துவந்தனர். இன்றும் அவ்விடங்களில் இவ்வினத் தவர் வாழ்ந்து வருகின்றனர்.

பில்ஸ் எனும் சொல் வில்லவர் எனப்பட்டவர். அவர்கள் வில் ஏந்தி வேட்டையாடுபவர். வில்லவர் எனுஞ்சொல்லே மேலை நாட்ட வர்களால்—ஆங்கிலேய வரலாற்றாசிரியர்களால்—உச்சரிக்க முடி யாமல்—பில்ஸ் என்று வழங்கப்பட்டது. பில்ஸ் என்ற சொல்லையே கிரேக்கர்கள் பிலிடாய் என்று வழங்கினர்.

பிலிடாய் என்னுஞ்சொல் புலிந்தர் (Pulindar) என்பவரைக் குறிப்பிடுவதாகச் சிலர் கூறியுள்ளனர். புலிந்தர் அக்ரியோபாகி (Pulindar Agriophagi) என்பார் விந்திய மலைக் காடுகளில் வாழ்ந் தனர் (அதிகாரம் 64, குறிப்பு-1). சவரர்கள் (Saveras) தபதி நதிக் கரையில் (Banks of River Tapti) வாழ்ந்து வந்தனர்.

—(Vide An Advanced History of India, By Dr. R,K. Mookerjee p. 42)

அக்ரியோபாகி எனுஞ்சொல் மரத்தின் இலைகளையும், பழங் களையும், கிழங்குகளையும் உண்டு வாழ்பவர் என்று பொருள்படும். இச் சொல் பழங்கால ரிஷிகளையும் குறிப்பிடலாம்.

**3. பெடிகோ** (Betigo)

பெடிகோ மலை என்ற சொல் குடகு மலையைக் குறிப்பிடும். இங்கு நர்மதை நதிக்கு அருகில் வாழ்ந்து வந்த மக்களைக் குறிப்பிடு வதால், இச் சொல் குடகு மலையைக் (Coorg Mountains) குறிப்பிடு கிறது. அம் மலைப் பகுதியே காவிரி நதியின் உற்பத்தியிடமல் லவா? ஆக, காவிரி நதியின் ஊடே வாழ்ந்த மக்களைப் பெடிகோ (Betigo) என்று வழங்கினர்.

அவ்வாறு வழங்கப்பட்ட மக்கள் யாவர்? இன்று கர்நாடகப் பகுதியில் வாணிகத்தில் உயர்ந்து விளங்கும் செட்டிமார்களே அன்று காவிரி நதிக்கரை வாணிகத்தை முழுதும் ஏற்று நடத்தி வந்தனர். காவிரி பாயும் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த கோவ லனின் தந்தை மாசாத்துவான் வாணிகச் செட்டிமார் அல்லவா? கண்ணகியின் தந்தை மாநாய்கன் வண்மையில் சிறந்தவர்;

வாணிக மரபினர். ஆக, கண்ணகிக்கும் கோவலனுக்கும் திருமணம் நடத்தப்பட்டது. அவர்கள் வாழ்க்கை வரலாறே சிலப்பதிகாரம் எனும் காவியமல்லவா?

(இவர்கள் புகாரில் உள்ள வணிகர்; மாநாய்கன்-குலப்பெயர்; வண்மையிற் சிறந்தவன்)—(**சிலப்பதிகாரம்:** அடியார்க்கு நல்லார் உரை: பக்கம் 25).

"மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்."

—(**சிலப்பதிகாரம்:** மங்கல வாழ்த்து 23)

ஆக, செட்டிமார் என்ற சொல்லே, தாலமியால் பெடிகோ என்று வழங்கப்பட்டது. இன்று அவர்களுள் ஒரு பகுதியினர், கன்னடிகர் (Kannadigar) என்று வழங்கப்படுகின்றனர்.

## 4. கண்டலா (Cantala)

கண்டலா என்ற சொல் சந்தலர் (Chantals) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. இவர்கள் ஒரிஸா வடபகுதியிலும், கல்கத்தா மேற்கிலும் வாழ்ந்தவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

கோண்ட்ஸ் (Ghonds) என்பவரும் ஒரிஸா பகுதியில் வாழ்ந்து வந்தனர்; பில்ஸ் (Bhills) என்பவர் விந்தியமலைக் காடுகளில் வாழ்ந்தனர்; சான்டல்ஸ் (Chantals) வங்கப் பகுதியில், கங்கை நதிக் கழிமுகத்தையடுத்து வாழ்ந்தனர்.

—(History of Indian People By H. G. Rawlinson, Part I, p. 8)

திரு. யூல் (Yule) என்பார் இச்சொல் குந்தள நாட்டைச் சார்ந்தவர் என்பதைக் குறிக்கும் என்று கூறியுள்ளார். இவர்கள் குந்தளர்கள் (Kuntalas) என்று வழங்கப்பட்டனர் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

குந்தள நாட்டின் தலைநகரம் கல்யாண் (Kalyan) என்பதாகும். இந் நகரம் இன்று பம்பாய்க்கு வடகிழக்கில் 64 கிமீ. (40 மைல்கள்) தொலைவில், தாணு (Thana) மாவட்டத்தில் உள்ளது.

கல்யாண் இருப்பிடம்: 19°·14′வ × 73°·10′கி.

ஆக, கண்டலா என்று தாலமி குறிப்பிடுவது, சந்தலர்களையும், கோண்ட்ஸ் எனப்படும் குந்தளர்களையும் ஆகும்.

# 67. அம்பஸ்டாய்

பிலிடாய் நாட்டுக்கும்[1], நாநுகௌநு ஆற்றுக்கும்[2] இடையேயும், அம்பஸ்டாய் நாட்டுக்கும்[3] பெடிகோ நாட்டுக்கும்[4] இடையேயும் பின்வரும் நகரங்கள் காணப்படுகின்றன :

| | |
|---|---|
| அகரா[5] | ... 129°·20'கி × 25°· 0'வ. |
| அடிசட்ரா[6] | ... 128°·30'கி × 24°·30'வ. |
| சோரா[7] | ... 124°'30'கி × 24°· 0'வ. |
| நியக்டோ சோரா[8] | ... 125°· 0'கி × 23°· 0'வ. |
| அநாரா[9] | ... 122°·30'கி × 22°·20'வ. |

## விளக்கவுரை

**1. பிலிடாய் நாடு (Philitai Country)**

பிலிடாய், முன்னர் பில்ஸ் (Bhills) என்று வழங்கப்பட்டனர். மற்றும் அதிகாரம் 66, குறிப்பு-2 பார்க்கவும். இவர்கள் விந்திய மலைக் காடுகளில், நர்மதை, தபதி நதிகளின் கரைகளில் வசித்து வந்தனர்.

**2. நாநுகௌநு ஆறு (River Nanagouna)**

நாநுகௌநு என்பது வெயின் கங்கா (Wain Ganga)வைக் குறிப்பிடும் (அதிகாரம் 66, குறிப்பு-1).

வெயின் கங்காவின் இருப்பிடம் : 22°·24'வ × 78°·0'கி.

**3. அம்பஸ்டாய் நாடு (Ambustai)**

அம்பஸ்டாய் (Ambustai) எனப்படுபவர் ஆபஸ்தம்ப மகரிஷி சூத்திரத்தைப் பின்பற்றுபவர். ஆபஸ்தம்பர் செநுப் நதியின் கீழ்ப்பகுதியில் வசித்து வந்தனர். அவர்கள் அம்பஸ்தர் (Ambasther) என்று வழங்கப்பட்டனர். அவர்கள் பின்னர் சித்தியர்களால் தெற்கே துரத்தப்பட்டு, விந்திய மலைகளிலும், நர்மதை ஆற்றுப் படுகைகளிலும் குடியேறினர். ஆக, அம்பஸ்டாய் எனப்படுபவர் நர்மதை ஆற்றங்கரையில் வசித்தவர் ஆவர்.

—(Vide An Advanced History of India, By Dr. R.K. Mookerjee, p. 65)

**4. பெடிகோ நாடு (The Country of Betigo)**

பெடிகோ (Betico) என்ற சொல் குடகு மலையையும், பொதியில் மலையையும் குறிப்பிடும். அதிகாரம் 66, குறிப்பு-3 பார்க்கவும்.

குடகு மலையின் இருப்பிடம் : 12°·18'வ × 76°·0'கி.

**5. அகரா (Agara)**

அகரா (Agara) என்னும் இடம் இப்பொழுது குவாலியர் பகுதியிலுள்ள அகர் (Agar) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது.

மற்றும், மின்னகரா என்பதில் உள்ள மின் அடைமொழி நீக்கப்பட்டு, அகராமட்டும் குறிக்கப்பட்டது. மின்னகரம் என்பது அன்று பார்த்தியர்களால் ஏற்பட்ட நகரங்களைக் குறிச்கும் (வெற்றி நகரங்கள்). அவ்வாறுன நகரங்கள் உஜ்ஜயினி, இந்தூர், நகரி முதலியனவாகும். ஆக, இங்கு அகரா என்று குறிப்பிட்டது இந்தோர் (Indore) என்ற நகரத்தைக் குறிப்பிடலாம். இந்தூர் நர்மதை ஆற்றுக்குத் தெற்கில் உள்ளது.

அகர் நகரத்தின் இருப்பிடம்: 23°·44′வ×76°·4′கி.

இந்தூர் இருப்பிடம்: 22°·44′வ×75°·50′கி.

**6. அடிசட்ரா (Adisatra)**

இதே பெயருள்ள ஓர் ஊர் பாஞ்சால (Panchala) நாட்டின் தலைநகரமாயிருந்தது (அதிகாரம் 53, குறிப்பு-3). இது இன்று ஹத்ராஸ் (Hathras) என்று வழங்கப்படுகிறது.

ஹத்ராஸின் இருப்பிடம்: 27°·36′வ×78°6′கி.

ஆனல், இங்கு இது நர்மதையைச் சார்ந்த பகுதியில் கொடுத்திருப்பதால், இவ் அடிசட்ரா வேறொரு பகுதியைக் குறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டும். இச் சொல் ஆதி-சந்தலர் என்பதன் சிதைவே. சந்தலர் (Chantals) ஒரிஸா வடபகுதியில் வாழ்ந்துவந்தனர். (அதிகாரம் 66, குறிப்பு-4)

இங்குக் குறிப்பிடப்பட்ட அடிசட்ரா என்பது நவீன அடிகான் (Adegaon) என்ற இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளப்படுகிறது. இவ்வூர் நர்மதை நதிக்கும் தபதி நதிக்கும் இடையில் உள்ளது.

அடிகானின் இருப்பிடம்: 22°·38′வ×79°·32′கி.

**7. சோரா (Sora)**

இவ்வூர் நவீன சூரத் (Surat) என்பதைக் குறிப்பிடும், சூரத் முற்காலத்திலிருந்தே ஒரு பண்டமாற்று இடமாக விளங்கிற்று. மற்றும் அது, தபதி (River Tapti) நதிக்கரைமீது துறைமுகமாக உள்ளதால், பாரிகாஸா (Barygaza)வுக்கு அடுத்தபடியாக அது முக்கியத்துவம் வாய்க்கப் பெற்றிருந்தது.

சோரா என்பது கள்வர் நிறைந்த இடத்தைக் குறிப்பிடும். நர்மதை ஆற்றங்கரையிலும், பாரிகாஸா துறைமுகத்தருகிலும், பாரிகாஸாவிற்குத் தெற்கிலும் கடற் கொள்ளைக்காரர்கள் இருந்தன ராகப் பெரிப்ளுஸ் ஆசிரியர் (கி.பி.50-80) கூறியுள்ளார்.

—(பெரிப்ளுஸ்: அதிகாரம் 53, பக்கம் 31)

மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) எழுதுகிறார்:

"ஐந்து மைல்களுக்கு ஒருவராக 20 வேவுகள் 100 மைல்கள் வரை வேவுபார்த்துச் சுற்றிக்கொண்டிருப்பார்கள். கொடியின் மூலமாகவோ, தீ மூட்டுவதன் மூலமாகவே அந்நியக் கப்பல் வருவதை ஒருவருக்கொருவர் தெரிவிப்பர். யாவரும் ஒன்று சேர்ந்து. கப்பலைக் கொள்ளையடிப்பர். பொருள்களை எடுத்துக்கொள்வரே யன்றி, ஆள்களுக்கு எவ்விதச் சேதமும் விளைவிப்பதில்லை."

—(மார்க்கோ போலோ: பக்கங்கள் 79-80)

சூரத் என்ற இடத்தில் முன்னர்க் கொள்ளைக் கூட்டத்தினர் பொருள்களை மட்டும் கொள்ளையடித்து, ஆள்களுக்கு எவ்விதச் சேதமும் ஏற்படாவண்ணம் விட்டுவிடுகின்றனர் என்றும் தெரிய வருகிறது.

சூரத்தின் இருப்பிடம்: 21°·12'வ×71°·52'கி.

## 8. நியக்டோ சோரா (Niagdo-Sora)

நியக்டோ (Niagdo) என்ற சொல் நிக்கந்தர் (Niggandar) என்ற சொல்லின் சிதைவே. நிக்கந்தர் என்பவர் பற்றைத் துறந்தவர். நிக்கிரந்தர் என்றும் வழங்கப்படுவர். நக்குரோதம் என்பது கோபத்தை ஒழித்தவர் ஆவர் (ந-குரோதர்). ஆக, நிக்கிரந்தர்-பற்றற்ற துறவிகள்-வாழும் க்ஷேத்திரம் நியக்டோ சோரா என்று விளங்கி வந்தது.

இவ்விடம் இன்று நிசார்பூர் (Nisarpur) ஊரைக் குறிப்பிடுகிறது. நியக்டோ-சோரா-பூர் என்பதே நிசார்பூர் ஆயிற்று. இவ்விடம் நர்மதை ஆற்றின் வடகரைமீது, பர்வானிக்கு வடக்கே உள்ளது. பர்வானி (Barwani) என்பது புத்த குருமார் ஒருவர்—ஜைன தீர்த்தங்கரர் ஒருவர்—பரி நிர்வாணமடைந்த ஊர் என்று பொருள்படும் இடமாகும்.

நிசார்பூர் இருப்பிடம்: 22°·3'வ×74°·57'கி.

பர்வானி இருப்பிடம்: 22°·2'வ×74°·57'கி.

**9. அநாரா** (Anara)

அநாரா (Anara) எனும் இடம் இன்று அம்ஜீரா (Amjhera) என்று வழங்கப்படுகிறது. இது குவாலியர் சமஸ்தானத்தில் (Gwalior State) நர்மதை ஆற்றுக்கு வடக்கே உள்ளது.

அம்ஜீராவின் இருப்பிடம்: 22°·32′வ × 75°·10′கி.

---

# 68. சோரா

பெடிகோ மலைக்கும்[1] அடைசத்ரானுக்கும்[2] இடையே சோரா[3] எனப்படும் நாடும், அந்நாட்டில் உள்ளவர்கள் நாடோடிகளாகவும் காணப்படுகின்றனர்.

மற்றும் அங்குக் கீழ்க்காணும் நகரங்களும் உள்ளன:

| | |
|---|---|
| சங்கமார்தா[4] | ... 133°· 0′கி × 21°·0′வ. |
| சோரா (ஆர்கடாவின் தலைநகரம்)[5] | ... 130°· 0′கி × 21°·0′வ. |

## விளக்கவுரை

**1. பெடிகோ மலை** (Betigo Mountain)

பெடிகோ என்பது இங்குக் குடகு மலையைக் குறிப்பிடுகிறது. காவிரி நதி உற்பத்தியாகும் இடம் குடகு மலையே (Coorg Mountain). இங்குத்தான் அகஸ்தியர் குடியிருந்ததாகக் கூறப்படுகிறது. அகஸ்தியர் மலை என்றும் வழங்கப்படும். மற்றும் அதிகாரம் 65, குறிப்பு-2 பார்க்கவும். இது பொதியில் மலையையும் குறிப்பிடக் கூடும்.

குடகு மலையின் இருப்பிடம்: 12°·18′வ × 76°·0′கி.

பொதியில் மலையின் இருப்பிடம்: 8°·58′வ × 77°·0′கி.

**2. அடைசத்ரான்** (Adaisatron)

இச்சொல் அகஸ்தியர் மலை என்பதன் கிரேக்க உச்சரிப்பே. அகஸ்தியர் இருந்த இடம் அகஸ்தியர் மலையாகும்.

அகஸ்தியர் (Agasthiar) ஒரு மகரிஷி. அவர் விந்திய மலையின் கர்வத்தை அடக்கினார் எனப்படுகிறது. விந்தியமலை வளர்ந்து கொண்டே போனதால், தெற்கில் உள்ள பகுதிகள் தாழ்ந்து

கொண்டே வந்தன. "வடக்கு உயருகிறது; தெற்கு தாழ்கிறது" என்ற பழமொழி அகஸ்தியர் காலத்திலேயே ஏற்பட்டதாகும். அகஸ்தியர் அவ் விந்திய மலையின் வளர்ச்சியைத் தடுத்து, தாம் தெற்கில் உள்ள பொதியில் மலைக்கும், வடக்கில் உள்ள விந்திய மலைக்கும் நடுவில் உள்ள குடகு மலையில் தம் இருப்பிடத்தைக் கொண்டு, வடக்கும் தெற்கும் சமமாகுமாறு செய்தார் என்று புராண வரலாறுகள் கூறுகின்றன. மற்றும், அகஸ்தியர் தம் கமண்டலத்திலிருந்த நீரைக் கீழே பெருகுமாறு செய்ததால், காவிரி உற்பத்தியாயிற்று என்றும் கூறப்படுகிறது.

காவிரி என்ற ஆறு கவேரன் மகள் என்றும் கூறப்படுகிறது. கவேரன் மகள் ஆனதால் அவ் ஆறு காவிரி அல்லது காவேரி என்றும் வழங்கப்பட்டதென்பர்.

இவ்வதிகாரத்தில் தெற்கேயுள்ள பொதியில் மலைக்கும், குடகு மலைக்கும் இடையேயுள்ள நாடுகளைக் குறிப்பிடுகிறார். இந் நாடு சேரர்களுடைய நாடாக இருந்தது. அடுத்த குறிப்பு-5-ல் சேரரைச் 'சோரா' என்று விளிக்கிறார்.

**3. சோரா (Chora)**

இச் சொல் சேரர் (Chera) என்பதன் திரிபே. மற்றும் குறிப்பு-5 பார்க்கவும்.

**4. சங்கமார்தா (Sangamarda)**

மதரதா (Madarata) என்றால் 'தென்னை நார்களில் பிணைக்கப் பட்ட ஓடம்' என்பது பொருள். இது அரபு மொழிச் சொல்லாகும். காரணம் இவ்வகைப் படகுகளை அரேபியாவின் தென் பகுதியான ஹைட்ரமௌத் (Hydramaut) பகுதியில் உள்ள மக்கள் பயன்படுத் தினர். ஆனால், தென்னை நார் கேரள நாட்டிலிருந்துதான் கிடைத்தது. ஆக, கேரள-மலையாள-நாட்டுக் கடற்கரையில்தான் அத்தகைய மதரதா எனும் பிணையல் படகுகள் செய்யப்பட்டன. இவ் வரலாற்றைப் பெரிப்ளூஸ் ஆசிரியர் கொடுத்துள்ளார்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 35, குறிப்பு-10, பக்கம் 127)

சங்கம் என்பது சங்கமம் (Sangamam) என்ற சொல்லின் திரிபே. அதன் பொருள் ஒன்றுகூடுதல், திரட்டப்படுதல் என்பன வாகும். ஆக, தாலமியின் கூற்றான சங்கமார்தா (Sangamarda) என்பதற்கு மதரதா கப்பல்கள் ஒன்றாகச் சேகரிக்கப்படும் இடம் என்பது பொருளாகும்.

அவ்வகைக் கப்பல்கள் மலையாள நாட்டுக் கடற்கரையிலுள்ள கண்ணனூரிலும் (Cannanore), கள்ளிக்கோட்டைப் (Calicut) பகுதியிலும் உற்பத்தி செய்து, அரேபியா நாட்டிற்கு (Arabia) அனுப்பப் பட்டன என்று வரலாறுகள் கூறுகின்றன.

கள்ளிக்கோட்டை இருப்பிடம்: 11°·15′வ×75°·49′கி.

## 5. சோரா (ஆர்கடாவின் தலைநகரம் (Chora, the Capital of Arcata)

சோரா (Chora) என்பது கேரளபுத்திரர் எனப்படும் சேரர் என்பதன் திரிபே.

ஆர்கடா என்பது பேரியாறு என்பதன் கிரேக்க உச்சரிப்பாக இருத்தல்வேண்டும். பேறியாற்றங்கரையைப் பேரிஸ் (Beris) என்றும் கூறுகிறர். ஆக, பேரியாற்றங்கரையில் விளங்கிய முசிறி, கொடுங்களூர், வஞ்சிமாநகரம் ஆகிய இவற்றில் ஒன்றுன கொடுங்களூரைக் குறிப்பிடுகிறது. காரணம், முசிறித் துறைமுகம் கடல்கோளால் தாலமி காலத்தில் முழுகிவிட்டது; வஞ்சிமாநகரம் சேரர் உள்நாட்டுத் தலைநகரமாயிருந்தது. ஆக, கொடுங்களூர் (Kodungalur) என்ற இடமே அன்று சேரர்களுடைய துறைமுகமாகவும், வாணிகத் தலமாகவும் விளங்கிற்று. கொடுங்களூர் இன்றைக்குக் கிரேங்கனூர் (Cranganore) என்று வழங்கப்படுகிறது.

கொடுங்களூரின் (கிரேங்கனூரின்)
இருப்பிடம்: 10°·13′வ×76°·16′கி.

சிலர் சோரா என்பதைச் சோழர் (Cholas) என்றும், ஆர்கடா என்பதை ஆர்கரு என்றும், ஆர்கரு என்ற சொல்லே உறையூர் என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும் என்றும், ஆக சோழர்களின் தலைநகரமான உறையூரே இங்குக் குறிப்பிடப்படுகிறது என்றும் கூறுவர். இவ்விளக்கமும் ஏற்றுக்கொள்ளத் தகுந்ததே.

உறையூரின் இருப்பிடம்: 10·°50′வ×78°·46′கி.

உறையூரைப் பிளினி (கி.பி. 23-79) ஓதன்பெரோ (Odenberos) என்று வழங்கினர். ஓதன்பெரோ என்பது உறந்தை என்பதன் கிரேக்க உச்சரிப்பே.

—(**பிளினி:** புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-36, பக்கம் 48)

சிலர் ஆர்கடா என்பது இன்றைய ஆர்க்காடு (Arcot) என்ற இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொண்டுள்ளனர். ஆனல், இக்கூற்று பொருந்துமா என்பது ஐயப்பாடே. ஆர்க்காடு என்பது வட ஆர்க்காட்டில் உள்ளது. ஆத்திமரம் நிறைந்த ஊர் ஆர்க்காடு (ஆர்-ஆத்திமரம்)

# 69. போலிங்கே

ஓயிந்தியான் மலைக்குக்[1] கிழக்கில் போலிங்கே[2] எனப் படும் நாடு உள்ளது. அந் நாட்டில் உள்ள ஊர்கள் பின்வருமாறு:

ஸ்டேகபாஜா (பாஸ்டகாஜா)[3] ... 133°· 0'கி × 28°·30'வ.

பர்டோடிஸ்[4] ... 137°·30'கி × 28°·30'வ.

## விளக்கவுரை

**1. ஓயிந்தியான் மலை** (Ouindion Mountain)

ஒயிந்தியான் என்று கூறப்படுவது விந்தியமலை (Vindhya Mountain)யைக் குறிப்பிடுவதாகும். மற்றும் அதிகாரம் 21, குறிப்பு-1 பார்க்கவும். இதில் விந்திய மலையை ஒயிந்தியான் என்றே குறிப்பிடுகிருர்.

விந்திய மலையின் இருப்பிடம்: 22°·30'வ × 76°·0'கி.

**2. போலிங்கே** (Bolingae)

இது கலிங்கம் (Kalingae) என்பதன் திரிபாகும். கலிங்கே என்பது கலிங்கநாடு. இது பண்டைய நாடுகளுள் ஒன்று. கலிங் கத்தின் போர் குறித்துக் கலிங்கத்துப்பரணி என்னும் தமிழ்நூல் கவிச்சக்ரவர்த்தி ஜெயங்கொண்டாரால் பாடப்பட்டது.

கலிங்கத்தைப் பிளினி (கி.பி. 23-79) மகாகலிங்கே என்று வழங்கியுள்ளார். அவர் அச் சொல்லை மொடு-கலிங்கே (Modu-Kalingae) என்று உச்சரித்தார். கலிங்கத்தின் தலைநகரம் கலிங் கப்பட்டினம்.

பிளினி, போலிங்கே என்று கூறுவது பலுசிஸ்தானத்தைக் குறிப்பிடுகிறது.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-63, பக்கம் 57)

கலிங்கப் பட்டினத்தின் இருப்பிடம்: 18°·20'கி × 84°·10'கி.

ஒரிஸாவில் இன்று போலங்கிர் (Bolangir) என்ற நகரமும் ஒன்று உள்ளது.

போலங்கிர் இடத்தின் இருப்பிடம்: 20°·40'வ × 83°·30'கி.

கலிங்கத்துப்பரணி, கலிங்கப் போரைப் பற்றிக் கூறுகிறது:

“ களப்போர் விளைந்த கலிங்கத்துக்
கலிங்கர் நிணக்கூழ் களப்பேயின்
உளப்போர் இரண்டு நிறைவித்தாள்
உறையுங்காடு பாடுவாம்.”

—(கலிங்கத்துப்பரணி : 75)

### 3. ஸ்டேகபாஜா (பாஸ்டகாஜா) (Stagabaja or Bastagaja)

பாஸ்டகாஜா (Bastagaja) எனும் இடம் இன்று கலிங்கப்பட்டினத்துக்கு மேற்கில் உள்ள பாஸ்டர்கர் என்பதைக் குறிப்பிடும். பாஸ்டர்கர் என்பதே இன்று பாஸ்டர் (Bastar) என்று வழங்கப்படுகிறது. கோதாவரி நதியின் கிளைநதியான இந்திராவதி (Indravati) நதிக்கு வடபகுதியில் பாஸ்டர் உள்ளது.

ஏடெழுதுபவருக்கு இவ்விடம் ஸ்டேகபாஜா என்பதா அல்லது பாஸ்டகாஜா என்பதா என்ற ஐயம் ஏற்பட்டிருக்கவேண்டும். அதன் காரணமாகத்தான் பாஸ்டகாஜா என்பதை அடைப்புக்குறியில் இட்டார்போலும். இவற்றுள் பாஸ்டகாஜா என்பதே சரியான சொல். அதே பெயருள்ள இடம் இன்றும் கலிங்க நாட்டுக்கருகில் காணப்படுகிறது என்பதே அதற்குரிய விளக்கமாகும்.

பாஸ்டரின் இருப்பிடம்: 19°·10′வ × 81°·30′கி.

### 4. பர்டோடிஸ் (Bardotis)

பர்டோடிஸ் (Bardotis) என்ற சொல் பத்ராசலம் (Bhadrachalam) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. காபேரிஸ், ஹைட்ரோடிஸ், பேரிஸ் என்பனபோல, பர்டோடிஸ் என்பது ஓர் ஆற்றைக் குறிப்பிடுகிறது. பத்ராசலம், கோதாவரி நதிக்கரையில் உள்ளது. ஆகவே, இந்நகரம் ஆற்றின் கரைமீதுள்ளது என்பதைக் குறிப்பிடவே பர்டோடிஸ் என்று வழங்கினர் போலும்.

பத்ராசலத்தின் இருப்பிடம்: 17°·40′வ × 80°·56′கி.

---

# 70. பொருவ்ராய்

இதற்கும் அப்பால் பொருவ்ராய்[1] எனப்படும் மக்கள் உள்ள நாடு காணப்படுகிறது. அந் நாட்டினுள் கீழ்க்காணும் நகரங்கள் உள்ளன :

| | |
|---|---|
| பரிதிமா[2] | ... 134°·30′கி × 27°·30′வ. |
| ஓஓபாணு[3] | ... 136°·20′கி × 27°· 0′வ. |
| மலேலா[4] | ... 136°·30′கி × 25°·50′வ. |

## விளக்கவுரை

1. பொருவ்ராய் (Poruvrai)

பொருவ்ராய் என்னும் சொல் பௌரவர் (Pouravar) எனும் இனத்தினரைக் குறிப்பிடுவதாகும். பௌரவர் வமிசத்தில் வந்தவரே புருஷோத்தமர் எனப்படும் பேரரசர் ஆவார். புருஷோத்தமர் (Purushothama) கிரேக்கர்களால் போரஸ் (Porus) என்றே வழங்கப்பட்டார். இவர் மாவீரர் அலெக்சாந்தரை (Alexander, the Great) கி.மு. 326-ல் ஜீலம் நதிக்கரையில் எதிர்த்துப் போரிட்டுத் தோற்ருர். அப்போர் ஹிடாஸ்பஸ் (Hydaspus) போர் என்று வழங்கப்பட்டது. ஹிடாஸ்பஸ் என்பது ஜீலம் நதியின் (River Jhelum) கிரேக்கப் பெயர். அதன் வேதகாலப் பெயர் ஐராவதி (Irrawadi).

புருஷோத்தமரிடம் 200 யானைகளும், 300 தேர்களும், 4,000 குதிரைகளும், 30,000 காலாட்படைகளும் இருந்தனவென்ருலும், அவருக்கு வெற்றி கிட்டவில்லை. புருஷோத்தமர் அலெக்சாந்தர் முன் கைதியாக்கப்பட்டு நிறுத்தப்பட்டார். அப்பொழுது அலெக்சாந்தர் அவரைப் பார்த்து, "உமக்கு என்ன தேவை?" என்று கேட்டார். அதற்குப் புருஷோத்தமர், "எனக்கு ஒரு தேவையுமில்லை. ஆனால், ஓர் அரசனை மற்ருேர் அரசன் எவ்வாறு நடத்துவாரோ, அதேமாதிரி நடத்துங்கள்," என்ருர். அலெக்சாந்தரும் அவருடைய போர் செய்த முறையைப் பாராட்டி, "அப்படியே ஆகட்டும்" என்று பதிலிறுத்தார். அவரை மீண்டும் அந் நாட்டுக்கே அரசராக்கிச் சென்ருர் மாவீரர் அலெக்சாந்தர்.

—(Vide An Advanced History of India By Mukherjee, R. K. pp. 66-67)

பௌரவர்கள் மிகப் பழங்குடிகள். அவர்கள் மகாபாரதத்தில் குறிப்பிடப்படுகின்றனர். பௌரவர்கள் ஜீலம் நதியின் (River Jhelum) கிழக்குப் பகுதியில் ஆண்டுவந்தனர்.

**2. பரிதிமா (Faridima)**

பரிதிமா இன்று பரித்கோட் (Faridkot) என்று வழங்கப்படு கிறது. இது பாடியாலா (Patiala) சமஸ்தானத்தைச் சார்ந்தது. சட்லெஜ் (River Sutlej) நதியின் கிழக்கில் உள்ளது.

பரித்கோட்டின் இருப்பிடம்: 30°·40′வ×74°·57′கி.

**3. லுலுபானு (Lulubana)**

லுலுபானுவின் நவீன பெயர் லூதியானு (Ludhiana) என்பதாகும். லூதியானு, சட்லெஜ் நதிக்கரையை அணுகியுள்ளது. பஞ்சாப் பிரதேசத்தைச் சார்ந்தது.

லூதியானுவின் இருப்பிடம்: 30°·55′வ×75°·54′கி.

**4. மலைலா (Malyla)**

மலைலா என்ற சொல் மகா லைலா என்றதன் சுருக்கமே. மகா லைலா இன்று லையால்பூர் என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது மூல்டான் (Multan) எனப்படும் மூலஸ்தானபுரத்துக்கு வடக்கே யுள்ளது.

லையால்பூரின் இருப்பிடம்: 31°·44′வ×73°·5′கி.

---

# 71. அடிசத்ராய்

*இவற்றிற்குமப்பால், ஆக்ஸென்டான் மலைத்தொடர்*[1] *வரையில் அடிசத்ராய்*[2] *எனப்படும் மக்கள் வாழ்கின்றனர். அந்நாட்டில் உள்ள நகரங்கள் பின்வருமாறு:*

| | |
|---|---|
| *மெலிபா*[3] | ... 140°· 0′கி×27°·20′வ. |
| *அஸ்பாதிஸ்*[4] | ... 138°·30′கி×25°·20′வ. |
| *பனஸ்ஸா*[5] | ... 137°·40′கி×24°·30′வ. |
| *ஸகேடா (தலைநகரம்)*[6] | ... 133°· 0′கி×23°·30′வ. |
| *பாலண்டிபைரான்*[7] | ... 136°·30′கி×23·°30′வ. |

## விளக்கவுரை

### 1. ஆக்ஸென்டான் (Occentan)

இது மேற்கு மலைத்தொடரைக் குறிப்பிடுகிறது. ஆக்ஸென் டான் என்ற சொல் ஆக்சிடென்டல் (Occidental) என்ற சொல்லி னடியாகப் பிறந்தது. மேற்கு எனப் பொருளைத்தரும். கிழக்கு என்பதற்கு ஓரியண்டல் (Oriental) என்ற சொல் பயன்படுத்தப் படுகிறது. இம் மலைத்தொடர் தபதிநதி (River Tapti) யிலிருந்து தொடங்கி கன்னியாகுமரிவரை (Cape Comorin) தொடர்ந்து செல்லும் மேற்கு மலைத்தொடரைக் (Western Ghats) குறிப்பிடும். இம் மலைத்தொடரில் மலைகள் பல அடங்கியுள்ளன.

மற்ற விவரங்களுக்கு அதிகாரம் 24, குறிப்பு-1, பக்கம் 111 பார்க்கவும்.

### 2. அடிசத்ராய் (Adisathroi)

அடிசத்ரோ என்பது அகஸ்தியர் (Agasthiar) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. குடகுமலை எனப்படுவது அகஸ்தியர் மலை என்றும், அதுவே அடைசத்ரோ என்று வழங்கப்பட்டதாகவும் முன்னர் கண்டோமல்லவா? (அதிகாரம் 68, குறிப்பு-2). ஆக, விந்திய மலையிலும் அகஸ்தியர் கோத்திரத்தைச் சார்ந்த மக்கள் வாழ்ந்து வந்தது இங்குக் குறிப்பிடப்படுகிறது.

ஆனல் புராணவாயிலாக, மேற்கு மலைத்தொடரில்-கேரள நாட்டில்-வசித்துவந்த மக்கள் பரசுராம கோத்திரத்தினர் என்றும், பரசுராமரே அவர்களுடைய ஆதித்தந்தை எனவும், பரசுராம க்ஷேத்திரம் அவர்களுக்கு மிக முக்கியமானதென்றும் தெரியவரு கிறது. பரசுராம க்ஷேத்திரம் என்பதை அடிசத்ராய் என்று தாலமி கூறுகிருரோ? இதை உறுதியாகக் கூறமுடியாது.

குடகு மலையின் இருப்பிடம்: 12°·18′வ×76°′·0′கி.

### 3. மெலிபா (Meliba)

மேற்கு மலைத்தொடரில் நாசிக் (Nasik) பகுதியில் கிர்ணு (Girna) நதி உற்பத்தியாகி கிழக்கு நோக்கிப் பாய்கிறது. அந் நதிக்கரையில் மெலிகான் (Malegon) என்ற நகரம் உள்ளது. மெலிபா என்ற இடமே இன்று மெலிகான் என்று வழங்கப்படு கிறது. நாசிக் எனும் நகரத்துக்கு வடகிழக்கில் உள்ளது.

மெலிகான் இருப்பிடம்: 20°·20′வ×74°·42′கி.

### 4. அஸ்பாதிஸ் (Aspathis)

அஸ்பாதிஸ் என்ற இடம் இன்று ஹஸன்பர்திஸ் (Hasanpartis) என்று வழங்கப்படுகிறது. இது கோதாவரி நதிக்குத் தெற்கில்

ஹைதராபாத் சமஸ்தானத்தில், கரீம் நகர்ப்பகுதியில் (Kareem-nagar) உள்ளது.

ஹஸன்பர்திஸ் இருப்பிடம்: 18°·10′வ×79°·46′கி.

**5. பனஸ்ஸா** (Panassa)

பனஸ்ஸா எனும் இடம் இப்பொழுது பன்ஸ்டா (Bansda) என்று வழங்கப்படுகிறது. இது சூரத் (Surat) பகுதியில் உள்ளது. சூரத் மேற்கு மலைத் தொடரில் உள்ள பகுதியாகும். தபதி நதிக் கரையில் (River Tapti) உள்ளது.

பன்ஸ்டாவின் இருப்பிடம்: 20°·45′வ×73°·28′கி.

**6. ஸகேடா (தலைநகரம்)** (Sakeda, the Capital)

ஸகேடா என்னும் இடம் இன்று சிந்த்கேடா (Sindkheda) என்று வழங்கப்படுகிறது. அதற்கு மேற்கில், அருகில் சொங்கோடுக் கோட்டை (Fort Songod) என்னும் ஒரு கோட்டை உள்ளது. இதன் காரணமாக, சிந்த்கேடா முன்னர் ஒரு தலைநகரமாயிருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

சிந்த்கேடா, காண்டிஷ் (Khandesh) நாட்டின் மேற்குப் பகுதியில் உள்ளது. சக்யாத்ரி பர்வதத்திற்கு வடமேற்கிலும், சாத்பூரா (Satpura) மலைக்குத் தெற்கிலும் உள்ளது. சக்யாத்ரி பர்வதம் (Sakyadri Range) என்பதே ஸகேடா என்று கிரேக்க மொழியில் உச்சரிக்கப்பட்டிருக்கலாம்.

சிந்த்கேடாவின் இருப்பிடம்: 21°·18′வ×74°·50′கி.

சக்யாதி பர்வதம் இருப்பிடம்: 20°·30′வ×76°·00′கி.

சக்யாதி பர்வதமே ஸகேடாவைக் குறிப்பிடுகிறதென்றால், மேற்குத் தொடர்ச்சி மலைகள் தொடங்கும் தலையாய இடம் சக்யாதி பர்வதம் என்ற பொருளிலே, 'ஸகேடா ஒரு தலைநகரம்' என்று எழுதப்பட்டிருக்கும். அல்லது முக்கியமானது, முதலாவது என்பதை ஏடெழுதுபவர் மாற்றித் தலையாயது, தலைநகரம் என்று மாற்றி விட்டிருக்கக்கூடும்.

**7. பாலண்டி பைரான்** (Balanti Pyron)

விராணி மலை என்பது இன்று ஆனைமலை (Anaimalai) என்று வழங்கப்படுகிறது. விராணி என்ற சொல்லே பைரான் (Pyron) என்று கிரேக்க உச்சரிப்பில் கூறப்படுகிறது என்பது சிலர் கருத்து.

ஆனைமலையின் இருப்பிடம்: 10°·24′வ×76°·40′கி.

மற்றும் ஒரு சிலர், பாலண்டி பைரான் என்ற சொல் பார்வதி புரம் (Parvathipuram) என்ற ஊரைக் குறிப்பிடுகிறது என்று கூறுவர். பார்வதிபுரம், கிழக்குக் கோதாவரிப் பகுதியில், கலிங்கப் பட்டினத்திற்கு வடமேற்கில் உள்ளது. இஃது ஆந்திர நாட்டைச் சார்ந்தது. ஸகேடா என்பது சரகணர் (Saragana) என்ற ஆந்திர நாட்டரசரையும், பாலண்டி பைரான் என்பது அவர் வசித்துவந்த பார்வதிபுரத்தையும் குறிப்பதாகும் என்பர்.

பார்வதிபுரத்தின் இருப்பிடம்: 18°·47′வ × 83°·28′கி.

---

# 72. மண்டலாய்

*அடிசத்ராய் நாட்டிக்கு[1] வெகு தொலைவில், கிழக்குப் பகுதியில், மண்டலாய்[2] என்பவர்களுடைய நாடு உள்ளது. அந் நாட்டில் உள்ள ஊரின் பெயர்:*

*அஸ்தகௌரா[3]* ... 142°·0′கி × 25°·0′வ.

## விளக்கவுரை

**1 அடிசத்ராய் நாடு (The Country of Adisatroi)**

அடிசத்ராய் என்பது அகஸ்தியர் என்பதன் திரிபே. இந் நாடு குடகு மலையைச் சார்ந்த பகுதியாகும். குடகு மலையில் காவிரி நதி உற்பத்தியாகிறது. அவ்விடத்தில்தான் அகஸ்தியர் வாழ்ந்து வந்தார் என்று கூறப்படுகிறது. மற்றும், அதிகாரம் 68, குறிப்பு-2 பார்க்கவும்.

குடகுமலை இருப்பிடம்: 12°·18′வ × 76°·0′கி.

**2. மண்டலாய் (Mandalaoi)**

மண்டலாய் எனும் இடம் சோணை நதியும் (River Son), நர்மதை நதியும் (River Narbada) உற்பத்தியாகும் இடத்தில் உள்ளது. இங்குள்ள மக்கள் மண்டலாய் (Mandalaoi) என்று வழங்கப்படுகிறார்கள். இது கங்கைக்கருகில் உள்ளதாகக் கருதி எழுதியுள்ளார்.

நர்மதை ஆறு உற்பத்தியாகும் பிரதேசம் இப்பொழுது மண்டலா (Mandala) என்று வழங்கப்படுகிறது. இது மைகலா மலைத்தொடரைச் சார்ந்ததாகும். மண்டலா பிரதேசத்தின் தலை நகரமும் மண்டலா (Mandala) என்றே வழங்கப்படுகிறது.

இது நர்மதை ஆற்றங்கரைமீதே உள்ளது. தாலமி காலம் முதல் இன்றுவரை பெயர் மாற்றம் அடையாத பகுதிகளுள் இதுவும் ஒன்றாகும்.

மண்டலாவின் இருப்பிடம்: 22°·43′வ×80°·35′கி.

பிளினி (கி.பி. 23-79) என்பாரும் மண்டலா என்ற பெயரைக் குறிப்பிட்டுள்ளார். ஆனால், அவர் குறிப்பிட்டது சிந்து நதியின் தென்பகுதியில் உள்ள மல்லி நாடாகும் (Mallioi Country).

—(**பிளினி**: புத்தகம் VI, அதிகாரம் 21, குறிப்பு-68, பக்கம் 20)

**7. அஸ்த கௌரா** (Astha Goura)

அஸ்த கௌரா (Astha Goura) எனும் இடம் நவீன கட்கோரா (Kat-Gora) என்ற ஊரைக் குறிப்பிடுகிறது. அஸ்வகோஷா (Asva gosha) என்ற சொல்லே கிரேக்க உச்சரிப்பில் அஸ்தகௌரா என்று வழங்கப்பட்டது. அஸ்வகோஷா என்ற வடமொழிச் சொல்லின் பொருள் குதிரைகள் கோஷம் (கோஷா) எழுப்பின இடம் என்பதாகும்.

இன்று அஸ்வகோஷா எனும் இடம் கட்கோரா (Katgora) என்று வழங்கப்படுகிறது. கோடா என்ற உருதுச் சொல் குதிரையைக் குறிக்கும். ஆக, கட்கோடா என்பது குதிரைகள் விளங்கிய இடமாகும். கட்கோரா, கட்கோடா, அஸ்த கௌரா-யாவும் ஒரே இடத்தைக் குறிப்பிடுகின்றன.

கட்கோரா எனும் இடம் மண்டலா பகுதியின் தென் கிழக்கில் உள்ளது.

கட்கோராவின் இருப்பிடம்: 22°·43′வ×82°·11′கி.

---

# 73. கங்கே நகரங்கள்

*கங்கே நதிக்கரையின்[1] மீது உள்ள நகரங்கள் பின் வருமாறு:*

| | |
|---|---|
| *சாம்பலகா*[2] | ... 141°· 0′கி×24°·30′வ. |
| *பாலிம்போத்ரா*[3] (*அரசர் மாளிகை*) | ... 143°· 0′கி×27°· 0′வ. |
| *தாமலிப்தி*[4] | ... 144°·30′கி×26°·30′வ. |
| *ஓரியோபாண்டஸ்*[5] | ... 146°·30′கி×24°·30′வ. |

## விளக்கவுரை

**1. கங்கே நதிக்கரையின்மீது** (On the Banks of the River Gange-s)

கங்கை என்பதைக் கங்கே (Gange-s) என்றே தாலமி உச்சரித்தார். ஆனல், அதே ஆங்கில எழுத்துகள் கொண்ட சொல்லை ஆங்கிலேயர்கள் காஞ்சஸ் (Ganges) என்றே உச்சரித்தனர். மற்றும் அதிகாரம் 18, குறிப்பு-1, பக்கம் 100 பார்க்கவும்.

**2. சாம்பலகா** (Sambalaca)

சாம்பலகா என்ற இடம், டெல்லிக்குக் கிழக்கில் உள்ளதும், ரோகில்கண்டுப் பகுதியில் உள்ளதுமான சாம்பல் (Sambal) எனும் ஊரைக் குறிப்பிடுகிறது. மத்ராவுக்கு (Muttra) வடகிழக்கில் உள்ளது. மத்ரா என்பது வடமதுரை என்று வழங்கப்படும் நகரமாகும்.

சாம்பல் பழங்காலம் முதற்கொண்டு ஒரு வாணிகத்தலமாக விளங்கிவருகிறது. மற்றும், அதிகாரம் 53, குறிப்பு-2 பார்க்கவும்.

சாம்பலின் இருப்பிடம்: 28°·35′வ×78°·37′கி.

**3. பாலிம்போத்ரா (அரசர் மாளிகை)** (Palymbothra, the King's Palace)

பாலிம் போத்ரா எனும் சொல் பாடலிபுத்திரம் (Pataliputra) என்ற நகரத்தைக் குறிப்பிடுகிறது. பாடலிபுத்திரம் என்பதே பாடலிபுரம் ஆகி, அதுவே நவீன பாட்ன (Patna) என மருவிற்று.

பாடலிபுத்திரத்தின் பழைய பெயர் ராஜ கிருஹம் (Raja Griha) அதாவது அரசர் வாழ்ந்த இடமாகும். இந்த 'அரசர் மாளிகை' என்பதையேதான் தாலமி குறிப்பிட்டார்.

ராஜ கிருஹம், பிம்பிசார மன்னரின் தந்தையான க்ஷத்ரௌஜரால் (Kshatrauja) கி.மு. 528ஆம் ஆண்டில் நிர்மாணிக்கப்பட்டது. பாடலிபுத்திரம் அஜாதசத்ருவால் கி.மு. 482-ல் நிர்மாணிக்கப்பட்டு, அதைச் சுற்றிலும் மதில் எழுப்பப்பட்டதென்று வரலாறு கூறுகின்றது.

பாடலிபுத்திரமே நவீன பாட்ன ஆகும். இன்று பீஹார் பகுதியைச் சார்ந்துள்ளது.

பாட்னவின் இருப்பிடம்: 25°·37′வ×85°·13′கி.

பாடலிபுத்திரத்தைப்பற்றி யுவான் சுவாங் (கி.பி. 629-645) பின்வருமாறு கூறியுள்ளார்;

“கங்கைக்குத் தெற்கில் 70-லிச் சுற்றளவுள்ள பழைய நகரம் தன் பழைய அடித்தலச் சின்னங்களை வெளியிட்டு நிற்கிறது. அந் நகரம் நெடுநாள்களாகப் பாழடைந்து கிடக்கிறது. போ-டாலி-சூ-சிங் என்பது அதன் பெயர்.

முன்னொரு காலத்தில் கல்வித்துறையில் சிறந்து விளங்கிய அந்தணர் ஒருவர் தம் சீடருடன் காட்டில் வசித்திருந்தபோது, அவர்களுள் ஒருவன் முகவாட்டத்துடனிருந்தான். அவனுக்குப் பொம்மைக் கல்யாணம் செய்ய, பாடலிமரத்தினடியில் நின்றிருந்தனர். பாடலி மரத்தையே மணப்பெண்ணாக ஆக்கினார்கள். திருமணச் சடங்குகள் முடிவடைந்ததும், யாவரும் தத்தம் இல்லம் ஏகினர். ஆனால், மாப்பிள்ளையாக நடித்த சீடன்மட்டும் வர மறுத்துவிட்டான். தான் தன் மனைவி பாடலி மரத்தினுடனே இருப்பதாகக் கூறிவிட்டான்.

அப்பொழுது அங்குத் தாய் தந்தையராகிய பெற்றோர் தம் மகளுடன் அங்கு வந்து செய்தியை அறிந்து, அச் சீடனுக்குத் தம் மகளை மனைவியாக ஆக்கினர். அப் பாடலிமரத்துக்கடியிலேயே ஒரு மடாலயத்தைக் கட்டி, அதிலே தம் மகளை மருமகனுடன் குடித்தனம் நடத்தச் செய்தார். அவர்கள் அங்கு ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தனர்.

பாடலி மரத்துக்குப் பிறந்த புதல்வன் ஒருவனுக்காகத் தேவர்களால் கட்டப்பட்ட கட்டடத்தைக் கொண்ட இடம் என்பதே பாடலிபுத்திரம் என்ற சொல்லின் பொருளாகும். அப் பெயரே அவ்விடத்துக்கு என்றென்றும் நிலைத்துவிட்டது. அவ்விடத்தில் ஒரு பல்கலைக்கழகமும் ஏற்பட்டது. பௌத்த சங்கத்தினர் அப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர்களாகப் பணிபுரிந்து வந்தனர்.

நாளடைவில் அரசாங்கத் தலைநகரமே அவ்விடத்துக்கு மாற்றப் பட்டு, பாடலிபுத்திரமே அரசாங்கத் தலைநகரமாக விளங்கிற்று.”

—(யுவான் சுவாங்: பக்கம் 99-102)

பாஹியானும் (கி.பி. 399-414) பாடலிபுத்திரத்தைப் பற்றிக் குறிப்புக்கள் பல கொடுத்துள்ளார்.

—(பாஹியான்: பக்கம் 143-154)

பாஹியான் குறிப்புகளிலிருந்து, ராஜகிருஹம் என்பது பாடலிபுத்திரத்திலிருந்து தென் கிழக்கில் 9 யோசனைத் தொலைவில் இருந்ததாகத் தெரிகிறது. ஒரு யோசனை என்பது 30 லித் தொலைவு. ஒரு ‘லி’ என்பது $\frac{3}{16}$ மைல். ஆக, ராஜகிருஹம் பாடலிபுத்திரத்துக்குத் தென்கிழக்கில் 81 கிமீ. (50·5 மைல்) தொலைவில் இருந்தது.

—(பாஹியான்: பக்கம் 155-156)

மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) அவர்களும் பாடலிபுத்திரத்தின் வரலாற்றை விரிவாகக் கொடுத்துள்ளார்:

"இந் நகரம் உள்ள நாட்டில் வாழும் மக்களே இந்தியாவில் உள்ள மக்கள் யாவரையும் விடப் பண்பாடடைந்தவர்கள் ஆவர். இவர்கள் பிராசி நாட்டினர் என்றே வழங்கப்படுகின்றனர். அரசர் தம் பெயருடன் பாலிபோத்ரா என்னும் பெயரையும் சேர்த்துக் கொள்கிறுர். இந் நாட்டின் **அரசர் சந்திர கோட்டாஸ்** என்பவர் ஆவார். அவரும் அவ்வாறே பாலிபோத்ரா என்னும் பெயரைத் தம் பெயருடன் சேர்த்துக்கொண்டு வழங்கினுர்.

—(**மெகஸ்தனிஸ்:** அதிகாரம் 18, குறிப்பு-13, பக்கம் 117)

சந்திர கோட்டாஸ் (Chandra Cottahs) என்று இங்குக் குறிப்பிடப்பட்டவர் சந்திரகுப்த மௌரியர் ஆவார் (கி.மு. 324-297).

ஸ்டிராபோ, பிளினி, அர்ரியன், பெரிப்ளூஸின் ஆசிரியர் ஆகிய பலரும் பாடலிபுத்திரத்தைப் பற்றிக் குறிப்புகள் கொடுத்துள்ளனர்.

பாலிபோத்ராவில் அரசமாளிகை இருந்ததாகக் கூறுகிறுர். அதன் பெயர் ராஜகிருஹம் என்பதால், அதையொட்டியே 'அரசர் மாளிகை' என்று நேரடி மொழிபெயர்ப்பாகவும் கொடுத்திருக்கலாம். அல்லது மெகஸ்தனிஸ் காலத்திலேயே-தாலமி காலத்திலேயும்-பாடலிபுத்திரத்தின் நகரினுள் தாம் வசதியான அரண்மனையைக் கட்டிக்கொண்டு வாழ்ந்தனர் என்ற பொருளும் தருகிறது. தாலமி, தமக்கு முன்னர் இருந்த ஸ்டிராபோ, அர்ரியன், மெகஸ்தனிஸ் ஆகியவர்கள் கொடுத்த விளக்கங்களின் உரைகளை ஏற்று அவற்றைத் தாமே பிறருக்குக் கொடுத்துதவியிருக்கலாம்.

பாடலிபுத்திரத்தில் ஒரு பல்கலைக் கழகம் இருந்ததாகவும் வரலாறு விளக்கம் அளிக்கிறது.

**4. தாமலிப்தி** (Tamalipti)

இச் சொல் தாமிரலிப்தி (Tamiralipti) என்பதன் மரூஉ. தாமிரலிப்தி முற்காலத்தில் வாணிகத்தலமாகவும், வாணிகச்சந்தை கூடும் இடமாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

தாமிரலிப்தி என்ற இடம், ஸ்டிராபோ, பிளினி, பெரிப்ளூஸின் ஆசிரியர், அர்ரியன், மெகஸ்தனிஸ் ஆகியவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

தாமிரலிப்தி இன்று தாம்லுக் (Tamluk) என்று வழங்கப்படுகிறது. அதை ஹூக்ளி நதிக் கழிமுகத்தில் (In the Estuary of

River Hoogly) இருந்தது. கங்கை நாட்டிலிருந்து வரும் பண்டங்கள் யாவும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

யுவான் சுவாங் இதைத் தான்-மோ-லிப்தி என்று வழங்கியுள்ளார். அதன் தலைநகரத்தின் சுற்றளவு 10 லி. ஆகும் என்றும், அங்குப் பத்துப் பௌத்த மடாலயங்கள் இருந்தனவென்றும், அவற்றுள் ஆயிரம் பௌத்த பிக்ஷுக்கள் வசித்துவந்தனர் என்றும் கூறியுள்ளார்.
—(**யுவான் சுவாங்**: பக்கங்கள் 150-151)

இதற்கு முந்தி கிரேக்கர்கள் இட்ட பெயர் தாப்ரபனே என்பதாகும். தாப்ரபனே என்ற சொல் இலங்கையைக் குறிப்பிட்டதாகக் கொள்ளப்படுகிறது. இச்சொல் '**த்வீபராவண**' என்ற சொல்லின் திரிபே. மற்றும், இச்சொல் தாமிரபருணி என்ற சொல்லின் திரிபாகவும் கொள்ளப்படுகிறது. தாமிரபருணி என்பது திருநெல்வேலி மாவட்டத்தில் ஓடும் ஒரு வளமிக்க நதியாகும். தாமிரபருணியை அடுத்து நின்ற இலங்கையைத் தாப்ரபனே (Taprobanae) என்று வழங்கினர் போலும்.
—(**மெகஸ்தனிஸ்**: அதிகாரம் 17, குறிப்பு-1, பக்கம் 104)

தாம்லுக் (Tamluk) ஹூக்ளி (River Hoogly) நதிக் கழிமுகத்தில் உள்ளது. பல பொருள்கள் இங்கிருந்து அயல் நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன என்று பெரிப்ளூஸ் நூல் கூறுகிறது.
—(**பெரிப்ளூஸ்**: அதிகாரம் 63, குறிப்பு-5, பக்கம் 283)

இவ்விடம் கல்கத்தாவிற்குத் தென்மேற்கில் 53 கிமீ. (35 மைல்கள்) தொலைவில் உள்ளது.

தாம்லுக் இருப்பிடம்: 22°·18′வ × 87°·58′கி.

## 5. ஓரியோபாண்டஸ் (Oriopontus)

இச்சொல் ஹூக்ளி நதியைக் குறிப்பிடுகிறது. ஹூக்ளி நதியானது கங்கைக் கழிமுகத்துக்கு மேற்கில் ஓடுகிறது. மற்றும், அந்நதிக்கரையிலிருந்த தாமிரலிப்தி துறைமுகத்திலிருந்து பல பண்டங்கள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. (**பெரிப்ளூஸ்**: அதிகாரம் 63, பக்கம் 283). ஹூக்ளி நதி கப்பல் போக்குவரவிற்குகந்த அகலமான நதியாகும். அது கங்கைக் கழிமுகத்தில் கடல்போல் பரந்து நிற்றலால், அதை ஓரியோ பாண்டஸ் என்று வழங்கினர் போலும். பாண்டஸ் (Pontus) என்றால் பெரிய நீர்நிலை என்று பொருள். அதிலிருந்துதான் குளம் என்னும் ஆங்கிலச் சொல்லான பாண்ட் (Pond) ஏற்பட்டது.

ஹூக்ளி நதியின் இருப்பிடம்: 22°·55′வ × 88°·26′கி.

---

# 74. படாய்

பெடிகோ மலையினைச்[1] சார்ந்த எல்லாப் பகுதிகளிலும் பிராமணகாய்[2] என்போர் வசித்துவந்தனர். அவர்களுடைய நகரம் படாய்[3] எனப்படும். அவர்களுடைய தலைநகரத்தின் பெயர் :

பிராக்மி[4] ... 128°·00′கி × 19°· 0′வ.

## விளக்கவுரை

**1. பெடிகோ மலை** (Betigo Mountain)

பெடிகோ (Betigo) என்ற சொல் பொதியில் என்பதையும், அகஸ்தியர் வாழ்ந்துவந்த குடகு மலை (Coorg Mountain)யையும் குறிப்பிடுகிறது. மற்றும், அதிகாரம் 62, குறிப்பு-2 பார்க்கவும்.

பொதியில் மலையின் இருப்பிடம் : 8°·58′வ × 77°·0′கி.

குடகு மலையின் இருப்பிடம் : 12°·18′வ × 76°·0′கி.

**2. பிராமணகாய்** (Brahmanacai)

பிராமணகாய் என்பது பிராமணர் நாடுகள் என்றே பொருள் கொள்ளவேண்டும். விந்தியமலைக்கு வடக்கில், கங்கை நதிக்கரை ஓரமாகப் பண்டைக்காலத்தில் பின்வரும் அரசுகள் விளங்கின. அவையாவன : (1) கோசலம் (Kosala), (2) மகதம் (Magadha), (3) அங்கம் (Anga), (4) விதேகம் (Videha), (5) காசி (Kasi), (6) வத்சம் (Vatsa) முதலியனவாகும். இவை யாவும் பிராமண அரசுகள் (Brahmin Kingdoms) என்று வழங்கப்பட்டன.

—(Vide the History of Indian People Part I, By H.G. Rawlinson, p. 22)

மற்றும் பகுதி 65, குறிப்பு-5 பார்க்கவும்.

சாதவாகனர் முதலில் பிராமணர்களாக இருந்தனர் என்று வரலாறு கூறுகிறது.

—(Vide History of India Part I, By R. Sathianathier, M.A., L.T., p. 184)

சில பிரதிகளில் பிராமண மகாய் (Brahmana Makai) என்று இருப்பதாகவும், அதனால் இங்குக் குறிப்பிடப்படுவது 'மகாய்' என்று கிரேக்க உச்சரிப்பில் வழங்கப்பட்ட மகத (Maghada) நாடாகும் என்றும் சிலர் கூறுகின்றனர்.

**3.** **படாய்** (Batai)

படாய் (Batai) என்ற சொல் **பாடலிபுத்திரம்** என்ற சொல்லின் **சுருக்கமாக** இருக்கலாம். மேலே **குறிப்பு-2-ல்,** மகாய் என்று **மகத நாட்டைக்** குறிப்பிட்டதால், இங்கு **அதன்** தலைநகரான பாடலிபுத்திரத்தைப் படாய் என்று குறிப்பிடு**கிறார் போலும்.** இப் பகு**தியில் உள்ள** செய்திகள் பிற்காலத்தவரால் **துணுக்குகளாகச் சேர்க்கப் பட்டிருக்கவேண்டும்.**

பாடலிபுத்திரத்தின் வரலாறு **அதிகாரம்** 73, குறிப்பு-3-ல் **விரிவாகக்** கொடுக்கப்பட்டுள்ளது. **பாடலிபுத்திரம்** இன்று **பாட்ணு** (**Patna**) என்று வழங்கப்படுகிறது.

பாடலிபுத்திரம் (நவீன பாட்ணு)

**இருப்பிடம்:** **25°·37′வ** × 85°·13′கி.

**4.** **பிராக்மி** (Pragmi)

இது பிரயாக் (Prayag) எனும் **நவீன** அலகாபாத் (Allahabad) **தைக்** குறிப்பிடவும் **கூடும்.**

'பிராக்மி' என்ற சொல் **பிராமணர்க**ளுடைய உறைவிடம் என்றும் கொள்ளப்படுகிறது.

**மற்றும்** பிராக்மி எனும் சொல், **கயா** (Gaya) எனப்படும் **இடத்தைக்** குறிப்பிடுகிறது என்றும் **கூறப்படுகிறது.**

பிரயாக்கின் (அலகாபாத்) இருப்பிடம்: 25°·28′வ × 81°·54′கி.

கயாவின் இருப்பிடம்: 24°·49′வ × 88°· **1′கி.**

கயாவும் பிரயாகையும் ஹிந்து**க்களின்** புண்ணியத் தலங்**களா கவும்,** அவர்கள் அந்நகரங்களின் **ஆறுகளில்** ஸ்நானம் செய்தல் **புண்ணியம்** தரும் என்பதாகவும் **கூறப்படுகிறது.** கயா, புத்தகயா **இரண்டும்** ஸ்வர்ண நதிக்கரைகளில் (**River** Son) இருந்தன. பிரயாகை எனும் இடம் கங்கை, யமுனை சேருமிடங்களில் உள்ளது.

---

# 75. பதியமாயி

அடிசத்ரோ மலை[1] முதல் **அருவராய் மலை**[2] வரை **பதிய மாயி**[3] என்பவர் வசித்து வருகின்**றனர்.**

அவர்களுடைய நகரத்தின் **பெயர்:**

ததில்பா[4] ... 134°·0′கி × 18°·50′வ.

## விளக்கவுரை

### 1. அடிசத்ரோ மலை (Adisatro Mountain)

அடிசத்ரோ (Adisatro) என்ற சொல் அகஸ்தியர் என்ற சொல்லின் திரிபே; அதன் கிரேக்க உச்சரிப்பாகும். அகஸ்தியர் மலை என்பது குடகு மலையைக் (Coorg Mountain) குறிப்பிடுகிறது. அகஸ்தியர் காவிரி நதி உற்பத்தியிடத்தில் இருந்ததாகப் புராணங் கள் கூறுகின்றன. மற்றும், அதிகாரம் 23, குறிப்பு-1; அதி காரம் 35, குறிப்பு-2 பார்க்கவும்.

சக்யாத்ரி (Sakyadri) என்பதன் கிரேக்க உச்சரிப்பே சத்ரோ என்றும், அடை என்ற முதற் சொல் வரிசையைக் குறிப்பிடுகிறது என்றும் பொருள் கொண்டு, அடைசத்ரோன் எனுஞ்சொல் சக்யாத்ரி மலைத்தொடரைக் குறிப்பிடலாம் என்றும் அதிகாரம் 23-ல் கண்டோம்.

இங்குக் குறிப்பிடுவது குடகுமலை என்றே கொள்ளவேண்டும்.

குடகுமலையின் இருப்பிடம்: 12°·18′வ × 76°·0′கி.

### 2. அருவராய் மலை (Aruvarai Mountain)

அருவராய் (Aruvarai) எனும் சொல் அரவல்லி (Aravalli Range) என்ற மலைத்தொடரைக் குறிப்பிடும் கிரேக்கச் சொல் லாகும். இத்தொடர் ராஜபுதனத்தில் உள்ளது. ராஜபுதனம் விந்தியமலைக்கு வடக்கே உள்ள நாடு.

இங்குக் குறிப்பிடுவது, குடகுமலைக்கும், அரவல்லி மலைக்கும் இடையே உள்ள மக்களின் பெயர் பதியமாயி (Badia-Ma-Ioi) என்று தாலமி கூறுகிருர்.

அரவல்லி மலைத்தொடரின் இருப்பிடம்: 25°·0′வ × 73°·10′கி.

### 3. பதியமாயி எனும் மக்கள் (People by name Badia-Ma-Ioi)

பதியமாயி என்ற சொல் பார்த்தியர் (Parthians) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பாயிருக்கலாம். தாலமி காலத்தில் (கி.பி. 119-161), இந்தியாவில் காஷ்மீர் முதல், கத்தியவார்வரை பார்த்திய அரசர்கள் ஆண்டுவந்தனர் என்று வரலாறு விளக்கம் அளிக்கிறது. சாகா வமிசத்தை வென்றவர் புலுமாயி என்ற அரசர் ஆண்டுவந்த காரணத்தால், புலுமாயி (Pulumayi) என்பதையே பதியமாயி என்று கிரேக்க உச்சரிப்பில் கூறுகிருர் போலும்.

**பார்திய அரசர்கள்** நிர்மாணித்த நகரங்கள் பல. அவற்றுள் முக்கியமானவை: 1. காபிஸா, 2. மத்ரா (வடமதுரை), 3. உஜ்

ஜயினி, 4. நகரி, 5. இந்தூர் மற்றும் பல. இந் நகரங்கள் நர்மதை முதல் காஷ்மீரம்வரைப் பரவியிருந்தன.

பார்த்திய அரசர்கள் க்ஷேத்திரபதிகள் அல்லது சத்ராபிகள் எனப்பட்டனர். சுவாமி சாஸ்தானு (Chastana) என்பவரே முதல் பார்த்திய அரசர். அவர் சந்ததியில் வந்தவரே ருத்ரராமன் (Rudraraman) ஆவார். அவர் உஜ்ஜயினியைத் தலைநகராகக் கொண்டு, கி.பி. 130 முதல் கி.பி. 150 வரை பெரும் புகழுடன் ஆண்டுவந்தார்.

—(Vide A History of South India By K.A. Nilakanta Sastri, M.A. p. 92)

மற்றும், அதிகாரம் 63, குறிப்பு-7 பார்க்கவும்.

சாகா அல்லது சகவம்சத்தினரை (சித்தியர்களை) வென்ற அரசர்கள் சாதவாகனர் (Satavahanas) என்று தங்களை வழங்கிக் கொண்டனர். அவ்வமிசத்தின் முதல் தாபகர் சிமுகன் (Simugan) என்பவர் ஆவார். அவ்வமிசத்தில் வந்த கௌதமிபுத்ர சாதகர்ணி (Gautamiputra Satakarni) என்பவர் சித்தியர்கள், கிரேக்கர்கள் (யவனர்), பல்லவர் (பார்த்தியர்) ஆகியவர்களை வென்று, தம் அரசை மால்வா (Malwa)விலிருந்து தென் கன்னடம்வரை (South Canara) பரவச் செய்தார். அவருடைய மகன் வசிஷ்டபுத்ர புலுமாயி (Vashitaputra Pulumayi) கோதாவரி நதிக்கரையில் பைதான் (பிரதிஷ்டானு) எனும் நகரைத் தலைநகராகக்கொண்டு புகழ் மிக்க ஆட்சி செய்தார். அவர் காலத்தில் வைஜயந்தியும் (வட கானரா), அமராவதியும் (குண்டூர் மாவட்டம்) புகழ் பெற்று விளங்கின. கௌதமிபுத்ர சாதகர்ணி என்பவரே புலுமாயி II (Pulumayi II) என்று வழங்கப்பட்டார். அவர் ஆண்ட காலம் கி.பி. 78-104 ஆகும்.

ஆகையால், புலுமாயி என்ற அரசர் பரம்பரை, தாலமி காலத்தில் ஆண்டுவந்ததால், அவர் புலுமாயி (Pulumayi) என்ற சொல்லையே பதியமாய் (Badiama-Ioi) என்று கிரேக்க உச்சரிப்பில் வழங்கியிருக்கவேண்டும்.

கௌதமிபுத்ர சாதகர்ணி (புலுமாயி II) ஆண்ட காலம்: கி.பி. 78-104.

வசிஷ்டபுத்திர சாதகர்ணி (புலுமாயி III) ஆண்ட காலம்: கி.பி. 105-130.

ஸ்ரீ யக்ஞ சாதகர்ணி ஆண்ட காலம்: கி.பி. 170-199.

இதற்குப்பிறகு சாதவாகனர் அரசு வீழ்ச்சியுற்று, சிதறி விட்டது. ஆக, புலுமாயி வமிசத்தினரையே, பதியமாய் என்று தாலமி கூறுகிறார். இக்கருத்தே பொருந்தக்கூடியதாகும்.

—(Vide An Advanced History of India, By Dr. R.K. Mookerjee pp. 115-116)

பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80) சாதகர்ணி அரசரை சரகணஸ் (Saraganus) என்று வழங்கினர். சாதகர்ணி வமிசத்தில் வந்தவரே கௌதமிபுத்திர சாதகர்ணி. இவரே புலுமாயி II என்று வழங்கப்படுகிறார். இவர் அரசாண்ட காலம் கி.பி. 78-104.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 52, குறிப்பு-4, பக்கம் 207)

புலுமாயி வமிசத்தினர்-ஆந்திர நாட்டைச் சார்ந்தவர். உஜ்ஜயினியைத் தலைநகராகக்கொண்டு சுமார் 120 ஆண்டுக்காலம் ஆட்சி செய்துள்ளனர்.

**4. ததில்பா (Thathilba)**

ததில்பா என்பது உச்சரிப்புத் தெரியாமல் பிரதிஷ்டான புரத்தை (Pratishtanapuram) வழங்கியிருக்கவேண்டும். பிரதிஷ்டானபுரம் என்ற இடமே பின்னர் பைதான் (Paithan) என்று வழங்கப்பட்டது. வசிஷ்டபுத்திர புலுமாயி (Vashistaputra Pulumayi), பிரதிஷ்டானபுரத்தைத் தலைநகராகக்கொண்டு கி.பி. 105 முதல் கி.பி. 130 வரை ஆண்டார். (மேலே குறிப்பு பார்க்கவும்). ஆக, பிரதிஷ்டான என்பதையே ததில்பா என்று தாலமி வழங்கியுள்ளார்.

பிரதிஷ்டானபுரத்தின் (பைதான்)
இருப்பிடம்: 16°·29′வ × 75°·26′கி.

---

# 76. திரிலோபிலிடாய்

ஆக்ஸெண்டான் மலைத் தொகுதி[1]யைச் சார்ந்த பகுதிகளில் திரிலோ பிலிடாய்[2] எனும் மக்கள் வசிக்கின்றனர். அவர்களுடைய நகரங்கள் பின்வருமாறு:

| | |
|---|---|
| சிபியோன்[3] | ... 139°·22′கி × 20°· 0′வ. |
| ஓபோரேரா[4] | ... 137°·30′கி × 21°·40′வ. |
| ஓஸோரா[5] | ... 138°·15′கி × 20°·30′வ. |

## விளக்கவுரை

**1. ஆக்ஸெண்டான் மலைத்தொகுதி** (Auxenton Range)

ஆக்ஸெண்டான் என்பது ஆக்சிடெண்டல் (Occidental) என்பதன் திரிபே. ஆக்சிடெண்டல் என்ற சொல் மேற்கு (West) என்பதைக் குறிக்கும். ஓரியண்டல் (Oriental) என்ற சொல் கிழக்கைக் குறிப்பிடும். ஆக, இங்குக் குறிப்பிடப்படும் மலை மேற்குத் தொடர்ச்சி மலை (Western Ghats) ஆகும். இம்மலைத் தொடர் தபதி நதிக்குத் தெற்கே தொடங்கி, கன்னியாகுமரி அருகில் உள்ள நாகர் கோவிலில் முடிகிறது. மேற்கு மலைத் தொடரில் வாழும் மக்களை இவ்வதிகாரத்தில் குறிப்பிடுகிறார்.

**2. திரிலோ பிலிடாய்** (Dhrilo Philitai)

திலோபிடோ (Dhilo Phito) என்ற சொல் திராவிட நாட்டைக் குறிப்பிடுகிறது. யுவான் சுவாங் (கி.பி. 629-645) திராவிட நாட்டைக் குறிக்கத் திலோ பிடோ எனும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்.— (**யுவான் சுவாங்:** பக்கங்கள் 174-178). திரிலோ பிலிடாய் என்ற சொல் திராவிட மக்கள் என்பதைக் குறிப்பிடும். பிலிடாய் என்ற சொல் வில்லாளிகள் எனும் பொருள்படும். ஆக, மேற்கு மலைத் தொடரில் வில்லேந்தி வேட்டையாடி வாழ்ந்த திராவிட மக்களைத் தாலமி இங்குக் குறிப்பிடுகிறார்.

பில்ஸ் (Bills) என்ற பில்லர்கள் (வில் ஏந்தியவர்கள்) விந்திய மலைக் காடுகளில் வாழ்ந்து வந்ததாக அதிகாரம் 66, குறிப்பு-2-ல் கண்டோம்.

ஆக, திரிலோ பிலிடாய் என்ற சொல் திராவிட வில்லாளி எனும் மக்களைக் குறிப்பிடுகிறது.

**3 சிபியோன்** (Sibione)

சிபியோன் (Sibione) என்ற இடம், சிபிச்சக்ரவர்த்தி புறாவினுக்குத் தம் தசையை அரிந்து கொடுத்துத் தம்மையே தியாகம் செய்த இடம் ஆகும். இக்கதை புத்த ஜாதகங்களிலும், மகா பாரதத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது. மநு, மாந்தாதா, சிபி இவர்கள் யாவரும் மிகப் பண்டைக்காலத்தில் இருந்த மன்னர்கள்.

சிபியோன் என்ற இடம் இன்று ஷாபுரு (Shapura) என்று வழங்கப்படுகிறது. இவ்விடம் அரவல்லி மலைக்கு (Aravalli Range) வடகிழக்கில் உள்ளது. உதயபூர் (Udaipur) சமஸ்தானத்தைச் சார்ந்தது. ஷாபுருவிற்குக் கிழக்கே இந்தர்கர் (Indargar) என்ற

ஊர் உள்ளது. இந்தர்கர் என்பதே பழைய இந்திரகிரி (Indragiri) என்பதன் திரிபாகும்.

யுவான் சுவாங் (கி.பி. 629-645) இப் புருவினுக்குத் தசையீந்த தலத்தைக் கபோ-டா-கலா-ன் (Kabo-Ta-Ka-Lan) என்று வழங்கினர். கபோடம் (கபோதம்) என்ற சொல் புருவைக் குறிப்பிடும். அதாவது இதற்குப் புரு மடாலயம் என்பது பொருள். அது இந்திர புரிக்கு அருகில் உள்ளது.

—(யுவான் சுவாங்: பக்கங்கள் 146-147)

பாஹியான் (கி.பி. 399-414) எனும் சீனப்பயணியும் இப் புரு மடாலயத்தைக் குறிப்பிட்டுள்ளார். இடத்தையும் குறிப்பிட்டுள்ளார். —(பாஹியான்: பக்கம் 199)

இந்திரபுரி (Indirapuri) என்பது நவீன இந்திரகிரி (Indiragiri) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. இந்திரகிரி என்ற இடம் இந்தர்கர் (Indargarh) என்று இன்று வழங்கப்படுகிறது. இது மேற் கூறப்பட்ட ஷாபுரு (Shapura) இடத்துக்குக் கிழக்கே 120 கிமீ. (75 மைல்கள்) தொலைவில் உள்ளது. யுவான் சுவாங் கூறுகிற இடமும் இதுவே.

ஷாபுருவின் இருப்பிடம்: 25°·36′வ × 75°·1′கி.

இந்தர்கர் இருப்பிடம்: 25°·40′வ × 76°·15′கி.

### 4. ஒபோடுரா (Opotura)

ஒபோடுரா (Opotura) என்ற இடம் நவீன மௌண்ட் அபு (Mount Abu) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறது. இது அரவல்லி மலைக்கு மேற்கில் உள்ளது. சிரோஹி (Sirohi) பிரதேசத்தில் உள்ளது. குரு சிகரம் (Guru Sigaram) என்றும் இம் மலை வழங்கப் படுகிறது. மௌண்ட் அபுவின் உயரம் 5650 அடிகள் (1695 மீ.) ஆகும்.

மௌண்ட் அபுவின் இருப்பிடம்: 24°·40′வ × 72°·45′கி.

### 5. ஒஸோனு (Ozoana)

ஒஸோனு என்பது உஜ்ஜயினி (Ujjain) என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும். இது குவாலியர் (Gwalior) சமஸ்தானத்தைச் சார்ந்தது. சந்திரகுப்த விக்கிரமாதித்தியர் காலத்தில் (கி.பி. 380-413) உஜ்ஜயினி பெரும்புகழ் பெற்றிருந்தது. அவர் அவையில் தான் 'நவரத்தினங்கள்' என்று வழங்கப்பட்ட ஒன்பது புலவர்கள் வீற்றிருந்தனர். அவர்களுள் காளிதாசர் (Kalidasar) தலைசிறந்தவராவார்.

உஜ்ஜயினி என்ருல் வெற்றிநகரம் என்பது பொருள். கி.பி. முதல் நூற்ருண்டின் பிற்பகுதியில் (கி.பி. 70-80) உஜ்ஜயினி (Ujjain) எனும் நகரம் ஸ்வாமி சாஸ்தாணுவினுல் நிர்மாணிக்கப் பட்டது. அக்காலத்துக்கு முன்னர் உஜ்ஜயினி, அவந்தி (Avanthi) என்று வழங்கப்பட்டது.

அவந்தி, முக்திதரும் ஏழு நகரங்களுள் ஒன்ருகும். அதிகாரம் 63, குறிப்பு-7 பார்க்கவும்.

உஜ்ஜயினி பிளினியால் (கி.பி. 23-79) குறிப்பிடப்பட்டுள்ளது. அதை அபலி (அவந்தியின் கிரேக்க உச்சரிப்பு) என்று குறிப் பிட்டார்.

—(பிளினி : புத்தகம் VI, அதிகாரம் 22, குறிப்பு-30, பக்கம் 24)

பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) இதை ஒஜினி (Ozene) என்று வழங்கினுர்.

"பாரிகாஸாவின் கிழக்குப் பகுதியில் ஒஜினி நகரம் உள்ளது."

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 48, குறிப்பு-8, பக்கம் 184)

ஆக, பிளினி (கி.பி. 23-79) அவ்விடத்தை அவந்தி என்று கூற அதே இடத்தை அதே காலத்தில் வாழ்ந்த பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80) உஜ்ஜயினி என்று கூறுவதால், கி.பி. 70-80 ஆண் டளவில் உஜ்ஜயினி என்ற நகரம் நிர்மாணிக்கப்பட்டிருக்க வேண்டும். உஜ்ஜயினி என்ருல் வெற்றிநகரம் எனப்படுவதால், அது மின்னகரமாக (Min) ஏற்பட்டிருக்கவேண்டும்.

உஜ்ஜயினியை சத்ராபிகள் ஆண்டுவந்தனர். அவர்களின் முதல்வர் ஸ்வாமி சாஸ்தாணு (Chastana) என்ற பெயர் கொண்டவ ராவார். சாஸ்தாணு என்ற இச் சொல்லே, தாலமியால் தியஸ்தின் (Tiastene) என்று வழங்கப்பட்டது. தியஸ்தின் எனும் பெயர் அதிகாரம் 63, குறிப்பு-7-ல் குறிப்பிப்பட்டுள்ளது.

ருத்ரராமன் (Rudraraman), சாகா வமிசத்து (Saka Kings) மிகவும் புகழ்பெற்ற அரசர். இவர் சாஸ்தாணு அதாவது ஸ்வாமி சாஸ்தாணுவின் பெயரர். ருத்ரராமன் ஆண்டுவந்த காலம் கி.பி. 130-150 ஆகும். ஆக, ஸ்வாமி சாஸ்தாணு உஜ்ஜயினியை நிர்மாணித்த ஆண்டு கி.பி. 70-லிருந்து 80-க்குள் இருக்கவேண்டும் என்று உறுதிப்படுகிறது. அநேகமாக கி.பி. 78 ஆக இருக்கக் கூடும். காரணம் சாகா ஆண்டு (Saka Period) என்பது கி.பி. 78-ல் தொடங்கப்பட்டதால், ஒரு மாபெரும் வெற்றிக்குப் பிறகே ஓர் ஆண்டுமானத்தை நிர்மாணிப்பர்.

ஆக, உஜ்ஜயினி ஸ்வாமி சாஸ்தாஞவினல் நிர்மாணிக்கப் பட்ட ஆண்டு கி.பி. 78 ஆகும். மற்றும், அதிகாரம் 63, குறிப்பு-7 பார்க்கவும்.

உஜ்ஜயினியின் இருப்பிடம்: 23°·9′வ × 79°·43′கி.

---

# 77. கோகநாகி

இதற்குக் கிழக்கில், கங்கே பிரதேசத்தை[1] ஒட்டி கோக நாகி[2] எனப்படும் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் நகரம் பின்வருமாறு:

தோசரா[3] ... 142°·30′கி × 22°·30′வ.

## விளக்கவுரை

**1. கங்கே பிரதேசத்தை ஒட்டி** (Adjoining the Gange-s Region)

தாலமி கங்கையைக் கங்கே (Gange-s) என்றே உச்சரித்தார். அதுவே காஞ்சஸ் (Ganges) என்று ஆங்கிலேயர்களால் உச்சரிக்கப் பெற்ற சொல்லாகும். காஞ்சஸ் என்பதில் இறுதியில் உள்ள S உச்சரிக்கப்படுவதில்லை அதன் காரணமாக, கங்கே என்றே அச்சொல் நிலை நிற்பதாயிற்று. இப் பகுதியில் கூறப்படும் செய்திகள் கங்கைப்பிரதேசத்தை யொட்டியுள்ள நகரங்களைப் பற்றியனவாகும்.

கங்கை நதியின் இருப்பிடம்: 21°·30′வ × 89°·10′கி.

**2. கோகநாகி** (Cocanagi)

திரு. யூல் (Yule) என்பவர் இப் பிரதேசத்தைக் கோகோ (Cocoa) விளையும் பூமி எனக்கொண்டு அதன் காரணமாக, கோக நாகி எனப் பெயரிடப்பட்டது என்று கூறுகிருர். கங்கைப் பிரதேசத்தில் கோகோ விளைவது கிடையாது. பெயர் உச்சரிப்பு ஒன்ருக இருக்கிறது என்ற காரணத்திஞல் அவ்வாறு கூறிஞர் போலும். அவ்விளக்கம் பொருந்தாமை உணரப்படும்.

மற்றும் ஒருவர் அது காகமுகம் அல்லது கோமுகம் (Go-mukha)-பசுவின் முகம்—என்ற பெயரில் மகா நதிக்கரையில் இருந்ததாகவும், அவ்விடம் இப்பொழுது அமிழ்ந்துவிட்டது என்றும் கூறுகிருர். இதுவும் ஏற்றுக்கொள்வதற்கில்லை. அத்தகைய ஊர்களின் அடிச்சுவடே அப் பகுதியில் காணேம்,

தாலமி இங்குக் கூறுவது மக்கள் பெயரையே தவிர ஊரின் பெயரன்று. ஆக, கோகோ-நாடு, கோமுகி முதலியன ஏற்றுக் கொள்வதற்கில்லை.

கோகநாகி என்ற சொல் கோகனகர் என்ற சொல்லிலிருந்து வந்ததாகும். கனகம் என்ருல் பொன் என்பது பொருள். ஆக, கோ கனகர் என்பவர் உயர்ந்த பசும்பொன் (கோ-பசு ; கனகர்-பொன் வியாபாரிகள்) வியாபாரிகள் ஆவர். அதாவது மிக உயர்ந்த பொன்வணிகர் ஆவர். இதேபோன்று யுவான் சுவாங் (கி.பி. 629-645) லிச்சாவிகள் (Lichchavis) என்று வைர வியாபாரிகளைக் குறிப்பிடு கிருர். அவர்கள் புத்தபிராஞர் காலத்திலே இருந்தவராகவும், புத்த பிராஞருடைய பிட்சா பாத்திரத்தைச் சின்னமாகப் பெற்றவர்க ளாகவும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

"இறுதிப்பயணத்தில் தம்மைத் தொடர்ந்துவந்த லிச்சாவி மக்களை இனியும் தொடர்ந்து வரவேண்டா எனத் தடுத்து நிறுத்திய தாகவும், அங்கே புத்தபிராஞர் ஒரு பெரிய ஆற்றையும், ஆழமான கரைகளையும் உண்டாக்கியதாகவும், அவ்வாற்றில் வெள்ளம் மிகுந்த விசையுடன் வந்ததால், அந்த லிச்சாவி மக்கள் புத்தபிராஞரைத் தொடர்வதை நிறுத்தியதாகவும், ஆஞல் அவர்கள் பெருந் துய ருற்றுக் கண்ணீர் வடித்ததைக் கண்டு, புத்தபிராஞர் இரக்கம் கொண்டு, அன்பு பொங்க, தம் பிட்சா பாத்திரத்தை அவர்களுக்கு நினைவுச்சின்னமாக வைத்துக்கொள்ளுமாறு கொடுத்ததாகவும் கூறப்படுகிறது."
—(யுவான் சுவாங் : பக்கம் 93)

தமிழ்நாட்டில் பொன் வியாபாரம் செய்பவர், பொன் விஞைர் என்றும், பொன் ஆபரணம் செய்பவர் பொற்கொல்லர் (தட்டார்) என்றும் வழங்கப்படுகின்றனர்.

"பொன் செய்கொல்லன் தன்சொற்கேட்ட
யாஞே அரசன் யானே கள்வன்."

—(சிலப்பதிகாரம் : வழக்குரை காதை : 74-75)

மற்றும் கோகஞகி என்ற சொல் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள காகிநாடா (Cocanada) என்றும் சிலர் கூறுவர். காகிஞடா கோதாவரி நதிக் கழிமுகப்பகுதியில் உள்ளது. ஆஞல், இங்குத் தாலமி கூறுவது ஒருவகை மக்கள் என்றும், அவர்கள் கங்கை நதிக்கருகில் வசித்துவந்ததாகவும் கூறுவதால், இக்கூற்றும் ஏற்றுக் கொள்வதற்கில்லை.

சோன் (Son) எனப்படும் நதி ஸ்வர்ண நதியைக் குறிப்பிடும். இந் நதியும் கங்கை நதியும் கூடும் இடத்தில்தான் பாடலிபுத்திரம்.

நவீன பாட்னு-இருந்தது. ஸ்வர்ண நதியில் அக்காலத்தில் பொன் நிறையக் கிடைத்ததால், பாடலிபுத்திரம் மதில்கள் பொன்த கடால் வேயப்பட்டன என்று பௌத்த வரலாறுகள் கூறுகின்றன (ஸ்வர்ணம்-பொன்). ஆகையால் கோகநாகி (Cocanagi) என்ற சொல் பொன் வணிகரைக் குறிப்பிடுவதாகக் கொள்வதே பொருத்தமானது. சோன் (Son) நதிப்பகுதியில் பொன் சேகரிப்பவரும், பொன் வணிகரும் பலர் இருந்தனர். இது ஒரிஸாவை அடுத்த பகுதியாகும். அடுத்த குறிப்பில் ஒரிஸாவைப் பற்றிக் குறிப்பிடுவது, இதை உறுதிப்படுத்துகிறது.

**3. தோசரா** (Dosara)

தோசரா என்ற சொல் ஒரிஸா (Orissa) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) தோசராவை, தோஸரீனி (Dosarene) என்று வழங்கினர்.

"மஸாலியா நாட்டிற்குமப்பால், கிழக்குமுகமாக அருகில் உள்ள வளேகுடாவைக் கடந்து சென்றால் தோசரீனி எனும் நாடு தென்படுகிறது."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 62, குறிப்பு-4, பக்கம் 278)

அதிகாரம் 40, குறிப்பு-1-ல் தோசரீன் (Dosarene) என்று வைதர்ணி நதி குறிப்பிடப்படுகிறது. இது ஒரிஸா (Orisia) நாட்டில் ஓடும் நதி.

வைதர்ணி நதி இருப்பிடம்: 22°·0'வ × 86°·11'கி.

துருவாச மகரிஷி (Dhurvasa Rishi) ஒரிஸா பகுதியில் உள்ள மகேந்திரகிரியில் (Mahendragiri) வசித்து வந்ததாகப் புராண வரலாறுகள் கூறுகின்றன. அதன் காரணமாக, துருவாஸர் வசித்து, நிர்மாணித்த இடமே துர்வாஸ் என்றும், அதுவே பின்னர் ஒரிஸா (Orissa) என்றும் வழங்கப்படுவதாயிற்று.

மற்றும். துருவாச மகரிஷியால் சபிக்கப்பட்ட இடம் என்ற காரணத்தால், துருவாசர் என்னும் பெயரை முன்னிட்டு, இது ஒரிஸா என்று வழங்கப்பட்டது எனப் பௌத்த வரலாறுகள் கூறுகின்றன.

"தண்டகா, கலிங்கா, மதங்கா முதலிய நாடுகள் ஏன் மக்கள் நெருக்கம் இல்லாமல் போய்விட்டது?" என்று புத்தபிரானுர் தம் நண்பர் உபாலியைக் கேட்டதற்கு, அந் நண்பர், "இஃது ஒரு மாமுனிவருடைய சாபத்தால் ஏற்பட்ட விளைவாகும், மக்கள் அழ்

முனிவருக்குச் சினம் விளையும்படி தொந்தரவு கொடுத்ததால், அவர் அந்நாட்டையே சபித்துவிட்டார்." என்று விடை பகர்ந்தார்.

—(யுவான் சுவாங் : பக்கம் 153)

ஆக, புத்தபிரானுர் காலத்திலேயே இந்நாடு துர்வாஸ் என்று ஏற்பட்டு அதுவே நாளடைவில் ஒரிஸா என்று மருவி வழங்கப்படுவதாயிற்று. கலிங்கப்பட்டினம் (கலிங்கம்) என்பது ஒரிஸாவின் துறைமுகப்பட்டினமாக அசோகர் காலத்திலேயே (கி.மு. 273-224) விளங்குவதாயிற்று.

பிருகு மகரிஷி ஏற்படுத்தியது பாரிகாஸா (பிருகு, கச்சா) (அதிகாரம்-5). காசியப மகரிஷி ஏற்படுத்தியது கத்தியவார். அகஸ்திய மகரிஷி ஏற்படுத்தியது-வாழ்ந்தது-அகஸ்தியமலை (பொதியில்) (அதிகாரம் 22). கண்வ மகரிஷி ஏற்படுத்தியது காங்க்ரா (Kanghra) ஓவிய நகரம். கய மகரிஷி ஏற்படுத்தியது கயா. அதுபோல துருவாஸ மகரிஷி ஏற்படுத்தியது தோசரீன் (ஒரிஸா).

ஒரிஸாவின் முக்கியப்பட்டினமாக அன்று கலிங்கப்பட்டினம் (Kalingapatnam) விளங்கிற்று. இன்று கட்டாக் (Cuttack) தலைநகரமாக விளங்குகின்றது.

| | |
|---|---|
| கலிங்கப்பட்டினத்தின் இருப்பிடம் : | 18°·20′வ × 84°·10′கி. |
| கட்டாக் இருப்பிடம் : | 20°·28′வ × 85°·54′கி. |
| மகேந்திரமலை இருப்பிடம் : | 17°·29′வ × 76°·17′கி. |

# 78. கங்கேயின் மேற்குப்பகுதி நகரங்கள்

*மற்றும் கங்கே நதியின்[1] மேற்குப் பகுதியில் பின்வரும் நகரங்கள் காணப்படுகின்றன :*

| | |
|---|---|
| *கார்தினுரா*[2] | ... 146°·30′கி × 23°·0′வ. |
| *கார்தாசினு*[3] | ... 146°·21′கி × 21°·40′வ. |

## விளக்கவுரை

1. **கங்கேநதி மேற்கில்** (On the Western side of the Gange-S)

கங்கே என்பது கங்கை நதியைக் குறிப்பிடுகிறது. இதன் மேற்கில் உள்ள நகரங்கள் இங்குக் குறிக்கப்படுகின்றன,

**2. கார்தினரா** (Cartinara)

இவ்விடம் நவீன கரன்கர் (**Karanghar**) எனும் இடத்தைக் குறிப்பிடுவதாக, அங்குக் காணப்படும் அழிபாடுகளின் மூலமாகத் தெரியவருகிறது. கரன்கர், பகல்பூர் தலைநகருக்கருகில், கங்கை நதித் திருப்பத்துக்கு மேற்கே உள்ளது.

கரன்கர் இருப்பிடம் : 25°·15′கி × 87°·2′வ.

**3. கார்தாசினு** (Carta-Sina)

இது பகல்பூருக்குத் (Bagalpur) தென்மேற்கில் உள்ள கரக்பூர் (Karagpur) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது.

கரக்பூர் இருப்பிடம் : 25°·0′வ × 86°·25′கி.

கார்தாசினு என்பது பெர்காம்பூர்-கஞ்சம் (**Berhampur-Ganjam**) அருகில் உள்ள கர்ணஸ்வர்ணு (**Karnaswarna**) எனும் இடத்தைக் குறிப்பிடுவதாகச் சிலர் கூறுவர். ஆயினும் இது கங்கை நதிக்கு வெகு தொலைவில் இருப்பதால், இவ்விளக்கம் பொருந்தாமை உணரப்படும்.

---

# 77. சலகினே

*மசோலிஸ் நாட்டின் பகுதியில்[1] சலகினே மக்கள்[2] வாழ்கின்றனர். உரோடியன் மலைக்கருகில்[3] பின்வரும் நகரங்கள் காணப்படுகின்றன :*

| | |
|---|---|
| *பெனகௌரான்*[4] | ... 140°· 0′கி × 20°·15′வ. |
| *காஸ்டா*[5] | ... 138°′ 0′கி × 19°·30′வ. |
| *மகாரிஸ்*[6] | ... 137°·40′கி × 18°·20′வ. |

### விளக்கவுரை

**1. மசோலிஸ் நாட்டின் பகுதியில்** (In the Country of Masolis)

மசோலிஸ் (Masolis) என்ற சொல் மசூலிப்பட்டினத்தைக் குறிப்பிடும். இது கிருஷ்ணநதியின் கழிமுகத்திற்கு வடகிழக்கே, கடற்றுறைப் பட்டினமாக அன்றும் விளங்கிற்று, இன்றும் விளங்குகிறது. மசூலிப்பட்டினத்திலிருந்து நல்ல துணிகள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன என்று பெரிப்ளூஸ் நூல் கூறுகிறது :

"மஸாலியா எனும் நாடு கடற்கரை வழியாகப் பெருந்தொலை வும், உள்நாட்டில் பெருந்தொலைவும் பரவியுள்ளது. இங்குப் பெரு வாரியாக மஸ்லின் துணி தயாரிக்கப்படுகிறது."

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 62, குறிப்பு-1 பக்கம் 278)

வடமொழியில் மௌஸாலா (Mausala) என்று இத் துறைமுகம் வழங்கப்பட்டது. இது ஆந்திர நாட்டைச் சார்ந்தது.

மசூலிப்பட்டினத்தின் இருப்பிடம்: 16°·9′வ×81°·12′கி.

மற்றும் அதிகாரம் 15, குறிப்பு–12 மஸோலிஸ் பார்க்கவும். மசோலிஸ் என்ற சொல் கிருஷ்ணா நதியையும், அதன் கழி முகத்தையும் குறிப்பிடும். அங்கிருந்த முக்கியமான துறைமுகம் மசூலிப்பட்டினம்.

இதை மார்க்கோபோலோ தம் வரலாற்றில் மான்சூல் (Mansul) என்று குறிப்பிட்டுள்ளார்.

—(மார்க்கோபோலோ: பக்கம் 64)

## 2. சலகினே மக்கள் (People named Salaginae)

சலகினே (Salaginae) எனும் சொல் சரகணர் (Saraganar) என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும். சரகணர் என்பவர் சாதகர்ணி (Satakarni) எனப்படுவார். சாதகர்ணி ஆந்திரநாட்டை ஆண்டு வந்த அரசர் பரம்பரையினர். சாதவாகனர் பரம்பரையைச் சார்ந் தவர்கள். சாதகர்ணி என்ற சொல் சாகர்களையும் (Sakas), யவனர்களையும் (Ionians), பஹ்லவர்களையும் (Pahlavas) வென்றவர் என்று பொருள்படும். அவ்வாறு விருது தாங்கிய அரசர் கௌதமி புத்ர சாதகர்ணி ஆவார். அவர் கி.பி. 78 முதல் 104 வரை ஆண்டார் என்று வரலாறு கூறுகிறது. அவர் புலுமாயி II என்றும் வழங்கப்பட்டார்.

—(Vide A History of South India, By K.A. Nilakanta Sastri, M.A., Page 91)

மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-1, அதிகாரம் 75, குறிப்பு-3 பார்க்கவும்.

கௌதமிபுத்ர சாதகர்ணி, வசிஷ்டபுத்திர சாதகர்ணி, ஸ்ரீ யக்ஞ சாதகர்ணி ஆகிய மூவரும் சாதவாகனர் வமிசத்தில் வந்து ஆந்திரநாட்டை ஆண்ட ஆந்திர அரசர்கள். இவர்கள் முறையே புலுமாயி II, III என்றும் வழங்கப்பட்டனர்.

கி.பி. 199-க்குப்பிறகு ஸ்ரீயக்ஞ சாதகர்ணிக்குப் (கி.பி. 170-199) பிறகு, சாதவாகனர் அரசு வீழ்ச்சியுற்றது. தாலமி காலத்தில் (கி.பி. 119-161) சாதவாகனர்களே ஆண்டதால், அவர்களே சாத கர்ணி என்ற பெயர் பூண்டிருந்தமையால், சலகினே என்று கூறப் படுவது சாதகர்ணி (Satakarni) என்ற அரசர்களையே குறிப்பிடும்.

—(Vide An Advanced History of India By R.K. Mukerjee pp. 115—116)

சாதகர்ணி விருது பூண்ட—புலுமாயி என்று வழங்கப்பட்ட- சாதவாகன அரசர்கள் உஜ்ஜயினியைத் (Ujjain) தலைநகராகக் கொண்டு சுமார் 120 ஆண்டுகள் அரசாட்சி செய்தனர் என்று வரலாற்றின் மூலமாகத் தெரியவருகிறது.

### 3. உரோடியன் மலைக்கருகில் (Near Urodian Mountain)

உரோடியன் என்ற சொல் வைடூரியம் என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. பார்சவநாத் மலையே (Mount Parsanath) வைடூரிய மலையாகக் கருதப்பட்டது. அம்மலையிலிருந்துதான் ஸ்வர்ணரேகா (Subarnareka), ஸ்வர்ணவதி எனப்படும் சோன் (Son) ஆகிய நதிகள் உற்பத்தியாகின்றன.

மற்றும் அதிகாரம் 36, குறிப்பு—1 பார்க்கவும்.

பார்ச்வநாத் மலை இருப்பிடம்: 24°·0'வ × 86°·11'கி.

### 4. பென கௌரான் (Bena Couran)

இது கோதாவரியின் கிளை நதியான பென்கங்கா (Penganga) என்பதைக் குறிப்பதுபோல் தெரிகிறது. இங்குக் குறிப்பிடுவது ஒரு நகரம் என்பதால், இது தும்மகூடம் (Dummakudam) என்பதைக் குறிக்கலாம். தும்மகூடம் கோதவரி நதிக்கரையில் உள்ளது. இது ஒரு வாணிகத்தலம்.

தும்மகூடத்தின் இருப்பிடம்: 17°·57'வ × 80°·56'கி.

### 5. காஸ்ட்ரா (Castra)

இது கிருஷ்ண (Krishna) என்ற சொல்லின் சிதைவே. இங்குக் கிருஷ்ணநதியின் கழிமுகமும், அங்கு முன்னர் இருந்த கஸ்தூரி பட்டினம் என்ற துறைமுகத்தையும் குறிப்பிடுகிறது. கஸ்தூரி பட்டினம் இன்று நைஸாம்பட்டினம் (Nizampatnam) என்று வழங்கப்படுகிறது.

நைஸாம்பட்டினம் இருப்பிடம்: 15°·54'வ × 80°·43'கி.

**6. மகாரிஸ் (Megaris)**

மகாரிஸ் என்பது மகாநதி (Mahanadi) யைக் குறிப்பிடுவ தாகச் சிலர் கூறினும், இங்கு ஒரு நகரம் என்பதால் அது பொருந் தாமை உணரப்படும்.

மகாரிஸ் என்பது நவீன மக்ரி (Makri) எனும் நகரத்தைக் குறிப்பிடுகிறது. இது கோதாவரி நதியின் வடபகுதியில் உள்ள பாஸ்டார் (Bastar) மாவட்டத்தில் உள்ளது.

மகாரிஸ் (மக்ரியின்) இருப்பிடம்: 19°·45′வ × 81°·58′கி.

---

# 80. சபராய்

கங்கே நதிக்கரை[1] ஓரமாக, சபராய் மக்கள்[2] வசிக் கின்றனர். அவர்களுடைய நாட்டில் வைரம் பெருவாரியாகக் கிடைக்கிறது. அந் நாட்டில் பின்வரும் நகரங்கள் காணப் படுகின்றன:

| | |
|---|---|
| *தசோபியான்*[3] | ... 140°·30′கி × 22°· 0′வ. |
| *கரிகர்தாமா*[4] | ... 141°· 0′கி × 20°·25′வ. |

## விளக்கவுரை

**1. கங்கே நதிக்கரை ஓரமாக** (Along the Riverside of Gange-s)

கங்கே என்பதுதான் கங்கை நதி. கங்கை புனிதமான நதி யாகும். திருமாலின் ஸ்ரீபாதங்களைக் கழுவின ஸ்ரீபாத தீர்த்தமே கீழே விழாதிருக்குமாறு, சிவபெருமானுர் தம் சடாமுடியில் ஏற்றுக் கொண்டார் என்றும் அதுவே கங்கையாக ஆயிற்று என்றும், சிவபெருமான் திருமாலுக்கு வணக்கம் செய்யும்பொழுது, கங்கை நீர் திருமால் திருபாதங்களைக் கழுவினது என்றும், அப் புனித நீரே கங்கையாகப் பரிணமித்துப் பூமியில் வந்ததாகவும் புராண வரலாறு கள் கூறுகின்றன. பகீரதன் தவமிருந்து கங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்தான் என்றும் கூறப்படுகிறது.

கங்கைக் கரை ஓரமாக வசித்தவர் சபராய் (Sabarai) ஆவர் என்று கூறுகிறுர் தாலமி. ஆனுல், அச் சபராய் எனப்படுபவர் கோதாவரி நதியின் கிளைநதியான சபரி (Sabari) நதிக்கரைகளிலும், அதையடுத்த பகுதிகளிலும் வாழ்ந்து வந்தவராகக் கருதப்படுகின்

றனர். கங்கைநதிப் பகுதியிலிருந்த சபராய் மக்கள், பின்னர் தெற்கே துரத்தப்பட்டுக் கோதாவரிக் கிளை நதியின் கரைகள்மீது தம் இருப்பிடத்தை ஏற்படுத்திக்கொண்டனர் போலும்.

**2. சபராய் மக்கள்** (People by name Sabarai)

இது கோதாவரியின் கிளை நதியான சபரி நதியையும், அந் நதிக் கரைகளில் வாழும் மக்கள் இனத்தையும் குறிப்பிடுகிறது. சபரிநதி கோதாவரியுடன் பத்ராசலத்துக்குக் கிழக்கே இணைகிறது. இப் பிரதேசத்திலுள்ளவர்கள் சபராய் (Sabarai) என்று வழங்கப் பட்டனர். மேலே குறிப்பு-1 பார்க்கவும்.

**வைரம்** எடுக்கப்படுதல் (Diamonds from Diamond Mines)

ஆந்திரப் பிரதேசத்தில் கோல்கொண்டா (Golgonda) பகுதி யிலும், ஒரிஸாவில் உள்ள கொராபட் (Korapnt) பகுதியிலும் வைரம் எடுக்கப்படுகிறது.

இவ்வாறு வைரம் எடுக்கும் முறையையும், பிரதேசத்தையும் மார்க்கோபோலோ (கி.பி. 1254—1324) தாம் எழுதிய குறிப்புகளில் கொடுத்துள்ளார் :

"மாபர் நாட்டைக் கடந்து ஐந்நூறு மைல்கள் நேர் வடக்காகச் செல்லுமிடத்து, மர்பிலி எனும் அரசாங்கத்தை அடைவோம். இங்கு வைரங்கள் பெருவாரியாக உற்பத்தியாகின்றன. மழைக் காலங்களில் மலைச் சாரல்களில் பெருமழை பெய்தவிடத்து, மழை நீர்ப் பள்ளத்தாக்குகளிலும், மலைக் குகைகளிலும் விசையுடன் இறங்குகிறது. மலையிலிருந்து விழுந்த அந் நீர் ஆற்றுடன் கலக்கும் இடத்தில் மக்கள் கூட்டமாகக் காத்திருந்து மழை நீரால் அடித்து வரப்பட்ட வைரக் கற்களைப் பொறுக்குவார்கள்."

—(மார்க்கோபோலோ : பக்கம் 61)

மர்பிலி என்ற சொல் மருலி என்பதைக் குறித்து, பின்னும் அது மருலிப்பட்டினத்தைக் குறிப்பிடுகிறது. மருலிப்பட்டினத்தைச் சார்ந்த பகுதியில் விசாகப்பட்டினத்திற்கு நேர் மேற்கே கோல் கொண்டா (Golgonda) எனும் மலை இருக்கிறது. அங்கு முன்னர்ப் பெருவாரியாக வைரம் எடுக்கப்பட்டது.

"சிந்துபாது" என்ற நூலிலும் வைரம் எடுக்கப்படுவதைப்பற்றி விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

"சிந்துபாது திடீரென ஒரு மாமிசத்துண்டு விழுந்ததைக் கண் டான். அது யாரால் எறியப்பட்டது என்பது தெரியவில்லை. அம்

மாமிசத்துண்டை எடுத்துப் பார்க்க அதில் நிறைய வைரக் கற்கள் ஒட்டிக் கொண்டிருந்தன. அவ் வைரக் கற்களைப் பொறுக்கித் தன் பைகளில் இட்டான்.''

—(சிந்துபாது : பக்கங்கள் 30-31)

மற்றும் அதிகாரம் 65, குறிப்பு-9-ல் வைரம் பற்றிய குறிப்புகளைக் காணலாம்.

வைரத்தில் உயர்ந்தவை நீல ஜவரங்கள் (Blue Jagger Diamonds). புள்ளிகள் இல்லாத வைரங்களே நல்ல வைரங்களாகக் கருதப்பட்டன. புள்ளி உள்ள வைரங்களை அணிந்தோர் வாழ்க்கையில் அல்லலுற்றதாக வைர வரலாறு கூறுகிறது. உலகிலேயே பெரிய வைரச் சுரங்கம் தென் ஆப்பிரிக்காவில் உள்ளது. வைரங்கள் எடுக்கப்படும் இடத்தைக் கொண்டு, அங்குக் காடு யுகம் எப்பொழுது ஏற்பட்டது என்பதை விஞ்ஞானிகள் கணித்துள்ளனர்.

கோல்கொண்டா இருப்பிடம் : 17°·41′வ × 82°·31′கி.

சபரி நதியின் இருப்பிடம் : 18°· 0′வ × 81°· 5′கி.

### 3. தசோபியான் (Dasopian)

தசோபியான் இன்று தாஸ்பல்லா (Daspalla) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. தாஸ்பல்லா கஞ்சம் மாவட்டத்தின் வடக்கில் உள்ளது.

தாஸ்பல்லாவின் இருப்பிடம் : 20°·19′வ × 84°·56′கி.

### 4. கரிகர்தாமா (Caricardama)

இச் சொல் ஒரிஸாக் கடற்கரையிலுள்ள கலிங்கப்பட்டினத்தைக் (Calingapatnam) குறிப்பிடுவதாகக் கருதப்படுகிறது. கலிங்கப் பட்டினம் அசோகர் காலத்திலிருந்தே புகழ் பெற்றிருந்தது. அசோகரின் கலிங்கப் போர் அவ்விடத்திலேதான் தொடர்ந்தது. பின்னர் வந்த தொண்டமண்டல அரசர்களுள் புகழ்பெற்ற கருணாகரத் தொண்டைமான் என்பவரால் கலிங்கம் மீண்டும் புகழ் பெற்றது. அவர் கலிங்கத்தின்மீது போர் தொடுத்த செய்திதான் தமிழில் செயங்கொண்டார் இயற்றிய கலிங்கத்துப்பரணி. கலிங்கத்துப்பரணி எனும் இந்நூல் குலோத்துங்க சோழன் காலத்தில் (கி.பி. 1078—1118) இயற்றப்பட்டது என்று வரலாற்றாசிரியர்கள் கூறுவர்.

இதை முகலிங்கம், முடுகலிங்கம் என்ற பல பெயர்களால் வழங்குவர்.

யுவான் சுவாங் (கி.பி. 629-645) கூறுகிறார்:

"தண்டகா, கலிங்கா, மதங்கா முதலிய நாடுகள் என் மக்கள் நெருக்கமில்லாமலிருக்கிறது?" என்று புத்தபிரானுர் உபாலியைக் கேட்டதற்கு, அவர் "துருவாச மகரிஷிக்குக் கோபம் வருமாறு மக்கள் நடந்துகொண்டதால், அந்த ரிஷி சாபமிட்டு விட்டார்," என்று விடை பகர்ந்தார்.

ஆக கலிங்கநாடு, புத்தபிரானுர் காலத்திலிருந்தே (கி.மு. 563-483) விளங்கி வந்தது என்பது இதனுல் தெரிகிறது.

—(யுவான் சுவாங் : பக்கங்கள் 152-153)

கலிங்கப்பட்டினத்தின் இருப்பிடம்: 18°·20'வ × 84°·10'கி.

# 81. கங்கரிதாய்

*கங்கே நதியின் கழிமுகத்தில்*[1] *விளங்கும் நாடுகள் யாவற்றிலும் கங்கரிதாய்*[2] *எனப்படும் மக்கள் இனத்தவர் வசிக்கின்றனர். இவர்கள் நகரத்தின் பெயர்:*

*கங்கே (அரசரின் இருப்பிடம்)*[3] ... 146°· 0'கி × 19°·15'வ.

## விளக்கவுரை

**1. கங்கே நதியின் கழிமுகத்தில்** (In the Estuary of the River Gange-s)

கங்கே என்பது கங்கை நதியைக் குறிப்பிடுகிறது. கங்கை நதிக் கழிமுகமும், அதில் வாழும் மக்களும், அவர்கள் வாழ்கின்ற நகரமும் இவ்வதிகாரத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

கங்கைநதிக் கழிமுக இருப்பிடம்: 22°·00'வ × 89°·00'கி.

**2. கங்கரிதாய்** (Gangaridai)

கங்கைநதிக் கழிமுகத்தில் வசிப்பவர்கள் கங்கரிதாய் (Gangaridai) என்று வழங்கப்பட்டனர். பிளினி (கி.பி. 23-79) இவர்களைக் கங்கரிதேஸ்-கலிங்கே (Gangaridaes-Calinge) என்று வழங்கினுர்.

"கங்கையில் இறுதியாகக் காணப்படும் நகரம் (நாடு) கங்கரிதேஸ்-கலிங்கே என்பதாகும். அந் நாட்டின் அரசன் வசிக்கும் தலைநகரத்தின் பெயர் புரோடாலிஸ் என்பதாகும்."

—(பிளினி : புத்தகம் VI, அதிகாரம் 22, குறிப்பு-9, பக்கம் 21)

தெற்கு பீகாரில் (South Bihar) வசிக்கும் இன்றைய ஆதிவாசிகளும் கங்கரீஸ் (Gangaris) என்ற பெயரால் வழங்கப்படுகின்றனர்.

பெரிப்ளூஸ் நூல் (கி.பி. 50-80) கூறுகிறது:

"கங்கைப் பிரதேசத்துத் துணிகள் கங்காரிடோ எனப் பெயர் பெற்றன."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 63, குறிப்பு-10, பக்கம் 286)

**3. கங்கே (அரசரின் இருப்பிடம்) (Gangae, the Residence of the King)**

கங்கைக் கழிமுகத்தில் வசித்த கங்கரிதாய் மக்களின் தலைநகரம் கங்கே (Gangae) என்று வழங்கப்பட்டதாகத் தாலமி கூறுகிறார்:

கங்கரிதாய் மக்களின் தலைநகரம் ஜெஸ்ஸூர் (Jessore) என்று திரு. ஏ. சி. கன்னிங்காம் (Mr. A. C. Cunningham) கூறுகிறார்.

ஜெஸ்ஸூரின் இருப்பிடம்: 23°·10′வ × 89°·10′கி.

பிளினி (கி.பி. 23–79) கூற்றுப்படி (குறிப்பு-2 பார்க்கவும்) கங்கையில் இறுதியான நகரம் கங்கரிதே-கலிங்கே அதாவது கலிங்கப்பட்டினமும், அரசர் வாழும் இடம் பாடலிபுத்திரம் என்று வழங்கப்பட்ட அன்றைய பாலிபோத்ராவும் ஆகும் என்று தெரிகிறது.

ஆக பாலிபோத்ரா (Polybothra) என்பதையே கங்கே என்று தாலமி குறிப்பிட்டுள்ளார் என்று தெரிகிறது. மற்றும் கங்கைக் கழிமுகத்தில் விளங்கும் தாமிரலிப்தியையும்—நவீன தாம்லுக்—குறிப்பிடக்கூடும். ஆனால் தாம்லுக் இடத்தில் அரசர் வசித்து வந்தாரா என்பது உறுதியாகக் கூறமுடியாது. இருப்பினும் அக் காலத்தில், தாம்லுக் (Tamluk) ஒரு சிறந்த துறைமுகப்பட்டினமாக யிருந்ததால், அரசாங்க அலுவலர்கள்—உயர் அலுவலர்கள்—சுங்கத்தீர்வை வசூல் காரணமாக அங்கு வசித்திருக்கவேண்டும். அரசரும் அங்கு அவ்வப்பொழுது வந்துபோய்க் கொண்டிருப்பார். ஆக, இக் காரணங்களால், தாம்லுக்கும் கங்கைப்பட்டினமாகக் குறிப்பிடப்பட்டிருக்கக்கூடும்.

| | |
|---|---|
| கலிங்கப் பட்டினத்தின் இருப்பிடம்: | 18°·20′கி × 84°·10′கி. |
| பாடலிபுத்திரத்தின் இருப்பிடம்: | 25°·37′வ × 85°·13′கி. |
| தாம்லுக் இருப்பிடம்: | 22°·18′வ × 87°·58′கி. |

# 82. அரியகே-பெண்டா

அரியகே நாட்டில்[1] மற்றும் விவரிக்கப்படாத பகுதிகள் உள்ளன. அவற்றுள் பெண்டா[2] என்பதற்கு மேற்கில் உள்ள நகரங்கள் பின்வருமாறு :

| | |
|---|---|
| மலிப்லா[3] | ... 119°·30'கி × 20°·15'வ. |
| சரிசாபிஸ்[4] | ... 119°·30'கி × 20°· 0'வ. |
| தகரா[5] | ... 118°· 0'கி × 19°·20'வ· |
| பைதாளு (சிரோ புலுமாயி தலைநகரம்)[6] | ... 117°· 0'கி × 18°· 3'வ. |

இந்தியாவின் மேற்கில் உள்ள நாடுகள் :

| | |
|---|---|
| தியோபாலி[7] | ... 115°·40'கி × 17°·50'வ. |
| கமாலிபா[8] | ... 115°·15'கி × 17°·20'வ. |
| ஓமினகரா[9] | ... 114°· 0'கி × 16°·20'வ. |

## விளக்கவுரை

**1. அரியகே நாட்டில்** (In the Country of Arriacae)

அரியகே என்பது வீரர் மிகுந்த நாடு எனும் பொருள்படும் **ஆரிய-கா** அதாவது ஆரிய வீரர் விளங்கிய, கா-நாடு என்பதே **அரியகே** என்று கிரேக்க மொழியில் உச்சரிக்கப்பட்டது. இச்சொல் மகாராஷ்டிரம் எனும் பகுதியைக் குறிப்பிடுகிறது. லாரிகே **(Larikae)** என்பது சௌராஷ்டிரத்தைக் குறிப்பிடுகிறது. (அதிகாரம் 6, குறிப்பு-1, பக்கம் 59)

பெரிப்ளூஸ் நூல் (கி.பி. 50-80) கூறுகிறது :

"காம்பே விரிகுடாவைச் சுற்றியுள்ள பகுதி அரியகா என்று வழங்கப்பட்டது. இப்பகுதி ஒரு காலத்தில் சித்தியா (Scythia) என்றே வழங்கப்பட்டது.

—(**பெரிப்ளூஸ் :** அதிகாரம் 41, குறிப்பு-5, பக்கம் 158)

**மகாராஷ்டிரததின் இருப்பிடம் :** 21°·41'வ × 73°·1'கி.

2. பெண்டா (Benda)

பெண்டா (Benda) என்ற ஆறு இன்று பென்கங்கா (Penganga) என்றும், வெயின் கங்கா (Wain Ganga) என்றும் வழங்கப்படுகிறது. மற்றும், அதிகாரம் 6, குறிப்பு-5 பார்க்கவும்.

பென்கங்காவின் இருப்பிடம்: 19°·45′வ×78°·00′கி.

3. மலிப்லா (Malipla)

இது மலைப்பள்ளம் என்ற சொல்லின் திரிபு போன்று காணப்படுகிறது. மலைக்குகைகள், பென்கங்கா நதிக்கரையில், சக்யாத்ரி பர்வதத்தில் உள்ளன. அவற்றுள் ஒன்று அஜந்தாக் குகைகள். புத்தபிரானுருடைய சித்திரங்களையும், சிற்பங்களையும் கொண்டுள்ள இடம் அஜந்தாக் குகைகள். மலிப்லா என்ற சொல் அஜந்தாக் குகைகளைக் குறிப்பிடக்கூடும். இவ்விடம் நவீன ஔரங்கா பாதில் உள்ளது.

அஜந்தா மலைக்குகை இருப்பிடம்: 20°·33′வ×75°·48′கி.

4. சரிசாபிஸ் (Sarisabis)

சரிசாபிஸ் என்ற சொல் ஸ்ரீ ஸ்வாமின் (Sri Swamin) என்ற சாஸ்தானுவைக் குறிப்பிடுகிறது. 'ஸ்ரீ ஸ்வாமின்' என்ற சொல்லையே, சரிசாபிஸ் என்று கிரேக்க உச்சரிப்பில் தாலமி வழங்கியுள்ளார். இவர் புலுமாயி வமிசத்தின் முதலாமவர். இவர்தாம் சாதவாகன வமிசத்திற்கு அடிகோலியவர் ஆவார். இவர் உஜ்ஜயினியைத் (Ujjain) தலைநகராகக்கொண்டு ஆண்டார். மற்றும், இவர் சந்ததிகள் பைதான் (Paithan) எனும் நகரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தினர். பைதான் சிறந்த வாணிகத்தலமாகும். இது மசூலிப்பட்டினத்தையும்,பாரிகாஸாவையும் இணைக்கும் பாதையில் உள்ள முக்கியத்துவம் வாய்ந்த நகரம். ஆக, சரிசாபிஸ் என்பது 'ஸ்ரீ ஸ்வாமின்' என்பவரையே குறிப்பிடும்.

உஜ்ஜயினி இருப்பிடம்: 23°· 9′வ×75°·43′கி.

பைதான் இருப்பிடம்: 19°·28′வ×75°·24′கி.

5. தகரா (Tagara)

தகரா (Tagara) பண்டைக்காலத்திலிருந்து புகழ்பெற்ற ஒரு வாணிகச் சந்தையும், நகரமுமாகும். இங்கிருந்து பல பண்டங்கள் அயல் நாடுகளுக்குப் பாரிகாஸா மூலமாக அனுப்பப்பட்டன.

பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) தகராவைப்பற்றியும், பைதானைவைப்பற்றியும் தம் குறிப்புகளில் பின்வருமாறு கொடுத்துள்ளார்:

" தட்சிண பதேசில் வணிகச் சந்தை கூடு'ம் நகர்களுள் மிகவும் முக்கியமானவை இரண்டு. அவற்றுள் பைதான் ஒன்று; மற்றொன்று தகரா. இவ்விடங்களிலிருந்து பாரிகாஸாவிற்குக் குறுக்கு வழிகள் மூலமாகப் பளுவான பண்டங்கள் அடங்கிய மூட்டைகள் எடுத்து வரப்படுகின்றன. தகரா நகரத்திலிருந்து எல்லாவித சாதாரண ஆடைத்துணிகளும், மஸ்லின் வகைகளும், நீலத்துணி வகைகளும், உள்நாடுகளிலிருந்து கடற்கரை வழியாகக் கொண்டு வரப்படுகின்றன."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 51, குறிப்புகள் 2, 4, பக்கம் 202)

தகரா என்ற சொல் வடமொழியிலும் தகரா என்றே வழங்கப் படுகிறது. இது நவீன தெர் (Ther) அல்லது தாயிர் (Thair) என்று வழங்கப்படும். இது உஸ்மானுபாத்தில் (Osmanabad) இருக்கிறது.

முற்காலத்தில் பாரிகாஸா, சுபாரகா, கல்யாண், பைதான், தகரா, ஜுன்னூர், நாஸிக், வைஜயந்தி முதலிய நகரங்கள் வாணிகச் சந்தைகளாக விளங்கின. மற்றும் மசூலிப்பட்டினம், வினுகொண்டா, தகரா, பைதான், தௌலதாபாத் ஆகியவற்றை ஒருங்கே இணைக்கும் வழியொன்றிருந்தது. இறுதிக்கட்டமான மார்கின்டா என்ற இடத்திலிருந்து பாரிகாசாவிற்குப் போகும் குறுக்குப்பாதை மிகவும் சிக்கல் வாய்ந்ததாக விளங்கிற்று. இவ்விரண்டு ஊர்களுக்கும் இடையே 160 கிமீ. (100 மைல்) தொலைவு உள்ளது. பாரிகாஸா துறைமுகத்தினருகில் எல்லா வழிகளும் ஒன்று சேர்ந்தன."

—(Vide An Advanced History of India By R.K. Mookerjee M.A. p. 137)

தகரா என்ற சொல் திரி-கிரி என்பதன் திரிபே. திரி-கிரி என்ற சொல் மூன்று மலைகள் என்று பொருள்படும்.

தாயிரின் இருப்பிடம்: 18°·19′வ × 76°·9′கி.

### 6. பைதானு (சிரோ புலுமாயி தலைநகரம்) (Paithana, Capital of Siro Pulumayi)

பைதானு பிரதிஷ்டானபுரம் (Prathisthanpura) என்று முன்னர் வழங்கப்பட்டது. அதுவே இப்பொழுது பைதான் (Paithan) என்று வழங்கப்படுகிறது. இது ஔரங்காபாதுப் பிரதேசத்தில் (Aurangabad) கோதாவரி நதிக்கரைமீது உள்ளது; பண்டை வாணிக நகரங்களுள் மிகவும் புகழ்பெற்றது. இது அகமத் நகருக்கு வடக்கில் உள்ளது.

பைதானைப்பற்றிப் பெரிப்ளூஸ் நூல் (கி.பி. 50-80) கூறுகிறது:

"பேதானு என்ற இடத்திலிருந்து கருநீலக் கற்களும் பெரும் அளவில் அனுப்பப்படுகின்றன. இவ்விடத்திலிருந்து பாரிகாஸாவிற்குக் குறுக்குவழி ஒன்று உள்ளது."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 51, குறிப்பு-2, பக்கம் 202)

அசோகப்பேரரசர் (கி.மு. 263-224) இவ்விடத்துக்குப் பௌத்த மதப் பிரசாரகர்களை அனுப்பிவைத்தார். அசோகரின் நிபந்தங்களையும், நன்கொடைகளையும் பைதானில் உள்ள கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

பைதானின் இருப்பிடம்: 19°28′வ×75°24′கி.

சிரோ புலுமாயி (Siro Pulumayi)

இதன் உண்மை உருவம் ஸ்ரீ புலுமாயி என்பதாகும். சிரோ (Siro) என்பது ஸ்ரீ என்ற சொல்லின் திரிபே. புலுமாயி (Pulumayi) என்பவர் சாதவாகன அரசர்களுள் புகழ் பெற்றவர்.

புலுமாயி II என்ற அரசர் கி.பி. 80 முதல் கி.பி. 104 வரை அரசாண்டார். இவர் கௌதமிபுத்ர சாதகர்ணி என்று வழங்கப்பட்டார். இவர் 24 ஆண்டுகள் அரசாட்சி செய்து, சாதவாகனரின் புகழை ஓங்கச் செய்தார். இவருடைய நாணயங்கள் குண்டூர் மாவட்டத்தில் கிடைத்திருக்கின்றன.

—(Vide A History of South India By K.A. Nilakanta Sastri, M.A. p. 91)

பிரதிஷ்டானபுரம் (Prathishtanapura) ஆந்திர அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. பிரதிஷ்டானபுரத்தின் நவீன பெயர் பைதான் (Paithan). இவ்வூர் ஆந்திரர்களின் தலைநகரமாயிருந்தது.

ஆந்திர நாட்டரசர்கள் கிழக்குப் பகுதியிலேதான் தங்கள் தலைநகரை வைத்துக் கொண்டிருந்தனர். பிரதிஷ்டானபுரம் பின்னர் வந்த அரசரால்—வசிஷ்டபுத்திர புலுமாயி (கி.பி. 105-130) என்பவரால்—தலைநகராகக் கொள்ளப்பட்டது. (அதிகாரம் 75, குறிப்பு-3 பார்க்கவும்).

இன்றும் பைதான் சிறந்த துணிகள் நெய்யப்படும் இடமாக விளங்குகிறது.

7. தியோபாலி (Theophali)

இது தேவர் உறைவிடம் என்னும் பொருள்படும். இப் பொருள் கொண்ட இடங்கள் இரண்டு உள்ளன :

முதலாவது தேவ்கர் (Deoghar). இதன் பொருள் தேவர் உறை விடம் என்பதே. இது தபதி நதிக்குக் (River Tapti) கிழக்கே சிந்த்வாரா பகுதியில் உள்ளது. மகாதேவமலையில் உள்ள ஓரிட மாகும்.

தேவ்கரின் இருப்பிடம் : 21°·51′வ×78°·50′கி.

இரண்டாவது தேவதுர்க்கம் (Devadurgam or Deodrug) எனப் படும். தியோதுர்க் என்றும் வழங்கப்படும். இது ரெய்ச்சூர்ப் பகுதி யில் உள்ளது. கிருஷ்ணா நதிக்குத் தெற்கில் உள்ளது.

இவ்விரு இடங்களுள், முதலாவது குறிப்பிடப்பட்ட இடமே தியோபாலியைக் குறிப்பிடவேண்டும். காரணம் அது உள்ள மலை யின் பெயரே மகாதேவமலை. மகாதேவ மலையில் ரிஷிகள் பலர் வசித்து வந்தனர். அதன் காரணமாக அம்மலை தேவர்மலை என்று வழங்கப் பட்டது போலும். தியோ-பாலிஸ் என்றால் தேவர் பட்டணம் அல்லது தேவர்-நகரம் என்பது பொருள். பாலிஸ் என்ற கிரேக்கச் சொல்லுக்கு நகரம் என்பது பொருள்—மெட்ரோபாலிஸ், அக்ரோ பாலிஸ் என்ற சொற்கள் போன்று.

தேவதுர்க்கம் இருப்பிடம்: 16·°25′வ×77°·0′கி.

8. கமாலிபா (Camaliba)

கமாலிபா (Camaliba) நவீன கம்மாமெட் (Kammamet) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இவ்வூர் வாரங்கல் (Warrangal) பகுதி யில், கோதாவரி நதிக்கும், கிருஷ்ணா நதிக்கும் இடையே உள்ளது. இஃது ஒரு சிறந்த வாணிகத்தலம்.

கம்மாமெட்டின் இருப்பிடம் : 17°·15′வ×80°·11′கி.

9. ஓமினகரா (Ominagara)

இது மின்னகரம் (Minnagaram) என்பதன் உருவமே. மின்ன கரங்கள் பார்த்திய அரசர்களால் ஏற்படுத்தப்பட்டன. இதன் விளக்கம் அதிகாரங்கள் 58, 61 ஆகியவற்றில் காணலாம்.

இங்கு ஹைதராபாத், ஆந்திரப் பகுதிகளைக் குறிப்பிடுவதால், மின்னகரம் என்பது ஆந்திரப் பிரதேசத்தைச் சார்ந்த சித்தூர் மாவட்டத்திலுள்ள நகரி (Nargari) என்னும் ஊரைக் குறிப்பிடு கிறது.

இஃது இன்று அரக்கோணம்-ரேணிகுண்டா பாதையில் உள்ள கார்வேட்நகர் (Karvetnagar) எனப்படும் நகரியைக் (Nagari) யைக் குறிப்பிடுகிறது.

நகரியின் இருப்பிடம்: 13°·29′வ × 79°·40′கி.

---

# 83. பெண்டா நதிக் கழிமுகம்

பெண்டா நதிக்கும்[1] அவ் ஆற்றின் கழிமுகத்துக்கும் இடையே உள்ள நகரங்கள் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| நகரூரிஸ் (நகருவாரிஸ்)[2] | ... | 120°· 0′கி × 20°·15′வ. |
| தபஸோ[3] | ... | 121°·30′கி × 20°·40′வ. |
| இண்டே[4] | ... | 123°· 0′கி × 20°·45′வ. |
| ஹிப்போகௌரா (பாலியகுரர் அரண்மனை)[5] | .... | 119°·45′கி × 19°·10′வ. |
| சோபுட்டான்[6] | ... | 120°·15′கி × 19°·10′வ. |
| சிரிமலகா[7] | ... | 119°·20′கி × 18°·30′வ. |
| கள்ளிகரு[8] | .... | 118°· 0′கி × 18°· 0′வ. |
| மொடுகுல்லா[9] | ... | 117°·45′கி × 17°·15′வ. |
| பஞேசி[10] | ... | 116°· 0′கி × 16°·45′வ. |

## விளக்கவுரை

**1. பெண்டா நதிக்கும் அவ் ஆற்றின் கழிமுகத்துக்குமிடையே (Between the River Penda and its Estuary)**

பெண்டா என்ற சொல் பென்கங்கா (Penganga) எனும் கோதாவரியின் கிளைநதியைக் குறிப்பிடுகிறது. (அதிகாரம் 82 குறிப்பு-2 பார்க்கவும்). மற்றும் அதிகாரம் 6, குறிப்பு-5-ல் இச் சொல் விளக்கப்பட்டுள்ளது.

ஒரு பிரதியில் ஆற்றங்கரைக் கழிமுகம் என்று மட்டுமே உள்ளது. தாலமி இங்கு ஆற்றங்கரைக் கழிமுகம் என்பதால், அது கோதாவரி நதிக் கழிமுகத்தையோ, அல்லது கங்கைநதிக் கழிமுகத்தையோ குறிப்பிடலாம்.

கோதாவரியின் கிளைநதி ஒன்று பாண்டியா (Pandya) என்று வழங்கப்படுகிறது. ஒருகால் அதுவே பெண்டா என இங்கு வழங் கப்பட்டிருக்கலாம்.

பென்கங்கா இருப்பிடம்: 19°·45′வ × 78°·00′கி.

கங்கைநதிக் கழிமுக இருப்பிடம்: 22°·00′வ × 89°·00′கி.

**2. நகரூரிஸ் (நகருவாரிஸ்)** (Nagaruris or Nagaruvaris)

நகர் என்னும் இடம் (Nagar) நகரூரிஸ் என்று கிரேக்க மொழியில் வழங்கப்பட்டது. இவ்விடம் கோதாவரி நதிக்கரையில் உள்ள பத்ராசலத்துக்கருகில் இருக்கும் நகர் (Nagar) எனும் இடத் தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். பத்ராசலம் பக்தர் ராமதாஸர் காலத்தில் புகழுடைந்திருந்தாலும், அதற்கும் முன்னரேயே அவ்வூர் இருந்தது. பத்ராசலம் பெரும் நகராயிருந்தபொழுது, அதன் அருகில் சிற்றூராக-சிறு நகராக-ஒரு நகரம் கிளம்பிற்று. இந் நகர் பார்த்திய அரசர்களால் ஏற்படுத்தப்பட்ட மின் நகர்களுள் ஒன்றாகும்.

நகர் இருப்பிடம்: 18°·17′வ × 89°·36′கி.

**3. தபஸோ** (Tabasc)

இது 'தபஸ்வி' என்ற வடமொழிச் சொல்லின் சிதைவே. நர்மதை நதி, தபதி நதி, சாத்பூரா மலை, மகாதேவ மலை, விந்திய மலை ஆகிய இடங்களில் ரிஷிகள் தவஞ்செய்து வந்தனர். ரிஷிகள் தவம் செய்த இடமே தபஸோ என்று கிரேக்க மொழியில் வழங்கப் பட்டது. அதிகாரம் 64, குறிப்பு-1-ல் புலிந்த அக்ரியோபாகி என்பார் ரிஷிகள் என்று கூறப்பட்டுள்ளனர். மற்றும், அதிகாரம் 65, குறிப்பு-3-ல் சார்டானிக்ஸ் மலைக்கும் பெடிகோ மலைக்கும் இடையே தபஸாய் (Thabasai) மக்கள் வசித்துவந்தனர் என்று குறிப்பிடப்பட் டுள்ளது. தபஸாய் என்ற சொல் தபஸ்வி என்ற சொல்லின் மரூஉ ஆகும். இச் சொல் தபதி நதியைக் குறிப்பிடுகிறது.

தபஸோ (தபஸ்விகள் உள்ள இடம்)
இருப்பிடம்: 22°·0′வ × 76°·0′கி.

**4. இண்டே** (Indae)

இண்டே என்பது இந்தூர் (Indore) என்பதன் கிரேக்க உச் சரிப்பே. இவ்விடம் நர்மதை நதிக்கு வடக்கில் உள்ளது. இதுவும் உஜ்ஜயினியைப்போல், ஒரு மின்னகரமாகும். இந்திரன் ஊர் என்பதே இந்தூர் ஆயிற்று.

இந்தூரின் இருப்பிடம்: 22°·44′வ × 75°·50′கி.

**5. ஹிப்போகௌரா (பாலியகுரர் அரண்மனை)** (Hippocoura, the palace of **Baliacuror)**

ஹிப்போகௌரா (**Hippocoura)** என்ற சொல் குதிரை வாணிபம் செய்த இடம் என்று பொருள்படும். (Hippos-குதிரை). இவ்விடம் இன்று கோடாபந்தர் (கோடா-குதிரை) என்பதாகும். இது தாணவுக்கும் (**Thana)** அராபியன் கடலுக்கும் (Arabian Sea) இடையே உள்ளது. பம்பாய்க்குச் (Bombay) சற்று வடக்கே உள்ளது. மற்றும், அதிகாரம் 6, குறிப்பு-7, பக்கம் 32 ஹிப்போ கௌரா எனும் பகுதி பார்க்கவும்.

மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) இவ்விடத்தில் குதிரை கள் அராபிய நாட்டிலிருந்து கொணரப்பட்டு விற்கப்பட்டதாகக் குறிப்பிட்டுள்ளார். —(**மார்கோபோலோ : பக்கம் 84)**

கோடாபந்தரின் இருப்பிடம் : 19°·22′வ × 73°·2′கி.

ஆனல், இப்பகுதியில் கங்கைநதிப் பகுதியில் உள்ள நகரங் களைக் குறிப்பிடுவதால், அவ்வாறன குதிரை வாணிபம் நடந்த ஊர் ஒன்று கங்கைக் கழிமுகத்தில் இருந்திருக்கவேண்டும். அதுவும் ஹிப்போகௌரா என்றே வழங்கப்பட்டிருக்கவேண்டும். ஹிப்போ கௌரா என்ற பெயரே இன்று ஹௌரா (Howrah) என்று மருவி வழங்கப்பட்டு வருகிறது. இந் நகரம்-துறைமுகப்பட்டினம்-முன்னர் அஸ்வகூடம் (**Aswacootam)** என்று வழங்கப்பட்டதாகவும், அதுவே கிரேக்கர்களால் ஹிப்போகௌரா (ஹிப்போ-அஸ்வம்-குதிரை) என்று வழங்கப்பட்டதாகவும், ஹிப்போகௌராவே நாளடைவில் ஹௌரா (**Howrah)** என வழங்கப்பட்டது என்றும் உள்நாட்டு வரலாறுகள் தெரிவிக்கின்றன. ஹௌரா துறைமுகம் ஹூக்ளி நதிக்கரையில் (**River Hoogly)** உள்ளது.

ஹௌராவின் இருப்பிடம் : 22°·35′வ × 88°·23′கி.

ஹூக்ளி நதியின் இருப்பிடம் : 22°·55′வ × 88°·26′கி.

**பாலியகுரரின் அரண்மனை** (The Palace of Baliacuror)

பாலியகுரர் (**Baliacuror)** என்ற சொல் விலிராயகுரர் (**Viliraya** curor) என்ற பெயரின் திரிபே. கோலாப்பூர் (Kolapur) அருகில் கிடைத்த ஆந்திர நாட்டு நாணயங்களில் இப்பெயர் பொறித்திருந்த தாக வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். 'விலி' என்ற சொல் 'பலி' என்றும் உச்சரிக்கப்பட்டிருக்கலாம். இப்பெயர் கொண்ட அரசர்கள் கல்யாண் (**Kalyan)** என்ற இடத்தைத் தலைநகரமாகக் கொண்டு நாட்டை ஆண்டுவந்தனர்.

குமார தேவர் (Kumara Devar) என்ற பெயரே பாலியகுரர் என்று கிரேக்க உச்சரிப்பில் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். குமாரம் என்பதே பாலியம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. குமாரம், பாலியம்—இரு சொற்களுமே இளமை, யௌவனம் எனும் பொருள் கொண்டவை. கனிஷ்கர் (Kanishkar) ஆட்சிக் காலத்துக்குப் பிறகு (கி.பி. 75-119), குப்தர்கள் ஆட்சியைக் கைப்பற்றினர். அக் குப்தர்களுள் (Guptas) முதலாவது அரசரே குமார குப்த தேவர் (Kumara Gupta Devar). இவரே, தாலமியால் பாலியகுரர் என்று குறிப்பிடப்பட்டார். இக் குமாரகுப்தரின் பெயரர் (பேரர்) சந்திரகுப்தர் I என்றும், அவரே 'மகாராஜாதிராஜா' எனும் விருது பூண்டார் என்றும் கூறப்படுகிறது. குப்தர்களின் பரம்புரை கி.பி. 195-லிருந்து ஆரம்பித்தாலும், குப்தர்களின் யுகம்-பொற்காலம்-கி.பி. 320-லிருந்து அதாவது சந்திரகுப்தர் I என்பவர் ஆட்சியிலிருந்து ஆரம்பித்ததாகக் கருதப்படுகிறது.

—(Vide An Advanced History of India, By Dr. R.K. Mookerjee pp. 144-145)

ஆனால், தாலமியின் காலம் கி.பி. 119-161 என்பதால், அவர் முதலாம் சந்திரகுப்தரைப்பற்றி (Chandra Gupta I) அறிந்திருக்க முடியாது. சந்திரகுப்தர் I ஆட்சி செய்த காலம் கி.பி. 320-330. ஆகையால் கனிஷ்கருக்குப்பிறகு சித்தியர்கள் (Scythians) தேவர்கள் என விருது பூண்டு—அவர்கள் கந்தர்வ நாட்டிலிருந்து வந்த காரணத்தால்–அரசு செய்திருக்கவேண்டும். அவர்களில் முதலாம் அரசரே குமாரதேவர் ஆவார். குமாரதேவர் என்பவர் குமாரி தேவிக்கு லிச்சாவி வம்சத்தில் பிறந்தவர். அவர் கி.பி. 120 முதல் கி.பி. 130 வரை ஆட்சி செய்திருக்கலாம்.

ஆக, பாலியகுரர் என்ற சொல் பாலிய தேவர், குமார தேவர் என்ற சொற்களின் திரிபே.

ஆக, குமாரதேவர் இருந்த இடமாகிய ஹௌரா (Howrah) அதாவது ஹிப்போகௌராவிலே அவர் அரண்மனை இருந்ததாகவும், அரசர் அவ்விடத்திலேயே தம் இருப்பிடத்தைக் கொண்டிருந்ததாகவும் தாலமி கூறுகிறார்.

**6. சோபுட்டான் (Soubouton)**

இது புத்தகயா எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. ஸ்ரீ புத்தா (Sri Buddha) என்ற பெயரையே சோபுட்டான் என்று வழங்கினர். ஆக, புத்தபிரானுடன் தொடர்பு பெற்ற புத்தகயா (Bodhgaya) என்

பதே இங்குக் குறிப்பிடப்பட்ட சோபுட்டான் ஆகும். இது பீஹார் பிரதேசத்தைச் சார்ந்தது.

புத்தகயாவின் இருப்பிடம்: 24°·41′வ×85°·2′கி.

**7. சிரிமலகா (Sirimalaca)**

இச்சொல் ஸ்ரீ மதுரா (Madura) எனும் இடத்தின் கிரேக்க உச்சரிப்பே. மதுரா என்பது இப்பொழுது மத்ரா (Muttra) என்று வழங்கப்படுகிறது. மேலே குறிப்பு-6, புத்தரைக் குறிப்பிடுவதால் ஸ்ரீ அடைமொழி போட்டு ஸ்ரீ புத்தர் என்றும், இதில் மதுராவில் கிருஷ்ணர் திருவிளையாடல் புரிந்ததால், இதற்கும் சேர்த்தே ஸ்ரீ மதுரா என்றும் வழங்குகின்றனர். அதேபோல் ஸ்ரீ புலுமாயி என்று அரசரின் பெயருடன் ஸ்ரீ சேர்த்து வழங்குகின்றனர் (அதிகாரம் 82, குறிப்பு-6). ஆக, தெய்வாம்சம் பொருந்திய சொற்களுக்கும், அரசர் பெயருக்கும் ஸ்ரீ என்ற சொல் சேர்த்தே தாலமி வழங்கினர் என்பது இதனால் தெரியவருகிறது. கிரேக்க வரலாற்றாசிரியர்கள் மூலமாக அன்றைய இந்தியப் பண்பாட்டினை எவ்வளவு தெளிவாக அறிகிறோம்.

மத்ராவின் இருப்பிடம்: 27°·28′வ×77°41′கி.

**8. களளிகரு (Calligaru)**

இது காளிகட்டம் என்பதன் திரிபே. காளிகட்டம் இப்பொழுது கல்கத்தா (Calcutta) என்று வழங்கப்படுகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரால் காளிகட்டம்—காளி கோயில்—புகழ்பெற்று விளங்குவதாயிற்று. காளி கோயில் மிகப் பழம்பெரும் கோயில். கல்கத்தாவின் முன்னாள் பெயர் காளிகட்டம் (Kalighatta) என்பதே.

கல்கத்தாவின் இருப்பிடம்: 22°·35′வ×80°·24′கி.

**9. மொடுகுல்லா (Modugulla)**

மொடுகுல்லா (Modugulla) என்ற இடம் நவீன முத்கல் (Mudgal) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. முத்கல் ரெய்ச்சூருக்குத் தென்மேற்கே உள்ளது.

முத்கலின் இருப்பிடம்: 16°·2 ′வ×76° ·20′கி.

ஆனால் தாலமி குறிப்பிடுவது கங்கைப் பகுதி அல்லவா? ஆகையால் இது கங்கைக் கரையிலுள்ள நகரத்தைக் குறிப்பிடுகிறது. கலிங்கப்பட்டினம், மகாகலிங்கம் என்று கூறப்பட்டு, அது மொடு கலிங்கே (Modu calingae) என்று பிளினியால் (கி.பி. 23–79) வழங்கப்பட்டது.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 22, குறிப்பு-19, பக்கம் 28)

ஆக, இங்கு மொடுகுல்லா என்ற சொல் மகா காளி (Maha Kali) என்ற சொல்லின் திரிபேயாகும்.

காளியில் சாந்தகாளி, மகாகாளி என இரு வகை உள்ளன. இவை இரண்டும் காளிகட்டத்தில் இருந்தன. சாந்த காளியே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரால் பூசித்து உபாசனைத் தெய்வமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. மகாகாளி (Maha Kali) என்பது உயிர்ப் பலி கொள்ளும் காளி தெய்வம். பயங்கர உருவம் கொண்டது. ஆக, இங்குக் குறிக்கப்படுவது பயங்கரம் வாய்ந்த மகாகாளி.

இவ்விரண்டு காளிகளும் காளிகட்டம் எனும் கல்கத்தாவி லேயே இருந்தன. ஒன்று இரத்த காளி; மற்றொன்று சக்தி காளி.

கல்கத்தாவின் இருப்பிடம்: 22°·34′வ × 80°·24′கி.

**10. பனேசி (Banosei)**

பனேசி என்ற சொல் வாரணசி (Varanasi) என்றதன் உருவமே. இது நவீன காசி (Kasi) எனப்படும் பெனரஸ் (Benares) என்பதைக் குறிப்பிடுகிறது. வாரணாஸி என்று மக்களால் கூறப் படுகிறது.

யுவான் சுவாங் (கி.பி. 629-645), பாஹியான் (கி.பி. 399-414) எனும் சீனப்பயணிகள் வாரணசியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்:

" நாம் இன்னும் கங்கைக் கரை ஓரமாகப் பயணம் செய்து, 12 யோசனைத் தொலைவு சென்றால், நாம் காசி என்ற நாட்டையும், அதன் தலைநகரமான வாரணாசியையும் அடையலாம்."

(பாஹியான்: பக்கம் 190)

வாரணாசியின் இருப்பிடம்: 25°·20′வ × 83°·0′கி.

சிலர், இவ்விடம் துங்கபத்ரா நதியின் இணை நதியான வர்தா (Wardha) எனும் நதியின் ஆற்றங்கரையில் உள்ள பாணவாசி (Banavasi) என்பதைக் குறிப்பிடுவதாகவும் கூறுகின்றனர்.

பாணவாசியின் இருப்பிடம்: 14°·58′வ × 75°·19′கி.

திரு. ஏ. சி. கன்னிங்காம் (Mr. A. C. Cunningham) அவர்கள் இவ்விடம் துங்கபத்திரா நதிக்கரைமீதுள்ள ஆனகண்டி (Anagandi) எனும் ஊரைக் குறிப்பிடுவதாக எழுதியுள்ளார். இது ரெய்ச்சூர் பிரதேசத்தைச் சார்ந்தது. இதன் அருகில் கங்காவதி (Gangawathi) எனும் நகரும் உள்ளது.

ஆனகண்டியின் இருப்பிடம்: 15°·21′வ × 76°·33′கி.

ஆயினும், பனேசி என்ற பெயர் வாரணசியைக் (காசி) குறிப்பிடுவதாகக் கொள்வதே பொருத்தமாகும்.

காரணம் காசி முக்தி தரும் நகரங்கள் ஏழினுள் ஒன்றுகும்.

முக்தி தரும் நகரங்கள் ஏழாவன :

1. காசி 2. கயா 3. அவந்தி (உஜ்ஜயினி) 4. காஞ்சி 5. மதுரா 6. மாயா (ஹரித்வார்) 7. துவாரகை (சௌராஷ்டிரம்)

மற்றும், அதிகாரம் 63, குறிப்பு-7 பார்க்கவும்.

---

**ஐயத்துக்கிடமான பகுதிகள் (Doubtful Fragments)**

# 84. கடற் கொள்ளைக் கூட்டம்

கடற் கொள்ளைக் கூட்டத்தினர்களின்[1] உள்நாட்டு நகரங்கள் பின்வருமாறு :

| | |
|---|---|
| ஓலோகோயிரா[2] | ... 114°· 0′கி × 15°· 0′வ. |
| முஸோபலி (தலைநகரம்)[3] | ... 115°·30′கி × 15°·45′வ. |

## விளக்கவுரை

**1. கடற் கொள்ளைக் கூட்டத்தினர்** (Sea Pirates)

கடற் கொள்ளைக் கூட்டத்தினர், அராபியன் கடற்கரையில் மங்களூர் முதல் முசிறிவரை இருந்தனர். இவர்களைப்பற்றி மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) விரிவாகக் கூறியுள்ளார். இக் கடற்கொள்ளைக் கூட்டத்தினரைப்பற்றி அதிகாரம் 7, குறிப்பு-1-ல் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

—(மார்க்கோபோலோ : பக்கங்கள் 78-79)

இக் கடற்கொள்ளைக் கூட்டத்தினர், மேற்குக் கடற்கரைக்கும் மேற்கு மலைத்தொடருக்கும் இடையேயுள்ள பகுதிகளில் வசித்து வந்தனர். மற்றும் ஆங்காங்கிருந்த சின்னஞ்சிறு தீவுகளிலும் தங்கள் இருப்பிடத்தைக் கொண்டிருந்தனர். கண்ணனூர், ஏழிற்குன்றம், மங்களூர், நித்ரியாஸ் முதலிய இடங்களில் வசித்துவந்தனர். வேலிமேடு என்பதே ஏழிற்குன்றமாகி, அதுவே மௌண்ட் ஏலி (Mount Ely) என்று வழங்கப்பட்டது. மௌண்ட் ஏலி என்பதே மௌண்ட் டெலி (Mt. Dely) ஆயிற்று.

ஏழிற்குன்றம் இருப்பிடம் : 12°·0′வ × 75°·5′கி.

**2. ஓலோகோயிரா (Olokhoira)**

இது வேலிமேடு (Velimedu) என்பதன் உச்சரிப்பே. வேலிமேடு என்பதே ஏழிற்குன்றம். இவ் ஏழிற்குன்றமே மௌண்ட் ஏலி (Mount Ely) என்றாயிற்று. மௌண்ட் டெலி (Mount Dely) என்றும் வழங்கப்பட்டது. வேலிமேடு கரை என்பதே ஓலோ கோயிரா என்று கிரேக்க மொழியில் உச்சரிக்கப்பட்டது.

ஏழிற்குன்றம் இருப்பிடம்: 12°·0'வ × 75°·5'கி.

**3. முஸோபலி (தலைநகரம்) (Musoballe, the Capital)**

இச் சொல் மங்களகிரி (Mangala Giri) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. மங்களகிரி இன்று மங்களூர் (Mangalore) என்று வழங்கப்படுகிறது. பரமேஸ்வரியின் அவதாரமாகிய மங்களாம்பிகை குடி கொண்ட இடம் மங்களகிரி. அதுவே மங்களூர் ஆயிற்று. கடற்கொள்ளைக் கூட்டத்தினர் மங்களூருக்கருகில் இருந்தனர். மங்களூர், அராபியன் கடற் கரையில், தென் கன்னடப் பகுதியைச் சார்ந்ததாகும்.

கடற் கொள்ளைக் கூட்டத்தினரைப் பற்றிப் பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80), மார்க்கோ போலோ (கி.பி. 1254-1324) முதலியவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

மங்களூரின் இருப்பிடம்: 12°·52'வ × 74°·53'கி.

முஸோபலி என்பதை முஸாபரிஸ் (Muzapharis) எனக் கொண்டு, முசிறி என்ற துறைமுகத்தைக் குறிப்பிடுவதாகச் சிலர் கூறுவர். பல நாட்டு மக்கள் கூடும் இடமே முஸாபரிஸ்.

முசிறிஸ் (Muziris) என்பதே முயிறிக்கோடு என்பதன் கிரேக்க உச்சரிப்பே. முசிறிக் கோமான் என்று அப்பகுதி அரசன் விளிக்கப்பட்டான். முசிறி வாணிகப் பெருந் துறைமுகமாகவும், சேர நாட்டுத் துறைமுகமாகவும் விளங்கிற்று. மிளகு, இஞ்சி, ஏலம், சடாமாஞ்சி, இலவங்கம் முதலியவை முசிறியிலிருந்து அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

முசிறித் துறைமுகம் கடல் கோளால் அழிந்த பிறகு, கொடுங்களூர் (Cranganore) சேரர் துறைமுகமாக விளங்கிற்று. சேரர் தலைநகரம் பேரியாற்றங்கரையில் விளங்கிய வஞ்சிமாநகரமே. மற்றும் அதிகாரம் 8, குறிப்பு-5 பார்க்கவும்.

முசிறியின் இருப்பிடம்: 10°·14'வ × 76°·11'கி.

[குறிப்பு :

அதிகாரம் 84 முதல் 94 வரையுள்ள பகுதிகள் ஏற்கெனவே தாலமியால் முன் அதிகாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. பின் வந்தவர்—பிற்காலத்தவர்—இச் செய்திகளைத் தாலமியுடன் இணைத்திருக்கவேண்டும். ஆகையால், அதிகாரங்கள் 84—96 ஐயத்துக்கிடமான பகுதிகள் (Doubtful Fragments) என்றே கொள்ளவேண்டும்.]

# 85. லிமிரிகேவின் உள்நாட்டு நகரங்கள்

லிமிரிகே நாட்டின்[1] உள்நாட்டு நகரங்கள் ஆற்றங்கழி முகத்துக்கு மேற்கில் உள்ளன. அந் நகரங்கள் பின்வருமாறு :

| | |
|---|---|
| நரூலா[2] | ... 117°·45′கி × 15°·50′வ. |
| கௌபா[3] | ... 107°·00′கி × 15°·00′வ. |
| பாலௌரா[4] | ... 117°·51′கி × 14°·40′வ. |

## விளக்கவுரை

**1. லிமிரிகே** (Limiricae)

இது டிமிரிகா (Dimirica) என்ற சொல்லின் மாற்று உருவமே. டிமிரிகா என்பது தமிழகம் என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. மற்றும் அதிகாரம் 8, குறிப்புரை-1 பார்க்கவும்.

**2. நரூலா** (Naroula)

இவ்விடம் நவீன நெல்லூர் (Nellore) என்பதைக் குறிப்பிடுவதாகக் கொள்ளப்படுகிறது. நெல்லூர், விஜயவாடா இவற்றைத் தானிய கடகம் என்ற பெயரால் வழங்கினர். (தானியம்-நெல் ; கடகம்-குவியல்). திருநெல்வேலியும் தானியகடகம் என்று வழங்கப்பட்டது. இங்குக் கூறப்பட்ட நரூலா, நெல்வேலி என்பதன் திரிபாகவும் இருக்கக்கூடும். தமிழகம் என்றைக்கும் சோற்றுப் பஞ்சத்தால் அவதிப்பட்டதில்லை. “சோழ நாடு சோறுடைத்து ; தொண்டைநாடு சான்றோர் உடைத்து” என்பது பழமொழி.

நெல்லூரின் இருப்பிடம் : 14°·27′வ × 80°·27′கி.

விஜயவாடாவின் இருப்பிடம் : 16°·31′வ × 80°·39′கி.

திருநெல்வேலியின் இருப்பிடம் ; 8°·44′வ × 77°·44′கி.

**3. கௌபா** (Gauba)

இச் சொல் கோவா (Goa) வைக் குறிப்பிடுவதாகச் சிலர் கூறு கின்றனர். கோவா என்ற பெயர், போர்த்துக்கீசியர் இந்தியாவுக்கு வந்த பிறகு அவர்களால் இடப்பட்ட பெயராகும். வாஸ்கோடகாமா (Vascodagama) எனும் போர்ச்சுக்கீசியப் பயணி, மலையாள நாட்டில் விளையும் மிளகு, இலவங்கம், இஞ்சி முதலிய பொருள்களை நேராகப் பெற்றுச் செல்லும் நோக்கத்துடன், ஆப்பிரிக்காவின் நன்னம்பிக்கை முனையைச் சுற்றி வந்து, மலையாளக் கடற்கரையில் கி.பி. 1498 ஆம் ஆண்டு கள்ளிக் கோட்டையில் (Calicut) இறங் கினார். கி.பி. 1560-ல் போர்ச்சுக்கீசியர் இந்தியாவில் பல இடங்களைத் தமதாக்கிக் கொண்டனர்.

போர்ச்சுக்கீசியர் கோவாவை நிர்மாணித்த ஆண்டு கி.பி. 1510 ஆகும்.—(Vide Indian History By Banerji, p. 211)

மேற்கூறியவை யாவும் தாலமியின் காலத்துக்கும் பின்னர் நிகழ்ந்தவையே. தாலமியின் காலம் கி.பி. 119-161 என்பதால் கௌபா என்ற இடம் கோவாவைக் குறிப்பிட முடியாது.

கோவாவின் இருப்பிடம். 15°·25′வ × 73°·43′கி.

கௌபா, டிமிரிகாவைச் (தமிழகம்) சார்ந்தது என்று தலைப்பில் கூறியதால், இதைக் குறிக்கும் நகரம் தமிழ் நாட்டைச் சார்ந்த தாகவே இருக்க வேண்டும். அவ்வாறாயின் அஃது எந்த ஊர்?

தமிழ் நாட்டில் கி.பி. முதல் நூற்றாண்டின் இறுதியிலும், இரண்டாம் நூற்றாண்டில் முதற்பகுதியிலும் சிறந்து விளங்கிய நாடு காவிரி பாயும் நாடு (காவிரி நாடு). அந்நாட்டின் அரசன் சோழன் ஆவான். அச் சோழனின் தலைநகரம் உறையூர் (உறந்தையூர்). —(அதிகாரம் 11, குறிப்பு-5 பார்க்கவும்). சோழனின் துறைமுகம் காவிரிப்பூம்பட்டினம் (Kaveripumpattinam) ஆகும். இத் துறை முகம் புகார், பூம்புகார், காவிரித்துறை, சோலையூர் எனப் பல பெயர்களால் வழங்கப்பட்டது. இதில் வரும் புகார் என்ற (Pukhar) சொல்லே காவிரிப்பூம்பட்டினத்தைக் குறிக்கும் நாட்டுச் சொல்லாக-மக்கள் வாயில் நடமாடும் எளிய சொல்லாக - விளங்கிற்று. (அதி காரம் 13, குறிப்பு-4 பார்க்கவும்)

"நீள்புகழ் மன்னும் புகார் நகர்"

—(சிலப்பதிகாரம் : மங்கல 22)

"வண்டு ஊசலாடும் புகாரே எம் ஊர்"

—(சிலப்பதிகாரம் : கானல்வரி 6)

"வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும் பெயர்ப் புகார்என் பதியே அவ்வூர்."

—(**சிலப்பதிகாரம்** : வழக்குரை காதை : 53-56)

'புகார் என் பதியே' என்பது இலக்கியம், இலக்கணம், நாட்டு வளப்பம், அரசியல் சூதாட்டம், கணிதம், வரலாறு, விஞ்ஞானம் இவற்றில் ஏதும் அறிய வேண்டாத-தன் கணவன் ஒருவனைப் பற்றி அறிந்தாலே போதும் என்ற எண்ணம் கொண்ட-பாமர மக்களில் ஒருத்தியாக விளங்கிய கண்ணகியின் கூற்றே என்று காணும் பொழுது, அக்காலத்தில்-சிலப்பதிகாரம் இயற்றப்பட்ட தாலமியன் காலத்தில் (கி.பி. 119-161)—புகார் என்ற சொல்லே பாமர மக்களால் பெரு வழக்காக நிலை நிறுத்தப்பட்டது என்பதால், இங்குக் கூறப்பட்டிருக்கும் கௌபா (Gauba), புகார் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. காவிரிப்பூம்பட்டினம், காபேரிஸ் (Cauberis) என்று வழங்கப்பட்டது. (அதிகாரம் 13, குறிப்பு-4)

கிரேக்க மொழியில் தாலமி எழுதும் பொழுது முன்பின்னாக எழுதி விட்டார். புகார் என்பதை கௌபார் என்றெழுதி, அதுவே ஏடெழுதுபவரால் நாளடைவில் கௌபா என நிலைத்துவிட்டது.

ஆகையால் கௌபா என்ற சொல்லே புகார் என்பதை உணர்த்தி, காவிரிப்பூம்பட்டினத்தைக் குறிப்பிடுவதாயிற்று. காவிரி புகும் பட்டினம் என்பதே காவிரிப்பூம்பட்டினம் என மருவிற்று.

காவிரிப்பூம்பட்டினத்தின் இருப்பிடம்: 11°·10'வ × 79°·54'கி.

**4. பாலௌரா** (Palaura)

பாலௌரா என்ற சொல் பாலாறு (River Palar) எனும் ஆற்றைக் குறிப்பிடுகிறது. இது வட ஆர்க்காடு, செங்கல்பட்டு வழியாக ஓடிக் கடலில் கலக்கும் ஓர் ஆறு. பால் போன்ற நீரைக் கொண்டதால் பாலாறு எனப்பட்டது. பாலாற்றில் முக்கியமாக விளங்கிய வேலூர் (Vellore) என்பதையே பாலௌரா எனும் தமிழ் நாட்டு ஊராகக் குறிப்பிடப்படுகிறது. வேலங்காடு மிகுதியானதால் வேலூர் என்று அதற்குப் பெயர்; ஆரை (அகத்திக்கீரை-ஆத்தி) அதிகமாக உள்ளதால்-காடு போன்று வளர்ந்து உள்ளதால்-ஆர்க்காடு. பாலாற்றங் கரையில் இன்றும் பாலூர் (Balur) என்று ஒரு சிறு கிராமம் உள்ளது (குடியாத்தம் அருகில்). ஆனால், தாலமி குறிப்பிடக்கூடிய பெரிய அளவான நகரம் பாலௌரா எனப்பட்ட வேலூரே. வேலூர் தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பாபல் (Babul) என்ற சொல் வேலமரத்தைக் குறிப்பிடும். வேலங்காடு இருந்த இடத்தைப் பாபலூரா அதாவது பாபலூர் என்று வழங்கியிருக்க வேண்டும். அதுவே பாலௌரா அல்லது பாலூரா என்று நாளடைவில் கிரேக்க ஏட்டில் நிலைத்துவிட்டது. ஆகையால், பாலௌரா என்ற சொல்லே வேலூரைக் குறிப்பிடுகிறது.

வேலூரின் இருப்பிடம் : 12°·55′வ × 79°·11′கி.

---

# 86. பேரிஸ்

*ஆற்றங்கழிமுகத்துக்கும் பேரிஸ்*[1] *நதிக்கும் இடையே கீழ்க் குறிப்பிடப்பட்ட நகரங்கள் உள்ளன :*

| | |
|---|---|
| *பஸகி*[2] | ... 124°·50′கி × 19°·50′வ. |
| *மஸ்டநௌரா*[3] | ... 121°·30′கி × 18°·40′வ. |
| *கோவ்ரலூர்*[4] | ... 119°·00′கி × 17°·30′வ. |
| *பௌனட்டா (கோமேதகம் கிடைக்குமிடம்)*[5] | ... 121°·20′கி × 17°·30′வ. |
| *ஆலோ*[6] | ... 120°·20′கி × 17°·00′வ. |
| *கரோரா (சேரபோத்ரர்களின் அரண்மனை)*[7] | ... 119°·00′கி × 16°·20′வ. |
| *ஆரம்பூர்*[8] | ... 121°·00′கி × 16°·20′வ. |
| *பிடேரிஸ்*[9] | ... 119°·00′கி × 15°·50′வ. |
| *பண்டி பொலிஸ்*[10] | .. 118°·00′கி × 15°·20′வ. |
| *அடரிமா*[11] | ... 119°·30′கி × 15°·40′வ. |
| *கருவூர்*[12] | ... 120°·00′கி × 15°·00′வ. |

### விளக்கவுரை

1. **ஆற்றங்கழிமுகத்துக்கும் பேரிஸ் நதிக்கும் இடையே** (Between the River Estuary and River Baris)

இங்கு ஆற்றங்கழிமுகம் என்பது நர்மதை ஆற்றங்கழிமுகத்தைக் (River Narmada Estuary) குறிப்பிடுகிறது. நர்மதை ஆற்றுக்

கழிமுகத்துக்கும், பேரிஸ் நதிக்கும் (பேரியாறு) இடையேயுள்ள பகுதி இங்கே குறிப்பிடப்படுகிறது. பேரிஸ்நதி என்பது பேரியாறு ஆகும். பேரியாறு இன்று பெரியாறு (Periyar) என்று குறிப்பிடப் படுகிறது. பேரியாற்றங்கரைக் கழிமுகத்தில்தான் முசிறித்துறை முகம் இருந்தது. முசிறி கடல்கோளால் அழிந்துவிடவே, அங்கு அதற்குப்பதில் கொடுங்களூர் (Cranganore) துறைமுகமாக விளங் கிற்று. பேரியாற்றங்கரை உள்பகுதியில் வஞ்சிமாநகரம் (Vanji) சேரநாட்டுத் தலைநகரமாக விளங்கிற்று (அதிகாரம் 8, குறிப்பு-7 பார்க்கவும்).

வஞ்சிமாநகருக்கு அருகில் கரூர் என்ற பகுதி இருந்தது. இக் கரூர் வேறு; சோழ நாட்டுத் திருச்சி-கரூர் வேறு. வஞ்சிக் கரூர் சேர நாட்டைச் சார்ந்தது. மற்றும், அதிகாரம் 68, குறிப்பு-5 பார்க்கவும்.

| | |
|---|---|
| முசிறி இருப்பிடம் : | 10°·14′வ × 76°·11′கி. |
| கொடுங்களூர் இருப்பிடம் : | 10°·13′வ × 76°·16′கி. |
| பேரியாற்றுக்கழிமுகம் இருப்பிடம் : | 10·°00′வ × 76°·52′கி. |

**2. பஸகி (Pasage)**

பஸகி (Pasage) என்ற சொல் இன்று புஸாவல் (Bhusawal) என்று வழங்கப்படுகிறது. புஸாவல், தபதி நதிக்குத் தெற்கில் உள்ளது.

புஸாவல் எனும் நகரம், முன்னர் பாரிகாஸா (Barygaza)வை யும், பிரதிஷ்டானபுரத்தையும் (Paithan) இணைக்கும் ஒரு குறுக்குப் பாதையில் இருந்தது. இஃது ஒரு வாணிகச்சந்தை நகரமாக (Commercial Market Town) விளங்கிற்று.

புஸாவல் இருப்பிடம் : 21°·02′வ × 75°·47′கி.

சிலர் பஸகி என்பது, கோவாவின் அருகில் உள்ள ஹால்ஸி (Halsi) எனும் இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொண்டுள்ளனர். இது நவீன ஸௌன்ஷி (Saunshi) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது என்று கூறுவர். ஸௌன்ஷி, தார்வார் (Dharwar) மாவட்டத்தில் உள்ளது. ஜம்கந்தியைச் (Jamkhandi) சார்ந்தது.

ஸௌன்ஷியின் இருப்பிடம் : 16°·30′வ × 75°·20′கி.

**3. மஸ்டநௌரா (Mastanaura)**

மஸ்டநௌரா என்பது மாஸ்டர்நௌரா என்பதன் குறுக்கமே. நௌரா (Naura) எனுஞ்சொல் கண்ணனூரைக் குறிப்பிடும். கண்

ணனூர் என்பது நன்னன் ஊர் என்பதன் திரிபாக இருத்தல் வேண்டும். கடற் கொள்ளைக்காரன் நன்னன் இருந்த ஊர் என்று பொருள்படும். மாஸ்டர் நௌரா என்பது மாஸ்டர் நன்னனூர் என்பதன் மரூஉ. ஆக, கடற் கொள்ளைக்காரன் நன்னன் என்ப வனால் நிர்மாணிக்கப்பட்ட ஊரே நௌரா என்பதாகும். மற்றும், அதிகாரம் 7, குறிப்பு-1 பார்க்கவும்.

நௌரா, திண்டிஸ், முசிறி ஆகியவை பண்டைகால வாணிகத் துறைமுகங்களாகும். நௌராவை நவீன மங்களூர் (Mangalore) என்று கருதுவாரும் உண்டு. ஆனால், மங்களூரை நித்ரியாஸ் (Nitrias) என்று தாலமி வழங்கினர். நேத்ராவதி நதி மங்களூர் வழியாக ஓடுவதால், நதியின் பெயரை முன்னிட்டு, அக் கழிமுகத்தை நித்ரியாஸ் என்று வழங்கினர் (அதிகாரம் 7, குறிப்பு-7). அது நித்ராஸ் என்றும் வழங்கப்பட்டது.

நௌரா (Naura) என்பதற்குப் புதிய பட்டணம் எனப்பொருள் உரைத்து, மஸ்டநௌராவை நவீன மட்டஞ்சேரி (Mattanchery) யைக் குறிப்பிடுவதாகவும் கூறுவர். ஆனால், தாலமி இங்கு எடுத்துக் கொண்டது கண்ணனூரே ஆகும்.

கண்ணனூரின் இருப்பிடம் : 11°·52′வ × 75°·25′கி.

மட்டஞ்சேரியின் இருப்பிடம் : 9°·57′வ × 76°·17′கி.

**4. கோவ்ரலூர்** (Coverellore)

இது பண்டைய துறைமுகமான கொடுங்களூர் (Kodungalur) என்பதன் கிரேக்க உச்சரிப்பாகும். கொடுங்களூர் இன்று கிரேங் கனூர் (Cranganore) என்று வழங்கப்படுகிறது. இத் துறைமுகம் பேரியாற்றங் கழிமுகத்தில் இருந்தது. இஃது ஒரு வாணிகத் துறைமுகமாக விளங்கிற்று. முசிறித் துறைமுகம் (Muziris) கி.பி. 79, ஆகஸ்டுத்திங்கள் 23, 24ஆம் நாள்களில் நடைபெற்ற கடல்கோளால் அழிந்துவிட்டது.

—(**பெரிப்ளூஸ் :** அதிகாரம் 52, குறிப்பு-18, பக்கம் 221)

கொடுங்களூர் இருப்பிடம் : 10°·13′வ × 76°·16′கி.

**5. பௌனட்டா (கோமேதகம் கிடைக்குமிடம்)** (Pounatta, the place where Sardonyx is got)

கோமேதகம், மரகதம் இரண்டுமே மக்களால் பெரிதும் விரும் பப்பட்ட கற்களாகும். மரகதம் பெரில் (Beryl) எனப்படும் ; கோமேதகம், சார்டானிக்ஸ் (Sardonyx) எனப்படும். கோமேதகம் கோயம்புத்தூரின் அருகில் உள்ள பவானியில் பெருவாரியாகக்

கிடைத்தன. மரகதம் கோயம்புத்தூரிலும், அதனருகில் பொள்ளாச்சியிலும் கிடைத்தன. இங்குப் பௌனட்டா என்று கூறப்படுவது, பவானிப்பேட்டை (Bhavanipettai) என்ற இடத்தைக் குறிப்பிடும். பவானியிலிருந்து கோமேதகம் எடுக்கப்பட்டு, அயல் நாடுகளுக்கு அனுப்பப்பட்டது. இது நவமணிகளுள் ஒன்றாகும்.

பவானியின் இருப்பிடம்: 11°·30′வ × 77°·35′கி.

திரு. யூல் (Mr. Yule) என்பார், இவ்விடம் மைசூரில் உள்ள ஸ்ரீரங்கபட்டணத்துக்கு (Sri Rangapatna or Seringapatam) அருகில் இருந்த ஓர் ஊர் என்று குறிப்பிடுகிறார். கோமேதகம் தான் எடுக்கப்பட்டன என்று தெரியவருவதால், மேற்படி உள்ள கூற்று பொருந்தாமை உணரப்படும்,

ஸ்ரீரங்கபட்டணம் இருப்பிடம்: 12°·26′வ × 70°·43′கி.

### 6. ஆலோ (Aloe)

ஆலோ (Aloe) என்ற சொல் ஆல்வாய் (Alwaye) என்ற நதியையும், அந் நதிக்கரையிலுள்ள ஊரையும் குறிப்பிடும். இவ்வூர் அருகில் ஆதிசங்கரர் (Adisankara) பிறந்த இடம் காலடி (Kaladi) எனப்படும். இவ்வூர் எர்ணாகுளத்திலிருந்து 20 கிமீ. (12 மைல்கள்) உள்ளன.

ஆல்வாய் ஒரு வாணிகத்தலமாக விளங்குகிறது.

ஆல்வாயின் இருப்பிடம்: 10°·7′வ × 76°·23′கி.

### 7. கரோரா (சேர போத்ரர்களின் அரண்மனை) (Caroura, the Palace of Cherabothras)

கரோரா (Caroura) என்ற சொல் வஞ்சிமா நகரத்துக்கு அருகில் இருந்த கரூர்-வஞ்சியைக் குறிப்பிடும். வஞ்சிமாநகரம் திருவஞ்சைக் களம் என்று வழங்கப்படுகிறது. வஞ்சிமாநகரம் ஆற்றுத் துறை முகமாக விளங்கிற்று. அதற்கு அருகில் இருந்த கருவூர் (கரூர்) என்ற இடத்தில் அரசர் தம் இருப்பிடத்தைக் கொண்டிருந்தார். அதிகாரம் 8, குறிப்பு-7-ல் வஞ்சிமா நகரைப் புது பெரூரா (Puduperura) என்று வழங்கினர். பெரூரா என்பது பேரூர் என்பதன் மரூஉ. அரசன் அரண்மனை கொண்ட கரூர் சிற்றூர் ஆகவும், அரசன் தலைநகரமான வஞ்சிமாநகரம் பேரூர் ஆகவும் தாலமியால் கொள்ளப்பட்டது. ஆக, கரூரா என்பது வஞ்சி அருகில் இருந்த கரூரையே குறிப்பிடும் (அதிகாரம் 8, குறிப்பு.8).

—(சேரன் வஞ்சி: டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A.

கரூர்-வஞ்சியின் இருப்பிடம்: 10°·16′வ × 76°·15′கி.

சேரபோத்ரா (Cherabothra) என்பது கேரளபுத்ரர் (Kerala putra) என்பதன் மரூஉ. பாடலிபுத்திரம் (Pataliputra) பாலி போத்ரா (Palibothra) என்று வழங்கப்பட்டதுபோல, கேரளபுத்திரர் என்பது சேரபோத்ரா என்று வழங்கப்பட்டது. சேரர் என்பதே கேரள என்று திரித்து வழங்கப்பட்டது. (அதிகாரம் 73, குறிப்பு-3 பார்க்கவும்). மெகஸ்தனிஸ் (கி.மு. 302-296) என்பாரும் பாடலி புத்திரத்தைப் பாலிபோத்ரா என்றே வழங்கினர். ஆக, போத்ரா என்பது புத்திரர் என்பதன் கிரேக்க உச்சரிப்பே. இங்குச் சேர போத்ரா என்பதும், கேரளபுத்திரர் என்பதன் திரிபே. அசோகர் தம் கல்வெட்டுகளில், 'கேரளபுத்ரா' என்று குறிப்பிட்டுள்ளார்.

வஞ்சிமாநகரம் இருப்பிடம்: 10°·14'வ×76°·15'கி.

"திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீர் உயர் கரைக் கவைஇய
தண்ஞான் பொருநை மணலினும் பலவே!"

—(அகநானூறு : 83)

இதில் ஆன்பொருநை என்பது பேரியாற்றைக் குறிப்பிடுகிறது. ஆகையால், இதில் கூறப்படும் கருவூர் (கரூர்), கரூர் - வஞ்சியைத் தான் குறிப்பிடுகிறது.

சேரன் என்பவனின் மறு பெயர் கேரளன். கேராளன் என்ற சொல், தலையில் குடுமியை முன்பக்கமாக உடையவன் என்று பொருள் தரும். (கேரா - தலையின் முன் பக்கம் வளர்ந்து வரும் சிகை - Tamil Lexicon - Page 1094). இதை மக்கள் 'சோழியன் குடுமி' என்பர். சோழியன் என்பதே சோளியன் ஆகி, அதுவே கேரளன் (Keralan) ஆகிவிட்டது. கேரளர்கள் வசித்து வந்த நாடு கேரளா (Kerala) என்றும், அவர்கள் பேசும் மலையாள மொழி கேரள மொழி என்றும் வழங்கப்பட்டது. கேரள மக்களில் நம்பூத்ரி இனத்தவர் முன் குடுமி வைத்திருப்பர்.

ஆக, சேரன், சோழியன், கேரளன் ஆகிய இம் மூன்றும் ஒரே பொருளைத் தரும் சொல்லாகும்.

"General tradition recognised the existence of three important Kingdoms and only three in the country—namely the PANDYA, the CHOLA and the CHERA of KERALA. Asoka calls the last by the name of KERALAPUTRA, ie. son of KERALA."

—(Vide The Early History of India By Vincent A. Smith, M.A. p. 402)

**8. ஆரம்பூர்** (Arambur)

இச்சொல் தர்மபுரி (Dharmapuri) என்ற இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். '**தகடூர் யாத்திரை**' எனும் நூல் - சங்க கால நூல் - தர்மபுரி மாவட்டத்தைக் குறிப்பிடுகிறது. தர்மபுரியைத் தர்மபூர் என்று சிலர் சொல்லக் கேட்டு, தாலமி அதையே ஆரம்பூர் (Arambour) என்று எழுதிவிட்டார் போலும். இன்று தர்மபுரி தனி மாவட்டமாகத் திகழ்கிறது.

தர்மபுரியின் இருப்பிடம்: 12°·08′வ×78°·13′கி.

**9. பிடேரிஸ்** (Bideris)

பிடாரிஸ் என்ற சொல் பகாரிஸ் அல்லது பராகே (Baracae) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. பராகே என்பது பகாரே என்றும் வழங்கப்பட்டது. பகாரே என்ற இடமே நவீன பொரக்காடு (Porakkad) என்றதைக் குறிப்பிடும். இதைப் பெரிப்ளூஸ் பகாரே என்று சிறிது மாற்றிக் கூறியுள்ளார்.

—(**பெரிப்ளூஸ்** : அதிகாரம் 55, குறிப்பு-1, பக்கம் 230)

இது கோட்டயம் (Kottayam) என்னும் இடத்துக்கு 14 மைல்கள் (23 கிமீ) தொலைவில் உள்ளது. அக் காலத்தில் பொரக்காடு சிறந்த வாணிகத்தலமாக விளங்கிற்று. அச்சன்கோவில் நதியின் (Achchankoil River) கழிமுகத்தில்தான் பொரக்காடு இருந்தது. இஃது ஒரு துறைமுகப்பட்டினம். மற்றும் அதிகாரம் 8, குறிப்பு-10, பக்கம் 52 பார்க்கவும்.

பொரக்காடின் இருப்பிடம்: 9°·22′வ×76°·22′கி.

**10. பண்டிபொலிஸ்** (Bandi-Polis)

இச்சொல் பாண்டியபுரம் (Pandiapuram) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. அக்ராபொலிஸ் (Acropolis), மெட்ராபொலிஸ், (Metropolis) போன்ற சொற்களில் உள்ள 'பொலிஸ்' தரும் பொருளிலேயே பண்டிபொலிஸ் எனும் சொல்லும் பயன்படுத்தப் பட்டுள்ளது. பொலிஸ் (Polis) என்றால் பட்டணம், நகரம் என்று பொருள்.

இங்குப் பாண்டியபுரம் என்ற இடம் கொற்கையிருந்த இடத்தைக் குறிப்பிடுகிறது. கொற்கை பாண்டியரது துறைமுகமாயிருந்தது. அங்கு அரசன் தன் அரண்மனையை ஏற்படுத்தி, அவ்விடத்திற்குப் பாண்டியபுரம் எனப் பெயரிட்டான். வீரபாண்டிய பட்டணம் என்று வேறு ஓர் ஊர் உள்ளது. அது கட்டபொம்மன் எனப்படும் வீரபாண்டியன் காலத்தில் அண்மையில் ஏற்பட்டதே.

ஆக, பாண்டியபுரம், கொற்கைக்கு வெகு அருகில் இருந்தது. கொற்கை முத்து உலகப் புகழ் பெற்றது.

"கொற்கையிருந்த இடமே கபாடபுரம் என்று வழங்கப்பட்டது."
—(**தமிழர் வரலாறு :** பி.டி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், பக்கம் 242)

பெரிப்ளூஸின் நூலாசிரியர் (கி.பி. 50-80) கொற்கையைக் கோல்கே (Colchae) என்று வழங்கினர்.

—(**பெரிப்ளூஸ் :** அதிகாரம் 59, குறிப்பு-2, பக்கம் 260)

கொற்கையின் இருப்பிடம்: 8°·40'வ×78°·15'கி.

**11.** அடரிமா (Adarima)

இது அகஸ்தியர் மலை எனப்படும் பொதியில் மலையின் மாற்று உருவமே. பொதியில் என்பதை முன்னர் பெடிகோ (Betigo) என்று குறிப்பிட்டுள்ளார் (அதிகாரம் 34, குறிப்பு-2). குற்றால மலை மீது சில கிலோ மீட்டர் தொலைவு சென்றால் அகஸ்தியர் ஏரி, அகஸ்தியர் ஆஸ்ரமம், அகஸ்தியர் குடில் முதலியவை காணப்படு கின்றன. தாமிரபருணி அங்கிருந்து உற்பத்தியாகி, திருநெல்வேலி வழியாகச் சென்று, காயல் பட்டினத்துக்கு 5 மைல் (8 கிமீ.) தொலைவில் கடலுடன் கலக்கிறது.

பொதியில் மலையின் இருப்பிடம்: 8°·58'வ×77°·21'கி.

**12.** கருவூர் (Caruvour)

மேலே குறிப்பு 7-ல் கரோராவின் இருப்பிடத்தை 119°·0' என்று கொடுத்து விட்டு, இங்குக் கருவூர் என்பதை 120°·0' என்று கொடுப்பதால், கரோரா வேறு, கரூர் வேறு என்று தாலமி கொண்டுள்ளார்.

மேலே குறிப்பு-7-ல் கொடுத்துள்ள கரோரா (Karoura) என்பது கரூர் வஞ்சியைக் குறிப்பிட்டது எனக் கண்டோம்.

இந்தக் கருவூர் என்பது வஞ்சிமா நகரத்தையேக் குறிப்பிட வேண்டும். சிலப்பதிகாரத்தில் வஞ்சிமா நகரம் (Vanji) என் றிருந்தது, அதற்கப்புறம் சேரர் பலம் குன்றிய பொழுது, அதுவே கரூர் என்று வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். அல்லது அரசன் கரூர் - வஞ்சியையே சேர நாட்டின் தலைநகரமாக ஆக்கியிருக்க வேண்டும். இதனால்தான் சேரன் தலைநகரம் கரூர் என்று கூறப் படும் பொழுது, திருச்சி - கரூரை அத் தலைநகரமாகக் கொண் டனர் ஓர் இரு வரலாற்றாசிரியர்கள். தாலமியால் இஃது எத்துணைப்

பெருந்தவறு என்று நமக்குத் தெரிய வருகிறதல்லவா? ஆகையால் கரூர் - வஞ்சி வேறு; திருச்சி - கரூர் வேறு. கரூர் - வஞ்சிதான் சேர மன்னரின் தலைநகரம். தாலமி இதை டிகிரி அளவில் கொடுத்து நிரூபித்து விட்டார்.

கரூர் - வஞ்சி இருப்பிடம்: 10°·16′வ × 76°·15′கி.

வஞ்சிமா நகரம் இருப்பிடம்: 10°·14′வ × 76°·15′கி.

---

# 87. ஆஅய் அரசர்

உள்நாட்டு நகரமும், ஆஅய் என்ற அரசரின்[1] இருப்பிடமும்:

மருண்டா[2] ... 121°·20′கி × 14°·20′வ.

## விளக்கவுரை

### 1. ஆஅய் என்ற அரசரின் இருப்பிடம் (The Residence of King Aioi)

**(i) ஆஅய் அண்டிரன்**

ஆஅய் (Aioi) என்ற அரசனின் முழுப்பெயர் ஆஅய் அண்டிரன். அண்டிரன் என்ற சொல் ஆந்திரன் (Andhiran) என்ற சொல்லின் திரிபே. ஆந்திர நாட்டைச் சார்ந்த ஆய் என்ற அரசன் தென்திருவிதாங்கூர்ப் பகுதி, பொதியில் மலைப் பகுதி, தமிழ்நாட்டில் சில பகுதிகள் ஆகியவற்றை ஆண்டு வந்தான். இவன் கடை எழுவள்ளல்களுள் ஒருவனுகக் கருதப்படுகிறுன். ஆஅய் அண்டிரன், அகநானூறு, புறநானூறு, நற்றிணை முதலிய நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளான்.

"ஆஅய் என்ற அரசன் (தாலமியால் குறிப்பிடப்பட்டவன்) பொதியில் மலையைச் சுற்றிலுமுள்ள நாட்டையும், திருநெல்வேலியில் தாமிரபருணியின் கழிமுகத்தில் இருந்த கொற்கைத் துறைமுகத்தைச் சுற்றிலுமுள்ள நாட்டையும் ஆண்டுவந்தான்."

—(Vide the Beginning of South Indian History By Dr. S. Krishnaswami Iyengar, M.A. page 127)

ஆஅய் நாட்டின் இருப்பிடம்: 8°·29′வ × 76°·59′கி.

ஆஅய் அண்டிரனைப் பற்றிய விவரங்களை அதிகாரம் 9, குறிப்பு-1-ல் விவரமாகக் காணலாம்.

" ஆஅய் அண்டிரன் அடுபோர் அண்ணல்
இரவலர்க் கீத்த யானையிற் கரவின்று."

—(புறநானூறு : 129)

(ii) **ஆஅய் எயினன்**

ஆஅய் எயினன் (Aioi Eyinan) என்பவனும் ஆஅய் நாட்டை ஆண்டவன். சேர நாட்டை ஆண்டுவந்த நார்முடிச்சேரல் என்பவனின் படைத்தளபதி. வேளிற்குடியில் பிறந்தவன். ஆய் எயினனைச் சேரமன்னன், மேலைக்கடலில் இன்னல் விளைவித்துக் கொண்டிருந்த நன்னனைக் கொல்ல, படை சேர்த்து அனுப்பினன். ஆயினும், நன்னனின் படைத்தளபதி ஞிமிலி மிகவும் கொடூரமானவன். இரு படைத் தளபதிகளும் மோத, ஆஅய் எயினன், ஞிமிலியால் கொல்லப்பட்டான்.

நன்னனை, இமயவரம்பன் சேரலாதன் கொன்றொழித்தான் என்று சிலப்பதிகாரம் கூறுவதால், நன்னன் தளபதி ஞிமிலி, ஆய் எயினனைக் கொன்ருன் என்று வரலாறு கூற, இந்நிகழ்ச்சிகள் சிலப்பதிகார காலத்தில் நடந்தேறின. ஆக, சிலப்பதிகாரம் கி.பி. 110 அளவில் இயற்றப்பட்டிருக்கவேண்டும். ஆஅய் எயினன் காலமும் கி.பி. 100-105 ஆக இருத்தல்வேண்டும். மற்றும், அதிகாரம் 9, குறிப்பு-1 ஆஅய் எயினன் பகுதி பார்க்கவும்.

2. **மருண்டா** (Marounda)

இது தென் திருவிதாங்கூரைச் சார்ந்த மார்த்தாண்டம் (Marthandam) எனும் ஊரைக் குறிப்பிடுகிறது. மார்த்தாண்டம் என்ற சொல் புதிய மார்த்தாண்டவர்மன் பெயரால் உருவாக்கப்பட்டது என்று கூறினும், அப்பெயர் பழம் பெயராகவே இருத்தல்வேண்டும். மார்த்தாண்டம் என்ற சொல்லுக்கு இயமனை வென்ற இடம் என்பது பொருள். (மிருத்யு-இயமன்; ஆண்டான்-வென்றவன்). இதையே தாலமி மருண்டா என உச்சரிப்புப் புரியாமல் கிரேக்க மொழியில் வழங்கினர் போலும்.

மார்த்தாண்டத்தின் இருப்பிடம்: 8°·30'வ × 77°·18'கி.

---

# 88. கரை-ஆஅய் நாடு

கரை-ஆஅய் நாட்டில்[1] உள்ள நகரங்கள் பின்வருமாறு:

| | |
|---|---|
| மெண்டலா[2] | ... 123°·00′கி × 17°·40′வ. |
| சிலார்[3] | ... 141°′45′கி × 16°·30′வ. |
| திதோவா[4] | ... 122°·00′கி × 15°·20′வ. |
| மண்டிட் ஃபோர்[5] | ... 123°·00′கி × 15°·10′வ. |

## விளக்கவுரை

**1. கரை-ஆஅய் நாட்டில் உள் நகரங்கள்** (Seashore Towns of the Country of Aioi)

இவ்வதிகாரத்தில் கூறப்படும் ஊர்கள் யாவும் கிழக்குக் கடற் பிரதேசத்தில் உள்ளவை.

கரை-ஆஅய் நாடு என்பது கீழ்க் கடற்கரையில் உள்ள ஆஅய் அரசன் ஆண்ட நாடு என்று பொருள்தரும் கிழக்குக் கடற்கரைப் பகுதியைக் (Bay of Bengal) குறிப்பிடுகிறது.

**2. மெண்டெலா** (Mendella)

மெண்டெலா எனும் இடம் கன்னியாகுமரி மாவட்டத்தைச் சார்ந்த மங்களம் (Mangalam) என்ற ஊரைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இது இராசன் ஆஅய் மங்கலம் என்றிருந்தது. இன்று மக்கள் நாவில் புகுந்து இராசாக்கா மங்கலம் என்று வழங்கப்படுகிறது. இது அரசன் ஆஅய் என்பவனின் இராணுவக் காவல் தளமாக இருந்தது.

மங்கலம் இருப்பிடம்: 8°·11′வ × 77°·29′கி.

**3. சிலார்** (Silar)

இது சிற்றுறு அல்லது அரிசிலாறு என்பதன் கிரேக்க உச்சரிப்பே. மார்த்தாண்டம், வில்லவன்கோடு வழியாக ஓடும் சிற்றுரைக் குறிப்பிடுகிறது. இது தென் திருவிதாங்கூர்ப் பகுதியைச் சார்ந்தது.

சிற்றுறு (அரிசிலாறு) இருப்பிடம்: 8°·11′வ × 77°·21′கி.

**4. திதோவா** (Tittowa)

திதோவா என்பது திருவிதாங்கோடு (Travancore) என்ற சொல்லின் சிதைவே. திருவிதாங்கோடு என்ற சொல்லே இன்று திருவாங்கூர் (Travancore) என்று வழங்கப்பட்டு வருகிறது.

திரு அதன் கோடு என்பதே திருவிதாங்கோடு. தொல்காப்பியத்தில் அதங்கோடு என்றும், அதங்கோட்டாசான் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

"நிலம் தருதிருவின்—பாண்டியன் அவையத்து
அறம் கரைநாவின் நான்மறை முற்றிய
அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத்தெரிந்து."

—(**தொல்காப்பியம் :** சிறப்புப் பாயிரம் 9-11)

ஆகையால், திருஅதங்கோடு எனப்படும் திருவிதாங்கூர் (Travancore) தொல்காப்பியர் காலத்திலேயே விளங்கியது என்பதும், தாலமியால் குறிக்கப்படுவதால், அவர்க்கும் பல ஆண்டுகள் முன்னரே அது புகழ்பெற்றிருந்திருக்கவேண்டும் என்பதும், தொல்காப்பியம் கி.மு. முதல் நூற்றுண்டிலோ அல்லது அதற்கு முன்னரோ இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பதும் ஆகப் பல செய்திகள் இவ் வரலாற்ருல் தெரியவருகின்றன.

இப்பொழுது திருவிதாங்கோடு என்னும் ஊர் ஒன்று கன்னியாகுமரி மாவட்டத்தில் தக்கலைப்பகுதியில் (Takkalai) ஒரு சிற்றூராக உள்ளது.

தக்கலையில் உள்ள மூன்று ஊர்களைச் சற்று நோக்குவோம். அவை: 1. இரணியல், 2. கோதநல்லூர், 3. திருவிதாங்கோடு.

இவற்றுள் முதல் ஊர் இரணியல். இச் சொல் ஹிரண்யம் என் என்பதன் உருவமே. அங்கே பொன்முகலியாறு இருந்திருக்க வேண்டும் (ஹிரண்யம்-பொன்). இரண்டாவது ஊர் கோதநல்லூர். இதன் பழைய உருவம் வேதநல்லூர். நான்கு வேதங்களையும் கற்றறிந்த வேதியர் இருந்த ஊரே வேதநல்லூர். அதாவது சதுர் வேதபுரம். இதற்கடுத்தது திருவிதாங்கோடு. அங்கு ஒரு சிறுமலை இருந்திருக்கவேண்டும் (கோடு-மலை). அதன் பெயர் அதங்கோடு-ஆதன்மலை என்பதாகும்.

தொல்காப்பியப் பாயிரத்தில் இச் செய்திகள் யாவும் விரவிக் கிடக்கின்றன.

ஆக, தொல்காப்பியரின் ஆசிரியர் அதங்கோட்டு ஆசான் திருவிதாங்கோட்டில் இருந்திருக்கவேண்டும். தொல்காப்பியர், அவ்விடமிருந்த காப்பியக்குடியைச் சேர்ந்தவராக இருத்தல் வேண்டும் என்றும் இதனுல் தெரிகிறது.

மற்றும், தொல்காப்பியரின் தொல்காப்பியத்தைத் திறனாய்வு செய்தவர் நான்மறை முற்றிய அதங்கோட்டாசான் என்றும், அவர் நிலந்தரு திருவின் பாண்டியன் அவையில் தொல்காப்பியத்துக்குப் பாயிரம் அளித்தார் எனவும், திருவிதாங்கூர்ப் பகுதி அக்காலத்தில் பாண்டியன் ஆட்சியில் இருந்ததெனவும், பாண்டியன் அவை என்ற தால், தமிழ்ச்சங்கத்தில் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டது என்பன போன்ற செய்திகளும் இவ்வூர்ப் பெயருள் தொக்கி நிற்கின்றன. இவை, ‘ தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம்—பனம்பாரனுர் சொன்னது ’ என்றதால் அறியக்கிடக்கின்றன.

திருவிதாங்கோடு (அதங்கோடு)
இருப்பிடம் : 8°·02′வ × 77°·44′கி.

## 5. மண்டிட் ஃபோர் (Mandit Four)

மண்டிட் ஃபோர் (Mandit Four) என்ற சொல் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த நாங்குனேரி (Nanguneri) எனும் பகுதியைக் குறிப்பிடுகிறது. நான்குனேரி என்பது நாங்குனேரி ஆயிற்று. நாங்குனேரி என்பது நான்கு ஏரிகள் கொண்ட பகுதியாகும். நான்கனேரி என்ற சொல்லே (நான்கு + ஏரி) நாங்குனேரி என்று வழங்கப்படுவதாயிற்று.

நான்கு ஏரிகள் கொண்ட பகுதியே நான்கனேரி. அந்நான்கு ஏரிகளாவன :

1. ஆழ்வானேரி 2. சுரந்தனேரி 3. சிங்கனேரி 4. சடைனேரி.

ஆக, நான்கு ஏரிகளும் சேர்ந்த பகுதியே நான்கனேரி என்று வழங்கப்பட்டு, அந் நான்கனேரியே நாளடைவில் நான்குனேரியாக மருவிற்று. நான்குனேரியே நாங்குனேரி ஆயிற்று.

மண்டிட் (Mandit) என்ற சொல் மௌண்ட் (Mound) என்ற சொல்லின் திரிபே. மௌண்ட் என்ருல் உயர்த்தப்பட்ட கரைமண் அல்லது குவிக்கப்பட்ட பூமி எனப் பொருள்படும். ஆக, நான்கு ஏரிக் கரைகளாலும் உயர்த்தப்பட்ட பூமியே-இடமே-நான்கனேரி என்று வழங்கி, அதுவே இன்று நாங்குனேரியாக (Nanguneri) நிலைபெற்று நிற்பதாயிற்று. இன்றைக்கு நாங்குனேரி, திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்ததாகும்.

நாங்குனேரியின் இருப்பிடம் : 8°·29′வ × 77°·44′கி.

# 89. பாண்டி நாட்டு நகரங்கள்

*பாண்டி நாட்டிலுள்ள நகரங்கள்*[1] *பின்வருமாறு :*

| | |
|---|---|
| *தைனூர்*[2] | ... 124°·45′கி × 18°·40′வ. |
| *பெரிங்கரை*[3] | ... 123°·20′கி × 18°·00′வ. |
| *கொரிந்துயிர்*[4] | ... 125°·00′கி × 17°·40′வ. |
| *துங்கலா (நகா)*[5] | ... 123°·30′கி × 16°·50′வ. |
| *மொடூரா (அரசர் இருப்பிடம்)*[6] | ... 125°·30′கி × 16°·20′வ. |
| *ஆக்கூர்*[7] | ... 124°·45′கி × 15°·20′வ. |

## விளக்கவுரை

**1. பாண்டி நாட்டிலுள்ள நகரங்கள்** (Cities in the Pandyan **King-dom**)

இங்குப் பாண்டி நாட்டிலுள்ள நகரங்களைக் குறிப்பிடுகிறார். அதிகாரம் 11-ல் சில ஊர்களைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வதிகாரத்தில் விட்டுப்போன மற்ற இடங்களையும் குறிப்பிடுகிறார். பாண்டி நாடு என்பது தஞ்சை, திருநெல்வேலி இராமநாதபுரம் மாவட்டங்களைக் குறிப்பிடும். கன்னியாகுமரியும் சேர்ந்ததே.

**2. தைனூர்** (Thainoor)

இவ்விடம் திருச்செந்தூர் (Tiruchendur) எனும் இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளப்படுகிறது. இலக்கியத்தில், இவ்விடம் திருச்சீரலைவாய் என்று வழங்கப்படுகிறது.

> "உலகம் புகழ்ந்த ஒங்குயர் விழுச்சீர்
> அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே."

—(**திருமுருகாற்றுப்படை : 124-125**)

இவ்வூர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது. இது பாண்டியனுடைய ஆட்சியில் இருந்தது.

திருச்செந்தூரின் இருப்பிடம் : 8°·30′வ × 78°·11′கி.

**3. பெரிங்கரை** (Perinkarai)

இது வைகை நதிக்கரையில் உள்ள பெருங்கரை (**Perungarai**) என்பதாகக் கொள்ளப்படுகிறது.

மற்றும் திருநெல்வேலியில் உள்ள பெருங்குளம் (Perunkulam) என்னும் இடத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

பெருங்குளத்தின் இருப்பிடம்: 8°·33′வ×77°·58′கி.

**4. கொரிந்துயிர்** (Corindouir)

இது நவீன கோயம்புத்தூர் (Coimbatore) என்ற நாட்டைக் குறிப்பிடும். அதன் தலைநகரமும் கோயம்புத்தூரே. இச்சொல் கோவன்–புத்தூர் எனப் பிரிந்து, கோவன் எனும் அரசன் நிர்மாணித்த புதிய ஊர் எனப் பொருள்படும். அக்காலத்தில் கோயம்புத்தூர் பாண்டி நாட்டைச் சார்ந்திருந்தது.

கோயம்புத்தூரின் இருப்பிடம்: 11°·0′வ×77°·0′கி.

**5. தங்கலா (தகா)** (Tangala or Taga)

இது திருநெல்வேலி என்பதன் கிரேக்க உச்சரிப்பே. திருநெல்வேலி முன்னர் தானியகடகம் என்று வழங்கப்பட்டது. அந்நாட்டில் தாமிரபருணி நதி ஓடுகிறது. தாமிரபருணியைத் தாப்ரபனே (Tabrobane) என்று வழங்கினர். தாப்ரபனே இலங்கை நாட்டையும் குறிப்பிடும். தாப்ரபனே என்ற சொல் 'த்வீபராவணா' எனுஞ்சொல்லின் மாற்று உருவமே. இராவணன் இலங்கை வேந்தனல்லவா? ஆக, தாப்ரபனே இலங்கையைக் குறிப்பிடும் சொல்லாகும்.

திருநெல்வேலியின் இருப்பிடம்: 8°·44′வ×77°·44′கி.

தகா (Taga) என்பது தானியகடகம் (Danyakataga) என்பதன் குறுக்கமே. தானியகடகம், திருநெல்வேலியின் வட மொழிப் பெயர்ப்பே. ஆந்திர நாட்டில் தானியகடகம் விஜயவாடாவையும், நெல்லூரையும் குறிப்பிடும். நெல்லூர் (Nellore) என்பது தமிழ்ப் பெயரே. முன்னர் அது தமிழ் மன்னர் ஆட்சியில் இருந்தது.

**6. மொடீரா** (Modeira) **அரசர் இருப்பிடம்** (King's Residence)

மொடீரா (Modeira) என்ற சொல் மதுரையைக் (Madura) குறிப்பிடும். இது பாண்டிய மன்னர்களது தலைநகரமாக விளங்கிற்று. பழம் பெருமை வாய்ந்தது மதுரை மாநகரம். தமிழ் இலக்கியங்கள் பலவற்றிலும் விதந்தோதப்பட்டுள்ளது.

மதுரை வால்மீகி இராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. முதலில் கொற்கை, பாண்டியர் தலைநகரமாயிருந்தது. அதன் மறைவுக்குப் பின்னர், மதுரை தலைநகரமா

யிற்று. (அதிகாரம் 10, குறிப்பு-2 காண்க). கொற்கை, கபாடபுரம் என்றும் வழங்கப்பட்டது.

—(Vide History of Tamils by P. T. Srenivas a Iyengar, M.A. p. 242)

"மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே யதா அன்று"

—(சிறுபாணாற்றுப்படை : 67)

"புத்தேள் உலகங் கவினிக் காண்வர
மிக்குப்புக ழெய்திய பெரும்பெயர் மதுரை."

—(மதுரைக்காஞ்சி : 698-699)

"வானவர் உறையும் மதுரை வலம்கொளத்
தான்நனி பெரிதும் தகவு உடைத்து என்றுங்கு."

—(சிலப்பதிகாரம் : புறஞ்சேரி 181-182)

மற்றும், திருவிளையாடற் புராணம், கம்பராமாயணம், மதுரைக் கலம்பகம் முதலிய நூல்களிலும் மதுரையைப்பற்றிய விவரங்கள் பல கொடுக்கப்பட்டுள்ளன.

பாண்டிநாட்டு மதுரை, தென்மதுரை என்றும், வடநாட்டு மதுரை மத்ரா என்றும் வழங்கப்படுகின்றன.

மதுரையின் இருப்பிடம்: 9°·58'வ × 78°·10'கி.

பெரிப்ளூஸ், பிளினி, மெகஸ்தனிஸ் முதலிய நூல்களில் தமிழ் நாட்டு மதுரை குறிப்பிடப்பட்டுள்ளது.

பல நூற்றுண்டுகளாக, மதுரை பாண்டிய மன்னர்களின் தலை நகரமாயிருந்தது. அவ்வரசர்கள் மதுரையில் அரண்மனை கட்டிக் கொண்டு வாழ்ந்தனர்.

## 7. ஆக்கூர் (Accour)

இச் சொல் ஆற்றூர் என்பதன் மரூஉ. மேலாற்றூர், கீழாற்றூர் என இருவகைப்படும். இது தாமிரபருணி நதிக்கரை ஊர்களைக் குறிப்பிடுகிறது.

தாமிரபருணி நதி இருப்பிடம்: 8°·43'வ × 77°·46'கி.

# 90. படாய் நாடு

படாய் நாட்டின் உள்நாட்டு நகரங்கள்[1] பின்வருமாறு:

| | |
|---|---|
| களிந்தயா[2] | ... 127°·40′கி × 17°·30′வ. |
| படா[3] | ... 126°·30′கி × 17°·00′வ. |
| தலாரா[4] | ... 128°·00′கி × 16°·45′வ. |

## விளக்கவுரை

**1. படாய் நாட்டின் உள்நாட்டு நகரங்கள்** (The inside towns of the Country of Batai)

இங்குக் குறிப்பிடும் நகரங்கள் அதிகாரம் 12-ல் படாய் நாட்டில் கூறப்படாமல் விட்டுப்போன ஊர்களாகும். படாய் நாடு (Batai) என்பது கள்ளிமேட்டிலிருந்து (Point Calimere) தொடங்கி காவிரி கடலோடு கலக்கும் இடம்வரை குறிப்பிடப்படுகிறது. தஞ்சை மாவட்டம், திருச்சி மாவட்டத்தின் சில பகுதிகளும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.

படாய் என்ற சொல் பட்டினம் என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. இது சோழ மண்டலக் கடற்கரையைக் குறிப்பிடும்.

சோழ மண்டலத்தின் இருப்பிடம்: 12°·00′வ × 80°·30′கி.

**2. களிந்தயா** (Calindaya)

இச் சொல் கடலம் நதியையும் (பெண்ணுறு), அதன் கழிமுகத்தில் உள்ள கடலூர் (Cuddalore) என்ற ஊரையும் குறிப்பிடக் கூடும்.

கடலூரின் இருப்பிடம்: 11°·43′வ × 79°·49′கி.

**3. படா** (Bata)

படா எனுஞ்சொல் செங்கல்பட்டு (Chingleput) என்பதைக் குறிப்பிடலாம். இருப்பினும், படாய் என்பது மேலே சோழ மண்டலத்தைக் குறிப்பிடுகிறபடியால், இது கடற்கரையில் உள்ள ஒரு பட்டினமாகத்தானிருக்கவேண்டும். மயிலாப்பூர் முற்காலத்திலே புகழ்பெற்ற இடமாக விளங்கிற்று. அதையே பட்டினம் எனக் கொண்டு, அப்பட்டினத்தையே படா (Bata) என வழங்குகிருர் போலும்.

மயிலாப்பூரின் இருப்பிடம்: 13°·4′வ × 80°·17′கி.

**4. தலாரா** (Talara)

இச் சொல் திருவாரூர் (Thiruvarur) எனப்படும் ஊரைக் குறிப்பிடக்கூடும். திருவாரூர் தஞ்சை மாவட்டத்தில் (Tanjore Dt.) உள்ளது. மனுநீதிச் சோழன் காலம் முதல் புகழ் பெற்றிருந்தது. தேவாரம் எனும் தெய்வமணம் கமழும் திருநூலில் பலவிடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. திருவாரூர்த் தேர்விழா சிறப்புப் பொருந்தியது.

**பெரிய புராணத்தில் திருவாரூர் :**

"திருவாரூர் தனைநினைந்து சென்று தொழுவேனென்று"

—(**பெரிய புராணம் :** கழறிற்றறிவார் 157)

"தேரூரும் நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருளி."

—(**பெரிய புராணம் :** கழறிற்றறிவார் 159)

**தேவாரத்தில் திருவாரூர் :**

"அட்டானை ஆரூரில் அம்மானை ஆர்வச்செற்றக் குரோதம்."

—(**திருநாவுக்கரசர் தேவாரம் :** திருவாரூர்-பழமொழி 9)

"ஆயிரம் பேருகந்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே."

—(**திருநாவுக்கரசர் தேவாரம் :** திருவாரூர் 8)

"ஆரூர் தில்லையம் பலம்வல் லந்நல்லம் வடகச்சியுமச்
சிறுபாக்கம் நல்ல
கூரூர் குடவாயில் குடந்தைவெண்ணி கடல்சூழ் கழிப்பாலை
தென்கோடி பீடார்"

—(**திருஞான சம்பந்தர் தேவாரம் :** திருக்ஷேத்திரக் கோவை 1)

திருவாரூரின் இருப்பிடம் : 10°·47′வ × 79°·42′கி.

---

# 91. பராலியா நகரங்கள்

பராலியா நாட்டில் உள்ள நகரங்கள்[1] பின்வருமாறு காணப்படுகின்றன. அவை சோரிநாய்[2] என்பதைச் சார்ந்தனவாகும்.

| | |
|---|---|
| காளியூர்[3] | ... 129°·00′கி × 17°·20′வ. |
| தென்னகரா[4] | ... 132°·00′கி × 17°·00′வ. |

| | |
|---|---|
| ஐக்கூர்[5] | ... 131°·00′கி × 17°·00′வ. |
| ஆர்த்தூர் (சேரர் நகர் அரண்மனை)[6] | ... 130°·00′கி × 16°·40′வ. |
| பெரே[7] | ... 130°·20′கி × 16°·15′வ. |
| அபௌர்[8] | ... 130°·20′கி × 16°·00′வ. |
| காமாரா[9] | ... 130°·20′கி × 15°·40′வ. |
| மகோர்[10] | ... 130° 00′கி × 15°·15′கி. |

## விளக்கவுரை

**1. பராலியா நாட்டில் உள்ள நகரங்கள்** (Towns in the Country of Paralia)

பராலியா என்ற சொல் காவிரிக்கரை சார்ந்த நாடாகும். பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50–80), பராலியா என்பது தென் திருவிதாங்கூர் நாட்டைக் குறிப்பிடுவதாகக் கொண்டுள்ளார்.

"மற்றொரு மாவட்டம் தெற்கு நோக்கிக் கடல் ஓரமாகவே பரவி நிற்கிறது. அதன் பெயர் பராலியா. இதன் முதலிடம் பாலிதா என்று பெயர் பெறும்."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 58, குறிப்பு-4, பக்கம் 255)

பராலியா அதிகாரம் 13, குறிப்பு-1-ல் ஏற்கெனவே குறிப்பிடப் பட்டுள்ளது. இது காவிரிநதிக் கழிமுகத்தைக் குறிப்பிடுகிறது.

காவிரிநதிக் கழிமுகம் இருப்பிடம்: 11°·20′வ × 77°·50′கி.

**2. சோரிதாய்** (Soretai)

சோரிதாய் என்ற சொல் சோழ நாட்டைக் (Chola Country) குறிப்பிடுகிறது.

அதிகாரம் 8, 9-ல் சேர நாட்டையும், அதிகாரம் 10, 11-ல் பாண்டி நாட்டையும், இவ்வதிகாரத்தில் சோழ நாட்டையும் குறிப்பிடுகிறார்.

சோழ மண்டலக் கடற்கரை என்ற சொல்லே கோரமாண்டல் கோஸ்ட் (Coramandal Coast) என்று வழங்கப்பட்டது. சோழ மண்டலம் என்பதைத்தான் ஆங்கிலேயர்கள் கோரமண்டலம் என்று உச்சரித்து, அதையே கோரமாண்டல் கோஸ்ட் என்று உறுதியாக நிலைபெறச் செய்துவிட்டனர். சோழமண்டலம் என்ற பெயர்,

சோரமண்டலம் என்ருகி, சோரமண்டலத்தில் (Choramandalam) உள்ள சோர (Chora) என்பதைக் கோரா என உச்சரித்து, சோர மண்டலத்தைக் கோரமண்டலம் ஆக்கிவிட்டனர்.

சோழமண்டலக் கடற்கரை இருப்பிடம்: 12°·0′வ×80°·30′கி.

**3. காளியூர்** (Caliyur)

இது சீர்காழி (Sirkali) எனப்படும் சிவத்தலத்தைக் குறிப்பிடக் கூடும். சீர்காழி என்பதே காழியூர் என்று ஆழ்வார்களால் குறிப் பிடப்பட்டுள்ளது.

"தேன்முகமார் கமலவயல் சேல்பாய் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே."

**—(பெரிய திருமொழி: 3-4-2)**

சீர்காழியின் வேறு பெயர் பிரமபுரம், திருப்பிரமபுரம் என்று வழங்கப்படுகிறது. பிரமன் பூசித்தமையால் இப் பெயர் பெற்றது. சீர்காழியின் மற்ற பெயர்கள்: வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, கொச்சை வயம், கழுமலம்.

"ஏடுடைய மலரான்முனை நாட்பணிந்தேத்த அருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவ னன்றே."

**—(திருஞான சம்பந்தர் தேவாரம்:** திருப்பிரமபுரம் **1)**

"சுண்ணமாடிய தோணிபு ரத்துறை
அண்ண லாருக்குச் சால அழகிதே."

**—(திருநாவுக்கரசர் தேவாரம்:** திருப்பிரமபுரம் **5)**

தோணிபுரநாதர் மலைமேல் சட்டநாதர் நின்ற திருக்கோலத் தில் புனுகு சாத்தப்பட்ட திருமேனியுடன் காட்சியளிக்கிருர்.

சீர்காழியின் இருப்பிடம்: 11°·11′வ×79°·49′கி.

**4. தென்னகரா** (Thennagara)

தென்னகரா என்ற சொல் தென்னரங்கம் எனப்படும் ஸ்ரீரங் கத்தைக் குறிப்பிடுகிறது. திருவரங்கம் என்று ஆழ்வார்களால் மங்களாசாசனம் பெற்றது.

"மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை
யளித்திருப்பார்
சிறப்புடைய மறையவர்வாழ் திருவரங்க மென்பதுவே."

**—(பெரியாழ்வார் திருமொழி: 4-8-2)**

புனலரங்கம், தண்ணரங்கம், திருவரங்கம், சீரரங்கம், மதிள ரங்கம், ஒளியரங்கம், அணியரங்கம்—இவை ஸ்ரீரங்கத்தின் வேறு பெயர்கள்.

"தென்னாடும் வடநாடும் தொழநின்ற
திருவரங்கம் திருப்பதி யின்மேல்."
—(பெரியாழ்வார் திருமொழி : 4-9-11)

ஸ்ரீரங்கம் இருப்பிடம் : 10°·52′வ × 78°·44′கி.

**5. ஐக்கூர்** (Eicour)

இது கோரி (Cori) என்ற சொல்லின் சிதைவே. கோரி என்பது தனுஷ்கோடி (Dhanushkoti)யைக் குறிப்பிடும். கோடி-கோடியில் உள்ளது என்பது பொருள். கோடி என்ற சொல்லைக் கோரி என்று வழங்கினர் போலும்.

இராமாயணத்தில் இராமர் இலங்கைக்குச் செல்லும்பொழுது தனுஷ்கோடியில் தங்கியிருந்ததாகக் கூறப்படுகிறது.

தனுஷ்கோடி இன்று கடலால் அரிக்கப்பட்டுக் கிடக்கின்றது. அதை மீட்க ஏற்பாடுகள் நம் அரசாங்கத்தால் செய்யப்பட்டு வருகின்றன.

தனுஷ்கோடியின் இருப்பிடம் : 9°·10′வ × 79°·28′கி.

**6. ஆர்த்தூர் (சோர்நகர் அரண்மனை)** (Orthoura, Palace of Sornagar)

இச்சொல் உறந்தை என்று வழங்கப்படும் உறையூர் (Woriyur) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. உறையூர் சோழர்களின் தலைநகரமாயிருந்தது. சோர்நகர் என்பது சோழ அரசர் (Chola King) என்பதன் மரூஉ.

உறந்தை எனப்படும் உறையூர் திருச்சிராப்பள்ளிக்கு 5 கிமீ. தொலைவில் உள்ளது. உறையூர், உறந்தை அதிகாரம் 11, குறிப்பு-5 ஆர்கரு என்ற பகுதியில் விரிவாக ஏற்கெனவே விவரிக்கப் பட்டுள்ளன. தமிழ் இலக்கியங்களில் உறந்தை குறிப்பிடப்பட் டுள்ளது.

"காவிரிப்படப்பை உறந்தை அன்ன."
—(அகநானூறு : 385)

உறையூரின் இருப்பிடம் : 10°·50′வ × 78°·46′கி.

சோழ அரசர் அரண்மனை உறையூரில் இருந்தது என்பதைச் 'சோர்நகர் அரண்மனை' என்று தாலமி குறிப்பிடுகிறார்.

பிளினி (கி.பி. 23-79), பெரிப்ளூஸ் நூலாசிரியர் (கி.பி. 50-80) ஆகியவர்கள் உறையூரைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

பிளினி உறையூரை ஒதென்பரோ (Odenborough) என்று வழங்கினுர். உறந்தை என்ற சொல்லே ஒதென்பரோ என வழங்கப் பட்டது.

—(பிளினி : புத்தகம் VI, அதிகாரம் 23, பக்கம் 38)

பெரிப்ளூஸ் நூல் கூறுகிறது :

"அந் நாட்டின் உள்ளே சென்ருல், ஆர்கரு எனும் ஊர் காணப்படும். கடற்கரையில் எடுக்கப்படும் முத்துக்கள் யாவும் இவ்விடத்துக்கு மட்டுமே கொண்டுவரப்படுகின்றன. மற்றும் அங்கிருந்து புகழ்மிக்க ஆர்கருத் துணிகள்—மஸ்லின் துணிகள்—பெருவாரியாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன."

—(பெரிப்ளூஸ் : அதிகாரம் 59, குறிப்பு-7, பக்கம் 262)

"ஊர் எனப்படுவது உறையூரே" என்பது பழமொழி. உறையூரில் தமிழ்ப்புலவர்கள் பலர் இருந்தனர். அதிகாரம் 11, குறிப்பு-5, பக்கம் 76 பார்க்கவும்.

**7. பெரே** (Berae)

இது திருச்சிராப்பள்ளி—கரூர் பாதையில் உள்ள பராய் மரங்கள் அடங்கிய திருப்பராய்த்துறை (Tiruparaithurai) என்னும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது திருச்சியிலிருந்து 13 கிமீ. (8 மைல்) தொலைவில் உள்ளது.

திருப்பராய்த்துறை தேவாரப்பாடல் பெற்ற தலமாகும்.

"பரப்பு நீர்வரு காவிரித் தென்கரைத்
திருப்பராய்த் துறை மேவிய செல்வரே!"

—(திருநாவுக்கரசர் தேவாரம் : திருப்பராய்த்துறை 1)

திருப்பராய்த்துறையின் இருப்பிடம்: 10°·58′வ × 78°·39′கி.

**8. அபௌர்** (Aboure)

அபௌர் (Aboure) என்ற சொல் ஜைனர்களின் பள்ளி என்பதைக் குறிப்பிடுகிறது. திருச்சிராப்பள்ளி ஒரு காலத்தில் சைனப் பெருமக்களுடைய முக்கிய உறைவிடமாக விளங்கிற்று. ஜினப் பள்ளி என்பதே அதன் முதற்பெயர். நாளடைவில் ஜைனர் ஆதிக்கம் குறைந்தவுடன், திருஞான சம்பந்தர் காலத்துக்குப் பிறகு (கி.பி. 7ஆம் நூற்ருண்டு) ஜினப்பள்ளியே திருச்சிராப்பள்ளி யாக மாறிவிட்டது—நடுவில் இருக்கும் கற்கோட்டைமீது கட்டப்

பட்ட சிவன் திருநாமத்தை முன்னிட்டு. பள்ளி என்பது சைனர்கள் கோயில் என்னும் பொருள்படும் சொல்லாகும்.

திருச்சிராப்பள்ளி தேவாரப்பாடல் பெற்ற தலம்.

"திருச் சிராப்பள்ளி என்றலும் தீவினை
நரிச்சிராது நடக்கும் நடக்குமே."
—(திருநாவுக்கரசர் தேவாரம்: திருச்சிராப்பள்ளி 3)

திருச்சிராப்பள்ளியின் இருப்பிடம்: 10°·50'வ × 78°·46'கி.

இப் பெயரைச் சிலர் வட ஆர்க்காட்டிலுள்ள ஆம்பூர் (Ambur) என்றதைக் குறிப்பிடுகிறது என்று கருதுகின்றனர். திருச்சிக்கு அடுத்தபடியாக இதைக் குறிப்பிடும்பொழுது, இச் சொல் ஆம்பூரைக் குறிப்பிடுகிறது என்பது பொருந்தாது.

**9. காமாரா (Camara)**

காமாரா (Camara) என்ற சொல் காவிரிப்பூம்பட்டினத்தைக் குறிப்பிடும். கிரேக்க உச்சரிப்பில் காமாரா என்று வழங்கப் பட்டது.

பிளினி (கி.பி. 23-79) காவிரிப்பூம்பட்டினத்தைக் காமாரா (Camara) என்றே வழங்கினார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 25, குறிப்பு 56, பக்கம் 101)

பெரிப்ளூஸ் நூல் (கி.பி. 50-80) கூறுகிறது:

"வடக்கில் இருந்துவரும் கப்பல்கள் தங்குவதற்கு வசதியான இடங்களுள் முதன்மைத்தானம் வகிப்பது காமாரா என்பதாகும்."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 60, குறிப்பு-3, பக்கம் 265)

காவிரிப்பூம்பட்டினம் மற்றோர் இடத்தில் காபேரிஸ் எம்போரியம் (Chaberis Emporeum) என்று வழங்கப்பட்டுள்ளது (பக்கம் 81).

காவிரிப்பூம்பட்டினத்தின் இருப்பிடம்: 11°·1'வ × 79°·54'கி.

அதிகாரம் 13, குறிப்பு-4-ல் காபேரிஸ் என்ற பகுதியில் காவிரிப் பூம்பட்டினம் ஏற்கெனவே விவரிக்கப்பட்டுள்ளது.

காவிரிப்பூம்பட்டினத்தின் பல பகுதிகள், கி.பி. 79ஆம் ஆண்டு ஆகஸ்டு 23, 24ஆம் நாள்களில் ஏற்பட்ட கடல்கோள் காரணமாக மிகுந்த சேதமுற்று மூழ்கிவிட்டன.

"இதற்கடுத்து நிகழ்ந்த கடல்கோளால் (கி.பி. 3ஆம் நூற்றுண்டு இறுதி) காவிரிப்பூம்பட்டினம், மலங்கே (மகாபலிபுரம்) முழுவதும் அழிந்துவிட்டன."

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 58, குறிப்பு-7, பக்கம் 257)

தாலமி, தமக்கு முன்னர் இருந்த ஸ்டிராபோ, பிளினி, பெரிப்ளூஸ் ஆசிரியர், அர்ரியன் ஆகியவர்கள் கூறியவற்றையே கூறுகிருர்.

இவ்வூரின் முதற்பெயர் சம்பாபதி. பின்னர், இது காவிரிப்பூம் பட்டினம் என்றும், புகார் என்றும், பூம்புகார் என்றும் பல பெயர்களால் வழங்கப்பட்டது. மற்றும், அதிகாரம் 13, குறிப்பு-4 பார்க்கவும்.

காவிரிப்பூம்பட்டினத்தைப்பற்றி பட்டினப்பாலை எனும் தமிழ் இலக்கியம் மிக விரிவாகக் கூறுகிறது.

**10. மகோர் (Maghore)**

இச்சொல் மகோதை என்றதன் திரிபே. மகோதை-மாகோதை-இவ்விரு சொற்களும் பொன்னி, காவிரி எனப்படும் நதியைக் குறிப்பிட்டது. பொதுவாக, மகோதை என்பது கொடுங்களூரையும், தாமிரபருணி நதியையும் குறிப்பிடும். ஆனுல், அரசர் பவனிவரும் இடம் என்ற பொருளிலேதான் அச்சொற்கள் பயன் படுத்தப்பட்டன.

"அரசர் பவனிவரும் இடம் மகோதை எனப்படும்."

—(Vide Tamil Lexicon-Vol.-V, p. 2997)

காவிரிப்பூம்பட்டினத்தில் அரசர் வாழும் இடம், அப்பட்டினத்துக்கு 3 கிமீ. வடக்கே இருந்தது.

காவிரிப்பூம்பட்டினத்தின் இருப்பிடம்: 11°·1'வ × 79°·54'கி.

---

# 92. அரவரணை நகரங்கள்

*அரவரணை[1] என்று வழங்கப்படும் இடத்தில் காணப்படும் நகரங்கள் பின்வருமாறு:*

| | |
|---|---|
| *கெரூகே[2]* | ... 133°·00'கி × 16°·15'வ. |
| *பிரூரியான்[3]* | ... 132°·00'கி × 15°·00'வ. |
| *காரிகே[4]* | ... 131°·50'கி × 14°·40'வ. |
| *போலியூர்[5]* | ... 131°·30'கி × 14°·40'வ. |
| *பிகெண்டகா[6]* | ... 131°·30'கி × 14°·00'வ. |

| | |
|---|---|
| இயத்தூர்[7] | .... 132°·30′கி × 14°·00′வ. |
| ஸ்கோபோலூரா[8] | ... 134°·15′கி × 14°·35′வ. |
| இகர்டா[9] | ... 133°·30′கி × 13°·40′வ. |
| மலங்கே (பஸரோ நாகோ அரண்மனை)[10] | .... 133°·00′கி × 13°·20′வ. |
| காந்திபட்ணு[11] | ... 133°·30′கி × 12°·20′வ. |

## விளக்கவுரை

### 1. அரவரணை (Arovarnai)

அரவரணை என்ற சொல் அருவா நாடு (Aruvanadu) என்பதன் கிரேக்க உச்சரிப்பே. அதிகாரம் 14, குறிப்பு-1 பார்க்கவும். இது தென் ஆர்க்காட்டுப் பகுதிகளைக் குறிப்பிட்டது. அருவா வடதலை என்பது செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள இடங்களைக் குறிப்பிட்டதாகும். சோழ மண்டலம், தொண்டை மண்டலம் இவையே அரவரணை குறிப்பிட்ட பகுதிகளாகும்.

### 2. செருகே (Cerugae)

இது கரைநாடு (Carainadu) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பாகும். கரைநாட்டில், கடலுடன் கலக்கும் கொல்லடம் (Coleroon) எனும் நதிப் பகுதிகளை இது குறிப்பிடும்.

கொல்லடம் இருப்பிடம்: 11°·24′வ × 79°·49′கி.

### 3. பிரூரியான் (Phrourian)

பிரூரியான் என்ற கிரேக்கச் சொல்லுக்குக் கோட்டை (Fort) என்பது பொருள். பல்லவர்கள் பல்லாவரத்தில் கோட்டைபோன்ற அமைப்பு ஒன்றை அங்குள்ள குன்றுகளில் அமைத்துக்கொண்டிருந்தனர். பல்லவர்புரம் என்பதே நவீன பல்லாவரம் (Pallavaram) ஆக மருவிற்று. பல்லாவரம் சென்னைக்கு 20 கிமீ. தெற்கில் உள்ளது.

பல்லவர் என்பார் ஆந்திர நாட்டின் தென்பகுதியையும், சோழ மண்டலக் கரையையும் ஆண்ட மன்னர்கள் ஆவர். இவர்கள் கி.பி. இரண்டாம் நூற்றுண்டிலே சிற்றரசர்களாக வாழத் தொடங்கியிருக்கவேண்டும். இச் சொல் பஹ்லவர் என்றதன் வடிவமே என்று டாக்டர் ஃப்ளீட், திரு. வின்சென்ட் ஸ்மித் முதலான பேராசிரி

யர்கள் கருத்தைத் தெரிவித்துள்ளார்கள். பின்னர், வின்சென்ட் ஸ்மித், தாம் முன்கூறிய கருத்தை மாற்றிக்கொண்டு, அவர்கள் தனி ஓர் அரச இனத்தைச் சார்ந்தவர் என்று கூறியுள்ளார்.

—(Vide The Early History of India By Vincent Smith, M.A. p. 432)

பல்லவ மன்னர்களுள் புகழுடைந்த முதல் மன்னர் விஷ்ணு கோபன் எனப்படுவார். அவரைச் சமுத்திரகுப்தர் கி.பி. ?48ஆம் ஆண்டு நடந்த போரில் வென்றதாகக் கூறப்படுகிறது. அவ் விஷ்ணு கோபன், காஞ்சிபுரத்தில் அரசாண்டு வந்தான். ஒரு பெரும் அரசன் ஒரு நாட்டை தனதாக்கிக்கொண்டு அரசாள வேண்டு மாயின், குறைந்தது அவர்களுடைய முன் சந்ததியார் ஒரு நூறு ஆண்டுகளுக்கேனும் முன்னர் விளங்கியிருக்கவேண்டும். ஆகை யால், பல்லவர் சிற்றரசர்களாகக் கி.பி. இரண்டாம் நூற்றுண்டில் விளங்கிவந்தனர் என்பது ஒப்புக்கொள்ளத்தக்கதே.

—(Vide An Advanced History of India, By Dr. R.K. Mookerjee p. 172)

இலங்கையில் உள்ள மணிபல்லவம் (Manipallavam) பல்லவச் சிற்றரசர்களால் ஆளப்பட்டதாகும் என இலங்கை வரலாறு கூறு கிறது. மணிபல்லவம் என்னும் தீவு மணிமேகலை என்னும் காவி யத்தில் கூறப்படுகிறது :

"மணிபல் லவம்வலம் கொண்டால் அல்லது
பிணிப்புறு பிறவியின் பெற்றியை அறியாய்."

—(மணிமேகலை : ஆபுத்திரனோடு மணிபல்லவம் 25-26)

மற்றும், காஞ்சீபுரத்துக்கும் மணிபல்லவத் தீவுக்கும் தொடர்பு இருந்ததாகக் கூறப்படுகிறது. பணிபல்லவத் தீவிலிருந்து வந்து தமிழ்நாட்டில் குடியேறிய அரச பரம்பரையே பல்லவர் (Pallava) ஆவர் என்றும் வரலாறு விளக்கம் அளிக்கிறது.

ஆக, எவ்வாறிருப்பினும், பல்லவர் அயல் நாடுகளிலிருந்து இந்தியா புகுந்து குடியேறியவர்களே என்பது மேற்கூறிய இரு கருத்துகளாலும் பெறப்படுகின்றது.

பல்லாவரம் இருப்பிடம் : 12°·58′வ × 80°·13′கி.

மற்றும், பிரூரியான் என்ற சொல் கோட்டையை உணர்த்தும் என மேலே கண்டோம். இக் கோட்டை செயின்ட் தாமஸ் முனிவர் பெயரால் வழங்கப்படும் பரங்கிமலையைக் (St. Thomas Mount) குறிப்

பிடவும் கூடும். அம்மலையில் தாமஸ் முனிவர் தம் இருப்பிடத்தைக் கொண்டதாகவும், இறுதியில் அவர் எலும்புச் சின்னங்களின் மீது ஒரு வேதக்கோயில் எழுப்பப்பட்டதாகவும் அம்மலைமீது பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

இச் சிலாசாசனத்தைச் செயின்ட் தாமஸ் முனிவருக்காகக் கட்டப்பட்ட பரங்கிமலைமீதுள்ள கோவிலுள் காணலாம்.

"முன் ஹாமிச் மெஷிகாய் அவக்ஷாயி மதாம்–
அப்ரா-ஷிக் கார் பக்தோ சுர்ஜேமுன் பன்தாரோ தீனு."

இக் கல்வெட்டு, சிசேனியன் எழுத்துக்களில், பஹ்லவி மொழியில் செதுக்கப்பட்டுள்ளது. பஹ்லவி என்பது பல்லவர்களின் மொழி. பல்லவர் என்பது பஹ்லவர் என்ற சொல்லின் மரூஉவாகும்.

—(Saint Thomas By F.A. De Cruz, p. 116)

மேற்காட்டப்பட்ட கல்வெட்டு வாசகத்தின் பொருள் :

"எவர்கள் மெசையாவையும், புனித ஆவியாக விளங்கும் ஆண்டவரையும் நேசிக்கிறார்களோ, அவர்களுக்குத் துன்பந்தந்த சிலுவையை ஏந்திச் சென்ற இரட்சகரின் அருள் முழுவதும் கிடைக்கும்."

தாமஸ் முனிவர் இந்தியாவுக்கு வந்து மேலைக்கடற்கரையில், கள்ளிக்கோட்டையில் இறங்கினார் என்ற செய்தியும், அவ்வாறு அவர் இறங்கியது கி.பி. 52 ஆகும் என்ற செய்தியும் அவர் இந்தியாவில் 17 ஆண்டுகள் இருந்தார் என்ற செய்தியும் வரலாற்றுப் பேராசிரியர்களால் ஒருமிக்க ஒப்புக்கொண்டதாகும்.

—(In the Steps of St. Thomas By Rt. Rev. Herman De Souza, p. 23)

மற்றும், அதிகாரம் 14, குறிப்பு-4 பார்க்கவும்.

ஆக, பிரூரியான் எனும் சொல் பரங்கிமலை (St. Thomas Mount) யைக் குறிப்பிடுகிறது என்பது ஏற்றுக்கொள்ளக் கூடியதே. தாமஸ் மலை என்பது அவ்விடத்தில் வெள்ளையர் (பறங்கியர்-Franks) படையை ஏற்படுத்தியபிறகு, பரங்கிமலை என மாற்றமடைந்து விட்டது. இது கி.பி. 1850-க்குமேல் ஏற்பட்ட நிகழ்ச்சியாகும்.

**4. காரிகே (Carigae)**

காரிகே (Carigae) என்ற சொல் காரைக்கால் எனும் பகுதியைக் குறிப்பிடுகிறது. இச் சொல்லைப் பயன்படுத்தியே, கிழக்குக்

கரையைக் கரைநாடு என்று குறிப்பிட்டார்.—(அதிகாரம் 88, குறிப்பு-1 காண்க).

காரைக்கால் பகுதியில் இருந்த வேளாளர்கள் அன்று காராளர் என்ற பெயரால் வழங்கப்பட்டனர். காரைக்காலில் உள்ளவர்கள் என்பதே அதன் பொருள்.

காரைக்காலம்மையார் என்ற சிவநேசச் செல்வியும் காரைக் காலைச் சேர்ந்தவரே :

"கானல்மிசை உலவுவளம் பெருகு திருக்காரைக்கால்."

—(பெரிய புராணம் : காரைக்காலம்மையார் 1)

காரைக்காலின் இருப்பிடம் : 10°·55′வ×79°·52′கி.

**5. போலியூர் (Poliyoor)**

இச் சொல் புலியூர் என்பதன் கிரேக்க உச்சரிபேயாகும். புலியூர் என்பது சிதம்பரத்தைக் குறிப்பிடுகிறது. அல்லது திருப்பாதிரிப் புலியூர் (Tiruppapuliyur) எனப்படும் கடலூரைக் (Caddalore) குறிப்பிடுவதாகவும் கொள்ளலாம்.

"பெரியானை பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!"

—(திருநாவுக்கரசர் தேவாரம் : பெரிய திருத்தாண்டகம் 1)

சிதம்பரம் (Chidambaram) என்ற சொல்லின் உருவம் சிற்றம் பலம் என்பதே. இது பொன்னம்பலம், கோயில், தில்லை என்று பல பெயர்களாலும் வழங்கப்படுகிறது. சிதம்பரத்தில் நடராசர் தரிச னமும், தில்லைக் கோவிந்தராஜர் தரிசனமும் மனத்திற்கு இன் பமும், அமைதியும் தருவனவாகும். சிதம்பரக் கோவிலில் கல் வெட்டுகளும் சிற்பங்களும் உள்ளன. 108 நடன முத்திரைகள் கற்றூண்களில் செதுக்கப்பட்டுள்ளன.

சிதம்பரத்தின் இருப்பிடம் : 11°·24′வ×79°·44′கி.

**6. பிகெண்டகா (Picandeca)**

இது வட ஆர்க்காட்டில் உள்ள பள்ளிகொண்டா (Pallikonda) என்ற இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். கெண்டகா என்பது கொண்டா (மலை) என்பதன் திரிபே. தெலுங்கில் கொண்டா (மலை) என்ற சொல் கொண்ட பெயர்கள் பல உள்ளன. வினுகொண்டா, பட்டிகொண்டா, கோல்கொண்டா முதலியன. பள்ளிகொண்டான் என்பதே பள்ளிகொண்டா ஆயிற்று.

பள்ளிகொண்டா, குடியாத்தம் அருகில் உள்ளது. இங்கு அரங்கநாதர் ஆலயம் உள்ளது.

பள்ளிகொண்டாவின் இருப்பிடம்: 12°·57′வ×78°·55′கி.

## 7. இயத்தூர் (Iyatoor)

இயத்தூர் (Iyatoor) என்பது ஆற்றூர் என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. ஆற்றூர் எனப்படும் ஊர்கள் பல உள்ளன. ஆற்றங்கரைகளில் ஏற்பட்ட பெரும்பாலான ஊர்கள் ஆற்றூர் என்று வழங்கப்பட்டன. சேலம் மாவட்டத்தில் ஓர் ஆற்றூரும், திருநெல்வேலியில் ஓர் ஆற்றூரும் பெரிய ஊர்களாகும். மதுரை மாவட்டத்தில், திண்டுக்கல் அருகில் ஓர் ஆற்றூர் உள்ளது. ஆற்றூர் என்பதே ஆத்தூர் என மருவிற்று.

இங்குக் கிழக்குக்கரை நாட்டினைக் குறிப்பிடுவதால், இச்சொல் சேலம்-ஆற்றூரைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

இதுபோல ஆற்றை அணியாகக்கொண்ட ஊர்கள் பல உள. அவை: செய்யாறு (சேய்+ஆறு), அடையாறு, மணிமுத்தாறு, கயத்தாறு முதலியனவாம்.

சேலம்-ஆற்றூரின் இருப்பிடம்: 11°·36′வ×78°·39′கி.

## 8. ஸ்கோபோலூரா (Scopolaura)

போலூரா (Polaura) என்பது பாலாறு (River Palar) என்பதைக் குறிப்பிடும். ஸ்கோபோலூரா என்பது பாலாற்றங்கரை ஊர் எனப் பொருள்படும். இது செங்கற்பட்டு என்ற ஊரைக் குறிப்பிடும். தாலமி காலத்தில் செங்கல்பட்டு, பாலாற்றங்கரைமீது இருந்திருக்கவேண்டும். நாளடைவில் நதிகள் தம் போக்கை மாற்றிக்கொள்வதால், சில பகுதிகள் ஆற்றங்கரைமீது இல்லாமல், ஒதுங்கியே நிற்கின்றன. இதுபோல ஆற்றின் மாறுபட்ட திசை காரணமாக செங்கற்பட்டும் ஒதுங்கி நிற்கலாயிற்று.

செங்கழுநீர்பட்டு என்றால் செங்கழுநீர்ப்பூக்கள் மிகுதியாக உள்ள பேட்டை என்பது பொருள். இதுவே செங்கற்பட்டு என மருவிற்று.

செங்கற்பட்டின் இருப்பிடம்: 12°·42′வ×80°·1′கி.

சிலர் இச்சொல் வட ஆர்க்காட்டிலுள்ள போளூர் (Polur) என்னும் ஊரைக் குறிப்பிடுவதாகக் கருதுகின்றனர். ஆனால், போளூர் என்ற பகுதி பிற்காலத்தில் ஏற்பட்டதேயாகும்.

**9. இகர்டா (Igarta)**

இது ஆர்க்காடு (Arcot) என்னும் பகுதியைக் குறிப்பிடுகிறது. ஆர் என்ற சொல் ஆத்தி என்று பொருள்படும். ஆத்தி மரங்கள் நிறைந்த காடுகள் இருந்ததால், இவ்விடம் ஆர்க்காடு எனப் பெயர் பெற்றது. (அதிகாரம் 68, குறிப்பு-5 காண்க.)

ஆர்க்காட்டின் இருப்பிடம்: 12°·56′வ×79°·24′கி.

**10. மலங்கே (பஸரோ நாகோ அரண்மனை) [Malangae, the Palace of (Capital of) Basaro Nago]**

மலங்கே என்ற சொல் நிலமங்கை என்பதன் திரிபே. அங்கு உள்ள கோயிலின் பெருமாள் திருநாமம் தலசயனப் பெருமாள்; பிராட்டியார் பெயர் நிலமங்கை. இவ்விடம் கடல்மல்லை என்றும், தலசயனம் என்றும் வழங்கப்படுகிறது (அதிகாரம் 14, குறிப்பு-3).

மலங்கே என்பது நவீன மகாபலிபுரம் இருந்த இடத்தின் பழைய பெயரே. மகாபலிபுரம் என்பது மாமல்லபுரம் என்பதன் மரூஉ. மாமல்லபுரம் ஒரு துறைமுகமாக விளங்கிற்று. மாமல்லபுரச் சிற்பங்கள் புகழ்பெற்றவை. அங்குப் பல சிறு குன்றுகள் இருக்கின்றன. கடற்கரைக் கோயிலுக்கருகில் ஒரு கலங்கரை விளக்கமும் இருக்கிறது. இதுவே அவ்விடம் துறைமுகமாக விளங்கியதற்குப் போதிய சான்றாகும்.

" தண்ணார்ந்த கடல்மல்லைத் தலசயனத்து உறைவாரை
எண்ணாதே யிருப்பாரை இறைப்பொழுதும் எண்ணோமே."
—(பெரிய திருமொழி: 2-6-11)

மலங்கே (Malange) ஏற்கெனவே அதிகாரம் 14-ல் விளக்கப்பட்டுள்ளது. 'கச்சிக் கடல்மல்லை' என்பதனால், காஞ்சீபுரம் தலைநகரமாகவும், கடல்மல்லை அந்நாட்டின் துறைமுகமாகவும் விளங்கிற்று என்பது விளங்குகிறது.

கடல்மல்லை பெருந்துறைமுகமாக இருந்த காரணத்தால், அது ஒரு வாணிகச்சந்தையாக விளங்கிற்று.

மார்க்கோபோலோ (கி.பி. 1254-1324) மகாபலிபுரத்தைப் பற்றிக் குறிப்புகள் பல கொடுத்துள்ளார்.

—(மார்க்கோபோலோ: பக்கங்கள் 14-15)

மாமல்லபுரத்தின் இருப்பிடம்: 12°·37′வ×80°·14′கி.

இது செங்கற்பட்டுக்குக் கிழக்கில் 30 கிமீ. (18 மைல்) தொலைவில் உள்ளது. இதை ஆங்கிலத்தில் செவன் பகோடாஸ் (Seven Pagodas) என்று வழங்குவர்.

இப்பகுதியில் உள்ளன யாவும் பிற்காலத்து ஒருவரால் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். இப்பகுதி ஏற்கெனவே அதிகாரம் 14-ல் கொடுக்கப்பட்டுள்ளது.

பஸரோ நாகோ (Basaro Nago)

இச் சொல் நாகர் இனத்தவர் என்பவரோடு தொடர்புபடுத்திச் சிலர் கூறுகின்றனர். ஆனால், நாகர் என்பவர், வட இந்தியாவில் மாளவத்திலும், யமுனை நதிக்கரையிலும் ஆட்சி செய்து வந்தவராவர். அவர்கள் ஆட்சி செய்த காலம் கி.பி. 230 அளவில் ஆகக் கூடும்.

—(Vide An Advanced History of India By R.K. Mookerjee M.A. p. 144)

தாலமியின் காலம் இதற்கும் முன்னதாகும் என்பதால், இவர்கள் கூற்றுப் பொருந்தாது.

இங்குக் காஞ்சீபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு வாழ்ந்த அரசரைக் குறிப்பிடுகிறார். மற்றும், அவர் மாமல்லபுரத்தைத் தன் அரண்மனை இருப்பிடமாகக் கொண்டார் என்றும் கூறுகிறார்.

ஆகையால், இங்குக் காஞ்சியை ஆண்ட ஆந்திரப் பல்லவ மன்னர்களே குறிப்பிடப்படுகிறார்கள். அவர்களுள் முதல் அரசர் இங்குக் குறிப்பிடப்படுகிறார்.

பெரிப்ளூஸின் ஆசிரியர் (கி.பி. 50-80) கூறுவதிலிருந்து, இப்பகுதி சாதகர்ணி (Satakarni) என்பவரால் ஆளப்பட்டதென்பது தெரிகிறது.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 52, குறிப்பு-4, பக்கம் 207)

இதன் விவரம் அதிகாரம் 6-ல் அரியகே விளக்கவுரையில் காண்க.

சாதகர்ணி எனப்படும் சாதவாகனர்களின் வரலாறு பின்வருமாறு கூறப்படுகிறது:

சுங்கர் சந்ததியும், கண்வர் சந்ததியும் ஆந்திர நாட்டில் கி.மு. 27 வரை ஆண்டுவந்தனர். அவர்களுள் கண்வர் சந்ததி கி.மு. 27-ல் அற்றுப்போய்விட்டது. கண்வர் சந்ததியில் இறுதியாக

40 ஆண்டுகள் ஆண்ட மன்னர்களின் பெயர்கள்: குந்தல சாத கர்ணி, சாத சாதகர்ணி, புலுமாயி-I. இவர்கள் கி.மு. 27வரை ஆண்டனர்.

ஆந்திர நாட்டில் விலிராயகுரர்-II என்பார் ஆண்டுவந்தார். அவ்வமயம் மேற்கு இந்தியாவில் சாகா என்பாரும், யவனர் என் பாரும், தெற்கே பஹ்லவர் என்பாரும் அவருக்குப் பகைவராக விளங்கினர். கி.பி. 126-ல் நடந்த போரில், விலிராயகுரர்-II அந் நியரான சாகா, யவனர், பஹ்லவர் ஆகியவரை வென்று, அவர்கள் நாடுகளைத் தமதாக்கிக்கொண்டார்.

இந்த விலிராயகுரர்-II என்பவரே தாலமியால் பாலியகுரர் என்று குறிப்பிடப்பட்டவர் ஆவார் (அதிகாரம் 83, குறிப்பு-5 காண்க). அவ்வரசர் ஹிப்போ கௌரா என்னும் நகரத்தில் வாழ்ந்து வந்ததாகக் கூறுகிறார். (அதிகாரம் 83—ஹிப்போ கௌரா-விளக்க வுரை காண்க). ஹிப்போ-கௌரா என்பதே நவீன கோடாபந்தர் எனப்படும் ஊராகும் (ஹிப்போ-Hippos-குதிரை-கோடா).

கி.பி. 144-ல் பொறிக்கப்பட்ட ஒரு பட்டயம் கூறுகிறது: "பாலஸ்ரீ எனப்படும் கௌதமியின் புத்திரரான சாதகர்ணி என் பார், யவனர், சாகர், பஹ்லவர் ஆகியவர்களைப் பூண்டோடு அழித் தொழித்தார்." இக்கௌதமி என்பவளே கௌதம குலத்தில் வந்த அரசியாவாள். இவளுடைய மகனுரே 'கௌதமி புத்ர சாத கர்ணி' (Gautami putra Sathakarni) என்று வழங்கப்பட்டார். இதன் பொருள் கௌதமி என்பாளின் புத்திரரான சாதகர்ணி என்பதாகும்.

விலிராயகுரர்-II கி.பி. 130-ல் இறந்துவிட்டார். அவருக்குப்பின் அவருடைய மகனுர் புலுமாயி II என்பவரே அரசரானுர். இப் புலு மாயி என்பவரே தாலமியால் குறிப்பிடப்பட்ட சிரோ புலுமாயி ஆவார் (அதிகாரம் 82, குறிப்பு-6 பார்க்கவும்).

ஸகாரதா (Sakaratha) என்போர் மேற்கு இந்தியாவை ஆண்டு வந்தனர். அவர்களுள் ஒருவர் நகாபானு (Nahapana). இவர் விலிராயகுரர்-II என்பவரால் கி.பி. 100-ல் ஒடுக்கப்பட்டார். நகா பானுவுக்குப் பிறகு, அந்நாடு சாஸ்தானு என்பவரிடம் கொடுக்கப் பட்டது. அவர் உஜ்ஜயினியைத் தலைநகரமாகக் கொண்டு ஆண் டார். இச் சாஸ்தானு என்பவரையே தாலமி தியஸ்தினர் (Tiestiens) என்று குறிப்பிட்டுள்ளார். (அதிகாரம் 63, குறிப்பு-7 தியஸ்தினர் விளக்கவுரை காண்க). இவர் முதற்கொண்டு சத்ராபிகள் மேற்கு இந்தியாவை ஆண்டுவந்தனர். இறுதியில் சந்திரகுப்த விக்கிர

மாதித்தியரால் (Chandragupta Vikramaditya) இச் சத்ராபிகள் வெல்லப்பட்டனர்.

இச் சத்ராபிகளுள் ஒருவர் ருத்ரராமன்-I என்பார் கி.பி. 130ஆம் ஆண்டு அரசபதவி ஏற்ருர். இவருடைய மகள் தக்ஷமித்ரா (Thatsha mitra) என்பாள் புலுமாயி-II என்பவரை மணந்தாள். இருப்பினும், கி.பி. 145-ல் ருத்ரராமன் தம் மருமகன் நாட்டின்மீதே படை எடுத்தார். ஆனுல், சேதம் ஒன்றும் விளைவிக்காமல் விட்டுவிட்டார்—தம் மகளின் நலனைக்கருதி. ருத்ரராமன் கி.பி. 130 முதல் கி.பி. 150 வரை ஆண்டுவந்தார்.

சாதவாகனர்களில் பெரும்புகழ் பெற்றவர் கௌதமி புத்ர சாதகர்ணி ஆவார். இவரே முன்னர் கூறப்பட்ட விலிராயகுரர்-II என்பவர் ஆவார். இவரே கி.பி. 126-ல் சாகா கிளையினரையும், பஹ்லவரையும், யவனரையும் வென்ருர். இவர் கி.பி. 130 வரை அரசாண்டார்.

கௌதமிபுத்ர சாதகர்ணி காஞ்சீபுரத்தைத் தமதாக்கிக் கொண்டு, பஹ்லவர் எனப்படும் பல்லவரை ஒடுக்கியிருக்க வேண்டும். பல்லவர் ஆண்ட நாட்டின் அரச பீடத்தில் ஏறினதால், இவரும் பல்லவ மன்னராகக் கருதப்பட்டார் போலும்.

காஞ்சிக்கு அருகில் இருந்த மாமல்லபுரம் துறைமுகத்தில் அவர் பண்டங்களின் வரி விதிப்பதற்காகத் தங்கியிருக்கவேண்டும். இதனுல்தான் மலங்கேயில் அரசரின் இருப்பிடம் உள்ளது என்று கூறப்பட்டது.

மலங்கே என்பது மாமல்லபுர இடமே. இச்சொல் வேங்கி (Vengi) நாட்டைக் குறிப்பதாகத் திரு. ஏ.சி. கன்னிங்காம் (Mr. A.C. Cunningham) கூறுவது பொருந்தாமை உணரப்படும். ஒலி ஒற்றுமையே தவிர, வரலாற்று ஆதாரம் கிடையாது.

## 11. காந்தி பட்ஞ (Canthi Patna)

இச் சொல் காஞ்சீபுரம் என்பதன் திரிபே. பல்லவர் காலத்திலும், அவர்க்கு முந்தியும் காஞ்சீபுரம் தமிழ்நாட்டின் தலைநகரமாக விளங்கிற்று. காஞ்சியில் பல்கலைக்கழகம் ஒன்று இருந்ததாகவும், அங்கிருந்து பேராசிரியர்கள் பலர் வடநாட்டில் உள்ள நாலந்தா, தக்ஷசீலம் முதலிய பண்டைப் பல்கலைக் கழகங்களுக்குச் சென்றதாகவும் வரலாறு விளக்கம் அளிக்கிறது. யுவான் சுவாங் (கி.பி. 629-645) காஞ்சீபுரத்தைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிருர் :

" தி-லோ-பி-டோ (Dhi-Lo-Pi-To) என்னும் நாடு 600 லி (Li) சுற்றளவு கொண்டதாகும். அதன் தலைநகரம் காஞ்-சி-பு-லோ (Kanchi-Pu-Lo). அது 300 லிச் சுற்றளவு கொண்டது. பூமி வளம் மிகவும் செழிப்பாக உள்ளது. மக்கள் வீரம் வாய்ந்தவர்கள். கல்வித்துறையில் மேம்பட்டு விளங்கியவர்கள்... ..அசோகரின் கல் வெட்டுக்கள் உள்ளன. இதுவே தர்மபாலர் பிறந்த இடம் ஆகும். அந்நகரத்துக்குத் தெற்கில், கல்வித்துறையில் தேர்ச்சி பெற்ற பிரமுகர் பலர் கூடும் மடாலயம் ஒன்றுண்டு."

—(யுவான் சுவாங்: பக்கம் 174-175)

பிளினி (கி.பி. 23–79) என்பாரும் காஞ்சீபுரத்தைக் குறிப்பிட்டுள்ளார். அவர் இந்நகரை "காந்திபிரமா" (Candiprama) என வழங்குகிறார்.

"சுவாரி நாட்டில் ஓடும் அபிரஸ் என்ற நதியும், அதன் கழி முகத்தில் போக்குவரத்து வசதியான நல்ல துறைமுகமும், காந்தி பிரமா எனப்படும் மிகப் பழைய நகரமும் காணப்படுகின்றன."

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 25, பக்கம் 101)

முத்திதரும் ஏழு நகரங்களுள் காஞ்சீபுரம் முக்கியமான தலமாக விளங்கிற்று.

"முக்திதரும் நகரேழின் முக்கியமாம் கச்சிதனில்."

—(தேசிகப் பிரபந்தம்: அடைக்கலப்பத்து 1)

காஞ்சீபுரத்தின் பழைய பெயர் காஞ்சனபுரம். அதாவது, பொன்னகரம் என்பது அதன் பொருள்.

"தென்திசை யென்றன் வஞ்சியொடு வடதிசை
நின்றெதி ரூன்றிய நீள்பெருங் காஞ்சியும்."

—(சிலப்பதிகாரம்: கடலாடுகாதை 135-136)

"பூங்கொடி கச்சிமா நகர்புக் கதும்."

—(மணிமேகலை: கந்திற்பாவை 148)

காஞ்சீபுரத்தைப்பற்றிய புராண வரலாறுகள் பல உள்ளன:

காஞ்சீபுரம் பிரமாவினால் பூசிக்கப்பட்டதென்பர். காஞ்சி என்ற சொல், பெண்கள் அணியும் மேகலைக்கு அடிப்பக்கத்தில் அணியும் அரைநூல்மாலைத்தானம் என்று பொருள்படும். இங்குப் பூமியாகிய பெண்ணுக்குக் காஞ்சீபுரம் என்னும் ஊர் அவ்வரை

நூல்மாலை அணியும் தானத்தில் உள்ளது என்று கருதப்பட்டது. இந் நகரம் பிரமாவினுல் பூசிக்கப்பட்டு நிர்மாணிக்கப்பட்டதால், இதைக் காந்தி பிரமா என்று பிளினி வழங்கினுர் போலும்.

இக் காஞ்சீபுரத்தை ஆழ்வார்கள் பலர் பாடியுள்ளனர் :

"சிறந்த என்சிந்தையும் செங்கண் அரவும்
நிறைந்த சீர் நீள்கச்சியும்."

—(இயற்பா : மூன்றும் திருவந்தாதி 26)

"மல்லையாய்! மதில்கச்சியூராய்! பேராய்!"

—(திருநெடுந்தாண்டகம்-9)

"நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி
ஊரகத்தாய், ஒண்துறைநீர் வெஃகா வுள்ளாய்."

—(திருநெடுந்தாண்டகம்-8)

காஞ்சீபுரத்தைப்பற்றித் தேவாரம் விதந்தோதுகிறது :

"மாகம்ப மறையோதும் இறையானை மதில்கச்சி
ஏகம்ப மேயானை என்மனத்தே வைத்தேனே!"

—(திருநாவுக்கரசர் தேவாரம் : திருக்கச்சி ஏகம்பம் 9)

"கல்வியைக் கரையிலாத காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எல்லியை விளங்கநின்றுர் இலங்குமேல் தளியனுரே!"

—(திருநாவுக்கரசர் தேவாரம் : திருக்கச்சி மேற்றளி 8)

இங்குக் குறிக்கப்பட்டுள்ள 'கச்சி மேற்றளி' என்பது இன்று காஞ்சீபுரத்தில் 'பிள்ளையார் பாளையம்' என்று வழங்கப்படுகிறது.

திருவாசகம் காஞ்சீபுரத்தைக் குறிப்பிட்டுள்ளது.

"ஏகம்பத்துறை எந்தாய் போற்றி."

—(திருவாசகம் : போற்றித் திருவகவல் 151)

"ஏகம்பத்தில் இயல்பாய் இருந்து."

—(திருவாசகம் : கீர்த்தித் திருவகவல் 77)

ஏகம்பம் என்பது ஏகாம்பரநாதர் ஆலயத்தைக் குறிப்பிடுகிறது. இவ்வாலயம் காஞ்சீபுரத்தில் உள்ளது.

காஞ்சீபுரத்தின் இருப்பிடம் : 12°·50'வ × 79°·45'கி.

---

# 93. மசோலியா நகரங்கள்

மசோலியா நாட்டில்[1] காணப்படும் உள்நாட்டு நகரங்கள் பின்வருமாறு:

| | |
|---|---|
| கல்லிகா[2] | ... 138°·00′கி × 17°·00′வ. |
| பர்தமனு[3] | ... 136°′15′கி × 15°·15′வ. |
| கொருங்கலா[4] | ... 135°·00′கி × 15°·00′வ. |
| பயிட்ரா (பரித்ரா)[5] | ... 134°·20′கி × 13°·20′வ. |
| பிடிண்டிரா (தலைநகரம்)[6] | ... 135°·20′கி × 12°·30′வ. |

## விளக்கவுரை

**1. மசோலியா நாடு (The Country of Masolia)**

மசோலியா (Masolia) எனுஞ்சொல் மசூலிப்பட்டினத்தைக் குறிப்பிடுகிறது. இத் துறைமுகப்பட்டினம் கிருஷ்ணு நதியின் (River Krishna) கழிமுகத்தில் உள்ளது. அதிகாரம் 15, குறிப்பு-1, அதிகாரம் 37, குறிப்பு-1 முறையே மசூலிப்பட்டினத்தையும், கிருஷ்ணு நதிக்கழிமுகத்தையும் குறிப்பிடுகின்றன.

மார்க்கோபோலோ இந்நாட்டை மான்சூல் (Mansul) என்று குறிப்பிடுகிறுர். அங்குத் துணிகள் பெருவாரியாக நெய்யப்படுகின்றன என்று கூறுகிறுர்.

—(மார்க்கோபோலோ: பக்கம் 61)

| | |
|---|---|
| கிருஷ்ணு நதியின் இருப்பிடம்: | 15°·55′வ × 81°·10′கி. |
| கிருஷ்ணு நதி உற்பத்தியிடம்: | 17°·58′வ × 73°·43′கி. |
| மசூலிப்பட்டினம் இருப்பிடம்: | 16°·09′வ × 81°·12′கி. |

**2. கல்லிகா (Calliga)**

இச் சொல் கலிங்கம் (Calingam) என்றதன் கிரேக்க உச்சரிப்பே. கலிங்கப்பட்டினம் (Calingapatam) என்று வழங்கப்படுகிறது. அதிகாரம் 69, குறிப்பு-2 பார்க்கவும். கலிங்கத்தைப் பிளினி, மகா கலிங்கே என்று வழங்கினுர்.

கலிங்கப்போர் குறித்துக் கலிங்கத்துப்பரணி எனும் தமிழ்நூல் கூறுகிறது. இந்நூல் கவிச்சக்ரவர்த்தி செயங்கொண்டாரால் இயற்றப்பட்டது. கருணுகரத்தொண்டைமான் கலிங்கப்போரில் வெற்றி

கொண்டதைக் கலிங்கத்துப்பரணி பாடுகிறது. இந் நூல் குலோத் துங்க சோழன் காலத்தில் (கி.பி. 1078—1118) இயற்றப்பட்டது.

அசோகப் பேரரசர் (கி.மு. 263-224) கலிங்கத்தின்மீது போர் தொடுத்து, அங்குக்கண்ட பிணக்குவியல் காட்சி அவர் மனத்தை உருக்கிய காரணத்தால், அவர் புத்தமதத்தைத் தழுவி, பெரும் மனமாறப்பெற்ருர் என்று வரலாறு கூறுகிறது.

"மாவா யிரமும் படக்கலிங்கர்
மடிந்தகளப் போருரைப்போர்க்கு
நாவா யிரமுங் கேட்போர்க்கு
நாளா யிரமும் வேண்டுமால்."

—(கலிங்கத்துப்பரணி : காளிக்குக் கூளி கூறியது 1)

"இலங்கை யெறிந்த கருணு கரன்ற
னிகல்வெஞ் சிலேயின் வலிகேட்பீர்
கலிங்க மெறிந்த கருணுகரன்தன்
களப்போர் பாடக் கடைதிறமின்!"

—(கலிங்கத்துப்பரணி : கடைதிறப்பு 41)

"ஆனையாயிரம் அமரிடை வென்ற
மானவனுக்கு வகுப்பது பரணி."

—(இலக்கண விளக்கம் : சூத்திரம் 838)

கலிங்கப்பட்டினம் இருப்பிடம்: 18°·20′வ×84°·10′கி.

**3. பர்தமனு** (Bardamana)

இச் சொல் நவீன பெத்தாபுரம் (Peddapuram) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது கிழக்குக் கோதாவரியைச் சார்ந்ததாகும்.

பெத்தாபுரத்தில் அன்றும், இன்றும் பட்டுத்துணிகள் பெருவாரியாக நெய்யப்பட்டன. இவ்விடம் ஆந்திரப் பிரதேசத்தைச் சார்ந்தது.

பெத்தாபுரத்தின் இருப்பிடம்: 17°·05′வ×82°·11′கி.

**4. கொருங்கலா** (Courungala)

இச் சொல் நவீன வாரங்கல் (Warrangal) எனும் இடத்தைக் குறிப்பிடுகிறது. இது கிருஷ்ணு நதிக்கும், கோதாவரி நதிக்கும்

இடையே உள்ளது. தெலிங்கானுப் பகுதியின் இடைக்காலத் தலை நகரமாயிருந்தது. வாரங்கல் ஆந்திர நாட்டைச் சார்ந்ததே.

வாரங்கல் இருப்பிடம்: 17°·58′வ×79°·40′கி.

## 5. பயிட்ரா (Phaytra)

இது நவீன பாபட்லா (Bapatla) என்னும் இடத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். பாபட்லா, கிருஷ்ணநதிக் கழிமுகத்தில் குண்டூருக்குத் தெற்கே உள்ளது. கிரேக்கர் பயிட்ரா என்பதை பரித்ரா (Pharetra) என்றும் வழங்கினர். பாபட்லா ஆந்திர நாட்டைச் சார்ந்ததே.

பாபட்லாவின் இருப்பிடம்: 15°·54′வ×80°·50′கி.

## 6. பிடிண்டிரா (தலைநகரம்) (Pityndra, the Capital)

பிடிண்டிரா, மசோலியாவின் தலைநகரம் என்று தாலமியால் கூறப்படுகிறது. தாலமியின் காலத்தில் (கி.பி. 119-161) பிரதிஷ்டானபுரம் (Prathistanapura) என்ற நகரமே ஆந்திரரின் தலைநகரமாயிருந்தது. பிரதிஷ்டானபுரம் என்பதே நவீன பைதான் (Paithan) ஆகும்.

பிரதிஷ்டானபுரத்தைப் பைதானு (Paithana) என்று பிளினி (கி.பி. 23-79) குறிப்பிடுகிறார்.

பெரிப்ளூஸின் நூலாசிரியர் (கி.பி. 50-80) இதைப் பேதானு (Paethana) என்று குறிப்பிடுகிறார்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 51, குறிப்பு-2, பக்கம் 202)

புலுமாயி II (Pulumayi-II) என்பார் பிரதிஷ்டானபுரத்தைத் தலைநகரமாகக்கொண்டு கி.பி. 75-104 வரை ஆண்டார். இவருடைய நாணயங்கள் குண்டூர் மாவட்டத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

—(Vide A History of South India By K.A. Nilakanta Sastri, M.A. p. 91)

தாலமி புலுமாயி அரசரைச் சிரோ புலுமாயி (Siro Pulumayi) என்று குறிப்பிட்டுள்ளார். (அதிகாரம் 82, குறிப்பு-6).

அசோகப் பேரரசர் (கி.மு. 263-224) இங்குக் குறிப்பிடப்பட்ட பெய்தானுக்குப்பௌத்தமதப் பிரசாரகர்களை அனுப்பினார். அசோகர் தம் கட்டளைகளைக் கல்வெட்டில் அங்குச் செதுக்கிவைத்தார். பிரதிஷ்டானபுரம் அசோகர் காலத்துக்கு முன்பிருந்தே ஒரு

வாணிகச் சந்தையாக விளங்கிற்று. பாரிகாஸாவையும், பிரதிஷ்டானபுரத்தையும் இணைத்து ஒரு குறுக்குப்பாதை போடப்பட்டது.

பிரதிஷ்டானபுரத்தின் (பைதான்)

இருப்பிடம்: 19°·28′வ × 75°·24′கி.

சிலர் பிடிண்டிரா என்பதை பிட்ரகுண்டா (Bitragunta) என்றும், தாரணிகோடா (Dharanikota) என்றும், தனகடகா (Dhanakataka) என்றும் பலவிதமாகக் கூறியுள்ளனர். ஆனல், இவற்றுள் எதுவும் வாணிகச் சந்தையாகவோ, அல்லது அரசாங்கத் தலைநகரமாகவோ இருந்தது கிடையாது. ஆகையால், இவர்கள் கூற்றுப் பொருந்தாமை உணரப்படும்.

---

# 94. காந்தி வளைகுடாத் தீவுகள்

*காந்தி வளைகுடாவில்[1] துருத்திக்கொண்டு நிற்கும் சில தீவுகள் :*

*பராகே[2]* ... 111°·00′கி × 18°·00′வ.

## விளக்கவுரை

**1. காந்தி வளைகுடா** (Gulf of Canthi)

காந்தி வளைகுடா என்பது இப்பொழுது ரீவா காந்தா (Rewa Cantha) என்று வழங்கப்படுகிறது. முன்னர் காந்தி வளைகுடா (Gulf of Canthi) என்ற பெயர் இப்பொழுது காம்பே வளைகுடா (Gulf of Cambay) என்று வழங்கப்படுகிறது.

காம்பே வளைகுடா இருப்பிடம்: 21°·00′வ × 72°·30′கி.

**2. பராகே** (Baracae)

பராகே என்ற சொல் பொரக்காடு (Porakkadu) என்றதன் திரிபாகும்.

ஆனல், இங்குக் காம்பே வளைகுடாவைக் குறிப்பதால், பராகே என்பது பாரிகாஸாவைச் சுற்றிலுமுள்ள இடத்தைக் குறிப்பிடுவதாகும். பாரிகாஸா (Barygaza) என்பது, பிருகு-கச்சா என்பதன் மரூஉ. பிருகு மகரிஷியால் ஏற்படுத்தப்பட்ட சமநிலம் என்பது பொருள். மற்றும், அதிகாரம் 5, குறிப்பு-4 பார்க்கவும்.

பராகே என்றால் அலைவீச்சினுள் அடங்கிய இடம் என்பது பொருள். உள்ளடங்கிய துறைமுகம் என்றும் பொருள் கொள்ள லாம்.

பாரிகாஸாவின் இருப்பிடம்: 21°·41′வ × 73°·1′கி.

மற்றும், பராகே என்பது கத்தியவார் முனையில் உள்ள துவாரகா (Dwaraka) என்பதையும் குறிப்பிடலாம். துவாரகா கண்ணபிரான் ஆண்ட இடம். மற்றும், அதிகாரம் 60, குறிப்பு-6, பக்கம் 224 தியோபிலா பகுதி பார்க்கவும்.

துவாரகாவின் இருப்பிடம்: 22°·14′வ × 69°·1′கி.

---

# 95. கோல்கே வளைகுடாப் பட்டினங்கள்

கோல்கே வளைகுடாவில்[1] உள்ள நகரங்களும், துறை முகப் பட்டினங்களும் பின்வருமாறு:

| | |
|---|---|
| மெலிஜிகிரஸ்[2] | ... 110°·00′கி × 12°·30′வ. |
| ஹெப்டரேசியா[3] | ... 113°·00′கி × 13°·00′வ. |
| திரிகர்தீபா[4] | ... 113°·30′கி × 11°·00′வ. |
| பெப்பரினே[5] | ... 115°·00′கி × 12°·40′வ. |
| திரினேஸியா[6] | ... 116°·20′கி × 12°·00′வ. |
| ஊரகே[7] | ... 118°·00′கி × 12°·00′வ. |
| நாளிகேரிஸ்[8] | ... 122°·00′கி × 12°·00′வ. |

## விளக்கவுரை

**1. கோல்கே வளைகுடா** (Gulf of Colchae)

கோல்கே (Colchae) என்பது கொற்கை (Corkai) என்ற சொல்லின் கிரேக்க உச்சரிப்பே. அதிகாரம் [illegible], குறிப்பு-2, பக்கம் 64 பார்க்கவும்.

கொற்கைத் துறைமுகம் கடல்கோளால் அழிந்துவிட்டது. அதுவே அதுகாறும் பாண்டிய மன்னர்களின் தலைநகரமாயிருந்தது.

கொற்கை அழிவுற்றதும், பாண்டிய மன்னர்கள் தங்கள் தலைநகரை மதுரைக்கு (Madura) மாற்றிக்கொண்டனர். மதுரையில்தான் தமிழ்ச்சங்கம் ஏற்பட்டது. மாபெரும் தமிழ்ப் புலவர்களை மதுரைச் தமிழ்ச்சங்கம் உருவாக்கிற்று.

பிளினி (கி.பி. 23-79) கொற்கையைக் கோரகே (Coracae) என்று வழங்கினர்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 23, குறிப்பு-38, பக்கம் 48)

பெரிப்ளூஸ் ஆசிரியர் (கி.பி. 50-80) இதைக் கோல்கே (Colchae) என்று வழங்கினர்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 28, குறிப்பு-3, பக்கம் 99)

கொற்கையின் பழைய பெயர் கபாடபுரம். கபாடபுரம் என்றால் வாயில் (Gateway) என்று பொருள்படும். இந்தியாவுக்கு வரும் அயல் நாட்டுக் கப்பல்களுக்கு அத் துறைமுகம் ஒரு வாயில் போன்றிருந்ததால், அது கபாடபுரம் (Kabatapuram) என்று வழங்கப் பட்டது.

—(தமிழர் வரலாறு: பி.டி. ஸ்ரீநிவாச ஐயங்கார், பக்கம் 242)

மற்ற விவரங்கள் அதிகாரம் 10, குறிப்பு-2-ல் தரப்பட்டுள்ளன.

"கொற்கை வேந்தே வாழி!"

—(சிலப்பதிகாரம்: வழக்குரை: 30)

கொற்கையின் இருப்பிடம்: 8°·34′வ × 78°·10′கி.

## 2. மெலிஜிகிரஸ் (Melijigirus)

சையாகிரஸ் (Siagarus) என்ற கிரேக்கச் சொல் பன்றி என்று பொருள்படும். பன்றிநாடு என்பது பழநி, மேற்கு மலையாளம் முதலிய பகுதிகள் அடங்கியவை. இதையே மெலிஜிகிரஸ் என்று வழங்குகிறார்.

மற்றும் இது மலைசிகரம் என்றதன் உருவமாகவும் கொள்ள லாம். வாசனைப் பண்டங்கள் மேலை நாடுகளுக்கு அனுப்பப்பட்ட முயிறிக்கோடு (முசிறி) என்பதையும் குறிப்பிடும்.

பெரிப்ளூஸ் ஆசிரியர் இதை மெலிஜிகாரா (Meligicara) என்று குறிப்பிட்டார்.

—(பெரிப்ளூஸ்: அதிகாரம் 30, குறிப்பு-1, பக்கம் 105)

பிளினி இதை சைகிரஸ் (Sigerus) என்று குறிப்பிட்டார்.

—(பிளினி: புத்தகம் VI, அதிகாரம் 26, குறிப்பு-53, பக்கம் 124)

முசிறி இருப்பிடம்: 10°·14′வ×76°·11′கி.

**3. ஹெப்டரேசியா** (Heptarachia)

இது மாமல்லபுரத்திலுள்ள ஏழு இரதங்களையும், மாமல்லபுரத்தையும் குறிப்பிடுகிறது. (ஹெப்ட-ஏழு; ரேசியா-ரதம் என்பதன் கிரேக்க உச்சரிப்பு).

மாமல்லபுரச் சிற்பங்கள் பிற்காலத்தில் நரசிம்ம பல்லவ மன்னரால் எழுப்பப்பட்டன. நரசிம்ம பல்லவர் ஆட்சி செய்த காலம் கி.பி. 630-668 ஆகும். மாமல்லபுரச் சிற்பங்கள் உருவான ஆண்டுகள் கி.பி. 642-648 ஆகும்.

ஆக, சப்த இரதங்கள் (Seven Pagodas) எனப்படும் மாமல்லபுரம், இப்பகுதியில் பிற்காலத்தவர் ஒருவரால் இணைக்கப்பட்டுவிட்டது தெற்றென விளங்குகிறது. தாலமியின் காலம் கி.பி. 119-161 ஆகும்போது, அவர் கி.பி. 642-648-ல் நடந்த வரலாற்றை எப்படி எழுதியிருக்கமுடியும்? ஆக, இதுவும் ஐயத்துக்கிடமான பகுதியேயாகும் (Doubtful Fragments).

மாமல்லபுரத்தை முன்னர் மலங்கே (Malangae) என்று வழங்கினர்.

மற்றும் அதிகாரம் 14, குறிப்பு-3 காண்க.

மாமல்லபுரத்தின் இருப்பிடம்: 12°·37′வ×80°·14′கி.

**4. திரிகா தீபா** (Trica-Deepa)

இச்சொல் இலட்சத்தீவுகளைக் (Laccadives) குறிப்பிடுகிறது. அராபியன் கடலில், கோழிக்கோட்டிற்கு (Calicut) மேற்கில் உள்ள சிறிய தீவுகளே இலட்சத்தீவுகள்.

தீபா என்பது த்வீபம் (Dvipa) என்பதன் திரிபே. த்வீபா என்றால் தீபம், தீவு என்று பொருள்படும்.

இலட்சத்தீவின் இருப்பிடம்: 10°·0′வ×73°·0′கி.

**5. பெப்பரினே** (Pepperinae)

பெப்பர் என்பது மிளகு என்று பொருள்படும் சொல்லாகும். பெப்பரினே என்றால் மிளகு உற்பத்தியாகும் நாடு என்பது பொருள். இச்சொல் மலையாள நாட்டைக் குறிப்பிடும்.

மிளகு பெருவாரியாக மலையாள நாட்டிலிருந்து ரோம் முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது என்று பெரிப்ளூஸ் (Periplus) நூல் கூறுகிறது.

—(பெரிப்ளூஸ் : **அதிகாரம்** 53, குறிப்பு-18, பக்கம் 221)

திண்டிஸ் (Tondi) என்ற சொல் தொண்டி (Tondi) என்றதன் கிரேக்க உச்சரிப்பே. (அதிகாரம் 8, குறிப்பு-2)

திண்டிஸ் இருப்பிடம் : 10°·48′வ × 75°·56′கி.

இப் பகுதியும் பின்வந்தவர்களால் இணைக்கப்பட்டது. ஆகையால் இதுவும் ஓர் ஐயத்துக்கிடமான பகுதியே (Doubtful Fragment).

**6.** திரிநேஸியா (Tri-Naesia)

இச் சொல் மூன்று தீவுகள் (திரி-நாசி) (மூக்குப்போல்) உயர்ந்து இருந்தன. இவை முசிறிக்கும், தொண்டிக்கும் இடையே இருந்தன. லிமிரிகே கடற்கரைக்கு அப்பால் அராபியன் கடலில் இருந்தன. தங்கசேரி (Tangasseri) எனும் முனையில் இருந்தன எனக் கூறப்படுகிறது. கொல்லம் (Quilon) அருகில் உள்ளது.

**7.** லூகே (Leucae)

இது வெள்ளைக்கிராமம் என்றதன் மொழி பெயர்ப்பே. இது ஆய்ஸ்டர் தீவுகள் (சிப்பித் தீவுகள்) என்றவற்றைக் குறிப்பிடுகின்றது. இவ்விடம் அராபியன் கடலில் கார்வார் (Karwar) எனப்படும் துறைமுகத்துக்கு வடக்கே 8 கிமீ. (5 மைல்கள்) தொலைவில் உள்ளது.

பெரிப்ளூஸ் நூலாசிரியரும் (கி.பி. 50-80) இதை லூகே கிராமம் (Leucae grama) என்றே வழங்கினர்.

சிப்பித்தீவின் இருப்பிடம்: 14°·50′வ × 78°·05′கி.

**8.** நாளிகேரிஸ் (Nalikeris)

நாளிகேரம் என்ற சொல் தென்னை மரத்தைக் குறிப்பிடும். இது கேரள நாட்டின் கடற்கரை என்ற பொருளில் வழங்கப்பட்டது. நாளிகேரம் என்பதே கேரளநாடு ஆயிற்று என்றும் கூறுவர்.

கேரளநாட்டின் கடற்கரை இருப்பிடம்: 11°·20′வ × 76°·0′கி.

இப் பகுதிகள் யாவும் பின்னர் ஒருவரால் இணைக்கப்பட்டதாகும். இவையாவும் ஐயத்துக்கிடமான பகுதியே (Doubtful Fragments).

# 96. ஆர்கரு வளைகுடாவின் முனை

ஆர்கரு வளைகுடாவின் முனை[1] :

கோரிமுனை[2] ... 126°·30′கி × 13°·00′வ.

## விளக்கவுரை

**1. ஆர்கரு வளைகுடா (Gulf of Argaru)**

ஆர்கரு (Argaru) என்ற சொல் உறையூர் என்றதன் கிரேக்க உச்சரிப்பே. (அதிகாரம் 11, குறிப்பு-5).

ஆர்கரு வளைகுடா என்பது பாக்ஸ்ரெயிட் (Palk Strait) என்பதைக் குறிப்பிடும். இங்கே முத்து பெருவாரியாக எடுக்கப்பட்டது.

பாக்ஸ்ட்ரெயிட்டின் இருப்பிடம் : 10°·0′வ × 80°·0′கி.

**2. கோரி முனை (Point Cori)**

இச் சொல் கோடி என்பதன் மரூஉ (அதிகாரம் 11, குறிப்பு-3). கோடி என்பது தனுஷ்கோடியைக் குறிப்பிடும். (அதிகாரம் 91, குறிப்பு-5). தனுஷ்கோடி (Dhanushkoti) என்ற சொல் ஸ்ரீ ராமர், தனுவின் (வில்லின்) கோடி (முனை) என்று பொருள்தரும்.

தனுஷ்கோடியின் இருப்பிடம் : 9°·10′வ × 79°·28′கி.

இலக்கியங்களில்தாம் இடைச்செருகல்கள் காணப்படும் என்பதில்லை. வரலாற்றிலும் காணப்படும் என்பதற்குத் தாலமியின் சொல்லோவியங்களுடன் ஆங்காங்குப் பலரால் சேர்க்கப்பட்ட பகுதிகளே சான்றாக நிற்கின்றன. அதிகாரம் 84 முதல் அதிகாரம் 96 வரை பிற்காலத்தவரால் எழுதிச் சேர்க்கப்பட்ட பகுதிகளாகும். ஆகவே, இந்த 13 அதிகாரங்களும் ஐயத்துக்கிடமான பகுதிகளாகக் (Doubtful Fragments) கருதப்பட்டன. இவற்றில் பிற்கால நிகழ்ச்சிகள் கலந்து வந்துள்ளன. ஆராய்ச்சியாளர்கள் நல்லனவற்றைக் கொள்ளவும், அல்லாதனவற்றைத் தள்ளவும் முயலவேண்டும். முயற்சி திருவினையாக்கும் !

---

# முடிவுரை

இதுகாறும் தாலமி வாயிலாகப் பல அரிய செய்திகளை அறிந்தோம். விளக்கவுரை வாயிலாக, இந்தியாவுக்கும் மேலை நாடுகளுக்கும் அக்காலத்தில் நடந்தேறிய வாணிக முறைகளும், இந்தியாவில் ஆங்காங்கு விளங்கிய வாணிகச் சந்தைகள் கூடும் இடங்களின் பெயர்களும்; அவற்றின் மூலமாக ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்களின் பெயர்களும்; சிந்துநதி, கங்கைநதி, நர்மதை, தப்தி, மகாநதி, கோதாவரி, கிருஷ்ணை, பாலாறு, காவிரி, கடலம், கொல்லடம், தாமிரபருணி, பேரியாறு, வைகை முதலிய முக்கியமான நதிகளின் வரலாறுகளும், அவ்வவ்வாற்றின் கழிமுகங்களில் விளங்கிய துறைமுகப்பட்டினங்களும்; பற்பல தீவுகளும் அவற்றின் பெயர்களும்; ஆங்காங்கே கிடக்கும் பொன், வெள்ளி முதலிய உலோகங்களின் வகைகளும்; இமயமலை, விந்திய மலை, சாத்பூராமலை, மஹாதேவமலை, பொதியில்மலை, மலையாள நாட்டு மேற்குத் தொடர்ச்சிமலை ஆகிய பல்வகை மலைவளங்களும்; வடநாட்டில் விளங்கிய ஊர்களின் பெயர்களும்; தமிழ்நாட்டில் இருந்த சேர, சோழ, பாண்டிய அரசர்கள் வரலாறுகளும்; தாலமியால் கூறப்பட்ட வரலாற்றுச் செய்திகளும் அவற்றிற்கான ஆதாரங்களும்; ஒவ்வொரு பெயரும் எவ்வாறு திரிந்து வழங்கப்பட்டு வந்தது என்ற சொல் வரலாறுகளும்; மற்றும் தாலமிக்கு முன் விளங்கிய மெகஸ்தனிஸ், பிளினி, பெரிப்ளூஸ் நூலாசிரியர், ஸ்டிராபோ, அர்ரியன் ஆகியவர்களின் சொல்லோவியங்களை ஆங்காங்குப் பொருத்தமான இடங்களில் எடுத்துக்காட்டுகளாகக் கொடுக்கப்பட்டிருக்கும் குறிப்புரைகளும்; அவர்களுக்குப் பின்னர் வந்த ஃபாஹியான், யுவான் சுவாங், இதிசிங், மார்க்கோபோலோ, ஆல்பெருனி, இபின்படூடா போன்றவர்கள் எவ்வாறு அச் செய்திகளை ஒட்டியோ, வெட்டியோ விளக்கம் தந்தார்கள் என்ற குறிப்புகளும்; ஹிந்து புராண வரலாறு, கிரேக்க புராண வரலாறு, பௌத்த மத வரலாறு ஆகியவை இடத்திற்கேற்றவாறு புகுத்தப்பட்டு விளக்கப்பட்டிருக்கும் ஆதாரச் செய்திகளும்; தமிழ்ப் பெருநூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, நாலாயிர திவ்யப் பிரபந்தம், தேவாரம், திருவாசகம், ஔவையார், பெரிய புராணம், பதினெண்கீழ்க்கணக்கு, இராமாயணம், மகாபாரதம் போன்ற பண்டைத்தமிழ் நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகளாகக் கொடுக்

கப்பட்ட பொறுக்குமணிகளும்; இறுதியாகத் தாலமியைப் பலர் கூறும் கூற்றுகள் எத்துணை அளவில் பொருந்தக்கூடியதென்றும், எவ்வகையில் கருத்து மாறுபடுகிறது என்றும், அவ்வாறு மாறுபடுவதற்கான காரண விளக்கங்களும்—ஆக, இவைபோன்ற பல செய்திகளை வரலாற்று ஆதாரங்களுடன்—தற்கால வரலாற்று ஆராய்ச்சியில் புகழ்பெற்ற பேராசிரியர் பலர் கருத்துகளுடன்—நாம் இதுகாறும் கண்டோம். மெகஸ்தனிஸ், ஸ்டிராபோ, பிளினி, பெரிப்ளூஸ், அர்ரியன், தாலமி, ஃபாஹியான், யுவான் சுவாங், மார்க்கோ போலோ, ஆல்பெருனி, இபின்படூடா போன்ற பயணிகளின் வரலாறுகள்—அவர்களால் எழுதப்பட்ட சொல்லோவியங்கள்—நமக்குக் கிடைத்திராவிடில், இந்திய நாட்டு வரலாற்றை நாம் முழு வடிவத்தில் உணர்ந்திருக்க முடியாதென்பதும், உண்மையான வரலாற்றுச் செய்திகளை நாம் அறிந்திருக்க முடியாதென்பதும் வரலாற்றுப் பேராசிரியர்கள் ஒருமுகமாக ஒப்புக்கொண்ட கருத்தாகும். ஆக, ஒரு நாட்டின் வரலாற்றின் உண்மை வடிவத்தையறிய, அந் நாட்டிற்கு வருகைதந்த அயல்நாட்டுப் பயணிகளின் குறிப்புகள் மிகமிக இன்றியமையாது வேண்டப்படுவனவாகும். அவ்வாறு கிடைக்கும் அரிய குறிப்புகளே ஒரு நாட்டின் அடிப்படை வரலாற்றை அமைக்கத் தேவையான ஆதாரச் செய்திகளாகும். இத்தகைய கருத்துக் கருவூலங்கள் இல்லையேல், அந் நாட்டின் வரலாறு முழுமைபெறு என்பது முக்காலும் உண்மை.

இந்திய நாட்டின் இன்றைய வரலாறு, மேலை நாட்டுப் பயணிகள், கீழை நாட்டுப் பயணிகள், மத போதகர்கள், விஞ்ஞான மேதைகள், சீர்திருத்தவாதிகள், அரசியல் விற்பன்னர்கள் ஆகியவர்களின் குறிப்புகளைக்கொண்டு எத்துணையோ அளவு திருத்தப்படவேண்டிய நிலையில் உள்ளது. அயல்நாட்டுத் தூதுவர்கள், பயணிகள் கூறிய ஒவ்வாத சிலவற்றைக் கொள்ளாமல் தள்ளவும் வேண்டும். கி.பி. முதல் இரண்டாம் நூற்றாண்டுகளில் இந்திய நாட்டின் புவியியலையும், வரலாறுகளையும் அறியத் தாலமி எழுதியுள்ள அரிய குறிப்புகள் மிகவும் பயன்படும் என்று கூறுவது வெற்றுரையல்ல; உண்மை பொதிந்த சொற்களேயாகும்.

வாழ்க, தாலமியின் சொல்லோவியங்கள்! வாழ்க கிரேக்க-இந்தியப் பண்பாடுகள்! வாழ்க வரலாற்றுச் சான்றுகள்!

> "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு." —(திருக்குறள்: 423)

---

# பிற்சேர்க்கை I

## தாலமியால் குறிப்பிடப்பட்ட ஊர்ப்பெயர்களின் அகர வரிசை

### தாலமியின் குறிப்புகளின்படி

| | கிரேக்கம் (தமிழில்) | கிரேக்கம் (ஆங்கிலத்தில்) | இருப்பிடம் |
|---|---|---|---|
| 1. | அகரா | Agara | 25°·00′வ × 129°·20′கி. |
| 2. | அக்ரிநகரா | Agrinagara | 22°·30′வ × 118°·15′கி. |
| 3. | அடரிமா | Adarima | 15°·40′வ × 119°·30′கி. |
| 4. | அடிசட்ரா | Adisatra | 24°·30′வ × 128°·30′கி. |
| 5. | அடிசட்ரா | Adisatra | 31°·30′வ × 136°· 0′கி. |
| 6. | அநாரா | Anara | 22°·20′வ × 122°·30′கி. |
| 7. | அந்தகரா | Andacara | 27°·20′வ × 122°· 0′கி. |
| 8. | அபௌர் | Abour | 16°· 0′வ × 130°·20′கி. |
| 9. | அமகாடிஸ் | Amacatis | 32°·20′வ × 128°·15′கி. |
| 10. | அரிஸ்டோபாத்ரா | Aristobadra | 27°·30′வ × 120°· 0′கி. |
| 11. | அரிஸ்பரா | Arisbara | 32°·50′வ × 130°· 0′கி. |
| 12. | அர்டோனி | Ardoni | 30°·10′வ × 126°·15′கி. |
| 13. | அர்ப்பதரௌ | Arbadarau | 22°·00′வ × 115°· 0′கி. |
| 14. | அலோஸிஜன் | Alosygin | 11°·20′வ × 135°·40′கி. |
| 15. | அனிகாய் | Anicai | 32°·40′வ × 134°· 0′கி. |
| 16. | அனிநாகா | Aninaga | 31°·40′வ × 137°·20′கி. |
| 17. | அஜிகா | Ajika | 27°·00′வ × 119°·20′கி. |
| 18. | அஸிக்ராமா | Asicgrama | 29°·30′வ × 123°·00′கி. |
| 19. | அஸிண்டா | Asynda | 22°·00′வ × 114°·15′கி. |
| 20. | அஸ்டபலசரா | Astabalasara | 32° 00′வ × 129°·00′கி. |
| 21. | அஸ்ட்ரசாஸ் | Astrosos | 34°·15′வ × 131°·15′கி. |
| 22. | அஸ்தகௌரா | Asthagoura | 25°·00′வ × 142°·00′கி. |
| 23. | அஸ்பாதிஸ் | Asbathis | 25°·20′வ × 138°·20′கி. |
| 24. | அஷ்டகப்ரா | Astagabra | 20°·15′வ × 114°·40′கி. |

# நவீன இருப்பிடம்

| தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|
| 1. (i) அகர் | Agar | 23°·44′வ×76°·04′கி. |
| (ii) இந்தூர் | Indore | 22°·44′வ×75°·50′கி. |
| 2. (i) உதயகிரி | Udayagiri | 22°·32′வ×77°·51′கி. |
| (ii) இந்தூர் | Indore | 22°·44′வ×75°·50′கி. |
| (iii) நரசிங்கர் | Narasingar | 23°·44′வ×77°·08′கி. |
| 3. பொதியில் | Podiyil | 8°·58′வ×77°·21′கி. |
| 4. அடிகான் | Adegaon | 22°·38′வ×79°·32′கி. |
| 5. ஆதிசத்ரா (ஹத்ராஸ்) | Adisatra (Hathras) | 27°·36′வ×78°·06′கி. |
| 6. அம்ஜிரா | Amjira | 22°·32′வ×75°·10′கி. |
| 7. இலக்தார் | Lakthar | 22°·56′வ×71°·54′கி. |
| 8. அறப்பள்ளி (திருச்சிராப்பள்ளி) | Thiruchirapalli | 10°·50′வ×78°·46′கி. |
| 9. தாருதாரான் | Tharu-Tharan | 31°·27′வ×75°·07′கி. |
| 10. பாதர்வா | Badarwa | 33°·04′வ×73°·50′கி. |
| 11. ஹசன்பூர் (ஹஸ்தினுபுரம்) | Hassanpur (Hasthinapura) | 22°·38′வ×78°·13′கி. |
| 12. சர்தானு | Sardhana | 29°·10′வ×77°·47′கி. |
| 13. (i) ஹிராட் | Herat | 34°·28′வ×62°·09′கி. |
| (ii) அட்டாக் | Attock | 33°·53′வ×72°·17′கி. |
| 14. (i) விஜயவாடா | Vijayawada | 16°·31′வ×80°·39′கி. |
| (ii) கலிங்கப்பட்டினம் | Calingapatam | 18°·20′வ×84°·10′கி. |
| 15. (i) அலிகார் | Aligar | 27°·54′வ×78°·06′கி. |
| (ii) மெயின்புரி | Mainpuri | 27°·14′வ×79°·03′கி. |
| 16. அநிகாய் | Anicai | 27°·54′வ×78°·06′கி. |
| 17. மஜிதா | Majitha | 31°·46′வ×75°·01′கி. |
| 18. அஸ்ரோ | Hazro | 33°·35′வ×72°·32′கி. |
| 19. (i) ஹரப்பா | Harappa | 30°·35′வ×72°·58′கி. |
| (ii) மோகன்சதரோ | Mohenjadaro | 27°·17′வ×68°·08′கி. |
| 20. (i) அம்ருதசரஸ் | Amritsar | 31°·37′வ×74°·48′கி. |
| (ii) தானேஸ்வரம் | Thaneswar | 29°·58′வ×76°·50′கி. |
| 21. சாம்பா (அஷ்ட சாம்பா) | Champa (Astha-champa) | 32°·29′வ×76°·10′கி. |
| 22. கட்கோரா | Kat-Gora | 22°·43′வ×81°·11′கி. |
| 23. ஹசன் பர்த்திஸ் | Hasan-Barthis | 18°·10′வ×79°·46′கி. |
| 24. அஷ்டசம்பா (ஹஷாப்) | Astha-champa (Hashap) | 21°·46′வ×72°·11′கி. |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 25. ஆக்கூர் | Accour | 15°·20′வ × 124°·45′கி. |
| 26. ஆக்ஸோமிஸ் | Auxomis | 22°·20′வ × 115°·30′கி. |
| 27. ஆண்டிரோபனா | Andropana | 30°·40′வ × 121°·15′கி. |
| 28. ஆரம்பூர் | Arembour | 16°·20′வ × 121°·00′கி. |
| 29. (i) ஆர்கடா | Arcata | 21°·00′வ × 130°·00′கி. |
| (ii) ஆர்கரு | Argaru | 14°·30′வ × 125°·15′கி. |
| 30. ஆர்டோர்டா | Artorta | 31°·15′வ × 121°·30′கி. |
| 31. ஆர்சா | Arsa | 33°·20′வ × 125°·40′கி. |
| 32. ஆர்த்தூர் | Orthura | 16°·40′வ × 130°·00′கி. |
| 33. ஆர்மகாரா | Armagara | 14°·20′வ × 114°·20′கி. |
| 34. ஆலோ | Aloe | 17°·00′வ × 120°·20′கி. |
| 35. இகர்டா | Igarta | 13°·40′வ × 133°·30′கி. |
| 36. இண்டே | Indae | 20°·45′வ × 123°·00′கி. |
| 37. இதகௌராஸ் | Ithagouras | 33°·20′வ × 125°·40′கி. |
| 38. இந்தபரா | Indabara | 30°·30′வ × 128°·00′கி. |
| 39. இமௌஸா | Imausa | 30°·00′வ × 124°·05′கி. |
| 40. இயத்தூர் | Iyatoor | 14°·00′வ × 132°·30′கி. |
| 41. இலபாகா | Labaka | 34°′15′வ × 127°·30′கி. |
| 42. எபிடௌஸா | Epidausa | 22°·30′வ × 103°·45′கி. |
| 43. எம்பலாத்ரா | Empelatra | 30°·00′வ × 130°· 0′கி. |
| 44. (i) எம்போலினு | Empolina | 31°·00′வ × 124°· 0′கி. |
| (ii) ஏலங்கான் | Elangon | 14°·00′வ × 120°·40′கி. |
| 45. ஐக்கூர் | Eicour | 17°·00′வ × 131·°00′கி. |
| 46. ஓசோபிஸ் | Ozobis | 23°·40′வ × 120°·30′கி. |
| 47. ஒபோட்ரா | Opotura | 21°·40′வ × 137°·30′கி. |
| 48. ஒமின்னகரா | Ominnagara | 16°·20′வ × 114°·00′கி. |
| 49. ஒரியோபாண்டஸ் | Orio Pontus | 24°·30′வ × 146°·30′கி. |
| 50. ஒர்ஸா | Orza | 33°·20′வ × 136°·00′கி. |
| 51. ஒலோ கோயிரா | Olokho-Ira | 15°·00′வ × 114°·00′கி. |
| 52. ஒஜினி | Ozene | 20°·00′வ × 117°·00′கி. |
| 53. ஒஸோனு | Ozoana | 20°·30′வ × 138°·15′கி. |
| 54. ஒஸ்தா | Ostha | 23°·30′வ × 122°·30′கி. |
| 55. ககாஸ்மிரா | Cagasmira | 27°·30′வ × 126°·40′கி. |
| 56. கங்காரா | Cangara | 30°·40′வ × 122°·15′கி. |

| | தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|---|
| 25. | அகஸ்தியர் ஏரி | Lake Agastiya | 8°·43′வ × 77°·46′கி. |
| 26. | (i) ஜ்வாலாமுகி | Jwalamukhi | 31°·53′வ × 76°·22′கி. |
| | (ii) யோகேந்திர நகர் | Yogendra nagar | 31°·53′வ × 76°·50′கி. |
| 27. | டராபன்-கலான் | Daraban-Kalan | 31°·43′வ × 70°·22′கி. |
| 28. | தர்மபுரி | Dharmapuri | 12°·08′வ × 78°·13′கி. |
| 29. | (i) உறையூர் | Woriur | 10°·50′வ × 78°·46′கி. |
| | (ii) உறையூர் | Woriyur | 10°·50′வ × 78°·46′கி. |
| 30. | காண்டகார் | Kandahar | 31°·37′வ × 65°·30′கி. |
| 31. | முசாபர்பாத் | Musafarbad | 34°·24′வ × 73°·22′கி. |
| 32. | உறையூர் | Woriyur | 10°·50′வ × 78°·46′கி. |
| 33. | மார்மகோவா | Marmagoa | 15°·25′வ × 73°·43′கி. |
| 34. | ஆல்வாய் | Alwaye | 10°·07′வ × 76°·23′கி. |
| 35. | ஆர்க்காடு | Arcot | 12°·56′வ × 79°·24′கி. |
| 36. | இந்தூர் | Indore | 22°·44′வ × 75°·50′கி. |
| 37. | கௌராயிஸ் | Gourais | 34°·38′வ × 74°·56′கி. |
| 38. | இந்திரப்பிரஸ்தம் (டெல்லி) | Indraprasta (Delhi) | 28°·38′வ × 77°·12′கி. |
| 39. | லாலாமூஸா | Lala Musa | 32°·40′வ × 74°·01′கி. |
| 40. | ஆற்றூர் (சேலம்) | Attur-Salem | 11°·36′வ × 78°·39′கி. |
| 41. | நாபா | Naba | 30°·25′வ × 76°·09′கி. |
| 42. | தாசூயா | Dasuya | 31°·49′வ × 75°·42′கி. |
| 43. | சாம்பல் | Sambal | 28°·35′வ × 78°·37′கி. |
| 44. | (i) அம்பேலா | Ampela | 34°·30′வ × 72°·32′கி. |
| | (ii) ஏலக்காய் மலை | Cardamon Hills | 10°·00′வ × 77°·00′கி. |
| 45. | தனுஷ்கோடி (தனுஷ்கோரி) | Dhanushkoti (Dhanushkori) | 9°·10′வ × 79°·28′கி. |
| 46. | ஓசங்காபாத் | Osangabad | 28°·40′வ × 77°·45′கி. |
| 47. | மௌண்ட் அபு | Mount Abu | 24°·40′வ × 72°·45′கி. |
| 48. | கார்வேட் நகர் (நகரி) | Karvetnagar (Nagari) | 13°·29′வ × 79°·40′கி. |
| 49. | ஹுக்ளி நதி | Hoogly River | 22°·55′வ × 88°·26′கி. |
| 50. | ஓர்ஸா | Orsa | 25°·21′வ × 78°·38′கி. |
| 51. | ஏழிற்குன்றம் | Mount Dely (Mt.Ely) | 12°·00′வ × 75°·50′கி. |
| 52. | உஜ்ஜயினி | Ujjain | 23°·09′வ × 75°·43′கி. |
| 53. | உஜ்ஜயினி | Ujjain | 23°·09′வ × 79°·43′கி. |
| 54. | அஷ்டா | Ashta | 23°·11′வ × 76°·38′கி. |
| 55. | (i) அஜ்மீர் | Ajmere | 26°·27′வ × 74°·42′கி. |
| | (ii) கோஸி | Cosi | 27°·30′வ × 77°·30′கி. |
| 56. | கக்காரா | Kakkara | 28°·24′வ × 73°·40′கி. |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 57. கங்கே | Gangae | 19°·15′வ × 146°·00′கி. |
| 58. கடௌரா | Cadaura | 11°·30′வ × 135°·00′கி. |
| 59. கண்டகோஸிலா | Candacosila | 11°·40′வ × 134°·30′கி. |
| 60. கதிகார்தாமா | Cadicardama | 12°·40′வ × 136°·30′கி. |
| 61. கமாலிபா | Camaliba | 17°·20′வ × 115°·15′கி. |
| 62. கரிகர்தாமா | Caricardama | 20°·25′வ × 141°·00′கி. |
| 63. கரூரா | Caroura | 10°·16′வ × 76°·15′கி. |
| 64. கரோரா | Caroura | 16°·20′வ × 119°·00′கி. |
| 65. கருவூர் | Caruvour | 15°·00′வ × 120°·00′கி. |
| 66. கல்லிகா | Calliga | 17°·00′வ × 138°·00′கி. |
| 67. களிந்தயா | Calindaya | 17°·30′வ × 127°·40′கி. |
| 68. கள்ளிகரு | Calligaru | 12°·20′வ × 125°·40′கி. |
| 69. கள்ளிகரு | Calligaru | 18°·00′வ × 118°·00′கி. |
| 70. கனகோரா | Canagora | 30°·40′வ × 135°·00′கி. |
| 71. கன்னகரா | Cannagara | 13°·30′வ × 136°·30′கி. |
| 72. காந்திபட்னா | Canthipatna | 12°·20′வ × 133°·30′கி. |
| 73. காபேரிஸ் | Caberis | 15°·40′வ × 128°·30′கி. |
| 74. காமாரா | Camara | 15°·40′வ × 130°·20′கி. |
| 75. காமிகாரா | Camigara | 26°·20′வ × 119°·00′கி. |
| 76. காரிகே | Carigae | 14°·40′வ × 131°·50′கி. |
| 77. கார்தாசினா | Carthasina | 21°·40′வ × 146°·21′கி. |
| 78. கார்தினாரா | Carthinara | 23°·00′வ × 146°·00′கி. |
| 79. காளியூர் | Caliyur | 17°·20′வ × 129°·00′கி. |
| 80. காஸ்ட்ரா | Castra | 19°·30′வ × 138°·00′கி. |
| 81. காஸ்பியரா | Caspiara | 31°·15′வ × 127°·00′கி. |
| 82. கிண்டியா | Cyndia | 30°·20′வ × 137°·00′கி. |
| 83. கிரிஸே தீவு | Chrysae Island | 10°·11′வ × 136°·20′கி. |
| 84. கிரிஸோனிஸஸ் | Chrysonisus | 14°·30′வ × 114°·20′கி. |

| தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|
| 57. (i) ஜெஸ்ஸோர் | Jessore | 23°·10′வ× 89°·10′கி. |
| (ii) பாடலிபுத்திரம் | Pataliputra (Patna) | 25°·37′வ× 85°·13′கி. |
| (iii) தாம்லுக் | Tamluk | 22°·18′வ× 87°·58′கி. |
| 58. குண்டூர் | Guntur | 14°·18′வ× 80°·29′கி. |
| 59. கோல்கொண்டா | Golconda | 17°·23′வ× 78°·27′கி. |
| 60. (i) நந்திக்கிராமம் | Nandigrama | 22°·10′வ× 88°·10′கி. |
| (ii) கலிங்கப்பட்டினம் | Calingapatam | 18°·20′வ× 84°·10′கி. |
| 61. கம்மாமெட் | Kammamet | 17°·15′வ× 80°·11′கி. |
| 62. கலிங்கப்பட்டினம் | Kalingapatam | 18°·20′வ× 84°·10′கி. |
| 63. கருவூர் (கரூர்) | Karur (Vanji) | 10°·16′வ× 76°·15′கி. |
| 64. கரூர் (வஞ்சிமாநகரம்) | Karur (Vanji) | 10°·14′வ× 76°·15′கி. |
| 65. —do— | —do— | —do— |
| 66. கலிங்கப்பட்டினம் | Calingapatam | 18°·20′வ× 84°·10′கி. |
| 67. கடலூர் | Cuddalore | 11°·43′வ× 79°·49′கி. |
| 68. கள்ளிமேடு | Calimere, Point | 10°·18′வ× 79°·52′கி. |
| 69. கல்கத்தா | Calcutta | 22°·34′வ× 80°·24′கி. |
| 70. கனோஜ் | Kanauj | 27°·30′வ× 79°·58′கி. |
| 71. சந்திரநாகூர் | Chandra Nagore | 22°·52′வ× 88°·25′கி. |
| 72. காஞ்சீபுரம் | Conjeevaram | 12°·50′வ× 79°·45′கி. |
| 73. காவிரிப்பூம்பட்டினம் (பூம்புகார்) | Kaveripoompattinam (Poompukhar) | 11°·01′வ× 79°·54′கி. |
| 74. ,, | ,, | ,, |
| 75. (i) காங்க்ரா | Kangra | 32°·05′வ× 76°·18′கி. |
| (ii) காண்டகார் | Kandagar | 31°·37′வ× 65°·30′கி. |
| 76. காரைக்கால் | Karaikkal | 12°·58′வ× 80°·13′கி. |
| 77. கரக்பூர் | Kharagpur | 25°·00′வ× 86°·25′கி. |
| 78. கான்கர் | Kankhar | 25°·15′வ× 87°·20′கி. |
| 79. சீர்காழி | Sirkali | 11°·11′வ× 79°·49′கி. |
| 80. நைஜாம் பட்டினம் | Nizam Patam | 15°·54′வ× 80°·43′கி. |
| 81. காஷ்மீரம் | Kashmere | 34°·06′வ× 74°·51′கி. |
| 82. ரோஹில்கண்டு | Rohilkhand | 28°·30′வ× 79°·00′கி. |
| 83. (i) சுமத்ரா தீவு | Sumatra Island | 0°·00′ ×100°·00′கி. |
| (ii) கப்பல் தங்குமிடம், பருவா | Baruva | 18°·54′வ× 84°·52′கி. |
| 84. சுபாரகா (உம்பர்கான்) | Suparaka | 20°·15′வ× 72°·52′கி. |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 85. குமாரியா | Cumaria (Promontarium Cumarie) | 13°·30′வ×121°·45′கி. |
| 86. கெருகே | Cerugae | 16°·15′வ×133°·00′கி. |
| 87. கைசாறு | Caisana | 34°·20′வ×120°·00′கி. |
| 88. கொகனபந்தா | Cocanabanda | 23°·40′வ×120°·15′கி. |
| 89. கொட்டியாரா | Cottiara | 14°·00′வ×121°·00′கி. |
| 90. கொட்டோபரா | Cottobara | 14°·00′வ×137°·15′கி. |
| 91. கொரிந்துயிர் | Corindouir | 17°·40′வ×125°·00′கி. |
| 92. கொருங்கலா | Courungala | 15°·00′வ×135°·00′கி. |
| 93. கொரூலா | Coroula | 16°·00′வ×128°·00′கி. |
| 94. கோகநந்தன | Cocanandana | 26°·00′வ×1[illegible]4°·00′கி. |
| 95. கோட்டிஸ் | Cottis | 12°·00′வ×132°·20′கி. |
| 96. கோட்ராறு | Cotrana | 29°·20′வ×121°·15′கி. |
| 97. கோண்டா | Gonda | 34°·30′வ×133°·30′கி. |
| 98. கோரிமுனை | Cori Point | 12°·20′வ×125°·40′கி. |
| 99. கோர்யா | Corya | 34°·45′வ×122°·00′கி. |
| 100. கோலகா | Colaca | 20°·40′வ×110°·30′கி. |
| 101. கோல்கே | Colchae | 15°·00′வ×123°·00′கி. |
| 102. கோவ்ரலூர் | Coveralore | 17°·30′வ×119°·00′கி. |
| 103. கோன்கா | Conca | 31°·30′வ×138°·20′கி. |
| 104. கோன்னமாரா | Connamara | 29°·30′வ×128°·00′கி. |
| 105. கோஸா | Chosa | 22°·30′வ×121°·20′கி. |
| 106. கௌபா | Gauba | 15°·00′வ×117°·00′கி. |
| 107. (i) கௌராபுரீறு | Gourapurina | 29°·00′வ×130°·00′கி. |
| (ii) சகாபா | Sagapa | 21°·30′வ×111°·00′கி. |
| 108. சங்கமார்தா | Sangmartha | 21°·00′வ×133°·00′கி. |

| தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|
| 85. குமரி முனை | Cape Camorin | 8°·05′வ×77°·49′கி. |
| 86. கொல்லடம் | Coleroon | 11°·24′வ×79°·49′கி. |
| 87. (i) காஸான் | Kashan | 33°·50′வ×51°·47′கி. |
| (ii) கூரஸான் | Khurasan | 40°·00′வ×52°·55′கி. |
| 88. கோகான் | Gogaon | 21°·54′வ×75°·43′கி. |
| 89. கொட்டரகாரா | Cottaracara | 8°·59′வ×76°·44′கி. |
| 90. (i) கட்டாக் | Cuttack | 20°·29′வ×85°·54′கி. |
| (ii) கேந்திரபரா | Kendrapara | 20°·30′வ×86°·28′கி. |
| 91. கோயம்பத்தூர் | Coimbatore | 11°·00′வ×77°·.00′கி. |
| 92. வாரங்கல் | Warangal | 17°·58′வ×79°·40′கி. |
| 93. (i) காரைக்கால் | Karikal | 10°·55′வ×79°·52′கி. |
| (ii) கடலூர் | Cuddalore | 11°·43′வ×79°·49′கி. |
| (iii) காவிரிநதிக் கழி முகம் | Cauvery Delta | 8°·34′வ×78°·10′கி. |
| 94. கோகுல நந்தனம் | Brindavanam | 27°·33′வ×77°·44′கி. |
| 95. (i) மயிலை திருவல்லிக் கேணி | Mylapore-Triplicane | 13°·04′வ×80°·17′கி. |
| (ii) யானைகவுனி | Elephant Gate | 13°·04′வ×80°·17′கி. |
| 96. உமரகோட் (ரான்) | Ummarkot (Rann) | 25°·22′வ×69°·47′கி. |
| 97. கோண்டா | Gonda | 27°·28′வ×82°·01′கி. |
| 98. தனுஷ்கோடி | Dhanushkoti | 9°·10′வ×79°·28′கி |
| 99. கோரியான் | Ghoriyan | 34°·28′வ×61°·00′கி. |
| 100. (i) கர்கல்லா(கராச்சி) | Karkalla (Karachi) | 24°·51′வ×67°·04′கி. |
| (ii) கோஹாட் | Gohat | 33°·36′வ×71°·29′கி. |
| 101. கொற்கை | Korkai | 8°·34′வ×78°·10′கி. |
| 102. கொடுங்களூர் | Cranganore | 10°·13′வ×76°·16′கி. |
| 103. (i) சாரநாத் | Saranath | 25°·20′வ×86°·00′கி. |
| (ii) பிருந்தாவனம் | Brindavanam | 27°·28′வ×77°·44′கி. |
| 104 கோவர்த்தனம் | Govardhanam | 27°·28′வ×77°·41′கி. |
| 105. ஓசங்காபாது | Hoshangabad | 22°·40′வ×77°·45′கி. |
| 106. காவிரிப்பூம்பட்டினம் (புகார்) | Kavery Poom Pattinam (Puhar) | 11°·10′வ×79°·45′கி. |
| 107. (i) கோராக்பூர் | Gorakpur | 26°·45′வ×83°·24′கி. |
| (ii) ஷாபந்தர் | Shabandar | 24°·10′வ×67°·56′கி. |
| 108. கள்ளிக்கோட்டை | Calicut | 11°·15′வ×75°·49′கி. |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 109. (i) சசாண்டியான் | Sasandiyan | 20°·30′வ×115°·30′கி. |
| (ii) சபாரா | Sabara | 21°·45′வ×112°·30′கி. |
| 110. சபாணு | Sabana | 32°·00′வ×122°·20′கி. |
| 111. சரிசாபிஸ் | Sarisabis | 20°·00′வ×119°·30′கி. |
| 112. சரிபலா | Saribala | 22°·00′வ×116°·30′கி. |
| 113. சர்பணு | Sarpana | 22°·50′வ×116°·00′கி. |
| 114. சலூர் | Saloor | 15°·30′வ×125°·20′கி. |
| 115. சன்னபா | Sannaba | 32°·30′வ×135°·00′கி. |
| 116. சாகலா | Sakala | 30°·20′வ×139°·00′கி. |
| 117. (i) சாம்பலகா | Sambalaca | 31°·50′வ×132°·15′கி. |
| (ii) ,, | ,, | 24°·30′வ×141°·00′கி. |
| 118. சாலாகிஸ்ஸா | Salagissa | 34°·30′வ×129°·30′கி. |
| 119. சாலைகரியாஸ் | Salaicariyas | 14°·00′வ×116°·40′கி. |
| 120. சிபியோன் | Sipione | 20°·00′வ×139°·22′கி. |
| 121. சிப்பாரா | Sippara | 15°·30′வ×137°·40′கி. |
| 122. சிமில்லா | Symylla | 14°·45′வ×110°·00′கி. |
| 123. சிரிபாலா | Siribala | 21°·30′வ×118°·30′கி. |
| 124. சிரிமலகா | Sirimalaca | 18°·30′வ×119°·20′கி. |
| 125. சிலார் | Silor | 16°·30′வ×121°·45′கி. |
| 126. சுசிகுரை | Susicorai | 14°·30′வ×122°·00′கி. |
| 127. சூடோஸ்தமஸ் | Psedosthomos | 14°·00′வ×117°·20′கி. |
| 128. சூஸிகாணு | Susicana | 22°·20′வ×112°·00′கி |
| 129. சைராஸ்ட்ரா | Syrashtra | 19°·30′வ×114°·00′கி. |
| 130. சைரினிஸ்கா | Syrinisca | 26°·30′வ×121°·00′கி. |
| 131. சோபுட்டான் | Soubouton | 19°·10′வ×120°·15′கி. |
| 132. சோபோராஸ் | Soporas | 14°·30′வ×130°·00′கி. |
| 133. சோரா | Sora | 24°·00′வ×124°·30′கி. |

| தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|
| 109. (i) பைசாண்டியன் (பார்நகர்) | Byzantium (Barnagar) | 22°·58′வ × 75°·20′கி. |
| (ii) ஷாபந்தர் | Shabandar | 24°·10′வ × 67°·56′கி. |
| 110. பன்னு | Bannu | 33°·00′வ × 70°·39′கி. |
| 111. (i) உஜ்ஜயினி | Ujjain | 23°·09′வ × 75°·43′கி. |
| (ii) பைதான் | Paithan | 19°·29′வ × 75°·26′கி. |
| 112. பேரகாட் | Beraghat | 23°·10′வ × 79°·59′கி. |
| 113. சோப்ரான் | Sopran | 31°·17′வ × 74°·54′கி. |
| 114. சேலம் | Salem | 11°·39′வ × 78°·12′கி. |
| 115. சுவர்ணபுரி (பாட்னு) | Swarnapuri (Patna) | 25°·37′வ × 85°·13′கி. |
| 116. (i) இந்தகர் (இந்திரபுரி) | Indagar (Indrapuri) | 25°·40′வ × 76°·15′கி. |
| (ii) காசியா | Kasia | 26°·45′வ × 84°·12′கி. |
| 117. சாம்பல்பூர் | Sambalpur | 21°·28′வ × 84°·10′கி. |
| ,, | Champal | 28°·35′வ × 78°·37′கி. |
| 118. (i) ஸ்ரீநகர் | Srinagar | 34°·06′வ × 74°·51′கி. |
| (ii) சியால்காட் | Sialkot | 32°·31′வ × 74°·36′கி. |
| 119. சாலக்குடி | Chalakudi | 10°·25′வ × 76°·25′கி. |
| 120. (i) ஷாபுரு | Shapura | 25°·40′வ × 76°·15′கி. |
| (ii) இந்தர்கர் | Indargar | 25°·46′வ × 76°·15′கி. |
| 121. சுபர்நாரகா | Suparnaraka | 22°·00′வ × 87°·00′கி. |
| 122. சவுல் | Saul | 18°·34′வ × 72°·55′கி. |
| 123. (i) பேரகாட் (மார்பில் ராக்ஸ்) | Beragat (Marble Rocks) | 23°·10′வ × 79°·59′கி. |
| (ii) மகேஸ்வர் | Maheswar | 22°·11′வ × 75°·37′கி. |
| 124. மத்ரா, ஸ்ரீமதுரா | Muttra | 27°·28′வ × 77°·41′கி. |
| 125. சிற்றாறு (அரிசலாறு) | Arsil River | 8°·11′வ × 77°·21′கி. |
| 126. தூத்துக்குடி | Tuticorin | 8°·48′வ × 78°·11′கி. |
| 127. பொய்வாயில் | False Mouth (Back waters) | 10°·10′வ × 76°·11′கி. |
| 128. ஜங்-மகியானு | Jang-Mahiana | 31°·16′வ × 72°·22′கி. |
| 129. சௌராஷ்டிரம் | Sowrashtra | 22°·00′வ × 69°·32′கி. |
| 130. சாய்லா | Saila | 22°·33′வ × 71°·06′கி. |
| 131. புத்தகயா | Budhgaya | 24°·41′வ × 85°·02′கி. |
| 132. திருப்பராய்த்துறை | Tirupiraithurai | [illegible]°·58′வ × 78°·39′கி. |
| 133. சூரத் | Surat | [illegible]°·12′வ × 71°·52′கி. |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 134. சோரா (தலைநகரம்) | Sora (Capitalia) | 21°·00′வ × 130°·00′கி. |
| 135. சோரிதாய் | Soridai | 16°·40′வ × 130°·00′கி. |
| 136. சௌதஸனு | Chowdasana | 26°·50′வ × 123°·10′கி. |
| 137. சௌபாரா | Saupara | 15°·10′வ × 112°·30′கி. |
| 138. டாக்சீலா | Taxila | 32°·15′வ × 125°·00′கி. |
| 139. டிரஸ்டோகா | Drastoca | 32°·30′வ × 120°·30′கி. |
| 140. டைடலா | Taitala | 30°·30′வ × 128°·00′கி. |
| 141. டையானிஸ்பாலிஸ் | Dionyspolis | 33°·00′வ × 121°·45′கி. |
| 142. டோனு | Dona | 32°·00′வ × 136°·30′கி. |
| 143. தகரா | Tagara | 19°·20′வ × 118°·00′கி. |
| 144. தகா | Taga | 16°·50′வ × 123°·30′கி. |
| 145. தங்கலா | Tangala | 16°·50′வ × 123°·30′கி. |
| 146. ததில்பா | Thatilba | 18°·50′வ × 134°· 0′கி. |
| 147. தபஸோ | Tapaso | 20°·40′வ × 121°·30′கி. |
| 148. தமஸிஸ் | Tamasis | 29°·00′வ × 133°·00′கி. |
| 149. தலாரா | Talara | 16°·45′வ × 128°·00′கி. |
| 150. தாமலிப்தி | Tamalipti | 26°·30′வ × 144°·30′கி. |
| 151. தாஸோபியான் | Tasopian | 22°·00′வ × 140°·30′கி. |
| 152. திண்டிஸ் | Tyndis | 14°·30′வ × 116°·00′கி. |
| 153. தித்தோவா | Thithova | 15°·20′வ × 122°·00′கி. |
| 154. தியஸ்தௌரா | Tiastaura | 18°·50′வ × 115°·50′கி. |
| 155. தியோபாலி | Theophali | 17°·50′வ × 115°·40′கி. |
| 156. தியோபிலா | Theophila | 21°·10′வ × 114°·15′கி. |
| 157. தியௌஸா | Tiausa | 28°·50′வ × 121°·30′கி. |
| 158. திரிகா-தீபா | Trika-dipa | 11°·00′வ × 113°·30′கி. |
| 159. திரினேசியா | Trinesia | 12°·00′வ × 116°·20′கி. |
| 160. திலோக்ராமா | Tilograma | 18°·30′வ × 147°·40′கி. |
| 161. திஸபதிங்கா | Tisa-Patinga | 24°·20′வ × 123°· 0′கி. |
| 162. தெல்கீர் | Thelcir | 16°·10′வ × 127°·00′கி. |
| 163. தென்னகரா | Tennagara | 17°·00′வ × 132°·30′கி |

| தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|
| 134. சோழர் (தலைநகரம்) (உறையூர்) | Chola Capital (Woriyur) | 10°·50′வ × 78°·46′கி. |
| 135. சோழமண்டலக்கரை | Coromanda Coast | 12°·00′வ × 80°·30′கி. |
| 136. சுதர்-ஜாஸ்டான் | Suthar-Jasdan | 22°·11′வ × 71°·06′கி. |
| 137. சுபாரகா | Suparaka | 20°·15′வ × 72°·52′கி. |
| 138. தக்ஷசீலம் | Taksila (Taxila) | 33°·40′வ × 72°·50′கி |
| 139. டஷ்டி-காவிர் (டம்கான் பாலைவனம்) | Dashti kavir (Damghan Desert) | 35°·05′வ × 55°·00′கி. |
| 140. டன்ட்லா | Tantla | 27°·10′வ × 78°·14′கி. |
| 141. ஜலாலாபாத் (உத்யானபுரம்) | Jalalabad (Udayanapura) | 34°·24′வ × 70°·26′கி. |
| 142. டிஞ்ஜ்பூர் | Dinajpur | 25°·37′வ × 88°·40′கி. |
| 143. தாயிர் | Thair | 18°·19′வ × 76°·09′கி. |
| 144. திருநெல்வேலி | Tirunelveli | 8°·44′வ × 77°·44′கி. |
| 145. திருநெல்வேலி | Tirunelveli | 8°.44′வ × 77°·44′கி. |
| 146. பிரதிஷ்டானபுரம் | Paithan | 19°·29′வ × 75°·26′கி. |
| 147. தபதிநதி (தபஸ்விகள்) | Tapasvis of River Tapti | 22°·00′வ × 76°·0′0கி. |
| 148. தம்லாங் | Tamlang | 27°·28′வ × 88°·40′கி. |
| 149. திருவாரூர் | Tiruvarur | 10°·47′வ × 79°·42′கி. |
| 150. தாமிரலிப்தி | Tamluk | 22°·18′வ × 87°·58′கி. |
| 151. தாஸ்பல்லா | Daspall a | 20°·19′வ × 84°·56′கி. |
| 152. தொண்டி | Tondi (Ponani) | 10°·48′வ × 75°·56′கி. |
| 153. திருவிதாங்கோடு | Travancore | 8°·02′வ × 77°·44′கி. |
| 154. பார்நகர் | Barnagar | 22°·58′வ × 75°·20′கி. |
| 155. (i) தேவ்கர் | Deogarh | 21°·51′வ × 78°·50′கி. |
| (ii) தேவதுர்க்கம் | Devadurgam | 16°·25′வ × 77°·00′கி. |
| 156. துவாரகா | Dwaraka | 22°·14′வ × 69°·01′கி. |
| 157. தியொலத்ஷா | Diaulatsha | 35°·03′வ × 70°·00′கி. |
| 158. இலட்சத் தீவுகள் | Laccadives | 10°·00′வ × 73°·00′கி. |
| 159. தங்கசேரி | Tangaserry | 8°·54′வ × 76°·38′கி. |
| 160 (i) ஜெஸ்ஸுர் | Jessore | 23°·10′வ × 89°·10′கி. |
| (ii) சுராம்பூ | Serampore | 22°·45′வ × 88°·25′கி. |
| 161. படான் (தேஷ் படாங்கர்) | Batan (Desh Batangar) | 23°·52′வ × 72°·10′கி. |
| 162. (i) காரைக்கால் | Karaikkal | 10°·50′வ × 79°·52′கி. |
| (ii) தலைக்கரை | Thalaikkarai | 10°·50′வ × 79°·52′கி. |
| 163. ஸ்ரீரங்கம் | Srirangam | 10°·52′வ × 78°·44′கி. |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 164. தைனூர் | Thainur | 18°·40′வ × 124°·45′கி. |
| 165. தோசரா | Dosara | 22°·30′வ × 142°·30′கி. |
| 166. தோரிங்கா | Thoringa | 15°·15′வ × 129°·15′கி. |
| 167. நகரா | Nagara | 33°·00′வ × 121°·45′கி. |
| 168. நகரூரிஸ் | Nagarouris | 20°·15′வ × 120°·00′கி. |
| 169. நருலா | Narula | 15°·50′வ × 117°·45′கி. |
| 170. நதௌபந்தர் | Nathou-Bandar | 29°·00′வ × 133°·40′கி. |
| 171. நவசாரிபா | Navasariba | 16°·30′வ × 112°·30′கி. |
| 172. நாக்ராமா | Nagrama | 27°·00′வ × 120°·00′கி. |
| 173. நாஸிகா | Nasica | 17°·00′வ × 114°·00′கி. |
| 174. நாளிகேரிஸ் | Naliceris | 12°·00′வ × 122°·00′கி. |
| 175. நாணிகைன | Nanigaina | 12°·00′வ × 1[illegible]6°·20′கி. |
| 176. நிகமா | Nigama | 16°·00′வ × 126°·00′கி. |
| 177. நிக்ரானிக்ராமா | Nigrani Grama | 28°·15′வ × 124°·00′கி. |
| 178. நித்ராஸ் | Nitras | 14°·40′வ × 115°·30′கி. |
| 179. நியக்டோ-சோரா | Nyagdo-soara | 23°·00′வ × 125°·00′கி. |
| 180. நௌலிபி | Naulibi | 33°·20′வ × 124°·20′கி. |
| 181. பகாரே | Bacarae | 14°·30′வ × 119°·30′கி. |
| 182. பகிடரே | Pacitarae | 17°·30′வ × 113°·00′கி.. |
| 183. படங்கை சாரா | Patangaisara | 33°·20′வ × 132°·40′கி. |
| 184. படா | Bata | 17°·00′வ × 126°·30′கி. |
| 185. படாய் | Batai | 27°·00′வ × 143°·00′கி. |
| 186. பட்நகரா | Batnagara | 33°·00′வ × 130°·00′கி. |
| 187. பண்டிபோலிஸ் | Panti Polis | 15°·20′வ × 118°·00′கி. |
| 188. பதிஸ்தமா | Patistama | 25°·00′வ × 121°·00′கி. |
| 189. பம்மகூரா | Bammagoora | 20°·45′வ × 116°· 0′கி. |
| 190. பம்மலா | Pammala | 14°·15′வ × 121°·20′கி. |

| தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|
| 164. திருச்செந்தூர் | Tiruchendur | 8°·30′வ×78°·11′கி. |
| 165. (i) கலிங்கப்பட்டினம் | Calingapattinam | 18°·20′வ×84°·10′கி. |
| (ii) கட்டாக் | Cuttack | 20°·20′வ×85°·54′கி. |
| 166. தஞ்சாவூர் | Tanjore | 10°·47′வ×79°·10′கி. |
| 167. ஜலாலாபாது (உத்யானபுரம்) | Jalalabad (Udayanapura) | 34°·24′வ×70°·26′கி. |
| 168. நகர் | Nagar | 18°·17′வ×80°·36′கி. |
| 169. (i) நெல்லூர் | Nellore | 14°·27′வ×80°·27′கி. |
| (ii) விஜயவாடா | Vijayawada | 16°·31′வ×80°·39′கி. |
| (iii) திருநெல்வேலி | Tirunelveli | 8°·44′வ×77°·44′கி. |
| 170. பந்தல் கண்டு | Bandelcund | 24°·00′வ×80°·00′கி. |
| 171. நவ்சாரி | Navsari | 21°·07′வ×73°·40′கி. |
| 172. நவநகர் | Navanagar | 22°·27′வ×70°·07′கி. |
| 173. நாசிக் | Nasik | 20°·02′வ×73°·50′கி. |
| 174. கேரளக் கடற்கரை | Kerala Sea-coast | 11°·20′வ×76°·00′கி. |
| 175. நாராயணன்கஞ்சு | Narain Ganj | 23°·37′வ×90°·32′கி. |
| 176. நாகபட்டினம் | Negapattinam | 10°·46′வ×79°·53′கி. |
| 177. மோர்வி (மகாவீரக் ராமா) | Morvi (Maha-viragrama | 22°·49′வ×70°·54′கி. |
| 178. (i) மங்களூர் | (i) Mangalore | 12°·52′வ×74°·53′கி. |
| (ii) கண்ணனூர் | (ii) Cannanore | 11°·52′வ×75°·25′கி. |
| 179. (i) நிசார்பூர் | Nizarpur | 22°·03′வ×74°·57′கி. |
| (ii) பர்வானி | Parwani | 22°·02′வ×74°·57′கி. |
| 180. நௌஷீரா | Naushera | 34°·00′வ×72°·09′கி. |
| 181. பொரக்காடு | Porakkad | 9°·22′வ×76°.22′கி. |
| 182. பரோடா | Baroda (Vadodara) | 22°·00′வ×73·°30′கி. |
| 183. (i) படன் | Batan | 28°·20′வ×79°·10′கி. |
| (ii) சாரான் | Saran | 27°·52′வ×78°·48′கி. |
| 184. மயிலாப்பூர் | Mylapore | 13°·04′வ×80°·17′கி. |
| 185. பாடலிபுத்திரம் | Pataliputra (Patna) | 25°·37′வ×85°·13′கி. |
| 186. படாளா | Badala | 31°·49′வ×79°·14′கி. |
| 187. பாண்டியபுரம் (கொற்கை) | Pandiapuram (Korkai) | 8°·40′வ×78°·15′கி. |
| 188. (i) பலிதானு | Palithana | 21°·31′வ×71°·53′கி. |
| (ii) பிரதிஷ்டானபுரம் | Paithan | 19°·29′வ×75°·26′கி. |
| 189. பமோரி | Bamori | 23°·16′வ×78°·17′கி. |
| 190. திருவனந்தபுரம் | Trivandrum | 8°·29′வ×76°·59′கி |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 191. பயிட்ரா | Baitra | 13°·20′வ × 134°·20′கி. |
| 192. பராகே | Baracae | 18°·00′வ × 171°·00′கி. |
| 193. பராபலி | Parabali | 24°·30′வ × 116°·30′கி. |
| 194. பரிதிமா | Faridma | 27°·30′வ × 134°·30′கி. |
| 195. பரித்ரா | Pharetra | 13°·20′வ × 134°·20′கி. |
| 196. பர்டாக்சிமா | Bardaxema | 19°·40′வ × 113°·50′கி. |
| 197. பர்டோடிஸ் | Bardotis | 28°·30′வ × 137°·30′கி. |
| 198. பர்தபாத்ரா | Bardapadra | 23°·50′வ × 117°·00′கி. |
| 199. பர்தமனு | Bardamana | 15°·15′வ × 136°·15′கி. |
| 200. பர்பரோனு | Barbarona | 33°·40′வ × 120°·15′கி. |
| 201. பலௌரா | Paloura | 14°·40′வ × 117°·51′கி. |
| 202. பனஸா | Panasa | 29°·00′வ × 122°·30′கி. |
| 203. பனஸ்ஸா | Banassa | 24°·30′வ × 137°·40′கி. |
| 204. பனோசி | Banosei | 16°·45′வ × 116°·00′கி. |
| 205. பஸகி | Pasagae | 19°·50′வ × 124°·50′கி. |
| 206. பஸிகனு | Basicana | 31°·15′வ × 128°·30′கி. |
| 207. பஸிபிடா | Basipida | 24°′00′வ × 114°·30′கி. |
| 208. பஸ்ஸலா | Passala | 34°·15′வ × 137°·00′கி. |
| 209. பாகௌரா | Pacoura | 11°·20′வ × 136°·40′கி. |
| 210. பாதலினே | Patalinae | 21°·00′வ × 112°·30′கி. |
| 211. பாரிகாஸா | Barygaza | 17°·20′வ × 113°·15′கி |
| 212. பார்பரிகா | Barbarica | 22°·30′வ × 113°·15′கி. |
| 213. பாலண்டிபைரான் | Balanti Pyron | 23°·30′வ × 136°·30′கி. |
| 214. (i) பாலந்திபட்னு | Balanti Patna | 14°·20′வ × 110°·30′கி |
| (ii) பாலிம்போத்ரா | Palymbothra | 27°·00′வ × 143°·00′கி. |
| 215. பாலூரா | Paloora | 11°·20′வ × 136°·40′கி. |
| 216. (i) பாலௌரா | Palaura | 18°·30′வ × 145°·10′கி. |
| (ii) பாலௌரா | Palaura | 14°·40′வ × 117°·51′கி. |
| 17. பிகெண்டகா | Picandeca | 14°·00′வ × 131°·30′கி. |

| தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|
| 191. பாபட்லா | Bapatla | 15°·54′வ×80°·50′கி. |
| 192. (i) பாரிகாஸா | Barygaza | 21°·41′வ×73°·01′கி. |
| (ii) துவாரகா | Dwaraka | 22°·14′வ×69°·01′கி. |
| 193. பாரான் | Paran | 25°·22′வ×67°·58′கி. |
| 194. பரித்கோட் | Faridkot | 30°·40′வ×74°·57′கி. |
| 195. பாபட்லா | Bapatla | 15°·54′வ×80°·50′கி. |
| 196. போகத் | Bhogat | 22°·00′வ×69°·32′கி. |
| 197. பத்ராசலம் | Badrachalam | 17°·40′வ×80°·56′கி. |
| 198. (i) ராம்நகர் | Ramnagar | 32°·52′வ×75°·22′கி. |
| (ii) பாதர்வா | Badarwah | 33°·04′வ×75°·50′கி. |
| 199. பெத்தாபுரம் | Peddapuram | 17°·05′வ×82°·11′கி. |
| 200. ஜிந்தஜான் | Zindajan | 34°·28′வ×62°·09′கி. |
| 201. வேலூர் | Vellore | 12°·55′வ×79°·11′கி. |
| 202. பன்ஸ்வாரா | Banawara | 23°·30′வ×74°·24′கி. |
| 203. பன்ஸ்டா | Bansda | 20°·45′வ×73°·28′கி. |
| 204. வாரணாசி (காசி) | Varanasi(Kasi) (Benares) | 25°·20′வ×83°·00′கி. |
| 205. (i) புஸாவல் | Bhusaval | 21°·02′வ×75°·47′கி. |
| (ii) ஸொரன்ஷியன் (தார்வார்) | Sorantian (Dharwar) | 16°·30′வ×75°·20′கி. |
| 206. பஸி | Basi | 30°·40′வ×76°·25′கி. |
| 207. அபோடாபாத் | Abotabad | 34°·09′வ×73°·15′கி. |
| 208. பிஸ்ஸௌலி | Pissauli | 28°·22′வ×79°·10′கி. |
| 209. பாகர்கஞ்ச் | Bakergunj | 22°·29′வ×90°·18′கி. |
| 210. ஹைதராபாத் (சிந்த்) | Hyderbad(Sind) | 25°·25′வ×68°·38′கி. |
| 211. புரோச் | Broach | 21°·41′வ×73°·01′கி. |
| 212. டட்டா | Tatta | 24°·24′வ×67°·58′கி. |
| 213. பார்வதிபுரம் | Parvathipuram | 18°·47′வ×83°·28′கி. |
| 214. (i) தாபோல் (தாபி லேஷ்வார்) | Dabhol (Thabi leswar) | 17°·35′வ×73°·10′கி. |
| (ii) பாடலிபுத்திரம் (பாட்னு) | Pataliputra (Patna) | 25°·37′வ×85°·13′கி. |
| 215. பாக்கர்கஞ்ச் | Baker Gunj | 22°·29′வ×90°·18′கி. |
| 216. (i) ஹௌரா | Howrah | 22°·35′வ×88°·′23கி. |
| (ii) நவகாளி | Navakali | 22°·48′வ×91°·09′கி. |
| (iii) வேலூர் | Vellore | 12°·55′வ×79°·11′கி. |
| (iv) கல்கத்தா | Calcutta | 22°·34′வ×80°·24′கி. |
| 217. பள்ளிகொண்டை | Pallikondah | 12°·57′வ×78°·55′கி. |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 218. பிடிண்டிரா | Pityndra | 12°·30′வ × 135°·20′கி. |
| 219. பிடேரிஸ் | Bideris | 15°·50′வ × 119°·00′கி. |
| 220. பிரமகரா | Bramagara | 14°·20′வ × 116°·45′கி. |
| 221. பிராக்மி | Pragmi | 19°0·0′வ × 128°·00′கி. |
| 222. பிரூரியான் | Phrorrian | 15°· 0′வ × 130°·20′கி. |
| 223. பின்னகரா | Binnagara | 25°·20′வ × 118°·00′கி. |
| 224. பிஸ்கா | Bisca | 25°·00′வ × 116°·30′கி. |
| 225. புதுபெரூரா | Puduperoura | 14°·15′வ × 117°·40′கி. |
| 226. புரோகாலிஸ் | Procalis | 32°·00′வ × 128°·00′கி. |
| 227. பூசிபாலா | Bucephala | 30°·20′வ × 125°·30′கி. |
| 228. பெண்டகிராமா | Pentagrama | 31°·00′வ × 124°·00′கி. |
| 229. பெப்பரினே | Pepperinae | 12°·40′வ × 115°·00′கி. |
| 230. பெரிங்கரை | Peringarai | 18°·00′வ × 123°·20′கி. |
| 231. பெரே | Bere | 16°·15′வ × 130°·20′கி. |
| 232. பெர்ஸக்ரா | Persecra | 32°·40′வ × 134°·00′கி. |
| 233. பெனகௌரான் | Pena Gouran | 20°·15′வ × 140°·00′கி. |
| 234. பைசாண்டியம் | Byzantium | 14°·40′வ × 113°·40′கி. |
| 235. பைதானு | Pythana | 18°·03′வ × 117°·00′கி. |
| 236. பொதுகே | Poducae | 14°·30′வ × 130°·15′கி. |
| 237. போலியூர் | Poliyoor | 14°·40′வ × 131°·30′கி. |
| 238. போனிஸ் | Bonis | 21°·30′வ × 111°·00′கி. |
| 239. பௌடையா | Boudaiya | 28°·15′வ × 121°·15′கி. |
| 240. பௌலிபௌலா | Pauli Paula | 16°·00′வ × 112°·30′கி. |
| 241. பௌனட்டா | Bounatta | 17°·30′வ × 121°·20′கி. |
| 242. மகாரிஸ் | Magaris | 18°·20′வ × 137°·20′கி. |
| 243. மகோர் | Magour | 15°·15′வ × 130°·00′கி. |

| தமிழ் | ஆங்கிலம் | நவீன இருப்பிடம் |
|---|---|---|
| 218. பைதானு (பெய்தான்) | Paithana(Paithan) | 19°·28′வ×75°·24′கி. |
| 219. பொரக்காடு | Porakkadu | 9°·22′வ×76°·22′கி. |
| 220. பரூர் | Parur | 10°·13′வ×76°·15′கி. |
| 221. (i) பிரயாகை | Prayag | 25°·28′வ×81°·54′கி. |
| (ii) கயா | Gaya | 24°·49′வ×85°·01′கி. |
| 222. பல்லாவரம் | Pallavaram | 12°·58′வ×80°·13′கி. |
| 223. பக்கார் | Bakar (Minnagara) | 31°·16′வ×71°·06′கி. |
| 224. புருஷபுரம் | Peshawar | 34°·02′வ×71°·37′கி. |
| 225. திருவஞ்சைக்களம் (வஞ்சிமா நகரம்) | Vanji | 10°·14′வ×76°·15′கி. |
| 226. புஷ்கலபுரம் | Pushkalapuram (Peucolatis) | 34°·08′வ×71°·46′கி. |
| 227. ரசூல் | Rasul | 32°·45′வ×73°·50′கி. |
| 228. பஞ்ச் (காஷ்மீரம்) | Punch (Kashmir) | 33°·51′வ×74°·00′கி. |
| 229. தொண்டி (திண்டிஸ்) | Tondi (Tyndis) (Ponani) | 10°·48′வ×75°·36′கி. |
| 230. பெருங்குளம் | Perungulam | 8°·33′வ×77°·55′கி. |
| 231. திருப்பராய்த்துறை | Thirupparaithurai | 10°·58′வ×78°·39′கி. |
| 232. பாடலிபுத்திரம் (பிராசினம்) | Pataliputra (Prachina) | 25°·37′வ×85°·13′கி. |
| 233. தும்மகூடம் | Dummagudem | 17°·57′வ×80°·56′கி. |
| 234. விஜயதுர்க்கம் (வைஜயந்தி) | Vijayadurgam (Vaijayanthi) | 16°·26′வ×73°·56′கி. |
| 235. பைதான் | Paithan | 19°·26′வ×75°·26′கி. |
| 236. (i) வளவன் துறை | Valavanthurai | 11°·58′வ×79°·53′கி. |
| (ii) பாண்டிச்சேரி | Pondicherry | 11°·56′வ×79°·53′கி. |
| 237. புலியூர் (சிதம்பரம்) | Puliyur (Chidambaram) | 11°·24′வ×79°·44′கி. |
| 238. புஷ்கலபுரம் (கார்ஷட்டா) | Pushkalapuram (Charshadda) | 34°·08′வ×71°·46′கி. |
| 239. புத்தகயா | Budda-Gaya | 24°·41′வ×85°·02′கி. |
| 540. பல்சார் | Bulsar | 20°·36′வ×73°4·0′கி. |
| 241. (i) பவானி (கோவை) | Bhavani (Coimbatore) | 11°·30′வ×77°·35′கி. |
| (ii) ஸ்ரீரங்கபட்டணம் (மைசூர்) | Seringapatinam (Mysore) | 12°·26′வ×70°·43′கி. |
| 242. மக்ரி | Magri | 19°·45′வ×81°·58′கி. |
| 243. மகோதை (காவிரிப்பூம்பட்டினம்) | Magodhai (Kavertpoom-pattinam) | 11°.01′வ×79°·54′கி. |

| தமிழ் | கிரேக்கம் | இருப்பிடம் |
|---|---|---|
| 244. மசோலியா | Masolia | 11°·40′வ × 134°·00′கி. |
| 245. மண்டலாய் | Mandalai | 25°·00′வ × 142°·00′கி. |
| 246. மண்டிட்ஃபோர் | Mandit Four | 15°·10′வ × 123°· 0′கி. |
| 247. மதுரா | Madurae | 27°·30′வ × 125°·00′கி. |
| 248. மதுரே | Madurai | 16°·20′வ × 125°·00′கி. |
| 249. மருண்டா | Marunda | 14°·20′வ × 121°·20′கி. |
| 250. மலங்கே | Malangae | 13°·00′வ × 133°·00′கி. |
| 251. மலிப்லா | Malipla | 20°·15′வ × 119°·30′கி. |
| 252. மலியார்பா எம்போரியம் | Maliarpha Emporium | 12°·00′வ × 133°·00′கி. |
| 253. மலியோகேப் | Cape Maleo | 17°·30′வ × 111°·00′கி. |
| 254. மலைலா | Malaila | 25°·50′வ × 136°·30′கி· |
| 255. மனூர்பா | Manarba | 12°·00′வ × 133°·00′கி. |
| 256. மஸ்டநௌரா | Mastanoura | 18°·40′வ × 121°·30′கி. |
| 257. மார்கரா | Margara | 34°·00′வ × 135°·00′கி. |
| 258. மின்னகரா | Minnagara | 19°·30′வ × 115°·10′கி. |
| 259. முசிறிஸ் | Muziris | 14°·00′வ × 117°·00′கி. |
| 260. முஸோபலி | Muzopalle | 15°·45′வ × 115°·30′கி. |
| 261. மெண்டெலா | Mendella | 17°·40′வ × 123°·00′கி. |
| 262. மெலிபா | Maliba | 27°·20′வ × 140°· 0′கி. |
| 263. மெலிஜிகிரஸ் | Melijigirus | 12°·30′வ × 110°·00′கி. |
| 264. மெல்கிந்தா | Melcynda | 14°·20′வ × 120°·20′கி. |
| 265. மொடீரா | Modeira | 16°·20′வ × 125°·30′கி. |
| 266. மொடுகுல்லா | Modugulla | 17°·15′வ × 117°·45′கி. |
| 267. மோனோக்ளாஸன் | Monoglosson | 18°·40′வ × 114°·10′கி. |
| 268. (i) யூதிமீடியா | Euthymedia | 32°·00′வ × 126°·20′கி. |
| (ii) ராராஜா | Raraja | 26°·00′வ × 123°·00′கி. |
| 269. லபோக்லா | Labocla | 33°·20′வ × 128°·00′கி. |
| 270. லிங்கநேரா | Linganera | 29°·00′வ × 125°·30′கி· |

